# வைணவத்தின் ஆழ்வார்கள் காலநிலை



# வைணவத்தின்
# ஆழ்வார்கள் காலநிலை

ஆசிரியர்

டாக்டர். S. குலசேகரன்

திருமகள் வெளியீடு
E 113, 16-வது குறுக்குத் தெரு,
சென்னை-90.

முதற் பதிப்பு : செப்டம்பர் 1988.




திருமலை - திருப்பதி தேவஸ்தானத்தின்
நிதி உதவியுடன் அச்சிடப்பட்டது.

அடியீடு :

திருமாலின் பேரடியார்கள் ஆகிய எனது திருத் தாயார், தந்தையார், பெரிய தாயார், பெரிய தந்தையார், தமக்கையார் ஆகிய ஐம்பெருங் குரவர் திருவடிகளுக்கு.

அச்சிட்டோர் :
கனக துர்கா பிரிண்டர்ஸ், பெருங்குடி, சென்னை-96

# முன்னுரை

கம்பர் பாடினார்,

“ஓசை பெற்றுயர் பாற்கடல் உற்றொரு
பூசை முற்றவும் நக்குபு புக்கென
ஆசை பற்றி அறையலுற் றேன் மற்றிக்
காசில் கொற்றத்[து] இராமன் கதையரோ”

என. நாமும் இப்படி ஆசை பற்றியே ஆய விழைந்தோம் ஆழ்வார்கள் பன்னிருவரின் காலமும் கதையும் என்றாலும், “ஏதில் வைணவத் தெளிமை தீப்பதேயெம் தீதில் சிந்தையின் [திறத்துக்] கருத்து” என்பது தான் உண்மையாகும். எவ்வாறெனில், சமணமும், பவுத்தமும் எவ்வளவெல்லாம் தேவார ஆசிரியர்களால் கடுமையாகத் தாக்கப்பட்டிருந்தாலும், இவற்றின் நூல்களினுடைய காலங்களைப் பற்றிய ஆராய்ச்சியில் ஆய்வு நெறிமுறைகளில் இருந்து அதிகம் பிறழாத ஆசிரியன்மார் சைவ, வைணவ நூல்களைப்பற்றிய ஆராய்ச்சியில் மட்டும் இந் நேர்மையை மருந்திற்குக் கூடக் கடைப்பிடிக்கவில்லை! சைவ நூல்களின் காலத்தை எப்போதுமே முற்பட்டதாகவும், வைணவநூல்களின் காலத்தை எப்போதுமே பிற்பட்டதாகவும் இவர்கள் முனைந்து காட்டி வந்திருப்பது பெரிதும் வருந்தத் தக்கது. வைணவர்களில் தமிழ் அறிவுடையார் அதிகம் இன்மையால், அதன் நூற்களும், அடியார்களும் நாளும் இழித்துரைக்கப்பட்டு பின்னுக்கும் தள்ளப்பட்டதைத் தமிழ் உலகம் நன்கறியும். மறைமலை அடிகளின் ‘மாணிக்க வாசகர் வரலாறும், காலமும்’ என்ற நூலில் இவ் அனைத்தையும் ஒருங்கே காணலாம். இதற்கு எதிர்ப்பு ஏதும் இன்றிக் கழிந்ததால், மிகப்பலர் துணிச்சலோடு இவ்வழி செல்லத் தலைப்பட்டனர். இதைக் கண்டு, “என்று நீரும் நம் ஏதிலாத்தன்மை? என்று மாயும் நம் மானமிலாக் கொடுமை?” என்று பொருமிப் பெருமூச்செறிந்து, இவ் ஆசிரியருக்குத் தமிழ் நூல்கள் தந்துதவிய

பெரியார் ஒருவர் பெரிதும் குறைபட்டுக் கொண்டதுண்டு. அன்னாரின் ஆத்மசாந்திக்காகவே எழுதப்பட்டது இந்நூல்.

இத்தகைய பெருநோக்கம் இவ் ஆசிரியர்க்கு மட்டுமே எழுந்ததல்ல. சென்ற நூற்றாண்டில் தமிழ் நாடு புகுந்த போப் ஐயர், கால்டுவெல் போன்ற ஐரோப்பிய ஆராய்ச்சியாளர்களை வசப்படுத்திக் கொண்டு சைவப் பெரியார்கள் பலரும் தம் சமயத்துக்கு வைணவத்தின் இழப்பிடை(at the expense of Vaishnavism)ஆக்கம் தேடிக் கொண்டதே தாம் 'தமிழ் ஆராய்ச்சிகள்'[Tamil Studies] என்ற நூலை ஐரோப்பியருக்குத் தமிழின் உண்மை நலம் அறிவுறுத்தற் பொருட்டு ஆங்கிலத்தில் எழுத நேர்ந்ததன் காரணம் என அறிஞர் M. சீனிவாச அய்யங்கார் அவர்கள்[1] குறித்தனர். ஆயினும், இஃதொரு கன்னி முயற்சியே. 1926-ல் பேராசிரியர் மு. ராகவையங்கார் அவர்களின் 'ஆழ்வார்கள் காலம்' பற்றிய ஆராய்ச்சிப் பேருரைகளின் நோக்கமும் கூட இதுவே தான் இவை பின்னர் 'ஆழ்வார்கள் காலநிலை' என்ற தலைப்பில் 1929-இல் ஒரு நூலாய் வெளிவந்தன. 'தமிழ் ஆராய்ச்சிகள்' 1982-இல் மீண்டும் வெளியிடப்பட்டு இருந்தாலும், 'ஆழ்வார்கள் காலநிலை'யின் பெருமையை அந்தக் காலத்திலேயே 1931-இல் ஒரு முறையும், பிறகு 1941-இல் ஒரு முறையும் புதிய பதிப்புகள் ஆகவே அது வெளிவந்திருப்பதிலிருந்து எளிதில் உணரலாம். இரண்டாம் பதிப்பு அறிஞர் K.G. சங்கரின்[2] தெருட்டலுக்குப் (criticism) பின் அதற்கேற்ப செம்மை செய்யப்பட்டது. ஆயினும், இம்மூன்று பதிப்புக்களிலும் நம்மாழ்வாரைப் பற்றி ஒன்றுமே கூறப்படாதது ஒரு பெருங்குறை. அண்மையில் 1981-இல் வெளிவந்தது இரண்டாம் பதிப்பின் மறு அச்சு மட்டுமே. இதன் பின்னிரண்டு இணைப்புகளில் முதலாவது கட்டுரை நம்மாழ்வாரைப்பற்றியதே. ஆயினும், அதனுள் அவர்தம் கொள்கை

1. Tamil Studies p. 281.
2. Shankar, K G., "The Contemporary of Perialvar" in J. Oriental Research, 1, p. 336-49 (1927)

கள் சில சிறப்பாகப் பேசப்பட்டுள்ளனவேயன்றி, காலம்பற்றி முன்போலவே ஒன்றும் இல்லை. ஆழ்வார்களின் காலங்கள் பற்றிய அய்யங்காரின் பின்னாளைய கருத்துக்கள், 'இலக்கியச் சாஸன வழக்காறுகள்' (1973) என்ற நூல் வழியாக நமக்குக் கிடைத்தன. நம்மாழ்வார் பற்றிய அன்னாரின் சமீப காலத்திய சிந்தனைகளும் கூட தென்னிந்திய தொல் பொருள் ஆராய்ச்சித் துறையினரின் கூட்டம் ஒன்றில் (1960) வாசிக்கப் பெற்று, பின்னர் அவர்களின் சஞ்சிகையிலேயே[3] வெளியிடவும் பட்டுள்ளன. இவ் அனைத்திற்குப்பிறகும் கூட வைணவத்தின் குறை கணிசமான அளவிற்குக் குறைந்து விட்டதாகக் கூறுவதற்கில்லை. காலப் போக்கில் வெளிப் பட்ட புதிய சான்றுகளாலும், ஆராய்ச்சியினால் கிடைத்த புதிய விளக்கங்களாலும் மீண்டும் ஒரு புது நூலே தேவைப் படலாயிற்று. இந்தக் குறையை நிரப்புவதும் இந் நூலின் நோக்கம் ஆகும்.

திருப்பாவையின் காலம் கி.பி. 731, டிசம்பர் 18-ஆம் நாள் காலை என ராகவையங்கார் அவர்கள் அறுதியிட்டு உரைத்தது ஒன்று மட்டுமே இந் நூலில் அனேகமாக முழு வதும் தழுவிக்கொள்ளப்பட்ட அன்னாரின் கருத்து. இங்கே யும் கூட இவர் குறித்த நேரமாகிய அதிகாலை 3-50 மணி ஒப்புக் கொள்ளப்படவில்லை. சங்க காலப் பொய்கையாரே பொய்கை ஆழ்வார் என்பதும், சம்பந்தர்-திருமங்கை ஆழ் வார் சந்திப்பும், நாங்கூர் வீரரால் ஓட்டப்பட்ட வடவரசன் கி.பி. 674-இல் பல்லவ நாட்டைத் தாக்கி உறையூர் காறும் உள்ளே நுழைந்து விட்டபோது, பரமேஸ்வரனால் பெருவள நல்லூர்ப் போரில் தோற்கடிக்கப்பட்டு ஓடிய சளுக்கிய முத லாம் விக்கிரமாதித்யனே என்பதும், கொங்கு நாட்டுக் கரு வூரே குலசேகர ஆழ்வாரால் குறிப்பிடப் பெற்ற கொல்லி என்பதுவும் ஆகிய நாற்பெரும் தவறான கருத்துக்களும்

---

3. Transactions of the Archaeological society of South India, 1960, p. 99-105

தக்க ஆதாரங்களுடன் அடியோடு நிராகரிக்கப்பட்டு, இந் நூலில் சரியான மாற்றுக் கருத்துக்கள் எடுத்துக் காட்டப் பட்டுள்ளன. ஆழ்வார்கள் பதின்மருள் பாணாழ்வாரை ஒன்பதாமவராகக் குருபரம்பரைகள் கூறும். இக் கருத்து எள்ளளவும் பொருந்த வில்லை. இதனை எடுத்துக் காட்டி. இராமானுஜ நூற்றந்தாதியில் இவர் நான்காமவராக சொல் லப்பட்ட முறையே மெய்யாகக் கூடுதல் முதன் முதலாக இந் நூலில் காட்டப்பட்டுள்ளது. இது இந் நூலின் பெருஞ் சிறப்புக்களுள் முதன்மையானது.குலசேகரர் இருவராதலும், அவர்களுள் இரண்டாம் குலசேகரரே ஆழ்வார் ஆதலும், இவர் காலம் திருமங்கை ஆழ்வாரின் பிற்காலப் பகுதியா தலும் நிறுவப்பட்டுள்ளன. பெரியாழ்வார் பாண்டியன் அவையில் பரத்துவ நிருபணம் செய்தது ஆண்டாள் திருக் கல்யாணத்திற்குப் பின்பு தானே தவிர, குருபரம்பரைகள் கூறுமாறு போல முன்பு அன்று என்பது ஒரு முற்றிலும் புதிய கருத்து. தொண்டரடிப் பொடிகளுக்கும், அப்பருக்கும் இந் நூலில் புதிதாக ஒரு தொடர்பு காட்டப்பட்டு உள்ளது. திருமங்கை மன்னரே விசிஷ்டாத்வைத குரு பரம்பரையின் முதல்வரும், நம்மாழ்வாருக்கு இச் சிறப்புப் பெயரை அளித்தவரும் ஆகக் கூடுதலும் முதன்முறையாகக் காட்டியுள்ளோம். இவை புதியன மட்டுமல்ல; நமது மிகப் பெரிய கண்டுபிடிப்புக்களில் இரண்டுங்கூட. மற்றையவற்றின் திறத்தில் பெரும்பாலும் அய்யங்காரை அடியொற்றியே சென்றிருந்தாலும், ஒவ்வொரு இடத்திலும் ஏதோ ஒரு வகையில் சீர்திருத்தம் செய்திருப்பதை இங்கே குறிப்பிடத் தான் வேண்டும்.

திருமங்கை மன்னரின் அரசிருக்கை ஆகிய திருமங் கையை இவரைப் பற்றிய அதிகாரத்தை அச்சிட்ட பின்னரே தெரிந்துகொள்ள முடிந்தது. எனவே, இந் நிர்ணய விதத்தை இம் முன்னுரையிலேயே கூறவேண்டும். திரு மங்கை மன்னர் பிறந்தருளிய கார்த்திகைப் பவுர்ணமி ஆண்டுதோறும் பெருவிழா (பிரம்மோத்ஸவம்) ஆக திருநகரி

என்ற ஊரில் கொண்டாடப்பட்டு வருகிறது. திருவாலித் திருநகரி , என்று வைணவ வழக்கில் குறிப்பிடப்பெறும் திருவாலிப் பக்கத்ததே ஆயினும், திருவாலிக்கும் திருநகரிக்கும் உள்ள தூரம் திருநகரியை (பெருநகராய் இருந்திருக்கக் கூடிய பண்டைத்) திருவாலியின் பகுதி யாகக் கொள்ள இடம் தரவில்லை. நம்மாழ்வார் பிறந் தருளிய குருகூர் ஆழ்வார் திருநகரி என இந்நாள் வழங்கி வருவதால், திருவாலிப் பக்க திருநகரியின் இப்பெயர் திரு மங்கை ஆழ்வார் திருநகரி என்பதன் குறுக்கமே ஆகல் வேண்டும். திருமங்கை ஆழ்வார் பிறநத ஊராக குருபரம் பரைகளில் கூறப்படும் குறையல் இன்று ஒரு தனிச் சிற்றூ ராக திருநகரிக்கு அருகிலேயே உள்ளதால், திருநகரியை ஆழ்வார் அரசு புரிந்த திருமங்கையே ஆகக் கொள்ளலாம். திருமங்கை நகரைத் தன் கரையில் கொண்டிருந்ததாக திரு மங்கை பதிற்றுப்பதது அந்தாதி (எண் 46) கூறும் கலாநிதி ஆறு திருநகரிக்கு அருகில் காணும் உப்பனாறே ஆகல் வேண்டும். திருமங்கை மன்னர் தம்மை ஆலிநாடர் எனவும் கூறிக்கொள்வதால், குறையல் பகுதி தொடக்கத்தில் ஆலி நாட்டின் பகுதியாகவே இருந்ததென்றும், இவர் வீரத்தை மெச்சி இவர் பிறந்த பகுதி இவருக்கு அளிக்கப்பட்டபோது, இப்பகுதியில் பேரூா ஆக இருந்த திருமங்கையை இவர் தலைநகர் ஆகக் கொண்டதால், இப்பகுதி 'திருமங்கை நாடு'—என இவர் காலந் தொட்டுப் பெயர் பெற்றது என் றும் கொள்ளத் தோன்றுகின்றது. மேற்கூறிய அந்தாதியில் 42, 50, 61, 62 முதலிய செய்யுட்களிலும் மங்கை நாடு பேசப் படுகின்றது. பிற்காலக் கல்வெட்டுக்களில் 'அதிகை மங்கை நாடு' என்று இப்பகுதிக்கு வழங்கும் பெயரில் 'அதிகை'— என்ற மிகைச் சொல் திருமங்கை மன்னருக்குப் பிற்பட்ட நாளில் மேற்கொள்ளப் பட்டிருக்க வேண்டும். நல்ல கால மாக படம் 5-1 (இந்நூல் பக். 180) மட்டும் கடைசியிலேயே அச்சிடப்பட்டதால், திருமங்கை பற்றி நாம் ஆராய்ந்து கண்டவற்றை இப்படத்தில் இணைக்க முடிந்தது.

சேர, சோழ, பாண்டி, பல்லவர்களைப் பற்றி ஆசிரி யரே ஆராய்ந்து கண்ட உறுதியான வரலாற்றின் அடிப் படையில் ஆழ்வார்களின் வரலாறு வழங்கப்பட்டுள்ளது. பல்லவதிரையரின் ஆட்சி காஞ்சியில் நடைபெற்ற காலமும் (கி.பி. 495 - 530), முதலாம் ராஜசிம்ம பாண்டியனின் 46-ஆண்டு ஆட்சிக் காலமும் முதன் முறையாக பேசப் பட்டுள்ளன. திட்டவட்டமான பஞ்சாங்கக் குறிப்புகளால் நிர்ணயிக்கப்பட்டுள்ள நம்மாழ்வாரின் பிறப்புக் காலம் (கி.பி. 4-5-798), வானசாத்திரக் குறிப்பால் வரையறுக்கப் பட்டுவிட்ட திருப்பாவையின் எழுச்சிக் காலம் (கி.பி. 18-12-731), வரலாற்றால் உறுதிப்பட்டுக் காணும் திரு மங்கை மன்னரின் வாழ்க்கைக் காலம் (கி.பி. 716-821), நான்முகன் திருவந்தாதியில் பல்லவ மகேந்திர வர்மனின் குணபரப் பெயர்க் குறிப்பால் நிச்சயிக்கப்பட்டிருக்கும் திருமழிசைப்பிரானின் இறுதிக் காலம் (கி.பி. 680)-ஆகிய இந் நாற்பெருங் காலங்களும் நாற்பெருங் கற்றூண்களாக ஆழ்வார்கள் வரலாற்று மாளிகையைத் தாங்கி நிற்கின்றன. ஆழ்வார்களும் நான்கு தொகுதியினரே ஆதல் ஈண்டு பெரிதும் குறிப்பிடத் தக்கது. இவையே அன்றியும், காலம் பற்றிய நமது கண்டுபிடிப்புகள் வேறு பலவும் உண்டு. எனவே, இவற்றுள் ஒவ்வொன்றையும் தனித்தனியாக விவரிப்பதைக் காட்டிலும் இவ் அனைத்தின் உடையவும் ரத்தினச் சுருக்கமானதொரு காலப் பட்டியலே நமது புதிய சாதனைகளைப் புரிந்து கொள்ள உதவியாக இருக்கும். இக்கருத்துடன் இப்போர்க்கொத்ததொரு பட்டியல் பின் இணைப்பாகச் சேர்க்கப்பட்டுள்ளது.

ஆழ்வார்கள் அருளாளர்களாகக் கருதப்பட்டமைக்குக் காரணம், அவர்கள் வாழ்ந்த காலம் மட்டுமன்று. அவர் களின் வரலாற்றில் காணப்பட்ட சிறப்புகளே இக் காலத் தைக் காட்டிலும் முக்ய காரணங்களாம். இச் சிறப்புக்களை அற்புதங்களாகக் காட்டுதல் பவுராணிக மரபு. அற்புதங் களை அப்படியே ஏற்பதற்கில்லை என்பது தெளிவு. காட்

டாக, கற்பரசி ஆகிய நளாயினியின் சாபத்தால் சூரியன் உதிக்கவே இல்லை என்ற கதையை எடுத்துக்கொள்வோம். பூமியின் சுழற்சியை நிறுத்தினால் ஒழிய, சூரியோதயத்தைத் தடுக்க முடியாது. ஆனால், இந்த சுழற்சி விஞ்ஞான விதிகளுக்கு உட்பட்டதேயன்றி, ஒருமனிதனின் நல்லொழுக்கத்தைப் பொறுத்ததன்று. இம் மாதிரியான இடங்களில், அகச் சான்றுகள் இருந்தாலும் பயன் இல்லை. ஆகவே, இப்பேர்க் கொத்த அகச் சான்றுகளிற் சில நற்செயலாக நிகழ்ந்தவற்றை பக்தி மயக்கத்தில் அடியார்கள் தம் வாழ்க்கையோடு இணைத்து குழப்பிக் கொண்ட தற்குறிப் பேற்றங்களே; சில மனோ தத்துவப் புரட்சி மட்டுமே; இன்னும் சில கனாக்களோ, கற்பனைகளோ தாம். பகுத்தறிவுக்கல்வி முறை பல்கிப் பெருகி வரும் இக்காலத்தில் அற்புதங்களை அவைகள் நிகழ்ந்திருக்கக் கூடியவாறே காட்ட வேண்டியுள்ளபடியால், ஆழ்வார்கள் வரலாறுகளையும் இக் கண்ணோட்டத்தில் புதுக்கி எழுதவேண்டியது அவசியம். இந் நூலில் இப்பணியும் இயன்ற அளவுக்கு இயற்றப்பட்டுள்ளது.

இன்னொரு சிறப்பு என்னவென்றால், இந்நூல் ஆழ்வார்களின் கால ஆராய்ச்சியோ, வரலாற்று ஆராய்ச்சியோ அல்லது இவ் இரண்டும் மட்டுமேயோ அன்று. இது வைணவ சமய வளர்ச்சி பற்றியதுங்கூட. சொல்லப் போனால், இவ் வைணவ வரலாற்றில், ஆழ்வார்களே முக்ய கதாபாத்திரங்கள் ஆனதாலேயே இவர்கள் வரலாறும், காலமும் முறைப்படி ஆராயப்பட நேர்ந்தன. அது கிடக்க, 'வைணவத்தின் ஆழ்வார்கள் கால நிலை' — என்ற இந் நூலின் பெயரில் ராகவையங்கார் தம் பெரு நூலின் வழி நூல் ஆகின்ற இதன் வரலாற்றையும், இது வைணவ வரலாற்று நூல் ஆதலையும் ஒருங்கே காணலாம். இதற்கு ஏற்றாற் போல, இந் நூலின் முதல் நான்கு அதிகாரங்களில் வைணவம் செய்த புரட்சிகளும், கண்ட வெற்றிகளும், அடுத்த மூன்று அதிகாரங்களில் அது அரியணை ஏறிப் பொற்காலம் கண்டதுவும் விவரிக்கப்பட்டுள்ளன. பின்

மூன்று அதிகாரங்கள் கூட மன்னர்களுடையதைப் பற்றி யனவே ஆதலும் இங்கே எண்ணிப் பெரிதும் மகிழத் தக்கது. தமிழகத்தின் இரண்டாவது பெருஞ்சமயமான வைணவம், இரண்டாம் தரச் சமயம் ஆய்விடாமல் சைவத்தின் இரும்புப் பிடியில் இருந்து புரட்சி செய்து விடுபட்டு, எவ்வாறு தன்னை அது பல்லவர் காலத்தில் பாதுகாத்துப் பலப் படுத்தியும் கொண்டது என்பதை இந் நூல் ஓரளவிற்காகிலும் தெளிவாய்க் காட்டும் என்பது இவ் ஆசிரியரின் நம்பிக்கை.

கடைசி அதிகாரத்திற்கு 'புதுயுகம்' என்று ஒரு சமயம் தலைப்பு இடப்பட்டிருந்தது. இந்தியாவின் தத்துவ வரலாற்றில் ஆதிசங்கரர் காலம் ஒரு புதுயுகத்தின் தொடக்கமாகவே கருதப்படுவது; ஆனால், இதைக் குறிக்க எந்த சகாப்தமும் இதுவரை தொடங்கப்பட்டதில்லை. ஆயினும், வைணவம் மட்டும் தனது விசிஷ்டாத்வைத குருபரம்பரையின் ஆதிநாதனாகிய நம்மாழ்வார் (சங்கரருக்கு பத்து ஆண்டுகளே பின்னிட்டுப்) பிறந்தருளிய காலத்தில் இருந்து ஒரு புதுயுகத்தை 'கலியுகம்' என்ற பழம் பெயரால் தொடங்கி வழங்கி வந்ததை குருபரம்பரைகளிற் காண்கிறோம். பிறகு, அது எப்படியோ மறக்கப்பட்டு விட்டது. மீண்டும் அப்படி ஒன்றைத் தொடங்கத்தூண்டும் முயற்சியில்தான் நாம் மேலே கூறியபடி கடைசி அதிகாரத்திற்கு இத் தலைப்பிட்டிருந்தது.

புதுயுகம்-என்ற தலைப்பு நம்மாழ்வாரின் சமரஸ சன்மார்க்கப் புதிய வைணவத்தைச் சுட்டவும் இடப்பட்டதாகும். சமயப் பூசலை ஒழித்துக் கட்டவல்ல இதனை சமயத்துறை செக்யூலரிசம் (Secularism) என்று கூறலாம். இது போல சமயத்துறை ஜனநாயகம், சமயத்துறை சோஷலிசம் என ஏதும் வைணவம் சாதித்ததுண்டா?-என்பனவும் வரலாற்றில் இடம் பெறத் தக்கன. தீண்டாமை ஒழிப்பு, பால் வேற்றுமை இன்மை, செல்வம் மற்றும் கல்வி பற்றிய செருக்கொழித்தல், பாவமன்னிப்பு முதலியன எல்லாம் இவற்றுள் அடங்கும். இவற்றிலும் இந்நூல் நாட்டம் செலுத்தியிருப்பது ஒரு குறிப்பிடத் தக்க அமிசம் ஆகும். இந்திய சமயங்கள்

தனி மனிதனின் நன்மைக்குப் போல சமுதாய முன்னேற்றத்திற்கு வழி செய்வனவாக இல்லை-என்று சிங்கப்பூர் பிரதமர் குறை கூறியதாக ஒரு செய்தி நாளிதழ்களில் (News Papers) வெளி வந்ததால், சமுதாயக் கண்ணோட்ட அணுகு முறைக்கு இந்நூல் கால நிர்ணயத்துக்கும், வைணவ சமய வளர்ச்சி வரலாற்றுக்கும் அடுத்த இடத்தை அளிக்கின்றது.

ஆழ்வார்களை திருமாலின் அணி மற்றும் ஆயுதங்களின் அமிசமாகக் கருதும் வழக்கம் ஒன்றும் குருபரம்பரைகளில் உண்டு. இது வைணவத்தின் உயிர்நாடிகளில் ஒன்றான அவதாரக் கொள்கையின் நீட்டமே (extension). குருபரம் பரைகளால் கற்பிக்கப்படும் அமிசங்கள் ஆழ்வார்கள் வைணவப் புரட்சியில் ஏற்றிருந்த பாகத்திற்கு இயைந்தவை தாமா என்பதும் ஆராயத் தக்கதே. இதுவும் இந்நூலில் உரிய இடங்களில் செய்யப்பட்டு, தேவைப்பட்ட மாற்றங் களும் கூறப்பட்டுள்ளன. இவற்றைச் சுருக்கமாக அட்டவணை 1-இல் காணலாம். பொதுவாக தீவிரவாதிகள் படைக்கலங்களின் அமிசமாகவும், பக்திப் பிரசாரகர்கள் அணிகலன்களின் அமிசமாகவும் இதில் காண்கின்றனர். இவ் அம்ச அவதாரிகையே அட்டைப்படமாக இந் நூலை அணி செய்யவும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

### அட்டவணை—1

### ஆழ்வார்களின் அமிசங்கள்

| ஆழ்வார் பெயர் | குருபரம்பரையில் கூறப்பட்ட அமிசங்கள் | இந்நூல் சிபாரிசு செய்யும் அமிசங்கள் |
|---|---|---|
| பொய்கையார் | சங்கம் | தாமரை |
| பேயார் | வாள் | சங்கம்(பாஞ்சஜன்யம்) |
| பூதத்தார் | தண்டு | தண்டு(கவ்மோதகி) |
| உறையூர் நாச்சியார் | நீளாதேவி | ஸ்ரீவத்ஸம் |

| ஆழ்வார் பெயர் | குருபரம்பரையில் கூறப்பட்ட அமிசங்கள் | இந்நூல் சிபாரிசு செய்யும் அமிசங்கள் |
|---|---|---|
| பாணர் | ஸ்ரீவத்ஸம் | கவுஸ்துபம் |
| மழிசைப் பிரான் | ஆழி | ஆழி (சுதர்சனம்) |
| தொ. பொடிகள் | வனமாலை | வாள் (நந்தகம்) |
| பெரியாழ்வார் | கருடன் | சேஷன் |
| ஆண்டாள் | பூதேவி | மாலை (வைஜந்தி) |
| திருமங்கை மன்னர் | வில் | வில் (கார்முகம்) |
| குலசேகரப் பெருமாள் | கவுஸ்துபம் | மகுடம் |
| நம்மாழ்வார் | சேனைமுதலி | சேனைமுதலியார் |
| மதுரகவி | குமுதம் | கருடன் |

கி.பி. 550-இல் இருந்து 850 வரை உள்ள 800 ஆண்டு வைணவ வரலாற்றுக் காலப்பகுதியை ஒவ்வொன்றும் 50 ஆண்டுகள் கொண்ட ஆறு பொழுதுகள் (epoch) ஆக்கி, இப்பொழுதுகளில் புகழ் பெற்று விளங்கிய வீரர்களைத் (heros) மய்யமாகக் கொண்ட ஆறு அதிகாரங்கள் வகுக்கப் பட்டுள்ளன. குலசேகராழ்வார் காலம் திருமங்கை ஆழ்வார் காலப் பிற்பகுதியில் கொஞ்சமும், நம்மாழ்வார் கால முற் பகுதியில் எஞ்சியதும் ஆகக்கலந்திருப்பது. ஆயினும், முடி மன்னர்களில் அவர் ஒருவரே ஆழ்வார் ஆகும் பேறு பெற்ற மையும், அவர் காலத்திய தென்னாட்டின் பேரரசர் அவரே ஆதலும் ஆகிய சில தனிச் சிறப்புக்களால் அவருக்கு தனி அதிகாரம் வகுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு அதிகாரத்திலும் எவருடைய புலக்கொடைகள் (contributions) அதிகமோ, அவருக்கே அவ் அதிகாரம் அடியீடு (dedication) செய்யப் பட்டுள்ளது. இவ் விவரங்கள் ஒரு அட்டவணையாக கீழே கொடுக்கப்பட்டுள்ளன. இங்ஙனம் உரிமை பெற்றோர்களின் புகைப்படங்கள் கிடைக்கும்போது அவ்வவ் அதிகாரங்களில் ஆழ்வார்களின் படங்களுக்குப் பதிலாக (அவை கிடைக்காத படியால்) இணைக்கும் எண்ணமும் உண்டு.

## அட்டவணை—2

| பொழுது | வீரர் | உரிமை |
|---|---|---|
| 550-600 | பொய்கையார் | ராமானுஜம் B. V. |
| 600-650 | மழிசைப்பிரான் | சீனிவாச அய்யங்கார், M |
| 650-700 | தொண்டரடிப்பொடி. | இந் நூலாசிரியர் |
| 700-750 | பெரியாழ்வார் | ராகவையங்கார், மு. |
| 750-800 | திருமங்கை மன்னர் | மீனாட்சி, C |
| 785-815 | குலசேகரர் | குஞ்சன் பிள்ளை, எ |
| 800-850 | நம்மாழ்வார் | மறைமலையடிகள் |

இவ்வரலாறு இலக்கிய பாணியில் அமைக்கப்பட்டிருப்பதும் குறிப்பிடத் தக்கது. கதையாகவும், காவ்யமாகவும், நாடகமாகவும், (ஆராய்ச்சிக்) கட்டுரையாகவும் இது பல வண்ணங்களில் நடையிட்டுச் செல்வதையே குறிப்பிடுகின்றோம். கவிதைகளும் இதில் உண்டு. முக்யமாக, ஒவ்வொரு அதிகாரத்தின் இறுதியிலும் அதிகார நாயகரின் குண நலம் பற்றிய சாராம்சத்தை நமது சொந்தக் கவிதையில் தனியன் (தனிச் செய்யுள்) ஆக வடித்திருக்கிறோம். திருமங்கை மன்னரைப் பற்றிய அதிகாரம் அச்சிடப்பட்ட பிறகே இயற்றப்பட்ட

“குமுதப்பேற் எழிலாள்மேல் கொண்ட காதல்
மனங்கவற்ற
மறித்துவழி மாயோனை மந்திரமுங்
கொண்டானால்;
பரசமயக் காலனாய் வைணவத்துக் கலிகன்றி
திருவரங்கம் செய்தேறிக் குருபரனாய் இருந்தா
னால்;
குருகூருடை வள்ளலைநம் ஆழ்வாரெனக்
குறித்தானும்
திருமங்கை மன்னநாற் கவிராஜ நம்பியாலோ;
விரையார்செம் பொற்காலம் செய்திட்ட
செம்மலேயோ
உரநீலக் கள்ளனிவன் குறையலூர்க்
கோமானே”,

என்ற செய்யுள் இதற்கு ஒரு நல்ல காட்டாகும். அதுகிடக்க, இந்நூலே கூட புதினம் (novel) போன்றதோர் வரலாற்று நூலே. சைவத்தின் பிடிப்பிலிருந்து விடுபட வைணவம் மேற்கொண்ட போரின் வரலாற்றை இந்திய தேசியப் போராட்டப் பின்னணியில் பாரதியின் தேசிய கீதங்களை தக்க இடங்களில் இணைத்து மணி இடை பதித்த மாலையைப் போலப் புனைந்துள்ளோம். இவற்றிற்கெல்லாம் காரணம் வாழும் சக்தியாக இருக்க விழையும் எந்த பொருளுக்கும் மக்களின் பேராதரவு தேவைப்படுவதே. மனத்தைப் பிணிக்கும் மகத்தான சக்தி 'கவின்கலை'த் துறைகளுக்கே உண்டு. அரசியலுக்கு சினிமா ஒரு நுழை வாயில் ஆய்விட்ட இன்றைக்கு இதை அதிகம் விமர்சிக்கத் தேவை இல்லை. இக் கவின் கலைகளுள் இலக்கியம் ஒரு முதனிலைக் (frontline) கலை. ஆசிரியர் கிப்பனின் "ரோமப் பேரரசின் தளர்ச்சியும், வீழ்ச்சியும்" (Gibbon's The Decline and Fall of the Roaman Empire") என்பதுவும், அறிஞர் கார்லைலின் 'பிரெஞ்சுப் புரட்சி' (Thomas Carlyle's French Revolution) என்பதும் ஆகிய வரலாற்று நூல்கள் இலக்கியச்சுவை சொட்டச் சொட்ட சமைக்கப்பட்டதாலேயே இன்னமும் போற்றப் படுவது இங்கே எண்ணப் படத் தக்கது.

வைணவத்தை வளரும் சக்தியாக்க விழையும் கண்ணோட்டத்தில் சில அரிய யோசனைகளும் இந்நூலில் உண்டு. தேவைப்படும் வளமான இலக்கியச் செல்வத்தை படைப்பதற்காக கோதை நாச்சியாரின் திருக்கல்யாணம் பற்றிய (கோதாஞ்சலி' என்ற) புதியதொரு காப்பியத்திற்கான அடிக்கல் இந் நூலில் இடப்பட்டுள்ளது. புலவர்களுக்கே அதிகம் புலனாகும் இஃதொழிய பிற பொது மக்களுக்காகவென்று புதினங்கள் போலும் சில படைப்புக்களும் தேவை. இந் நோக்குடன் பல்லவ மல்லன்-பாண்டிய பராந்தகன்-திருமங்கை மன்னர் காலம் 'சிவகாமியின் சபதம்' 'பொன்னியின் செல்வன்' போலும் வரலாற்றுப் புதினங்கள்

(historical novels) படைக்கத் தமிழ் வரலாற்றிலேயே தலை சிறந்தவற்றுள் ஒன்றாதலும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. உண்மையில், இந்நூல் இவ் உயர்ந்த நோக்க (end)த்திற்கு ஒரு வழி (means) வகுப்பதே. இது கைகூட இந்நூலைக் கண்ணுறும் அன்பர்கள் தங்கள் மேலான கருத்துக்களையும், அறிவுரைகளையும் ஆசிரியருக்கு அனுப்பி வைக்குமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

கையெழுத்துப் பிரதி வடிவிலேயே பல பதிப்புக்களைக் கண்டது இந்நூல். இருந்தும், இது வரலாறு, மொழி, இலக்கியம், சமயம், தத்துவம் ஆகிய ஐந்து பரிமாணங் களைக் கொண்டதாய் இருப்பதால், மேற்கூறியது போல, என்னதான் இலக்கியப் பாணியில் எழுதப்பட்டிருந்தாலும், ஒரே தடவையில் விளங்கிக் கொள்வது கடினமே. கடின மான (குறிப்பாக வரலாற்றுப்) பகுதிகளை சில, பல தடவை கள் பொறுமையோடு திரும்பத் திரும்ப படித்துப் பார்த்த பிறகே, இந்நூலை மதிப்பிட வேண்டுமாய் கேட்டுக் கொள் கின்றோம். மேற்கோளாகக் காட்டப்படும் செய்திகள் இந் நூலுக்கு முக்ய ஆதாரமாய் அமைந்த பத்து* முந்து நூற் களைச் சார்ந்தனவாகில், இச் செய்திகளுக்கு அருகில்

---

* 1. Tamil Stuc.cs, Srinivasa Iyengar, M., (1914)
2. The History of Sri Vaishnavas, Gopinatha Rao, T.A., 1917 lectures published in 1923.
3. தமிழ் வரலாறு—சீனிவாச பிள்ளை K.A., 1920.
4. Early History of Vashnavism in South India, Krishnasamy Iyengar, S.K., 1923.
5. 'ஆழ்வார்கள் காலநிலை', ராகவையங்கார். மு. 1926 சொற்பொழிவுகள் பதிப்பிக்கப்பட்டது 1929.
6. 'மாணிக்கவாசகர் வரலாறும், கால ஆராய்ச்சியும்', மறைமலை அடிகள், 1930.
7. 'வைணவமும் தமிழும்' பற்றி 'இலக்கிய வரலாறு' வில்- வரதராஜய்யர், E.S. (1957)

நூலொழுக்கி (text) லேயே அவை முதல் நூலிற் காணும் பக்க எண் அடைப்புக் குறிகளுக்கிடையே ( )கொடுக்கப் பட்டுள்ளன இந்த ஆதார நூல்களின் ஏனைத் தொகுப் பியல் (*Bibliography*) விவரங்களை எல்லாம் இந்நூலின் இறுதியிற் காணும் மேற்கோள் நூல் பட்டியலில் காணலாம். சில செய்திகளுக்கு மட்டும் பயன்பட்ட மற்ற நூற்களின் திறத்தே அவற்றின் பெயரும் எடுத்தாளப்பட்ட செய்தி காணும் பக்க எண்ணும், அச் செய்தி இந்நூலில் பயிலும் பக்கத்து அடியிலேயே குறிக்கப்பட்டுள்ளன. இதர விவரங் கள் முற்கூறப்பட்ட மேற்கோள் நூல் பட்டியலில் வழக்கம் போல் கொடுக்கப்பட்டுள்ளன.

கடைசியாக, ஒரு வார்த்தை. வைணவத்தின் கனி தீர்க்கவே எழுதப்பட்டாலும், உண்மையில் மட்டுமே இது நாட்டம் கொண்டது. எதையும் கூட்டியோ, குறைத்தோ புரட்டு செய்வதில் இவ் ஆசிரியருக்கு அறவே நம்பிக்கை இல்லை. சுருங்கச் சொன்னால், இதில் முற்ற முழுக்க ஒரு விஞ்ஞானியின் முயற்சியே காணப்படும். மறைமலை அடி களின் பெருநூலுக்கு எதிர் நூலாய் இருந்தாலும், எந்த முடி விலும் இந் நூலுள் எள்ளளவு கூட ஓரம் போகவில்லை. நூல் நெடுகவும், "இது ஒரு (தமிழ்) இலக்கிய வரலாறு; (தமிழ்ச்) சமுதாய வரலாறு; இது காலம் ...ந்து நிற்க வேண்டும்; மிகப் பலர்க்கு வழிகாட்டுமோர் ...பனுவ லாய் (*classic*) இருக்கவேண்டும்"—என்று முனைத்திருந்த உணர்ச்சியோடேயே புனையப்பட்டது. இருந்தாலும்,

8. 'இலக்கியச் சாஸன வழக்காறுகள்', ராகவை யங்கார்.மு. (1973)
9. The History of Vaishnavism in South India upto Ramanuja, Ramanujam, B.V:, (1973)
10. Religion and Phitosophy of Naalaayira Divya Prabandam, with particular reference to Nammalvar, Subbu Reddiar, N.V., (1977).

மனித முயற்சியே ஆதலால், இரண்டொரு பிழைகள் இருத்தல் கூடுவதே. அதாவது, இங்கு கூறப்பட்டவை எல்லாம் இன்னமும் வரலாறு சம்பந்தப்பட்ட உத்திகள் (*hypotheses*) தாமே தவிர, வரலாறே அல்ல என்பது கருத்து. இவ் உத்திகளை மேம்படுத்தி மெய் வரலாறு படைக்க, குறிப்பாக, சைவப் பெருங்குடி மக்களின் ஒத்துழைப்பைத் தமிழை வளப்படுத்த வேண்டும்—என்னும் ஆசையில் வேண்டிக் கொள்கிறோம். இவர்கள் முன்வந்து தமது ஆலோசனைகளை வழங்கினால், அவைகளில் சிறப்பானவை ஒப்புதலோடு (*acknowledgement*) அடுத்த பதிப்பில் இணைத்துக் கொள்ளபபடும் என உறுதி கூறுகிறோம். நிற்க,

'தமிழ் வளம்' —என்றதுமே இந் நூலின் சாராம்சம் நினைவிற்கு வருகின்றது. வாசகர்களின் வசதிக்காக என்று ஒரு முறை சுருக்கிக் கூறல் நலமெனக் கருதுகிறோம். வைணவத் தமிழின் குறை தீர்க்க வளமான இலக்கியம் படைப்பதும், இதற்காக வைணவ வரலாறு காண்பதுவும், இவ் வரலாற்றுக்காகவென்று கதாபாத்திரங்களாகிய ஆழ்வார்களின் காலம், வாழ்வு, வாக்குளின் ஆராய்ச்சியும் ஆகிய மூன்று நிலைகளில் இது செல்வதை நினைவூட்டி, இதற்கு வழிகாட்டியாக இருநத

"அரைசியல் பிழைத்தோர்க்(கு) அறம்கூற்(று)
ஆவதூ உம்,
உரைசால்பத்தினிக்(கு) உயர்ந்தோர் ஏத்தலும்,
ஊழ்வினை உருத்து வந்(து)ஊட்டும் என்பதூ உம்
சூழ்வினைச் சிலம்பு காரணம் ஆக
சிலப்பதிகாரம் என்னும் பெயரால்
நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்

என்ற (சிலம்பு பதிகம் 55-60) அவ் அருளுடை முனிவன் இளங்கோவின் திருவடித் தாமரைகளையும்,

எப்பொருள் எத்தன்மைத்(து) ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு

எனப் பொய்யில் புலவன் சொற்ற பொருளார்தரு அறிவுரையையும்,

பேதியாது நிமிர் பேதவுருவம் பிறழ்கிலா
ஓதி ஓதி உணருந்தோறும் உணர்ச்சி உதவும்
வேத வேதியர் விரிஞ்சன் முதலோர் தெரிகிலா
ஆதி தேவர் அவர்எம் அறிவினுக்(கு) அறிவரோ!

-என்று கலைக் கடல் கம்பன் வியந்த கடவுட் கோலத்தையும் எண்ணுகின்றோம்.

வேங்கடவன் விஷயமே ஆனாலும், அவன் சந்நிதானமே இதனை வெளிக்கொணரப் பொருளுதவியும் செய்ய முன் வந்த அரியபேற்றை எண்ணி, ஆழ்வார்கள் அவதாரிகையின் அம்ச விவரங்களைச் சித்தரிக்கும் இந்நூல் அட்டைப்படத்தில் அவனுடைய நின்ற திருக்கோலமே தொக்கு (மறைந்து) இருக்கும் நிலையில் காட்டப் பட்டுள்ளது. இதனைத் தீட்டி உதவிய அருமை நண்பர் கலைஞர் திலகம் பசப்பா அவர்களுக்கு எமது முதற்பெரு நன்றி உரியதாகும். வழக்குரைப் பேரறிஞர்கள் ஆகிய திரு. S. சம்பத்குமார், திரு. P. வெங்கிடசாமி ஆகிய பெரியோர்களும், T.V.S. Charities, Seshachalam Foundation, Rangiah Chetty's Charities மற்றும் Madhava Chetty's Charity Fund ஆகிய நிறுவனங்களும் அளித்த பேராதரவும், பொருள் உதவியும் என்றென்றும் மறக்கற்பாலன அல்ல. அடுத்து, அச்சிட்டு உதவிய கனக துர்கா பிரிண்டர்ஸ் அவர்களுக்கும் உடனிருந்து பல்லாற்றானும் துணை புரிந்த அருமை நண்பர்கள் K. வெங்கடபூபதி, C. இராசாங்கம், ஜெ. முருகேசன், R. வெங்கடேசன், T. வெங்கடேசன், M. V. நடராஜன் ஆகியோர்க்கும் ஆசிரியரின் உளங்கனிந்த நன்றி.

சுந்தர நிலையம், சு. குலசேகரன்
சென்னை-90.

# பொருளடக்கம்

1. சங்கே முழங்கு 1 - 52
(முதலாழ்வார்கள் தொடங்கிய தனி வைணவ இயக்கம் பற்றியது)

2. ஆழிப்படை புறப்பட்டது 53 - 95
(மழிசைப்பிரான் நடத்திய வீரவைணவக் கடும் போர் பற்றியது; பாணர் வரலாறும் கொண்டது)

3. புரட்சியின் மறுமலர்ச்சி 96 - 126
(தொ. பொடிகளும், உறையூர் நாச்சியாரும் இயக்கத்திற்கு அளித்த புத்துயிர் பற்றியது)

4. புரட்சியின் வெற்றி 127 - 174
(பெரியாழ்வாரின் மதுரை வெற்றி பற்றியது; ஆண்டாள் காவியமும் கொண்டது)

5. அரியாதனத்தில் 175 - 228
(திருமங்கை மன்னரின் பொற்காலம் பற்றியது)

6. மன்னர் பிரான் 229 - 264
(குலசேகரரின் பக்தி சாம்ராஜ்யம் பற்றியது)

7. குரு(கை) நாதன் 265 - 340
(நம்மாழ்வாரின் புதிய வைணவம் பற்றியது)

8. மேற்கோள் நூல் பட்டியல் (தமிழ்) 341 - 346

9. ——ஷெ——(ஆங்கிலம்) 347 - 350

பிற்சேர்க்கை 351 - 379

# பிற்சேர்க்கை விவரங்கள்


1. ஆதார நூற்களின் அட்டவணை 351

2. ஆழ்வார்கள் பிறப்புக்கால விவரங்களின் அட்டவணை 352 - 353

3. தமிழ்நாட்டுத் தலங்கள் 96-இன் வளர்ச்சி வரலாறு 354

4. பல்லவர் குடிவழி 355 - 358

5. உறந்தைச் சோழர் குடிவழி 358 - 360

6. இடைக்காலக் காஞ்சி அரசர் பட்டியல் 360

7. பாண்டியர் குடிவழி 361 - 362

8. கங்கர் குடிவழி 363 - 364

9. சாளுக்கியர் குடிவழி 365 - 366

10. ராஷ்டிரகூடர் குடிவழி 366 - 367

11. கால மாலை (பட்டியல்) 368 - 376

12. பிழை திருத்தம் 377 - 379

# 1. சங்கே முழங்கு

## (கி. பி. 550-600)

*முதலாழ்வார்கள் சங்க காலத்தினரா?*

ஆழ்வார்கள் பன்னிருவருள் பொய்கையார், பூதத்தார், பேயார் ஆகிய மூவரை மட்டுமே முதலாழ்வார்கள் என்றல் மரபு. இம் மூவரும் முறையே தாமரை, மாதவி, செவ்வல்லி மலர்களில் பிறந்தவராம். இவர்களுடைய சாதி மற்றும் பெற்றோரைப்பற்றிய விவரமொன்றும் அறவே அறியப்படாமையே இக்கற்பனைக்குக் காரணம் ஆதல் தெளிவு. இந்த நிலை இவர்கள் எல்லாம் மிகு பழங்காலத்தினர் ஆதலை காட்டுகிறது என்பர், அறிஞர் கோபிநாதராய் அவர்கள் (பக். 18). மிகப் பல சிவபிரான்களில் எவருடைய பெற்றோரும் அறியப்படாததால், இவ் அனைவரையும் ஒன்றாக்கி 'பிறவா யாக்கைப் பெரியோன்' என்று சைவம் கற்பித்தது ஈண்டு எண்ணத்தக்கது. இப்படி முதலாழ்வார்கள் மூவரும் மிகு பழங்காலத்தினர் ஆனமை பற்றியே திருமங்கை ஆழ்வாரும் தமது அப்புயகரப் பதிகத்தில்

> "செந்தமிழ் பாடுவார் தாம் வணங்கும் தேவர்
> இவர்கொல் தெரிய மாட்டேன்"
>
> (பெரிய திரு 2:8-2)

என்று பாடினார். இங்கே 'செந்தமிழ் பாடுவார்' - எனக் குறிப்பிடப்பட்டவர் முதலாழ்வார்களே என்பர் உரையாசிரியரான பெரியவாச்சான் பிள்ளை. சமகாலத்தவர்களைச் சிறப்பித்தலில் அழுக்காறு முதலியவற்றால் தயக்கம் ஏற்படுவதுண்டு. இறந்த காலத்தவர்கள் திறத்தில், அதிலும்

மிகப் பழைய காலத்தினர் மாட்டு, இனந் தெரியாத ஒரு விதமான பக்தியே இருத்தல் வழக்கு. தொண்டரடிப் பொடிகள், ஆண்டாள், பெரியாழ்வார் ஆகிய- சிறிதே முற் பட்ட ஆழ்வார்களுள் எவரையும் திருமங்கை மன்னர் இவ்வளவு தெளிவாகக் குறிப்பிடாமையும் ஈண்டு எண்ணத் தக்கது.

நாலாயிர திவ்விய பிரபந்தத்தின் இருபத்து நான்கு பிரபந்தங்களிலும் முதலாழ்வார்களால் செய்யப்பட்ட முதல் திருவந்தாதி, இரண்டாம் திருவந்தாதி, மூன்றாம் திருவந் தாதி ஆகிய மூன்றில்தான் வடசொல் ஆட்சி மிக, மிகக் குறைவு. பத்துப்பத்து பாக்களைக் கொண்ட பதிகமாய், பெரும்பாலும் ஏதேனும் ஒரு திருப்பதியின் மேற் பாடப்படும் பிற்கால வழக்கப்படி இவர்கள் எதையும் செய்யவில்லை. மாறாக, முற்ற முழுக்கப் பொதுவகையினவாய், நந்நூறு பாக்களைக் கொண்டு, 'கார் நாற்பது', 'களவழி நாற்பது' என்றாற் போலும் தனி நூற்களாய் மூன்று பிரபந்தங் களுமே அமைந்திருத்தலும் அவற்றின் பழமைக்குச் சான்று கூறும். பெருந்தேவனாரின் பாரத வெண்பா (கி பி. 9-ஆம் நூற்றாண்டு)[1], புகழேந்தியின் நளவெண்பா(கி.பி. 13-ஆம் நூற்றாண்டு)[2] என்பவற்றைப் போல வெவ்வேறு காலங் களில் வெண்பாவில் நூல்கள் பிற்காலத்தேயும் செய்யப் பட்டிருந்தாலும், சமகாலத்தினராகக் கூறப்படும் மூவரின் திருவந்தாதிகளுமே வெண்பாவினவாய் உண்மை, வெண்பா பெருவழக்கிற்றாய் இருந்த காலத்தே இவை செய்யப்பட்டிருக்க வேண்டுதலைக் குறிக்கின்றது. நான் காவதாக, ராமசாமி, கிருஷ்ணசாமி, கோவிந்தசாமி என்றாற் போலும் பெயர்களே பெரும்பான்மை வழக்கிலுள்ள இக்காலத்தேயும் தனித் தமிழ் இயக்கத்தின் தலைவர்கள்

---

1. தமிழ் இலக்கிய வரலாறு 9-ஆம் நூற்றாண்டு, பாகம் 1, பக். 9 (1971)

2. தமிழ் இலக்கிய வரலாறு, 13, 14, 15-ஆம் நூற். பக். 14

சிலர் பரிதிமாற் கலைஞர் (வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார்), மறைமலை அடிகள் (சுவாமி வேதாசலம்), நெடுஞ்செழியன், மதியழகன் (சோமசுந்தரம்), சிற்றரசு (சின்ன ராஜு) எனத் தூயத் தமிழ்ப் பெயர் கொண்டது போலவன்றி, காஞ்சியிலும், கடன் மல்லையிலும், மயிலையிலும் (சென்னை மயிலாப்பூர்) பிறந்த ஆழ்வார்கள் மூவரும் முறையே பொய்கை, பூதம், பேய் என்ற செந்தமிழ்ப் பெயரினராய்க் காணப்படுவதும் இத் தமிழ் வழங்கிய மிகு பழங்காலத்தையே நமக்கு நினைவூட்டுகின்றது. களவழி நாற்பது,புறம்-48,49, நற்றிணை-19 ஆகியவற்றின் ஆசிரியராக ஒருபொய்கையாரும், பூதன் (நற்.29), நட்பூதன் (முல்லைப்பாட்டு), பூதப்பாண்டியன் (புறம். 246), கரும்பிள்ளைப்பூதனார் (பரி. 10), குன்றம் பூதனார் (பரி. 9,18) எனச் சில பூதர்களும், பேயனார் (குறுந். 233, 359, 400; ஐங். 410-500 அகம். 234) பேயார் (குறுந். 339) எனச் சில பேய்ப் பெயரினோரும் சங்க இலக்கியங்களில் பேசப்படுகின்றனர். அடுத்து, பேராசிரியர் தாம் சிறந்த சிவநேயச் செல்வராய் இருந்தும் தமது தொல்காப்பியத்துச் செய்யுளியல் 239-ஆம் சூத்திர உரையுள் விருந்து என்னும் வனப்பிற்கு ஞான சம்பந்தருக்கும் முற்பட்ட காரைக்கால் அம்மையார் செய்த அற்புதத் திருவந்தாதியை விட்டு விட்டு பொய்கையார் முதலாயினோர் அந்தாதியை உதாரணம்காட்டி யிருப்பது குறிப்பிடத்தக்கது. முதல் திருவந்தாதியே அந்தாதி வகைச் சிற்றிலக்கியத்தின் முன்னோடி என்பது அன்னார் கருத்தாதல் இதனால் நன்கு புலன் ஆகின்றது. 'பொய்கையார் முதலாயினோர் அந்தாதிகள்' என்பதனால் பூதத்தாரும், பேயாரும் செய்த அந்தாதிகளும் தழுவிக் கொள்ளப் பட்டனவாக ஆசிரியர் ராகவையங்கார் கருதினார்[3](பக் 41)[4]. ஜைன, பவுத்த மதக்

---

3. ராகவையங்கார், மு. செந்தமிழ், பக். 264-71 (1902-3)

4. இலக்கியச் சாஸன வழக்காறுகள். பக். 41

காழ்ப்பு மருந்திற்குக் கூட இந் நூற்களில் இல்லாமையும் இவை சிலப்பதிகாரம் போலும் இம்மாதிரியான நூல்களின் காலத்தியனவாதலைக் காட்டும் என்றும் அவர் கருதினார் (பக். 50). இவை அனைத்திற்கும் மேலாக, இவற்றைப் பிற்காலத்தியனவாகக் காட்டும் உறுதியான* அகச்சான்று ஒன்று கூட இவற்றில் இல்லை என்பது பெரிதும் குறிப்பிடத்தக்கது. இதை ஏன் வற்புறுத்துகிறோம் என்றால், மேற்கூறிய வாதங்களில் மிகப்பல பதினொன்றாம் சைவத் திருமுறையில் அடங்கும் நக்கீரர், கல்லாடர், கபிலர், பரணர் ஆகியோரின் நூல்களுக்கும் பொருந்தும். ஆனால், இவை பிற்காலத்தியனவே என்பதற்கான அகப்புறச் சான்றுகளை அறிஞர் அருணாசலம் அவர்களின் 10-ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றில் காணலாம்.

கி.பி. 11-ஆம் நூற்றாண்டினதாகக்[5] கருதப்படும் யாப்பருங்கலத்தின் 93-ஆம் சூத்திர விருத்தி உரையுள் ஆரிடக்கவி பாடுதற்குரியோர் ஆக்குதற்கும், கெடுத்தற்கும் ஆற்றல் உடையோராய் முக்காலமும் உணர்ந்த இருடிகள் என்றும், அவர்களை பொய்கையார், பூதத்தார், (காரைக் கால்) பேயார், குடமூக்கிற் பகவர், மூலர் முதலியோர் ஆகவும் கூறப்பட்டுள்ளது. இதன் 57-ஆம் சூத்திர உரையுள் பொய்கையாருடையதாகக் கூறப்படும் வெண் பாக்களுள் இரண்டு பொய்கை ஆழ்வார் அருளிய முதல் திருவந்தாதியின் 51, 69-ஆம் செய்யுட்களாகவும் 93-ஆம் சூத்திர உரையுள் மூலர் வாக்காகக் குறிப்பிடப்பட்ட பாட்டு (அவ்வுரை மிக்கு வந்ததாகக் குறித்த கூன்சீர்

---

* பின்னர்க் கூறப்படவிருக்கும் திருவிண்ணகர், மாமல்லை என்ற இரண்டு சான்றுகள் உறுதியானவை ஆகாமை அங்கேயே காட்டப்படும்.

---

5. இலக்கிய வரலாறு, 11-ஆம் நூற்றாண்டு, பக். 189 (குணசாகரர் காலம் 1015-4

மட்டும் இல்லாமல்) திருமந்திரத்தில் 204-ஆம் செய்யுள் ஆகவும் உள்ளன. இவை உரை குறித்த இருடிகள் எல்லாம் இப்பெயர் கொண்ட ஆழ்வார்களும், நாயன்மார்களும் ஆதலைக் காட்டுகின்றன. திருமழிசைப் பிரானின் சீடர் ஆகிய கணிகண்ணருடையதாக குருபரம்பரைகள் கூறும் 'ஆடவர்கள் எவ்வாறு அகல்வர்' என்ற பாட்டும் யாப்பருங் கலம் 95-ஆம் சூத்திர உரையில் ஒரு மேற்கோளாக வந்துள்ளதாலும் நாம் கொண்ட கருத்து உறுதிப்படுகின்றது.

நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது பொய்கை யார் பாட்டாக யாப்பருங்கலத்து 93-ஆம் சூத்திர உரையுள் காட்டப்படும் ஆசிடச்செய்யுட்களுள் ஒன்றாகிய

''வஞ்சி வெளிய குருகெல்லாம்; பஞ்சவன்
நான்மாடக் கூடலிற் கல்வலிது;
சோழன் உறந்தைக் கரும்பினிது; தொண்டைமான்
கச்சியுட் காக்கை கரிது''

என்ற பாடலுள் தமிழ் மண்டிலங்கள் நான்கின் தலைவர்கள் குறிப்பிடப்பட்டிருப்பதுதான். இப்படி நான்கு மண்டலங்களி லும் தமிழர் ஆட்சி நடைபெற்றது சங்க காலத்தேயே. இவ் வகையில்,சங்ககாலத்திய களவழி நாற்பது பாடிய பொய்கை யாரும் பொய்கையாழ்வாரே ஆகக் கூடும் என்று கருதினார் மு. ராகவையங்கார் அவர்கள் (பக். 40). ராஜராஜசோழன் உலாவில் 'சொன்மாலை நல்லவன் பொய்கை களவழி நாற்பதுக்கு,வில்லவன் கால்தளையை விட்டகோன்' எனப் பயிலும் அடிகள், 'சுடராழியான் அடிக்கே சூட்டினேன் சொன்மாலை'- என்ற முதல் திருவந்தாதியை ஒத்திருக் கும்படி கூத்தர் அமைத்திருப்பதும், இவரே இன்னும் விக்கிரம சோழன் உலாவில் 'இன்னருளின், மேதக்க பொய்கை கவிகொண்டு வில்லவனை, பாதத் தளைவிட்ட பார்த்திவனும்'- என்ற அடிகளில் திருமாலின் பேரருளுக்குப் பாத்திரமாய் இருந்த பொய்கையாழ்வாரைக் குறிப்பது போலவே எண்ணும் அளவிற்கு 'இன்னருளின் பொய்கை'

என்று சிறப்பித்திருப்பதும் பொய்கையாழ்வாரே பொய்கையாரும் என்பதே முன்னோர் கருத்தாதலைக் காட்டும் என்றும் அய்யங்கார் அவர்கள் கூறுவர் (பக் 62). ஆனால், இதனை அறிஞர் சீனிவாச அய்யங்காரும் (பக் 390), 'தமிழ் வரலாறு' உடைய சீனிவாசப் பிள்ளை அவர்களும் (பக். 176-7) வேங்கிடசாமி நாட்டாரும்[6], அரசரைச் சார்ந்து ஒழுகிய புலவர் பொய்கையாரையும், இறைவனுக்கு அடிமை பூண்ட ஆழ்வார் பொய்கையாரையும் பெயர் ஒற்றுமை ஒன்றே கொண்டு ஒருவராகக் கருதல் பொருந்தாது (கருதியோர் முன்னோர்களே ஆனாலும்) என மறுப்பர். முதல் திருவந்தாதியிற் காணும்

"வாய் அவனை அல்லது வாழ்த்தாது; கைஉலகம்
தாய்அவனை அல்லது தாம்தொழா-பேய்முலை நஞ்
சூணாக உண்டான் உருவொடு பேரல்லால்
காணாகண் கேளா செவி" [முதல் திரு. செ. 11]

"நாடிலும் நின்னடியே நாடுவன்; நாடோறும்
பாடிலும் நின்புகழே பாடுவன்; சூடிலும்
பொன்னாழி ஏந்தினான் பொன்னடியே சூடுவேற்கு
என்னாகில் என்னோ எனக்கு?"-[முதல் திரு. செ. 88]

"மாயவனை அல்லால், இறையேனும் ஏத்தாதென்
நா" [முதல் திரு. 94]

என்ற பாடல்களை இவர்கள் இதற்குச் சான்று காட்டினர். அய்யங்காரோ,

"பழுதே பலபகலும் போயினவென்று அஞ்சி
அழுதேன் அரவணைமேற் கண்டு-தொழுதேன்
கடலோதம் காலலைப்பக் கண் வளரும் செங்கண்
அடலோத வண்ணர் அடி"

6. வேங்கிடசாமி நாட்டார், நா. மு., செந்தமிழ்ச் செல்வி பக். 2 (1925-26).

என்ற முதல் திருவந்தாதியின் 16-ஆம் செய்யுளைக் காட்டி, ஆழ்வார் தமது இளமைக் காலத்தில் அரசருடன் பழகித் தம் பொழுதைப் போக்கியிருத்தல் கூடியதே என்று வாதிக்கிறார் (பக். 48). பேராசிரியர் கிருஷ்ணசாமி அய்யங்காரும் இக்கொள்கையினரே (பக். 72).

*சங்க காலத்தினர் அல்லர்*

முதல் திருவந்தாதியையும், களவழி நாற்பதையும் நன்கு பரிசோதித்த மறைமலை அடிகள் 'ஞாட்பு' என்றாற் போலும் அருஞ் சொற்கள் களவழியிற் பயில்வனவாய் இருக்க, முதல் திருவந்தாதியிற் பயில்வன வெல்லாம் எளியனவாகவே இருப்பதைச் சுட்டிக்காட்டுகிறார்(பக்.558). இரண்டாவதாக, "ஓஓ! உவமன் உறழ்வின்றி ஒத்ததே"-ன்ற களவழி (செ. 36)யின் நாடகப் பாங்கில் அமைந்த நடைக்கும் ஆற்றொழுக்காகக் கதை சொல்வது போல் செல்லும் திருவந்தாதியின் நடைக்கும் உள்ள வேறுபாடு மிகப் பெரியதாதலைக் காட்டுகிறார் (பக். 560). களவழியிற் பயிலும் வெண்பாக்களில் ஒரே அளவிற்றான அடிகளும், இன்னும் அடிகளின் எண்ணிக்கையில் ஒரே படித்தான தன்மையும் காணப்படாமல் இருக்க, திருவந்தாதியின் வெண்பாக்கள் அனைத்தும் பிற்கால பாணியில் நாற்சீர் அடிகள் மூன்றும், முச்சீர் அடி ஒன்றும், இரண்டாம் அடியின் ஈற்றில் தனிச் சொல்லும் கொண்டு செப்பலோசைத் திறம் மிக்கு வரும் நேரிசை வெண்பாக்களாய் இருப்பது மூன்றாவது முக்கிய வேறுபாடு (பக். 551-5). சங்க இலக்கியங்களில் காணப்படாத மச்சாவதாரக் குறிப்பு பேயார் திருவந்தாதியின் 66-ஆம் செய்யுளில் காணப்படுகிறது. அடுத்து, பேராசிரியர்க்கு மிக முற்பட்ட இளம்பூரண அடிகள் 'விருந்து' என்னும் வனப்பிற்கு பொய்கையார் அந்தாதியை உதாரணம் காட்டவில்லை (பக். 576). நச்சினார்க்கினியருங்கூட முத்தொள்ளாயிரத்தையும், பாட்டியல்களில் கூறப்படும் கலம்பக வகைச் சிற்றிலக்கத்தையுமே

'விருந்து' ஆகக் கூறினார். மேற்கொண்டு (அடுத்த சூத்திர உரையில்) ''இக்காலத்தார் கூறும் அந்தாதிச் சொற்றொடரும்'' என அவர் எழுதிச் சேறலிலிருந்து அந்தாதிப் பிரபந்த வகை அப்படி ஒன்றும் முற்பட்ட காலத்தியதாகத் தோன்றவில்லை (பக்.576) இவற்றால் பொய்கையாழ்வாரும், சங்க காலப் பொய்கையாரும் இரு வேறு பெயர்களே என மறைமலை அடிகள் அறைந்து கூறுவர். கடைசியாக, யாப்பருங்கல விருத்திஉரைகாரரால் பொய்கையாருடையதாகக் கூறப்பட்ட ''வஞ்சி வெளிய குருகெல்லாம்'' என்ற பாடலை நச்சினார்க்கினியர் தொல்-செய்-72-ஆம் சூத்திர உரையில் அவ்வையினுடையதாகக் கூறுவதும் அடிகள் கருத்துக்கு ஆதரவாகின்றது.

ஒரே ஆசிரியர் இரண்டு விதமான நூல்களைச் செய்திருக்கமுடியாது என்ற மறைமலை அடிகளின் கருத்தை நாம் ஏற்பதற்கில்லை. ஒரே நூலில் கூட முதலும், முடிவும் வெவ்வேறு வகையாய் இருப்பதற்கு நைடதம் ஒரு சிறந்த காட்டாகும். முதற்பகுதி சுவை மிக்கும், போகப் போக இச் சுவை குறைந்துகொண்டும் செல்வதை சுருக்கமாக விளங்க வைக்க வரதுங்கராம பாண்டியரின் மனைவியார் இதனைக் கரும்புபோல் இனிப்பதாகக் கூறி விமர்சித்த வரலாறு உண்டு பெரிதும் எண்ணத்தக்கது. இங்ஙனமே, பேராசிரியர்க்குப், நச்சினார்க்கினியருக்கும் மிக முற்பட்ட இளம்பூரணர் விருந்து என்னும் வனப்பிற்கு பொய்கையார் அந்தாதியை எடுத்துக் காட்டாமையைக் கொண்டு அவ்வந்தாதியைப் பிற்காலத்ததேயாக மறைமலையடிகள் கூறியதும் பொருந்துமாறில்லை. ஏனெனில், இளம்பூரணர் காரைக்கால் அம்மையாரின் அந்தாதியைக் கூடத்தான் காட்டவில்லை. இராமனுஜர் வாழ்ந்த 11-ஆம் நூற்றாண்டினராய் இருந்தும் அந்தாதிகள் அனைத்தையுமே விட்டொழித்ததால், அவர் மூளையில் அது (அந்தாதி) பற்றிய எண்ணமே எழவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். இளம்பூரணரை மறைமலை அடிகள் 6-ஆம் நூற்றாண்னடி

ராகக் கொண்டது (பக். 576) அறிஞர்க்கு உடன்பாடன்று[7] இங்ஙனமே பேராசிரியர் காலம் கி.பி. 13-ஆம் நூற்றாண்டாதல் தெளியப்பட்டு விட்டபடியால்[8], வைணவம் கிளர்ந்தெழுந்தது கி.பி. 9, 10-ஆம் நூற்றாண்டுகளில் என்றும் அக்காலத்தே வாழ்ந்ததனாற்றான் பேராசிரியர் பொய்கையார் அந்தாதியை எடுத்துக் காட்டினார் என்றும் அடிகள் மேற்கொண்டு கூறியன (பக். 576 & 578) வெல்லாம் வலியற்றன ஆகின்றன.

அது கிடக்க, அந்தாதி வகை இலக்கியத்தை, ''இக்காலத்தார் கூறும் அந்தாதி- என நச்சினார்க்கினியர் எழுதியதன் பொருள் அந்தாதி என்ற பெயரால் இக்காலத்தார் குறிப்பிடும் சிற்றிலக்கிய வகையை (பேராசிரியர் கருதுமாறு போல 'விருந்து' என்பதைக் காட்டிலும்) 'இயைபு' என்று (தொல்காப்பியரே) கூறும் வனப்பாகக் கொள்க'' என்பதே. இயைபைப்பற்றி அடுத்த (அதாவது 240-ஆம்) சூத்திர உரையிலேயே பொருள் தொடர் நிலைக்கு மணிமேகலையையும் உதயணன் கதையையும் காட்டி சொற்றொடர் நிலைக்கு அந்தாதி வகையை உதாரணமாகக் கொள்க- என இவர் வரைந்தமையே இதற்குப் போதிய சான்று. ஆகையால், பொய்கையார் நூலின் பழமையில் நச்சினார்க்கினியருக்கு எந்தவித கருத்து வேற்றுமையும் இருப்பதாகத் தோன்றவில்லை. அப்படியே இருந்தாலும், குணசாகரர் உடையவும், பேராசிரியருடையவும் கருத்துக்களை ஒதுக்கி விட்டு பிற்காலத்திய[9] இவர் கருத்துக்கு அதிக முக்யத்துவம்

---

7. இலக்கிய வரலாறு 11-ஆம் நூற்றாண்டு பக். 219 [இளம்பூரணர் காலம் கி.பி. 1070-95]

8. இலக்கிய வரலாறு 13-ஆம் நூற்றாண்டு பக். 201 [பேராசிரியர் காலம் கி.பி. 1220-5]

9. இலக்கிய வரலாறு 14-ஆம் நூற்றாண்டு பக். 121 [நச்சினார்க்கினியர் காலம் கி.பி. 1295]

கொடுக்க வேண்டியதற்கான அவசியம் ஒன்றும் இருப்ப தாகத் தெரியவில்லை. இவையேதும் இப்பிரச்சனையைக் கிளப்பிவிட்ட மறைமலை அடிகளுக்குத் தெரியாது என்ப தைக் காட்டிலும் விஷயங்களை அவற்றின் பின்னணியி லிருந்து விலக்கி வாசகர்களைக் குழப்பிவிட்டு வைணவ நூற்களைப் பிற்காலத்தனவாகக் காட்ட வேண்டும் என்ற உறுதியோடு அடிகள் தமது ஆராய்ச்சியை நடத்தியிருக் கிறார் என்றுதான் சொல்ல வேண்டும். ஆகவே, இவற்றைச் சிறிதளவும் அச்சமோ, கூச்சமோ இல்லாமல் உதறித்தள்ள வேண்டியது ஒவ்வொரு ஆராய்ச்சியாளனுடையவும் தலை யாய கடமை ஆகும். கடைசியாக, குணசாகரர் பொய்கை யாருடையதாகக் காட்டிய பாடலை நச்சினார்க்கினியர் அவ்வையினுடையதாகக் குறித்தது மறைமலை அடி களைப் போன்று அவர் கொண்டிருந்த சமயவெறியாலே யேயும் ஆகலாம். காரைக்காற் பேயாரும், பூதத்தாரும் சேர்ந்து பாடியதாக குணசாகரர் கூறியதை இவர் இதே (தொல். பொருள். செய்) 72-ஆம் சூத்திர உரையில் காரைக்காலம்மை பாடியதாக மட்டுமே வரைந்தேகியமை இதற்குப் போதிய சான்றாகும். ஆயினும், 'வஞ்சி வெளிய குருகெல்லாம்'- என்ற பாடலில் நச்சினார்க்கினியர் அவ்வையின் உடையதாகக் குறித்தது இவ் ஆசிரியருக்கு உடன்பாடே.

அறிஞர் சோ. ந. கந்தசாமி அவர்கள் 'பரிபாடலின் காலம்' என்ற தமது அரிய சிறு ஆராய்ச்சி நூலில்[10] சங்கத் துப் பரிபாடலின் காலத்தையும், முதலாழ்வார்கள் காலத் தையும், மறைமலை அடிகளையும் விடத் திறம்பட ஆராய்ந் துள்ளார்கள். பரிபாடலில் வராகம், நரசிம்மம், வாமன திரிவிக்ரமம், பலராமன்-கண்ணன், அன்னம் ஆகிய ஆறு அவதாரங்கள் மட்டுமே பேசப்பட்டுள்ளன. கடல் கடைந்த செய்தி கூறப்பட்டுள்ளதேயன்றி, கூர்மாவதாரம் பற்றி நேரடியாக ஒன்றும் இல்லை. இராமவதாரம் பற்றிய

10. பரிபாடலின் காலம் பக். 82-106

மூச்சுப் பேச்சே இல்லை. ஆனால், முதலாழ்வார்களின் பாடல்களிலோ பலராமவதாரமும், அன்னப் பறவை அவதாரமும் இடம் பெறக் காணோம்; மாறாக, இராமவதாரம் சிறப்பிடம் பெறுகின்றது. கூர்மாவதாரமும் பலவிடங்களில் பேசப்படுகின்றது. மச்சாவதாரத்தை பேயார் மட்டும் (3.66-இல்) குறித்துள்ளார். பரிபாடலில் திருமகள் மட்டும் திருமாலின் தேவியாகப்போற்றப் பட்டிருக்க, பொய்கையாழ்வார் அந்தாதியின் 42-ஆம் செய்யுளில் திருமகள், மண்மகள், ஆய்மகள் ஆகிய மூவர் கூறப்பட்டுள்ளனர். இவ் அனைத்தையும் விட முக்கியமானவை இலக்கண வேறுபாடுகள்தாம். சங்க நூற்களில் காணப்படாத நின் உன் எனத் திரிந்த வடிவம் பொய்கையார் பாடல்கள் 10, 68, 75, 84, 97-லும், பூதத்தாழ்வார் பாடல்கள் 8, 9, 32, 34, 61, 64, 65, 80லும், பேயார் பாடல் 2-லும் பயின்றுள்ளன. நான் (1:2;2:1) நாம் (3:7), நம் (3:8), நங்கள் (2:2; 2:56; 3:47; 3:77) என்ற பிற்கால வழக்குகளும் முதலாழ்வார்கள் பாடல்களில் நிரம்ப உண்டு. உயர்திணைப் பன்மைக்கு 'கள்' விகுதி இட்டு உரைத்தல் சங்க காலத்தே இல்லை. ஆனால், முதலாழ்வார்கள் காலத்தே இது பல்கிப் பெருகிவிட்டது. ஏழைகள் (1:6), வாய்வார்கள் (1:37), வேதியர்கள் (1:37), சுராசுரர்கள் (1:48), நங்கள் (2:56), புரிவார்கள் (2:3), ஏழைகாள் [2:39], அவர்கள் (2:50), நாவலர்கள் (2:86), பேதைகாள் [2:14), ஏத்துமின்கள் (2:92), எங்கள் (2:96,97), எங்கள் (3:17), வானவர்கள் (3:22), நங்கள் (3:47), நங்கட்கு [3:77, 3:99], இவர்கட்கு [3:97] என்பன சில எடுத்துக் காட்டுகளாம். சங்க காலத்தில் இல்லாத 'ஓம்' விகுதி பெற்ற தன்மைவினை முற்றை அறிகிற்போம் [1:45], ஏத்தினோம் [2:57] என்ற சொற்களிற் காண்கிறோம். 'யான்' உருபேற்கும் போது 'என்' எனத் திரிதல் பழைய நிலை. 'யானுடைய என 2:100 இல் காணும் சொல் 'யான்' திரியாமல் உடைய' என்னும் சொல் உருபு ஏற்ற வடிவம் ஆகும்'

ஆற்றலை உணர்த்தும் 'கிற்றல்' என்ற இடைநிலை ஆண்டாள், பெரியாழ்வார், நம்மாழ்வார் பாசுரங்களில் காணப்படுவது. இது அறிகிற்போம் [1:45], முயல்கிற்பார் [1:45], பெய்கிற்பார் [2:16] என்ற சொல்வடிவில் பயில் கின்றது. 'கின்று', 'ஆநின்று' என்ற பிற்கால நிகழ்கால இடைநிலைகள் தொழாநிற்பார் [1:43], அறிகின்றேன் [2:87] என்ற சொற்களில் பயில்கின்றன; இவை சங்க இலக்கியங்களில் அருகியே காணப்படுவன. இன்னும் துருவித் துருவி ஆராய இவ்வேற்றுமைப் பட்டியலை நீட்டிக் கொண்டே போகலாம், ஆயினும், பொய்கையாழ்வாரும் சங்ககாலப் பொய்கையார் (கள்) உம் வெவ்வேறானவர்கள் என்ற முடிவில் மட்டும் எந்தவித மாற்றமும் இருக்காது. எனவே, 'குணசாகரர்* கருத்து; அவர்கருத்து; இவர்

---

* யாப்பருங்கல விருத்தியுரைகாரர் யாப்பருங்கலக் காரிகைக்கு உரை வகுத்த குணசாகரரே என்று நம்பப்படுகிறது. ஆனால், இது தவறு என யாப்பருங்கலத்தை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக செம்மைப்படுத்தி வெளியிட்ட இரா. இளங்குமரன் அவர்கள் தமது ஆராய்ச்சி முன்னுரையிற் காட்டியுள்ளனர். அறிஞர் மயிலை சீனி. வேங்கிடசாமியும் கூட 'மறைந்துபோன தமிழ் நூல்கள்' என்ற நூலின் நெடுகவும், இவ்விரண்டு உரைகளுக்கும் இருவேறு பெயர்களையே ஆசிரியராகக் கொண்டுள்ளனர். ஆயினும், நலம்பல வாய்ந்த யாப்பருங்கல விருத்தியுரையின் ஆசிரியர் பெயர் மறக்கப்பட்டுவிட்டதென்பது அவ்வளவாக நம்பத் தக்கதாய் இல்லை. எனவே, காரிகை உரைக்கு முன்பு செய்யப்பட்டதாகத் தோன்றும் யாப்பருங் கல விருத்தியுரையைச் செய்தவரை மூத்த குணசாகரர் எனக் கொள்வதே பொருத்தமாம். பேராசிரியர் ரா. ராகவையங்கார் அவர்களை பேராசிரியர் மு. ராகவையங்கார் அவர்களி னின்றும் பிரித்தறிதற் பொருட்டு பெரிய ராகவையங்கார் என்றுாம் குறிப்பிடும் வழக்கு இங்கே எண்ணத் தக்கது.

கருத்து' —என ராகவையங்கார் கூறுவனவெல்லாம் வெறும் நொண்டிச் சமாதானங்களே. சமயப்பற்றே அவரைச் சறுக்கி விழ வைத்து விட்டது என்பதை மறுக்க முடியாது. எனவே, முதலாழ்வார்கள் காலத்தை வெண்பாக்கள் பெருவழக்கின வாய் இருந்த பதினென் கீழ்க்கணக்குகள் தோன்றிய கி. பி. 4, 5-ஆம் நூற்றாண்டுகளை அடுத்ததாகத் தடையின்றிக் கொள்ளலாம். அதாவது, இவ் ஆழ்வார்கள் காலம் கி. பி. 5, 6-ஆம் நூற்றாண்டுகள் ஆகலாம் என்னலாம்.

*காரைக்கால் அம்மையாருக்கும முற்பட்டவர்*

முதலாழ்வார்கள் காலத்தைக் கணிக்க காரைக்கால் அம்மையார் காலம் பற்றியும் அறிந்தாக வேண்டும் யாப்பருங்கல விருத்தி உரையுள் (93-ஆம் சூத்) காரைக்காற் பேயாரும், பூதத்தாரும் கூட்டாகப் பாடியதாய் 'கறைப்பற் பெருமோட்டுக் காடுகிழவோட்கு' — என்பதோர் ஆசிடச் செய்யுளும் காட்டப்படுவதே இதற்குக் காரணம். காரைக் கால் அம்மையார், சம்பந்தருக்கு முற்பட்டவர் என்பது பெரிய புராணச் செய்தி. 'அரியலால் தேவியில்லை' (IV-40- 5) என்பதுசம்பந்தர் காலத்திய அப்பர் கொள்கை. இதன்படி சிவபிரானின் திருஉருவத்தில் உமையவளுக்குரிய இடப் பாகமே சங்கர நாராயண உருவத்தில் திருமாலுக்கும் உரிய தாகின்றது. அப்பரை அடுத்து வாழ்ந்த திருமங்கை மன்னரும் 'பிறைதங்கு சடையானை வலத்தே வைத்து' — என்புழி (பெரிய தி : 3-4, 9) இதனை உறுதி செய்கிறார். ஆனால், காரைக்கால் அம்மையாரோ,

"ஒருபால் உலகளந்த மாலவனாம்; மற்றை
ஒருபால் உமையவளாம் என்றால்—இருபாலும்
நின்னுருவ மாக திறந்தெரிய மாட்டேன்
நின்னுருவோ மின்னுருவோ நேர்ந்து"

— என்ற தம் அற்புதத் திருவந்தாதியின் 41-ஆம் பாடலுள் சிவசிரானின் வலப்பாகத்தையே திருமாலுக்குரியதாகக்

கூறுகிறார். அம்மையார் காலத்திய இக்கருத்து மாறி அப்பர் காட்டும் சங்கர நாராயண உருவம் செல்வாக்கு எய்த சிலகாலம் பிடித்திருக்க வேண்டும். எனவே, காரைக்கால் அம்மையாருக்கும், அப்பருக்கும் உள்ள கால இடையீடு சற்று நீண்டதாகவே இருக்க வேண்டும். ஆயினும், 'மாதொரு பாலும், மாலொரு பாலும் மகிழ்கின்ற நாதன்'— எனச் சிவபெருமானை 'எய்யாவென்றி'— எனத் தொடங்கும் திருப்புறவப் பதிகத்தில் திருஞான சம்பந்தர் (I, 97,2) வருணிப்பதால் காரைக்கால் அம்மையாரை அப்பருக்கு அதிகம் முற்பட்டவராகச் சொல்லவும் முடியாது. இவ் இரண்டு முரண்பட்ட கருத்துக்களுக்கும் ஏற்ப இருக்கும்படி இக்கால இடையீட்டை நாம் ஐம்பது ஆண்டுகளுக்கு உள்ளாகவே கொள்ள வேண்டும்.

பத்துப் பாக்களால் செய்யப்படும் பதியம்* பாடும் வழக்கைச் சைவ உலகில் தோற்றுவித்தவர் காரைக்கால் அம்மையாரே. இவரால் செய்யப்பட்ட திருவாலங்காட்டுப்பதிகங்கள் இரண்டும் 'மூத்த திருப்பதிகங்கள்' எனப்படுவதில் இருந்து இதனை ஊகிக்கலாம். முதலாழ்வார்கள் காலத்தே தனி நூல் செய்வதே வழக்காய் இருந்தமை மேலே காட்டப்

---

* சடகோபர் நூற்றந்தாதியின்பாயிரம் நூறு பாடல்கள் கொண்ட அந்நூலை 'பதிகம் பதிகப்' — என்று வழங்குவதால் பத்துப் பாடல்கள் கொண்டது பதிகமாதல் காணப்படும். ஆனால், கல்வெட்டுக்களில் (தேவாரப்) பதிகங்கள் பத்யம் என்றே பேசப்படுகின்றன. இங்ஙனம் பதிகம் 'பத்யம்' என்பதன் திரிபாகத் தோன்றுவதால் பதியத்தை 'பத்யம்' என்று வட சொல்லின் சிதைவாகக் கொள்ளவும் இடமுண்டு. 'பத்தியம், கத்தியம் என்று இரண்டாம் செய்யுள்' — என வீர சோழியம் கூறுவதாலும் இஃது உறுதிப் படுகின்றது.[11]

---

11. இலக்கிய சாசன வழக்காறுகள். பக். 217

பட்டது. இரண்டாவதாக அம்மையார் அருளியச் செயல்கள் மூன்றனுள் திருவிரட்டை மணிமாலை ஒழிந்த ஏனை இரண்டனுள்ளும் முதலாழ்வார்கள் அந்தாதியிற் காணப் படாத நாந்திச் செய்யுட்கள் (முத்திரைக் கவிகள்) காணப் படுகின்றன. இதுவுமோர் பிற்காலத்திய பாணியே. எனவே, அம்மையார் முதலாழ்வார்களுக்கு மட்டுமேயன்றி கி.பி 630 அளவில் மறைந்தவராகத் தோன்றும் திருமழிசைப் பிரா னுக்கும் கூட பிற்பட்ட காலத்தவரும் ஆகல் வேண்டும். இது அடுத்த அதிகாரத்தில் காட்டப்பெறும். எனவே, அம்மையாரின் காலக் கீழ் எல்லையை கி. பி. 640 வரைக் கும்கூட கொள்ளலாம். இது அப்பர் சம்பந்தரின் காலமாகிய கி.பி. 670-691-க்குப் போதிய அளவு முந்தியதே.

முதலாழ்வார்களுக்கும் மற்றும் திருமழிசைப் பிரானுக்கும் கூடப் பிற்பட்டவரே ஆகத் தோன்றும் அம்மையாரை யாப்பருங்கல விருத்தி உரை பூதத்தாரோடு கூடி ஒரு செய்யுள் செய்ததாகக் கூறுவது பொருத்தமாக இல்லை. தம் கணவரால் கைவிடப்பட்ட பின் துறவுபூண்ட அம்மை யார் வேறு எவரோடுங் கூடி வேறு எந்த உலக விவகாரங் களிலும் ஈடுபட்டிருந்ததாகத் தெரியவில்லை. அவர் சிந் தனை எல்லாம் சிவபெருமான் மீது இருந்தது என்பதே பெரிய புராணச் செய்தி. மாறாக, ஆழ்வார்கள் ஆகிய பேயாரும், பூதத்தாரும் நண்பர்களாய் இருந்ததை குரு பரம்பரைகளிற் காண்கிறோம். மேலும், பொய்கையார், பூதத்தார், குடமூக்கிற் பகவர் (ஆகிய திருமழிசைப் பிரான்), மற்றும் இவர் சீடர் ஆகிய கணிகண்ணர் ஆகி யோரை எல்லாம் குறிப்பிட்ட விருத்தியுரை இவர்கள் நண் பரும், திருமழிசைப் பிரானின் ஞானாசிரியருமான பேயாரை மட்டும் விட்டொழிக்கக் காரணமில்லை. ஆகவே, பேயார் என்பதையே சைவர்கள் காரைக்காற் பேயார் எனவும், இன்னும் சில தீவிர வாதிகள் காரைக்காற் பேயம்மையார் எனவும் திருத்திக்கொண்டுள்ளனர் என்பது வெளிப்படை. மயேச்சுரர் என்ற ஒரு பேராசிரியரைக் குறிப்பிட நேர்ந்த

போதெல்லாம் (மயேச்சுரர் சிவபெருமானே ஆதலை மனதுட் கொண்டு) சிவபெருமானின் பெருமைகளை எல்லாம் விரித்துக் கூறி அப்பேர்க்கொத்தவர் பெயர் மகிழ்ந்த பேராசிரியர் என நெஞ்சார, வாயாரப் புகழ்தலால், சைவச் சார்பு மிக்கவரே ஆகத்தோன்றும் யாப்பருங்கல் உரைகாரரே கூட பேயாரை காரைக்காற் பேயார் / பேயம்மையார் என்று மாற்றியிருக்கலாம். * பொய்கை, பூதம் எனப் பெயரியோர் சைவப்பெரியோர்களில் இன்மையால்இவர்(கள்) இப்பெயர்களின் திறத்தே தம் கை வரிசையைக் காட்டவில்லை. ஆகவே, யாப்பருங்கல விருத்தியுரையுள் காணப்படும் பாடத்தை ராகவையங்கார் அப்படியே (ஆராய்ச்சி இன்றியே) ஒப்புக் கொண்டது, தொல். செய். 72-ஆம் சூத்திர உரையில் இப்பாடலை நச்சினார்க்கினியர் காரைக்கால் அம்மையாருடையதாகக் குறித்ததாலேயே ஆகலாம். இவ்வுரையாசிரியர் பூதத்தாரை விட்டொழித்தற்கு இவர் தம் சைவ சமயப் பற்றே காரணமாகல் வேண்டும். இஃதெவ்வாறாயினும், இதுகாறும் கூறியவற்றால் முதலாழ்வார்கள் அனைவரும் கி. பி. 6-ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவரல்லர் என்பது மட்டும் நிச்சயம்.

## *கி. பி, 6-ஆம் நூற்றாண்டினர்*

இனி, முதலாழ்வார்களுக்குக் கொண்ட காலத்திய சமய நிலையையும், அரசர்களையும் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். தொண்டை மண்டலத்தில் இது பல்லவர் காலம். பிராகிருத மொழியில் பட்டயங்களை வெளியிட்ட பல்லவ மன்னர்களை முற்காலத்தவராகவும் சமஸ்கிருதத்தில் இவற்றை வெளியிட்டோரை இடைக்காலத்தினராகவும்,

---

*விருத்திஉரைகாரர் மயேச்சுரருடைய மாணவரோ அல்லது அவர் பரம்பரையினரோ ஆகல் வேண்டும் என்பது டாக்டர் மொ. அ. துரை அரங்கனார் கருத்து[12].

---

12. தென்றலிலே தேன்மொழி. பக். 59-60.

சிம்ம விஷ்ணுவின் பரம்பரையினரை 'பெரும் பல்லவர்' எனவும், இரண்டாம் நந்திவர்மன் பரம்பரையினரை பிற்காலப் பல்லவர் எனவும் நான்காகப் பிரித்தல் வழக்கு. முற்காலப் பல்லவருடையனவாக மஞ்சிக் கல்லு கல்வெட்டும், மூன்று செப்புப் பட்டயங்களும் (மயிதவோலு, ஹிரஹதஹலி, குணபதேயம்) இடைக்காலப் பல்லவருடையனவாக 12 சமஸ்கிருதப் பட்டயங்களும் நமக்குக் கிடைத்துள்ளன. இவற்றினுடையவும் ராஜசிம்மனின் வாயலூர்க் கல்வெட்டு மற்றும் மூன்றாம் நந்திவர்மனின் வேலூர்ப் பாளையச் செப்பேடுகள் ஆகியவற்றினுடையவும் துணை கொண்டு இவ் ஆசிரியரால் நன்கு ஆராய்ந்து அமைக்கப் பட்டுள்ள வமிசாவளியை பின்னிணைப்பு 4 ல் உள்ள பல்லவர் குடிவழிப் படத்திற் காணலாம். இவர் ஆட்சிக் காலங்களும் பக்கத்திலேயே கொடுக்கப்பட்டுள்ளன. இக் கணிதப் படி, கி.பி 6-ஆம் நூற்றாண்டில் நந்திவர்மன் I,சிம்மவர்மன் III, விஷ்ணுகோபன்-II, சிம்மவர்மன்- IV, சிம்மவிஷ்ணு-I, மகேந்திரவர்மன்-I ஆகிய அறுவர் ஆண்டு கழிந்துள்ளனர். இவருள், பாகவதர்களில் சிறந்தவனாக உதயேந்திரம் II செப்பேடுகளில்[13] நந்திவர்மன்- I உம், பரமபாகவதன்- என ஓங்கோடு-II விலும்[14] விஷ்ணுவின் திருவடிகளை தியானிப்பதில் எப்போதும் விருப்பம் உள்ளவனாக விழவெட்டிச் செப்பேடுகளிலும்[15] ஆக சிம்மவர்மன் - III உம், விஷ்ணு பக்தர்களில் சிறந்தவனாக சுரா செப்பேடுகளில்[16] விஷ்ணுகோபன் II உம், 'பக்தி ஆராதித்த விஷ்ணு' என பல்லவ மன்னனின் உதயேந்திரச் செப்பேடுகளில்[17] சிம்மவிஷ்ணுவும் புகழப்பட்டுள்ளனர். எஞ்சியுள்ள இருவருள்

---

13. I.A. Vol. 8 p. 50-5 (உதயேந்திரம்-II செப்பேடுகள்)
14. E.I. XV, p. 252-5 (ஓங்கோடு-II செப்பேடுகள்)
15. E.I. XXIV p. 296-303 (விழவெட்டி செப்பேடுகள்)
16. E.I. XXIV p. 137-143 (சுரா செப்பேடுகள்)
17. S.I.I. Vol. II Pt.3 p. 361-74 (உதயேந்திரம்-I செப்பேடுகள்)

சிம்மவர்மன் - IV பெயரளவிலேயே அரசனாக இருந்தான்; ஆட்சிப் பொறுப்பு முழுவதும் இவன் மகனும் சிறந்த பாக வதனும் ஆகிய சிம்மவிஷ்ணு-I இன் கையிலேயே இருந்தது[18]. மகேந்திரவர்மன்-I கி. பி. 600 வரையிலாகிலும் வைணவனாக இருந்து பிறகே ஜைன சமயம் புகுந்தான். ஆகவே, கி. பி. 6-ஆம் நூற்றாண்டு முழுவதுமே பல்லவ மன்னரெல்லாம் சிறந்த வைணவர்களாகவே இருந்துள்ளனர். சிம்மவர்மன் - III, விஷ்ணுகோபன் - II ஆகிய இருவரின் காலத்தில் தொண்டை மண்டலம் பல்லவர் கையில் இல்லை எனச் சில வட்டாரங்களில்[19] கருதப்படுவது உண்மையே யாகினுங்கூட, தொண்டைநாடு கி.பி. 530-600 வரையிலாகிலும் வைணவர்களால் ஆளப்பட்டிருக்கக் காண்கிறோம்.

கோவாகி மாநிலங் காத்துநம் கண்முகப்பே
மாவேறிச் செல்கின்ற மன்னவரும்-பூமேவும்
செங்கமல நாவியான் சேவடிக்கே ஏழ்பிறப்பும்
தண்கமலம் ஏய்ந்தார் தமர்-

என்றபாடலில் (பூத. திரு 69) பூதத்தார் காலத்திய தொண்டைமன்னரெல்லாம் வைணவராய் இருந்தமை கூறப் படல் குறிப்பிடத் தக்கது. இனி, 'மன்னன் எவ்வழி, குடிகள் அவ்வழி' என்ற வாக்கிற் கிணங்க நாட்டு மக்கள் இடையேயும் வைணவம் நல்ல செல்வாக்கு பெற்றிருக்கக் கூடும் என ராகவையங்கார்[20] வாதிப்பது பொருத்தமே. இப்படித் திருமால் அடியார்கள் மிக்கிருந்த காலத்தில் ஒரிருவர் ஆழ்வார் எனப்படும் அளவிற்கு உயர்ந்திருத்தல் கூடியதே அல்லவா? ஆகவே, கி பி. 6-ஆம் நூற்றாண்டே முதலாழ்வார்களுக்கு மிகவும் ஏற்றதாம்.

---

18. பல்லவர் செப். முப்பது, பள்ளன்கோயில் & ஹொஸக் கோட்டை செப்பேடுகள் [முகவுரைகள்]
19. பல்லவர் வரலாறு பக். 60
20. இலக். சாஸன வழக். பக். 307.

*திருவிண்ணகர் - ஒரு தடை*

ஆறாம் நூற்றாண்டுக் கொள்கைக்கு முக்கியமாக இரண்டு தடைகள் சொல்லப்படுகின்றன. முதல் திருவந்தாதியின் 77-ஆம் செய்யுள் ஆகிய,

**"வேங்கடமும், விண்ணகரும், வெஃகாவும், அஃகாத
பூங்கிடங்கின் நீள்கோவல் பொன்னகரும் — நான்கிடத்தும்
நின்றான்; இருந்தான்; கிடந்தான்; நடந்தானே'
என்றால் கெடுமாம் இடர்**

— என்ற வெண்பாவில் இருந்த திருக்கோலமுடைய விண்ணகர் ஒன்று கூறப்படல் ஒரு சர்ச்சையைக் கிளப்பி விட்டிருக்கின்றது. சோணாட்டுத் திருவிண்ணகரில் நின்ற திருக்கோலமே காணப்படுவதால் பொய்கையாழ்வாரால் கூறப்படும் விண்ணகர் இது வன்று என்பது ஒரு வாதம். இந் நிலையில், மேலைப்பாட்டிலேயே கூறப்படும் ஏனை மூன்று திருப்பதிகளுள் இரண்டு தொண்டை நாட்டினவே ஆனமையாலும், மூன்றாவதாகிய கோவலூரும் தொண்டைநாட்டு எல்லையில் உள்ளதே ஆனபடியாலும் விண்ணகருங் கூட தொண்டை நாட்டினதே ஆகக்கூடுமென முடிந்தார் சீனிவாச அய்யங்கார் அவர்கள் (பக். 301). "நன்றாய நறையூர், திருவாலி குடந்தை தடந்திகழ் கோவல் நகர், நின்றான் இருந்தான், கிடந்தான், நடந்தான்" என்ற(பெரிய தி. 2, 4, 1) திருமங்கை ஆழ்வார் திருவாக்கில் சோணாட்டூர்களே இத் திருக்கோலங்களுக்கு இடனாகக் கூறப்பட்டு உண்மையும் ஈண்டு எண்ணத் தக்கது. இங்ஙனமே பொருநை வடகரைப் பதிகளைத் தொகுத்து "புளிங்குடிக் கிடந்து, வரகுணமங்கையிருந்து, வைகுந்தத்துள் நின்று" (திருவா : 9 - 2, 4) என்றார் நம்மாழ்வாரும். எனவே, பொய்கையாழ்வார் கூறும் விண்ணகர் காஞ்சியில் உள்ளதும், கி. பி. 690— அளவில் முதலாம் பரமேஸ்வரவர்மனால் கட்டப்பட்டிருக்கக் கூடியதுமான பரமேச்சுவர விண்ணகரமே (வைகுண்ட

பெருமாள் கோயில்) ஆகல் வேண்டும் என்பதும் அவர் கருத்து. (பக். 301-2) அறிஞர் துப்ராயிலும்[21] ,கோபிநாத ராவும் (பக். 17) மறைமலை அடிகளும் (பக். 498) இக் கோயில் அமைத்தவனை இரண்டாம் பரமேஸ்வரனாகக் கருதுவர். ஆனால், இவ்விண்ணகரம் பல்லவமல்லன் தனது பிள்ளைப் பிராயப் பெயராகிய பரமேஸ்வரன் என்ற பெயரால் கட்டியது என இன்று நன்கு துணியப்பட்டு விட்டது. வேண்டுமானால், முன்பே இருந்த ஆலயத்தை இடித்துவிட்டு, புதிய பாணியில் கட்டி பரமேச்சுவர விண்ணகரம் எனப் புதிய பெயரும் சூட்டினான் என்று கொள்ளலாம்.[22] இங்கு நமக்கு வேண்டியதெல்லாம் விண்ணகர் இதுவே ஆயினும், பொய்கையார் கி. பி. 8-ஆம் நூற்றாண்டினர் அல்லர் என்பதுதான்.

ஆயினும், *திருச்சந்த விருத்தத்தில்*

"நின்றிருந்து யோகநீதி நண்ணுவார் சிந்தையுள்
சென்றிருந்து தீவினைகள் தீர்த்ததேவ தேவனே
குன்றிருந்த மாடநீடு பாடகத்தும், ஊரகத்தும் -
நின்றிருந்து வெஃகணைக் கிடந்ததென்ன
நீர்மையே" - எனவும் (செ. 63)

"நின்றதெந்தை ஊரகத்து, இருந்ததெந்தை
பாடகத்து
அன்றுவெஃகணைக் கிடந்ததென்னிலாத முன்
னெலாம்
அன்றுநான் பிறந்திலேன்,பிறந்தபின் மறந்திலேன்;
நின்றதும், இருந்ததும், கிடந்ததும் என்
நெஞ்சுளே" - [செ.61]

எனவும் வருஉம் மழிசைப்பிரான் வாக்கிலும், அவர் சீடர் கணிகண்ணருடையதாக குருபரம்பரைகள் கூறும்,

21. The Pallavas P. 46
22. *வைணவமும் தமிழும்* பக். 52.

**ஆடவர்கள் எவ்வா றகல்வர் அணி வெஃகாவும்**
**பாடகமும், ஊரகமும் பஞ்சரமா-நீடியமால்**
**நின்றான்; இருந்தான்; கிடந்தான்;-இதுவன்றோ**
**மன்றார் பொழிற்கச்சி மாண்பு?**

என்ற தனிச்செய்யுளிலும் அக்காலத்திய காஞ்சியில் பாண்டவப் பெருமாள் கோயிலாகிய பாடகத்தில் மட்டுமே 'இருந்த திருக்கோலம்' இருந்தமை திட்டத் தெளிவாகவே கூறப்பட்டுள்ளது. இங்ஙனம் பழைய பரமேச்சுர விண்ணகரம் எதுவும் காஞ்சியில் கி.பி.8-ஆம் நூற்றாண்டிற்குமுன் இருந்ததில்லை என்று தெரிதலால், பொய்கையாரும் (முதல் திரு. செ. 77) மற்றும் பேயாரும் (மூன். திரு. செ. 92) குறிப்பிடும் விண்ணகருக்கும், பரமேச்சுர விண்ணகரத்திற்கும் திருவாளர் ராதா கிருஷ்ணப் பிள்ளை[22] அவர்கள் கருதியது போன்ற தொடர்பு ஏதும் இருக்க வழி இல்லை. விண்ணகரை பாடகத்தின் பழம் பெயராகக் கொள்ளவும் முடியாது. ஏனெனில், பேயார் இவ்விரண்டு பெயர்களையுமே குறிப்பிடுவதிலிருந்து (மூன். திரு. செ. 30, 72) இவை வெவ்வேறு திருப்பதிகளாதல் காண்கிறோம். இந்நிலையில்,

**''ஒன்றும் மறந்தறியேன், ஓதநீர் வண்ணனை நான்**
**இன்று மறப்பனோ, ஏழைகாள்! - அன்று**
**கருவரங்கத்துட் கிடந்து கைதொழுதேன்;**
**கண்டேன்,**
**திருவரங்க மேயான் திசை''**

என்ற முதல் திருவந்தாதி 6-ஆம் செய்யுளைக் காட்டி பொய்கையார் திருவரங்கம் இருந்த திசை நோக்கித் தொழுதவர் தானே தவிர, திருக்கோவலூருக்கு அப்பால் சென்றவர் அல்லர் என மறைமலை அடிகள் (பக். 463) கருதுவது உண்மையாகில், விண்ணகர் குறைந்தது தொண்டைமண்டலத்திற் குள்ளாகவாவது இருந்திருக்கவே வேண்டும் என்று முடியலாம். காஞ்சியை அடுத்த பிள்ளைப்பாளையத்து திருமேற்றளியில் இருந்த திருமால் சம்பந்தப் பெருமான்

பாடல் கேட்டு சிவலிங்கமானார்*- என்று சொல்லப்படுவதால்23, இதுவே முதலாழ்வார்கள் குறிப்பிடும் விண்ணகர் ஆகலாமோ என்பது ஆராயத்தக்கது.

பொய்கையாரை திருவரங்கம் போகாத வைணவர் என்றல் ஒரு விதண்டாவாதமே. ஏனெனில், சிலப்பதிகார காலத்தில் இருந்தே யாத்திரைக்குரிய இடமாகப் பிரசித்தி பெற்ற திருப்பதி திருவரங்கம் (சிலம்ப காதை 11, அடி 35-40). ஆகவே கோவலூருக்குப் போனவர் நிச்சயம் இதற்கு முன்பே திருவரங்கமும் போய்விட்டே வந்திருப்பார் என நாம் நம்பலாம். மேற் காட்டப்பட்ட பாடலைப்பாடிய போது, அவர் 'திருவரங்கம்' என்று உச்சரிக்க நேர்ந்தவுடனேயே உணர்ச்சி வசப்பட்டு அத்திசை நோக்கி இன்னொரு முறை தொழுதிருத்தல் கூடியதே. ஆகலின், விண்ணகர் இருந்த திருக்கோலமுடைய சோனாட்டுவிண்ணகரங்களுள் ஒன்றே ஆகவும் கூடும். கூறப்பட்ட விண்ணகர் அனேகமாக வைகுந்த விண்ணகரம் ஆகலாம் என கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்களும் (பக். 65) நந்திபுர விண்ணகர் ஆகலாம் என ராகவையங்காரும் (பக். 66) கரு

*திருமேற்றளி வரலாறு கூறும் திருமேற்றளிப் புராணத்திலிருந்தே இவ்வரலாறு இப்போது நாம் அறிந்துள்ள அளவிற்குப் பரவியிருக்க வேண்டும். ஆனால், இந்தப் புராணம் மறைந்து விட்டது. மயிலை சீனி. வேங்கிடசாமியின் 'மறைந்து போன தமிழ் நூல்கள்'-என்ற நூலில் இதன் ஆசிரியர் இரேவணச் சித்தர் எனக்குறிக்கப்பட்டுள்ளார். இவர் 16-ஆம் நூற்றாண்டினராம். சங்கரரோடுவாதிட்டுத் தோற்றதாகவும் ஒரு ரேவணச் சித்தர் குறிப்பிடப்படுகிறார். இவரை ரேணுகாச்சாரியர் என்பதும் உண்டு என்று நாகி செட்டி அவர்கள் 'வைணவமும் வீர சைவமும்,24 என்ற நூலிற் கூறியுள்ளனர்.

23. பல்லவர் வரலாறு பக். 338
24. வைணவமும் வீர சைவமும் பக். 16.

துவர். முதலாம் நந்திவர்மனால் கட்டப்பட்டதாக நந்திபுர விண்ணகரத்தை பின்னவர் கொண்டதே அவர் கருத்திற்குக் காரணமாம். ஆனால், சிம்ம விஷ்ணுவே முதன் முதல் சோணாட்டைக் கைப்பற்றிய பல்லவன் என்பது வரலாறு. மூன்றாவதாக, முதலாழ்வார்கள் காலத்திற்குப் பிறகு திரு விண்ணகர் கோயில் புதுப்பிக்கப்பட்ட போது, அங்கு இருந்த இருந்த திருக்கோல'ச் சிலை அகற்றப்பட்டு, இன்று காணப்படும் நின்ற திருக்கோலச்சிலை நிறுவப்பட்டது என்று கொள்வதும் சாத்தியமே.

சங்க காலத்தே சங்கர்ஷண, வாசு தேவர்களின் சிலைகளைக் கொண்டிருந்த திருமாலிருஞ் சோலையில் [பரிபாடல் 15] இந் நாள் இருந்த திருக்கோலத்துத் திரு மால் படிமமே காணப்படுவதிலிருந்து இதனை எளிதில் ஊகிக்கலாம். சிலப்பதிகாரத்தில் [காதை 11:91, 103, 136] மலை மேல் இருந்ததாகக் கூறப்படுமாறு போல வின்றி இன்று மலை அடிவாரத்திலேயே திருமால் கோயில் காணப்படுவதும், இது திருமங்கையாழ்வாருக்குப் பின் கட்டப்பட்டதாதலைக் காட்டும்.

விண்ணகர் பற்றி மூன்றாவதாக ஒரு கருத்தும் அறிஞர் ராமானுஜத்தால் [பக். ] வெளியிடப்பட்டுள்ளது. திருமாலின் உறைவிடங்களாக மண்ணகத்து நகரங்களையே அன்றி மற்றை இடங்களையும் குறிப்பிடுதல் அக்கால வழக்கே ஆதலை, 'மனத் துள்ளான், வேங்கடத்தான், மாகடலான்' - என 2-ஆம் திருவந்தாதியின் 27-ஆம் செய்யுள் உள்ளும்' 'பாற்கடல், பாம்பு,விசும்பு [அதாவது பரமபதத்து வைகுந்தம்] நூற்கடல், மனம்'- என 3-ஆம் திருவந்தாதியின் 32-ஆம் செய்யுளுள்ளும் வருவனவற்றால் அறிகிறோம். பேயாழ்வார் மேற்கொண்டு தமது பனுவலின் 62-ஆம் செய்யுளில் 'மண்ணகரம் மாமாட வேளுக்கை, மண்ணகத்து' என்று கூறி, முன் அடியில் இதற்கு முரண் தொடையாய் விண்ணகர் என்ற சொல்லை வழங்கி உண் மையால் விண்ணகர் பிற்காலத்தே விஷ்ணு + நகர் என்ப

தனுடைய தொகுப்பு உருவமாய் கருதப்பட்டவாறு போல வின்றி விண் + நகர் என்பவற்றின் சேர்க்கையாய் பரம பதத்தையே குறித்தவிதாகல் வேண்டும் என்று அறிஞர் ராமானுஜம் அவர்கள் [பக். 150-3] ஆராய்ந்து கூறினார். சம்பிரதாய ஞானம் மிக்குடையபிரபந்த உரையாசிரியரான பெரியவாச்சான் பிள்ளையும் விண்ணகரை [விசும்பிடத்த தாய் ரிக்வேதத்திலேயே (154-5)] கூறப்படும் பரமபதம். ஆகவே குறித்திருப்பதால், ஆழ்வார்கள் திருவுள்ளம் செவ் வனே புலனாகின்றது என்றார் அறிஞர் ராமனுஜம். ஆயினும், 'இளங் குமரன்றன் விண்ணகர்' [மூன். தி: 61] என்ற தொடரில் விண்ணகர் என்பது கோயில் என்ற பொருளிலேயே பயில்வதாலும், நகர் என்பதற்கு கோயில் என்ற பொருள் சங்க நூற்களிலேயே காணப்படுவதாலும்,* விஷ்ணு + நகர் என்பதே விண்ணகர் ஆகியிருக்க வேண் டும் என்ற சீனிவாச அய்யங்கார் கருத்தே [பக். 301] ஏற்புடையது. ஈச்சுரம் என்பதற்கு இணையாக விண்ணகர் சிறிதே பிற்பட்ட காலத்து வழங்கப்பட்டுண்மையும் இதனை வலியுறுத்தும்.

---

*நளிமலைச் சிலம்பில் நன்னகர் வாழ்த்தி [திருமுருகா. அடி—238] நகர் — பிள்ளையார் கோயில்
வயங்குடை நகரத்து [மதுரைக்கா அடி-484]
முக்கட் செல்வர் நகர்வலம் வரற்கே [புறம் 6:18]
நகர் —கோயில் [பரிபாடல் 8:126; 9:29]
நகர் — கோயில் [பரிபாடல் திரட்டு]

கோயில் என்ற நகருக்குப் பதிலாகத்தான் க்ருஹம் என்ற சொல்லைப் பயன்படுத்தி விண்ணகர் விஷ்ணுக்ருஹம் என் பதாகப் பல்லவர் காலத்தியப் பட்டயங்களில் வழங்கப்பட் டுள்ளது. அதாவது விஷ்ணுகிருஹம் என்பதன் மொழி பெயர்ப்பே விண்ணகர் என்ற ராகவையங்காரின் கருத்தைக் [பக். 64] காட்டிலும் விண்ணகரின் மொழி பெயர்ப்பே விஷ்ணுக்ரகம் என்பதுதான் அதிகப் பொருத்தமானதாகும்.

*மாமல்லை என்ற கடன் மல்லை*

முதலாழ்வார்களின் காலம் கி.பி. 6-ம் நூற்றாண்டே என்ற கொள்கைக்கு கூறப்படும் இரண்டாவது பெருந்தலை பூதத்தார் அந்தாதியுள் 70-ஆவதாகிய

"தமருள்ளம், தஞ்சை, தலையரங்கம், தண்கால்
தமருள்ளும் தண்பொருப்பு, வேலை-தமருள்ளும்
மாமல்லை, கோவல், மதிட்குடந்தை என்பரே
ஏவல்ல எந்தைக் கிடம்"-

என்ற பாடலுள் போந்த 'மாமல்லை' என்ற சொல்லே. இச் சொல் 'மாமல்லபுரம்' என்பதன் குறுக்கமே என்றும், அதனால் பூதத்தார் மாமல்லனாகிய முதலாம் நரசிம்ம வர்மன் காலத்தவரே எனவும் திருவாளர் கோபிநாதராவ் அவர்கள் குறித்தனர் (பக். 16). சைவப் பெரியார்கள் எல்லாம் இதனை உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டிருப்பதால்[25-28], நாமும் ஒருமுறை கூர்ந்து நோக்குவோம்.

மாமல்லபுரம் என்றில்லாமல் வேறு ஏதோ ஒரு மல்லபுரம் எனப் பெயரிடப் பட்டிருந்து, அது அம் மல்லையாக பூதத்தாரால் சுருக்கமாக வழங்கப் பட்டிருந்தால், ராயர் கருத்தை அய்யங்கார் உட்பட அனைவருமே ஒப்புக் கொள்ளத்தான் வேண்டியிருக்கும். காட்டாக, நரசிம்மனின் விருதுப் பெயர் ரணமல்லனாயும், மல்லையின் பெயர் 'ரணமல்லபுரம்' எனவும் இருந்து, மல்லை 'ரணமல்லை' என ஆழ்வாரால் குறிப்பிடப்பட்டிருந்தால், பூதத்தாரை நாம் நரசிம்மவர்மன் காலத்தவராகக் கருதுவதைத் தவிர வேறு வழி இல்லாமற் போயிருக்கும். இப்போதுள்ள வடிவத்திற் காணும் பொருத்தம் நரி வருவதற்கும், பனம்பழம்

25. மறைமலை அடிகள் பக். 497 ;
26. நரசிம்மவர்மன்-இல் பக். 212-6, 281
27. பன்னிரு திருமுறை வரலாறு பாகம் 2-இல் பக். 548
28. நரசிம்மவர்மன்-இல் பக். 220

விழுவதற்கும் உள்ளதைப் போல தற்செயலாக ஏற்பட்டதேயும் ஆகலாம். ஏனெனில், மகரத்தில் தொடங்கும் பெயர்களுக்கு மோனை நயம் கருதி 'மா' என்ற அடைமொழி பெய்துரைத்தல் தமிழில் சர்வ சாதாரண வழக்கே. மயிலையை 'மாமயிலை' என்றது போல (பெரி திருமொழி 2:3-2,9) மாக்கோவல், மாக்குடந்தை என்னாமல் மல்லையை மட்டும் மாமல்லை என ஆழ்வார் கூறியிருப்பதும் மல்லையின் முன் நின்ற 'மா' மோனை நயம் பற்றிய அடைச் சொல் ஆதலை உறுதி செய்கின்றது. எனவே, பொய்கையார், பூதத்தார், பேயார் ஆகியோரை மிகப் பழைய காலத்தினராகக் கொண்ட (மூத்த) குணசாகரர், (யாப்பருங்கல உரைகாரர்), பேராசிரியர் ஆகிய பண்டை உரையாசிரியன்மாரின் கருத்துக்கு மாறான ராயர் கருத்தை ஒரு வலிய சான்றாக ஏற்பதற்கில்லை. இவற்றை எல்லாம் நன்கு அறிந்திருந்தும் சைவப் பெரியார்கள் சிலர் மாமல்லையை மாமல்லபுரத்தின் குறுக்கமாகவே கொண்டு குதர்க்கம்[28] செய்வது, முதலாழ்வார்களை அப்பர் சம்பந்தர்க்கு முன்போக விடக்கூடாது எனச் செய்து கொண்ட சங்கற்பத்தாலேயன்றி வேறில்லை. "பொய்கை, பேய், பூதம் என்னும் முதலாழ்வார் மூவரும் சைவ சமய ஆசிரியரிற் பிற்காலத்தவரான சுந்தரமூர்த்தி நாயனார்க்கு முன்னும் திருஞான சம்பந்தப் பெருமானுக்குப் பின்னும் கி. பி. 8-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இருந்தோராவர்"- என மறைமலை அடிகள் எழுதிச் சேறலுக்கு வேறு என்ன விளக்கம் இருக்க முடியும்? (பக். 539)

மாமல்லபுரம் மாமல்லனாலேயே முற்றிலும் புதிதாக உண்டாக்கப்பட்ட ஊராகிலாவது ராயர் கருத்தை நாம் ஏற்றுக் கொள்ளலாம். ஆனால், இவ்வூரில் கற்காலக் கருவிகள் பல அண்மையில் கண்டுபிடிக்கப் பட்டிருப்பது இங்கு பழங்காலந்தொட்டே மனித வாழ்க்கை இடையறாமல் இருந்து வந்திருப்பதற்குச் சான்று கூறுவதாய் உள்ளது. இங்கேயுள்ள ஆதிவராகர் கோயிலில் காணப்படும் சிம்ம

விஷ்ணு போதாதி ராஜன் சிலையும், மகேந்திர போதாதி ராஜன் சிலையும் இவ்வூர் சிம்ம விஷ்ணுவின் காலத்திலேயே பல்லவ அரசர்களின் கவனத்தை ஈர்த்ததைக் காட்டுகின்றன. எனவே, இங்கு முன்பே இருந்த ஊர்ப் பெயரைத் தான் மாமல்லன் மாற்றி தன் பெயரை அளித்தானாதல் வெளிப்படை. எனில், இப் பழம் பெயர், நாம் மேலே வாதித்தது உண்மையாகில், மல்லையே ஆதல் வேண்டும். 'பல்லவர்கள்' - என்ற தமது ஆராய்ச்சி நூலில் ஹெராஸ்பாதிரியாரும்29 இக்கருத்தே கொண்டனர். நரசிம்மனுக்கு அடுத்த நூற்றாண்டில் வாழ்ந்த திருமங்கை ஆழ்வார் இத்தலத்தை விடாப்பிடியாக 'கடன் மல்லை' என்றே தமது இரண்டு பதிகங்களிலும் [பெரிய திரு. 2-5 & 2-6] வேறு நான்கு இடத்தும் [பெரி திரு. 3-5, 8;7-2,4 சி. திருமடல் 120) கூறிச் சேறலால் 'கடன் மல்லை' என்பதே மல்லையின் பழம் பெயராதல் தெற்றெனத் தெரிகின்றது. திருக் குறுந்தாண்டகத்து 19- ஆம் பாசுரத்துள் மட்டும் 'பேர் மல்லை' என்று வழங்கியுள்ளார்; மாமல்லை என்று கூறவில்லை, மாமல்லை என்ற தொடரே அவ்விடத்தில் மோனை நயத்தை மிகுத்துக் காட்டுவதாய் இருந்தும்!

மல்லை என்ற சொல்லுக்கே தனியில் சிறப்பான பொருள் ஒன்றும் உண்டு. 'மல்லல் வளனே' என்பது தொல்காப்பியம் [ பொருள் : உரி 8 ] 'கலங்கள் இயங்கும் மல்லைக் கடன்மல்லை' என்றார் திருமங்கை ஆழ்வாரும் [பெரி. திரு. 2-6, 9]. ஆகலின், கடன் மல்லை என்பது கடல்வளம் என்ற பொருள் உடையதாகின்றது. மணிமேகலையில் 'பொற்கொடிப் பெயர்ப்படூஉம்' பொன்னகர்' [26-92&28-91] என வஞ்சியும், சிலப்பதிகாரத்துள் 'முறஞ்செவி வாரணம் முன் சமம் முருக்கிய, புறஞ்செவி வாரணம்' [காதை10: அடி 247-8] எனக் கோழியாகிய

29. Studies in Pallava History

உறந்தையும் குறிப்பிடப் பட்டிருப்பது போல, 'நீர்ப் பெயர்த்து' எனப் பெரும்பாணாற்றுள் [அடி319) கூறப் படும் ஊர் மேற்காட்டிய பரியாய முறைப்படிகடன் மல்லை யையே குறித்து நிற்றலை முதன் முதல் பேராசிரியர் ராகவையங்கார் அவர்களே சுட்டிக் காட்டினர் [பக் 222-3]. 'நீர்ப்பெயர்த்து' என்பதே மயிலையின் பழம் பெயர் என்பது மயிலை சீனி வேங்கிடசாமி அவர்களின் வாதம்[30], 'நீர்ப்பெயரை உடையது' என்பதே பெரும்பாண் தொடரின் பொருள் ஆதலால் அய்யங்கார் கொண்ட பொருளே அமைவுடையதாகும். மேலும், பெரிய திருமொழி திருவாலி பற்றிய 3-5ஆம் பதிகத்தின், 8ஆம் பாசுரத்துள் 'சங்குதங்கு தடங்கடல் கடன்மல்லையுட் கிடதாய்' எனப் போதரும் அடியில் 'தடங்கடல், கடன்மல்லை'—என்ற தொடரில் 'கடல், கடன் மல்லை'-என வழங்கிக் காட்டியதன் மூலம் வைணவச் சுடர்மணி ஆகிய திருமங்கை ஆழ்வாரே தற் காலத்திய அற்பத்தனமான ஆராய்ச்சிக்கெல்லாம் முற் றாய்ப்பு வைத்துப் போய்விட்டார். ஆகவே, 'கடன்மல்லை' என்ற பழம் பெயரையே திருமங்கை மன்னர் 'பேர்மல்லை' என்று [திரு.குறு தாண். 19] வழங்கிக் காட்டினாற் போல பூதத்தார் 'மாமல்லை' என அதன் வாணிபச் சிறப்பு நோக்கி வழங்கினார் என்பதற்கு ஐயமில்லை.

மல்லையின் பழம்பெயர் எதுவாயினும் 'மாமல்லை, மா கோவல், மாக்குடந்தை' — என்று கூறாமல், மல்லையை மட்டும் 'மாமல்லை'- என ஆழ்வார் கூறிப் போந்ததே அவர் அப்பெயரை 'மாமல்லபுரம்' என்பதன் குறுக்கமாகவே பயன் படுத்தியுள்ளார் என்று காட்டப் போதுமானது என வாதித்தார் ஆராய்ச்சித்திறன் மிக்க மயிலை. சீனி வேங்கிட சாமி அவர்கள்[31]. உண்மைதான், 'மாமயிலை மாமல்லிக் கேணியான்'-என்ற இடத்துப் போல [நான்முகன் திரு:35) மாமல்லை, மாகோவல், மாக்குடந்தை என்று இல்லா

31. நரசிம்மவர்மன்-இல் பக்.
32. நரசிம்மவர்மன் பக்.

விட்டாலும், 'யாமல்லை, கோவல், மாகுடந்தை' என்றாவது வழங்கி விட்டிருக்கலாம். ஆனால் குதிரைக்கு 'குர்ரம்'-என்று கூறும் தெலுங்கில் யானைக்கு 'யர்ரம்'-என்று இருந்தால் கூடத்தான் கற்போர்க்கு அம்மொழி எவ்வளவோ எளிதாய் அமைந்திருக்கும்! ஆனால், ஏதோ ஒலிநயமும், யாப்பமைதியும் கருதிச்செய்யுள் செய்து விட்டாரேயன்றி, ஆராய்ச்சிக்காரர்கள் இவ்விரண்டையும் விட்டொழித்து வெறும் சரித்திரக் கண்கொண்டு மட்டும் பார்த்து தமது பாட்டை இப்படி சந்தி சிரிக்க வைப்பார்கள் என்று ஆழ்வார் கண்டாரா என்ன? ஆயினும், மல்லை மட்டும் மாமல்லை எனக்குறிப்பிடப் பட்டியிருப்பதே 'மா' என்ற அடைச்சொல் மகரத்தில் தொடங்கும் மல்லையுடன் மோனை நயம் பற்றியே இணைக்கப் பட்டதைக் குறிக்கும் வலிய சான்றாதலை முன்பே சுட்டிக் காட்டியுள்ளோம். போகட்டும், இவ் இரண்டு வாதங்களையுமே தள்ளிவிட்டு மீண்டும் திருமங்கை மன்னரையே கேட்டுப் பார்க்கலாம்-மாமல்ல நரசிம்மனுக்கும் பிற்பட்ட அவர் மாமல்லை என்ற பெயரை அடியோடு பகிஷ்கரித்து விட்டது ஏன் என்று.

மாமல்லை என்ற பெயரை திருமங்கை மன்னர் ஏன் பயன் படுத்தவில்லை என்ற கேள்விக்குள்ள ஒரு பதில் அவர் இந்த பதிகத்தைப் பாடிய பின்னரே அப்பெயர் ஏற்பட்டிருக்கக்கூடும் என்பது. இந் நகருக்கு அப்பெயரை இட்டவன் திருமங்கை ஆழ்வார் காலத்திய பல்லவமல்லனே என்பது கருத்து. கல்வெட்டுக்களை ஆராய்ந்து பார்த்ததில் இஃது உண்மையே ஆகலாம் போலத் தெரிகின்றது. ஏனெனில், பல்லவ மல்லனின் 37-ஆம் ஆட்சி ஆண்டைய பையனூர்க் கல்வெட்டில்32 தான் முதன் முதலாக மாமல்லபுரம் என்ற பெயர் காணப்படுகிறது. அதாவது, பல்லவ மல்லனே பிற்காலத்தில் பல்லவ மாமல்லன் எனவும் பட்டான் ஆகலாம். எனில், மாமல்லபுரம் என்று பெயர் முத

32. S. I. I. Vol 12, no. 34 [பையனூர், நந்தி-II இன் 37 ஆம் ஆண்டு]

லாம் நரசிம்மவர்மனோடு தொடர்புறுத்தப்பட்டது எப்படி? ஆராய்ந்து பார்த்ததில், வாதாபிக் கல்வெட்டொன்றில் மாமல்லன் என்ற பெயரைக் கண்ட கனம் துப்ராயில்[33] அவர்களே மாமல்லபுரம் என்ற பெயரை முதலாம் நரசிம்ம னோடு தொடர்புறுத்தியதாகத் தெரிகின்றது. இந்த யோசனையை உண்மையாக மயங்கிக் கொண்டுதான் தீவிரச் சைவர்கள் செய்த அந்த ஆர்ப்பாட்டமெல்லாம். எனவே, பூதத்தாழ்வார் முதலாம் நரசிம்மவர்மனுக்கு (கி.பி.630-58)மிக முற்பட்டவர் என்பதற்கு ஐயமே இல்லை

*முதல் முதலிகளின் வைணவம் -*
*தனி வைணவமே*

முதலிகளின் காலத்தைத் தெளிவாகக் கண்டுகொண்ட பிறகு, அவர் தம் கோட்பாடுகளையும் காண்டல் வேண்டும். மதுரைக் கணக்காயனார் மகனார் ஆகிய நக்கீரனாரின் 56-ஆம் புறப்பாட்டுள்,

**"ஏற்றுவலன் உயரிய எரிமருள் அவிர்சடை**
**மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனும்,**
**கடல்வளர் புரிவளை புரையும் மேனி**
**அடல்வெந் நாஞ்சில் பனைக்கொடி யோனும்**
**மண்ணுறு திருமணி புரையும் மேனி**
**விண்ணுயர் புட்கொடி விறல்வெய் யோனும்,**
**மணிமயில் உயரிய மாறா வென்றி**
**பிணிமுக ஊர்தி ஒண்செய் யோனும்"**

எனச் சிவபிரானும் பலதேவனும் கண்ணனும், முருகனும் குறிப்பிடப்பட்டிருந்தாலும், சங்ககால இறுதியிலேயே சிவ விஷ்ணு இணை நிலை நல்லமதிப்புப் பெற்று விட்டமையை "பொருவருங் கடுந்திறல் இருபெருந்தெய்வத்து, உருவுடன் இயன்ற தோற்றம் போல அந்தி வானம் கடலொடு அணி கொளாஅ"-என்ற மதுரைக் கண்ணத்தனாரின் அகப்பாட்டு (செ.69) அடிகளால் அறிகிறோம். இனி

33. The Pallavas. p.41.

''அரன்நா ரணன் நாமம்; ஆன்விடைபுள் ளூர்தி;
உரைநூல் மறையுறையுங் கோயில்;-வரைநீர்;
கருமம் அழிப்பளிப்பு; கையது வேல்நேமி;
உருவம் எரி கார்மேனி ஒன்று''-[முதல் திரு. 5]
எனவும்,

''ஏற்றான் புள்ளூர்ந்தான்; எயில்எரித்தான் மார்
விடந்தான்;
நீற்றான் நிழல்மணிவண்ணத்தான்-கூற்றொருபால்
மங்கையான் பூமகளான்; வார்சடையான் நீண்முடி
யான்;
கங்கையான் நீள்கழலான் காப்பு''- [முதல் திரு. 74)
எனவும்,

''பொன்திகழும் மேனி புரிசடையம் புண்ணியனும்
நின்றுலகம் தாய நெடுமாலும்-என்றும்
இருவரங்கந் தால்திரி வரேனும், ஒருவன்
ஒருவனங்கத்(து)என்றும் உளான்''-[முதல் திரு.98]
என்றும்,

''நரைஏற்றான், பாகத்தான் பாற்கடல் உளான்''-
[மூன். திரு. 31]என்றும்,

''தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழ் அரவும் பொன் நாணும் தோன்றுமால்-சூழும்
திரண்டருவி மாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவம் ஒன்றாய் இயைந்து''- (மூன்.திரு.63)

என்றும் போதரும் பொய்கையாருடையவும், பேயாருடைய வும் அருளிச் செயல்களில் இவ் இணை நிலையின் இறுக்கத் தைக் காண்கிறோம். ஆயினும், 'முதலாவார் மூவரே; அவ் மூவர் உள்ளும், முதலாவான் மூரிநீர் வண்ணன்' (முதல் திரு. 15) என்ற அடியிலும் இதுபோலும் பிறவிடங் களிலும் தனி வைணவத்தின் வாடை தெளிவாகத் தெரி கின்றது.

சத்வ குணம் படைத்தோர்க்கு பொய்கையார், பேயார் ஆகியோரின் சைவ-வைணவ சமரஸ சன்மார்க்கம் பெரிதும் கவர்ச்சிகரமானதாகவே இருக்கும். ஆனால், ரஜோ குணத்தவர் ஒரு திட்ட வட்டமான கொள்கை படைத்தி ராத குழப்பமாகவே இதனைக் கருதுவர். திருவேங்கட முடையானை பேயாழ்வார் வருணிக்கும் விதம் 'இந்தப் பக்கம் பார்த்தால் ராயர் குதிரை; அந்தப் பக்கம் பார்த்தால் அப்பாஜி குதிரை' என்ற தெனாலிராமனின் சாட்சியம் போலவே உள்ளது. இதில் தீவிரவாதி களின் பசிக்கேற்ற உணவு இல்லை. 'கொழகொழா, வழவழா' கொள்கைகள் அவர்களுக்கு அறவே பிடிக்காது. பூதத்தாழ்வார் ஒரு தீவிரவாதி. அவருக்கு திருமாலே முழுமுதற்கடவுள், மறைமலை அடிகளுக்குச் சிவபிரானைப் போல. ஆகவே, இவர் பார்வையில் சிவ பிரான் உள்ளிட்ட பிற தெய்வங்கள் எல்லாமும் சில்லரை களே ஆதலை இவர் அருளிச் செய்த மூன்றாம் திருவந்தா தியின் 12, 17, 73, 96-ஆம் பாடல்களில் காண்கிறோம். "ஒருருவன் அல்லை ஒளியுருவம் நின்னுருவம், ஈருருவன் என்பர் இருநிலத்தோர்"-என்ற அடிகள் (இரண். திரு. 60) சங்கர நாராயண உருவைக் குறிப்பதாவே கொண்டாலும்.

### சங்க நாதம் - செய்தது யார்?

பொய்கையாரும், பேயாரும் சிவபெருமானை திருமா லுக்குச் சமானராகவே கருதுபவராய் இருக்க, பூதத்தாரும், மழிசையாரும் திருமாலை மட்டும் முழு முதற் கடவுளாகக் கூறுவது கொண்டு முதலிருவரையும் பின்னிருவர்க்கு முற் பட்டவராகக் கருதினார், மறைமலை (பக்.540). பொய்கை யார், பேயார் இருவருள்ளுங் கூட பேயார் மட்டுமே பரிபாட லில் கூறப்படாத மச்சாவதாரத்தைக் குறிப்பிடுவதால் (பேயார் 'திரு. 66), பொய்கையார் அந்தாதி பேயார் அந்தாதிக்குங் கூட மிகப் பல ஆண்டுகள் முற் பட்டதாக வேண்டும் என்பதும் அவர் கருத்து. ஆனால்,

அவரால் மூவரிலும் மிற்பட்டவராகக் கருதப்படும் பூதத்தார் கூட மச்சாவதாரத்தைக் குறிப்பிடாமற் போனது இதற்கொரு தடையாகின்றது. பூதத்தார் குறிப்பிடாதது தற்செயலாக-என்பது அடிகளார் கருத்துப் போலும்! எனில், பொய்கையார் மச்சாவதாரத்தைக் குறிப்பிடாததையும் இங்ஙனமே கொள்ளலாம்! இந்தத் தடை அடிகளார் மனத்திலும் எழுந்ததென்றே சொல்ல வேண்டும். ஏனெனில், பேயார் பதின்மூன்று* தலங்களைப் பாடியிருக்க, பொய்கையார் வேங்கடம், வெஃகா, விண்ணகர், அரங்கம், கோவலூர் ஆகிய ஐந்து தலங்களை மட்டுமே பாடியுள்ளார்; இது அவர் தமது நூலை திருமாலுக்கென தனிக் கோயில்கள் அதிகம் ஏற்படாத நாளில் இயற்றியிருக்க வேண்டுதலையே காட்டுகிறது. அடிகளின் வாதம் இவை. ஆனால், சங்க காலத்திலேயே பரிபாடலில் புகழப் பெற்ற திருமாலிருஞ்சோலையையும், 'மருந்தாகும் தீநீர்மலிதுறை மேய இருந்தையூர்' [பரி. திரட்டு 1, 485] ஆகிய கூடல் அழகர் கோயிலையும்[34] கூடத்தான் பொய்கையார் பாடவில்லை.

---

*பேயார் பாடிய தலங்கள் 13/14 : 1) அட்டபுயக்கரம், 2) அத்தியூர், 3) அரங்கம், 4) அல்லிக்கேணி, 5) கடிகை, 6) குடந்தை, 7) கோட்டியூர், 8) பாடகம், 9) மாலிருஞ்சோலை, 10) விண்ணகர், 11) வெஃகா, 12) வேங்கடம், 13) வேளுக்கை. மூன்றாம் திருவந்தாதியின் 26-ஆம் செய்யுளில் கச்சி என இவரால் குறிப்பிடப்படுவது கச்சி ஊரகம் ஆகக் கூடும். ஊரகம் என்பது ஊருக்குள் அமைந்த அகம் எனப் பொருள்படுவதாய் உண்மையால், இக்கருத்து கொள்ளப்பட்டது. எனில், இதுவே கச்சியின் மிகப் பழைய திருமால் கோயில் ஆகக் கூடும். ஊரகம் என்பதை உரகம் என மாற்றி, அதற்கேற்ப இங்கே ஆதிசேடனுக்கு ஒரு உட்கோயிலும் அமைத்து பிற்காலத்தார் வழிபட்டு வருகின்றனர். [உரகம் பாம்பு]. எனவே, பேயாழ்வாரால் பாடப்பட்டன 14 திருப்பதிகள் என்றும் கொள்ள இடமுண்டு.

34. ஆராய்ச்சி தொகுதி, மு. ராகவையங்கார், பக்.242.

இதனை நன்கு அறிந்திருந்தும் அடிகள் கண்டவாறு பேசு வது உண்மையான ஆராய்ச்சியில் அவருக்கு நாட்டம் இல்லாமையையே காட்டுகின்றது. அஃது ஒருபுறம் இருக்க, சிவபிரானை இரண்டாந்தரத் தெய்வமாகக்கூறுவது கொண்டு பூதத்தாரை அடிகள் பிற்காலத்தவராகக் கருதலும் ஒப்புக் கொள்ளக் கூடியதாய் இல்லை. தீவிரவாதிகள் எக்காலத் தும் இருக்கவே செய்கின்றனர். ஒருவன் தீவிரவாதியாய் இருப்பது அவன் பிறவிக் குணம், வளர்ந்த ஊர், குடும்பச் சூழ்நிலைகளைப் பொறுத்ததுங்கூட. மழிசைப் பிரானை அவர் பேயாழ்வாரின் சீடராய் இருந்தும், முதலாழ்வாராக கர்ண பரம்பரைச் செய்திகள் குறிப்பிடாததால், பூதத்தார் பொய்கை ஆழ்வாருக்கும், பேயாழ்வாருக்கும் சமகாலத்த தவரே ஆகக் கூடுதல் காண்கிறோம்.

பூதத்தார் பற்றிய மறைமலை அடிகளின் கருத்திற் கான காரணங்களைத் தனித்தனியாக எடுத்துக் கொண் டால், மேற்காட்டியாங்கு மறுக்கக் கூடுதல் எளிதே. ஆயினும், மூவர் திருவந்தாதிகளையும் ஒருசேரப் படித்துப் பார்த்தபோது, இவ்வாசிரியர் உள்ளத்தேயும் அடிகள் கொண்ட முறையே தோற்றிற்று என்பதைக் குறிப்பிடத் தான் வேண்டும். சொல்லாட்சி, நடை, பொருள்-வளம், சைவ-வைணவப் பொது நோக்கு ஆகியன பொய்கை, பேய், பூதம் என்ற முறையையே வலுவாய் ஆதரிக்கின்றன. இன்னும் பேயாரின் பிறப்பிடமான மயிலைக்கு மிக அணித் தான திருநீர்மலையை அவர் பாடாதொழிய பூதத்தார்* பாடியுள்ளார். இது இக் கோயில் பேயார் நூல் இயற்றிய

* பூதத்தார் பாடிய தலங்கள் 12. 1) அத்தியூர், 2) அரங்கம், 3) கடன் மல்லை, 4) குடந்தை, 5) கோட்டியூர், 6) கோவல், 7) தஞ்சை, 8) தண்கால் 9) நீர்மலை, 10) பாடகம், 11) மாலிருஞ்சோலை, 12) வேங்கடம். இவற்றுள் கடன்மல்லை, தஞ்சை, தண்கால், நீர்மலை ஆகிய நான்கு மட்டுமே பேயார், பொய்கை யார்களால் பேசப்படாதன. இந் நான்கில் தண்கால் சிலப் பதிகாரத்தில் குறிப்பிடப்பட்ட ஊரே. நீர்மலை திருமழிசைப் பிரான் திருமயிலைக்கடுத்த மலைக் குகையில் தவம் செய்த தாகக் கூறப்படும் குகையைக் கொண்டிருந்த மலை ஆகலாம்.

பிறகு கட்டப்பட்டதனால் ஆகலாம். அடுத்தபடியாகப் பேயாரால் கூறப்படாத தஞ்சையை பூதத்தார் குறிப்பிட்டிருப்பதும் கவனிக்கத் தக்கது. பேயாழ்வார் தஞ்சையில் எந்த அரசும் வலுப்படுதற்கு முன்பே தமது அந்தாதியைப் பாடி முடித்திருக்கக் கூடுமெனக் கொள்ளலாம்.

வேலூர்ப் பாளையச் செப்பேடுகள் சோணாட்டைச் சிம்ம விஷ்ணுவே முதன் முதல் கைப்பற்றியதாகக் கூறுகின்றன. மூன்றாம் சிம்மவர்மனின் 6-ஆம் ஆண்டிலேயே (கி.பி. 550) இது நடைபெற்று விட்டதாகப் பள்ளன் கோயில் சாஸனத்திலிருந்து தெரிகின்றது. சிராப்பள்ளி மலைமேற் காணும் 'தஞ்சாஹர' (தஞ்சையை வென்றவன்) என்ற கல்வெட்டை சிம்ம விஷ்ணுவினுடையதாகக்35 கொண்டால், கி.பி. 550 அளவில் தஞ்சையே சோணாட்டு ராஜதானியாக இருந்திருக்க வேண்டும் என்னலாம். தஞ்சை சங்க நூற்களில் இடம் பெறாமையும் இக் கருத்தையே அரண் செய்கின்றது. எனவே, இந்தக் கி.பி 550 அளவிலேயே தஞ்சை பிரசித்தி பெற்றிருக்கக் கூடுதலும், பூதத்தாழ்வார் இக் கி.பி. 550 அளவிலேயோ அல்லது இதற்குப் பிறகோதான் தமது அந்தாதியைச் செய்திருக்கக் கூடுதலும் காண்கிறோம்.

பொய்கையார், பேயார், பூதத்தார் ஆகிய மூவரின் அந்தாதிகளும் ஒரே சமயத்தில் செய்யப்பட்டன அல்ல என்பதற்கு வேறொரு சான்றும் உண்டு. எதேச்சையாகத் திரிந்து வந்த இம் மூவரும தற்செயலாக ஒரு சமயம் கோவலூரில் முகாமிட்டிருந்தனர். அப்போது, ஒரு நாள் இரவு தூறிக் கொண்டிருந்தது. இனி, மழை பிடித்துக் கொள்ளப் போவது உறுதியென்று தெரிந்ததும், இம் மூவருள் ஒருவர் அருகில் இருந்த வீட்டுத் திண்ணையில் தங்கியிருந்தார். சில நேரத்திற்கெல்லாம் இன்னொருவர் வந்து இவரிடம் இடம் கேட்டார். இருவருமாகச் சேர்ந்து அமர்ந்த நிலையில் அவ்விடத்தைப் பகிர்ந்து கொண்டனர்.

35. கலைக் களஞ்சியம், பாகம் 5, பக். 742 (1958)

இன்னும் கொஞ்ச நேரம் கழித்து, மூன்றாமவர் வந்து இடம் கேட்டார். வேறு வழியில்லாமல் முன்பே தங்கி யிருந்த இருவரும் எழுந்து நின்று கொண்டு, மூன்றாம வருக்கும் இடம் அளித்தார்கள். ஆரம்பத்தில் ஒருவரை ஒருவர் தொட்டுக் கொள்ளாமல்தான் இருந்தனர். ஆயினும், போகப் போக மழை பலத்ததால், தொட்டுக் கொள்ளா மலும், பட்டுக் கொள்ளாமலும் இருக்க முயன்றது பலிக்க வில்லை. ஆனால், என்ன அதிசயம்! ஒருவர்மேல் ஒருவர் பட்டுக் கொண்டதும் மழை தணிய ஆரம்பித்தது. பரம பாகவதர்களான அவர்கள் ஒருவரோடு ஒருவர் நெருங்கிப் பழகுவதற்காகவே பரமன் மழையைக் கொணர்ந்தானோ என்று அவர்களின் அடிமனத்தில் ஒரு ஐயம் எழுந்தது; கலந்துரையாடி, வியப்புடன் ஆலயத்தை உற்று நோக் கினர்; திரிவிக்ரமன் திருமகள் சமேதனாய் வீதியில் பவனி வந்து கொண்டிருந்தான். அது காறும் நடந்ததெல்லாம் தன் திருவிளையாடலே என்பதை உறுதிசெய்வதே போல*. பொய்கையாரின்

"நீயும் திருமகளும் நின்றாயால்; குன்றெடுத்துப்
பாயும் பனிமறைத்த பண்பாளா!-வாசற்
கடைகழியா உள்புகாக் காமர் பூங்கோவல்
இடைகழியே பற்றி இனி.

என்ற 86-ஆம் செய்யுளில் குறிப்பிடப்பட்டிருப்பது இந் நிகழ்ச்சியே என்பது பொதுவான நம்பிக்கை. இப்பாடலின் பொருள் வேறு என அறிஞர் ராமா னுஜம் அவர்கள் கருதுமாறே கொண்டாலும், கோவலூர் ஆவது சுட்டப்பட்டுள்ளது. இங்ஙனமே பூதத்தாழ்வார் பனுவ

---

*போகப் போக நான்காமவர் ஒருவரும நெருக்குவது போல இம் மூவர்க்கும் தோன்றிற்றென்றும், கட்புலனாகா அந்த நான்காமவரை இவர்கள் தம் ஞானக் கண்ணால் இறை வனே எனத் தெரிந்தனர் என்றும குருபரம்பரைகள் கூறும். ஆயினும், இங்கே கூறப்பட்டபடியே அந்த நிகழ்ச்சி இருந் திருக்கக் கூடும் என்பது இவ்வாசிரியர் நம்பிக்கை.

விலும் கோவலூர் 70-ஆம் செய்யுளில் இடம் பெற்றுள்ளது. ஆனால், இது கூடப் பேயார் அந்தாதியுள் இல்லை! ஆகவே, பேயாழ்வார் திருவந்தாதி இந் நிகழ்ச்சிக்கு முன்பே பாடப்பட்டிருக்க வேண்டுதல் தெளிவு. 'திருக் கண்டேன் பொன்மேனி கண்டேன்'-என்ற இவர் கூற்று (மூன். திரு:1) வேறோர் ஊரில் (அனேகமாக திருவல்லிக் கேணியிலேயே) அவர் கண்ட காட்சியைக் குறிப்பதாக லாம். இவ்விதம் பேயாழ்வார் திருவந்தாதியே முதலில் செய்யப்பட்டதாய் இருந்தும், பார்வைக்குப் பொய்கையார் அந்தாதியே பழமையானது போல் காணப்படுதல் பொய்கை யார் பேயாரினும் மிக மூத்தவராகக் கூடுதலைச் சுட்டு வதாகக் கொள்ளலாம். உரையாசிரியர்கள் எல்லாம் பொய்கையாருக்கே முதன்மை கொடுப்பது இதற்குத் துணை ஆகின்றது.

முதலாழ்வார்கள் மூவரும் சமகாலத்தினர் என்ற கருத்து இம் மூவரும் கோவலூரில் சந்தித்தனர் என்ற (மேலே கூறப்பட்ட) செய்தியை அடிப்படையாகக் கொண்டதே. இந்தக் கதைக்கு அகச் சான்றாக மேலே காணப்பட்ட பொய்கையார் பனுவலின் 86-ஆம் செய்யுள் காட்டப்படு கின்றது. குறிப்பாக 'இடைகழி' என்ற சொல்லே இச் சான் றாகக் கருதப்படுகின்றது. ஆனால், பாடலை உற்று நோக்கும் போது 'இடைகழி' என்ற சொல் கதையிற் காணும் 'ரேழி' (நடை) என்ற பொருளினது அன்று என்றும், 'வெண்ணை நல்லூர் அருட்டுறை' என்பதிற் காணும் 'அருள்துறை'யைப் போல, அது கோவலூர்ப் பெருமாள் கோயிலின் பெயரே எனவும் தெரிகின்றது. பெரிய திருமொழியுள், "மதிட்கோவல் இடைகழி ஆயனை" -எனத் திருநறையூர்ப் பதிகத்தும் (பெரி. 7;3-2), "மதிட் கோவல் இடைகழி மைந்தனை" என (7;10-4) திருக் கண்ணமங்கைப் பதிகத்துள்ளும், பெரிய திருமடல் 122-ஆம் கண்ணியுள், "கோவலூர் மன்னும் இடைகழியெம் மாயவனை" எனவும் போதரும் திருமங்கை யாழ்வார்

வாக்குகளில் காணும் இடைகழி என்ற தொடர் இதனைத் தெளிவாக்குகின்றது. "வாசற கடை கழியா (மலும்), உள்புகா (மலுமே) கோவல் (ஊரின்) இடைகழி (என்ற ஆலயத்து) உள் (இடம்) பற்றி நின்றாயால், குன்றெடுத்த (கோவர்த்தன் மலையை எடுத்து) பாயும் பனி (பெய்கின்ற மழையை) மறைத்த (தடுத்த) பண்பாளா" என்ற பொருளே பாடலின் போக்கோடு இணைந்து நயமிக்கும், காணப் படுகின்றது. கோவில்கள் 'இடைகழி' எனவும் படுதல் வழக்கே ஆதலை சிவதளி ஒன்று சேந்தனார் திருவிசைப் பாவில் (எண் 4) திருவிடைக்கழி* எனப்படுமாற்றால் அறியலாம் இவ்வனைத்திற்கும் மேலாக இரண்டாம் ராஜேந்திரன் காலத்தே கி.பி 1058-இல் செய்யப்பட்ட கல்வெட்டுகளில் [36] கோவலூர்ப் பெருமாள் கோயிலுக்கு 'இடைகழி' என்ற பெயரும், பெருமாளுக்கு 'இடைகழி ஆழ்வார்' என்ற பெயரும் காணப்படுகின்றன. விக்ரம சோழன் காலத்திய கல்வெட்டு[3] ஒன்றிலுங்கூட 'திருவிடைக்கழி யாழ்வார' என்ற தொடர்பயில்கின்றது. இவ் இறைவற்கு தேஹளீஸ்வரா என இன்று வழங்கும் வடமொழிப் பெயரிற் போந்த 'தேஹளீ' என்பது இடைகழி என்னும் பொருளினதே. ஆயினும், மூவர் வரலாற்றுகக பொய்கையாரின் 86-ஆம் செய்யுளிற் போந்த 'இடைகழி' என்ற சொல்லில் ஆறாயிரப்படி குருபரம்பரை அகச்சான்று கண்டது பொருந்தாமையை இச்சான்றுகள் காட்டுவதாகக் கொள்ளலாமே தவிர, கோவலூரில் மூவர் சந்திததே பொய் என்ற நாட்டுதற்குப் போதியன அல்ல எனவே, மூவர் முதலிகளும் சறறேறத்தாழ சம காலத்தவர் என்ற நமது கருத்தே இன்னமும் சிறப்புடையதாம.

*"தேனமர் பொழில்சூழ் திருவிடைக் கழியில் திருக்குரா நிழற்கீழ் நின்ற,
கோனமர் கூத்தன் குலவிளங் களிறென் கொடிக்கிடர் பயப்பதும் குணமே?"
(சேந்தனார் திருவிசைப்பா : 4)

36) E.I. Vol VIII p 145 (ராஜேந்திரன்-II, 1058 AD).
37) ARE no 350 of 1916-7 (விக்ரம சோழன் காலம்).

மூவரின் திருமுடி அடைவு

பொய்கை, பூதம், பேய் ஆகிய மூவரும் ஒரு சித்தார்த்தி ஆண்டு அய்ப்பசித் திங்களில் முறையே ஓணம், அவிட்டம், சதய மீன்களில் அஷ்டமி, நவமி, தசமி, கலந்த செவ்வாய், புதன், வியாழன் களில் பிறந்ததாக மூவாயிரப்படி குருபரம்பரை கூறுகிறது. இந்த விவரங்களில் காணும் வரிசைக் கிரமமே இவை அப்பட்டமான பொய் ஆதலை அறிவிக்கப் போதுமானது. 38 இந்த நிலையில், காஞ்சி வரதராஜப் பெருமாள் கோயிலிற் காணும் விக்ரம சோழனின் 9-ஆம் ஆட்சி ஆண்டிற்குரிய கல்வெட்டு ஒன்று 39 பொய்கையாரும், பூதத்தாரும் பிறந்தருளிய திருக்கேட்டை நாளன்று பிரதிமாதமும் 81 முழுக்கு (அபிஷேகம்) செய்வதற்காக 780 கலம் நெல் வழங்கப்பட்டதைக் கூறல் குறிப்பிடத்தக்கது ஆயினும், குருபரம்பரைகளின் குறிப்புக்களையே பேராசிரியர் கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள் ஆதரிக்கின்றனர் (பக் 76-7). குருபரம்பரை ஆசிரியர்கள் மட்டுமே மிகுந்த பக்தி சிரத்தையோடு ஆழ்வார்களின் பிறப்பு பற்றிய விவரங்களைத் தேடியிருப்பர் என்பது அவர் கருத்து. காஞ்சி ஆகிய பெரிய நகரில் நிரந்தரமான அறக்கட்டளைக்கு ஏற்பாடு செய்ய விழைந்தவர்களும், அதனை ஏற்றுக்கொண்ட சம்பிரதாயஞானம் மிகவுடைய கோயிற் பெருமக்களும் அப்படி ஒன்றும் அசிரத்தையாக வழிப்போக்கரைப் போல நடந்து கொண்டிருக்க மாட்டார்கள் என்ற அறிஞர் ராமானுஜம் அவர்களின் வாதத்தில் (பக் 147-1) நியாயம் தென்படுகிறது. கிருஷ்ணசாமி அய்யங்காரைப் பின்பற்றி ஆசிரியர் ராகவையங்கார் அவர்கள் 40 இதே காலத்திய குருபரம்பரையின் குறிப்புக்

---

38. Indian Ephimeris Vol I Part-I Appendix VI. P 448 column of the table given

39. S.I.I. Vol. III No. 80 P. 187
(விக்ரமசோழன் 9-ஆம் ஆண்டு)

40. இலக்கிய சாஸன வழக்காறுகள் பக். 193.

களோடு இக் கல்வெட்டை இணைக்கும் முயற்சியில், திருக் கேட்டையை திருவாட்டை என வாசித்துக் காட்டுவர். ஆயினும், அவிட்டம் என்பதை வாட்டை எனக் கல்வெட்டுக் காரர் மாற்றியிருக்கக் கூடுதற்கான காரணம் ஒன்றும் அவர் காட்டாமையால், கல்வெட்டிற்கே இவர் கற்பிக்கும் பாட பேதத்தை நாம் ஏற்றுக் கொள்ளமுடியாது. அதை ஒரு பிழையாகவே கொண்டாலும், குருபரம்பரைகளில் பொய்கையார் பிறந்த கால மீனாகக் கூறப்படுவது அவிட்டம் அல்லவே; ஓணம் என்றன்றோ கூறப்படுகின்றது? இந்த நிலையில், பேயாரின் சதய மீனை மட்டும் நினைவிற் கொண்டிருந்த குருபரம்பரைகள் இவருக்கு முற்பட்ட இருவர் திறத்தும் இச் சதயத்துக்கு முந்திய இரண்டு மீன்களைத் தேர்ந்து கொண்டன ஆதல் தெளிவு. எனவே, பேயா ருக்குக் கூறப்படும் சதய மீன் மட்டுமே உண்மையாகக் கூடுதலும், மிக இளையவரான பூதத்தார் பொய்கை யாரோடு ஒரு சேர வைத்து எண்ணப் பட்டமைக்கு இருவருமே கேட்டையில் பிறந்ததும் ஒரு காரணம்* ஆகக் கூடுதலும் காண்கிறோம். ஆண்டு, திங்கள் பற்றி குருபரம்பரைகள் தரும் குறிப்புக்களை பொய்கை யாருக்கு மட்டும் ஒப்புக் கொண்டு நாம் மேற்செல்வோம்.

முதலாழ்வார்கள் மூவரும் கி.பி. 6-ஆம் நூற்றாண்டிற்கு பிற்பட்டவர் ஆக முடியாது எனவும், பூதத்தார் அந்தாதி பாடியது கி. பி. 550க்கும் பிறகே எனவும் நாம் முன்பே கண்டுள்ளோம். எனவே, முதலாழ்வார்கள் காலம் கி. பி. 500-600 ஆகின்றது. கி.பி. 479-உம், 539-உம் மட்டுமே மூவருடையவும் உத்தேசப் பிறந்த காலமாகக் கொண்ட

---

*பொய்கையாரும், பூதத்தாரும் ஒருசேர வைத்து எண்ணப் படுவதற்கு இன்னொரு காரணம், முறையே 'வையம் தகளியா'-எனவும், 'அன்பே தகளியா'-எனவும் இவ்விரு வரும் ஒரே மாதிரியாகத் தொடங்கி அந்தாதி பாடிய தாகலாம்.

கி.பி. 500க்கு அணித்தான சித்தார்த்திகள். கி.பி. 589-ஐ இவ் ஆண்டாகக் கொண்டார் அறிஞர் கோவிந்தசாமி அவர்கள். அவர் கணித்த தேதிகள் இந்நூலின் பிற் சேர்க்கைப் பகுதியில் அட்டவணை 1-இல் காட்டப் பட்டுள்ளன. இவை உண்மையாகில், திருமழிசைப் பிரானுக்குச் சுமார் 70 பிராயத்தளவில் அவரைப் பேயார் வைணவத்திற்கு மாற்றியதாகக் கேட்கப்படும் காலம் கி. பி. 610 ஆகின்றது. எனவே, மூவர் முதலிகளும் கோவலூரில் சந்தித்ததும், பொய்கையார் அந்தாதி செய்ததும் கி.பி. 610-லும், பேயாரும், பூதத்தாரும் அங்ஙனம் செய்தது முறையே கி.பி. 600லும், 620லும் ஆகக் கொள்ளலாம். அதாவது, மூன்று அந்தாதிகளுமே முதல் மகேந்திர பல்லவன் (கி.பி.591-630) காலத்தியன என்பது பொருள். சைவ, வைணவப் பொதுநோக்கை வெகுவாய்க் கொண்டு விளங்கும் பேயாருடையவும் பொய்கையாருடையவும் நூல்களை தொண்டை மண்டலத்தில் சமயப் பித்து தலைவிரித்தாடிய மகேந்திரன் காலத்தனவாகக் கொள்ள எந்த நடுநின்ற நெஞ்சமும் நடுங்கும். மேலும், இவ்வளவு பிற்பட்ட காலத்திற்கு இவர்களை இழுத்து வந்துவிட்டால், சம்பந்தருக்கும் இம் முதலாழ்வார்களுக்கும் இடைப்பட்ட காலத்தவரான காரைக்கால் அம்மையாருக்கு வேறு இடம் படிக்க வழியில்லை. இந்த அடிப்படையிலேயே முதலாழ் வார்களின் காலம் கி.பி. 500-600க்கு இடைப்பட்டதாக நாம் முற்கூறினோம். எனவே, மூவருள்ளும் மூத்த பொய்கை யாருக்கு மட்டும் கி.பி. 479-ஐய சித்தார்த்தியையும், ஏனை யோருக்கு கி.பி 500-ஐயும் பிறந்த காலங்களாகக் கோடலே நேரிதாம். இந்தக் கண்ணோட்டத்தில் பொய்கையாரின் காலம் கி.பி. 479-580-உம், பேயார் காலம் கி.பி. 500-580உம், பூதத்தார் காலம் கி.பி. 500-590-உம் ஆகும். இவர்கள் கோவலூரில் சந்தித்தது கி.பி. 570-லும், நூல் செய்தது முறையே கி.பி. 560, கி.பி. 570-லும், 580-லும் ஆகற்பாலன. பேயாரும், பூதத்தாரும் ஒத்த பிராயத்தினர் ஆதலை அவ் இருவரும் கூட்டாக,

குன்றப்பற் பெருமோட்டுக் காடு கிழவோட்கு
அனைத்தி ருந்து சாந்தை தொட்டயேய்
மன்றக்க அறியாது மற்றுந் தன்கையைக்
குறைக்குமாம் கூர்ங்கத்தி கொண்டு-என்ற ஆரிட்ச்
செய்யுளைப் பாடியதாக யாப்பருங்கல 93-ஆம் சூத்திர
விருத்தி உரை கூறிச் சேறலில் இருந்து ஊகிக்கலாம்.

பொய்கையாரை மிக மூத்தவராய், கி.பி. 479-இல் பிறந்தவராகக் கருதியதற்கு வேறொரு காரணமும் உண்டு. இது, "பழுதே பலபகலும் போயின" என்ற (முதல் திரு. 16) செய்யுளைக் காட்டி, பொய்கையார் தம் வாழ்க்கையின் முற்பகுதியில் அரசரைச் சார்ந்து ஒழுகியவரே என ராகவையங்கார் அவர்கள் கருதுவதாக முன்னமே கூறப்பட்டதுதான். இவ்வரசன் யார் ஆகக்கூடும்?

"ஆழி இழைப்பப் பகல்போம்; இரவெல்லாம்
தோழி துணையாத் துயர்தீரும்;- வாழி!
நறுமாலை தாராய் திரையஓ! என்னும்
சிறுமாலை சென்றடையும் போது"—என்று

யாப்பருங்கல 4-ஆம் சூத்திர விருத்தியுரையுள் இவருடையதாகக் காட்டப் பெறும் செய்யுளிற் காணும் திரையனே இவ் அரசன் ஆகலாம். எனில், பல்லவர் காலத்தில் திரையன் எங்கிருந்து வந்தான்? கி.பி. 495-க்கும், 550-க்கும் இடைப்பட்ட மூன்றாம் சிம்மவர்மன், இரண்டாம் விஷ்ணு கோபன் ஆகிய இருவருடைய பட்டயங்களும் ஆந்திர நாட்டிலிருந்தே விடப்பட்டுண்மையைக் கொண்டு இக் காலத்தில் 'காஞ்சி' பல்லவர் கையில் இல்லை என்று கருதப்படுதலால், இதே காலப் பகுதியில் காஞ்சியில் திரையர் இரண்டாவதாக ஒரு முறையும் ஆண்டிருக்கலாம் என்று நாம் கொள்ளத்தகும். பொய்கையாரால் கூறப்பெறும் திரையனையே (கி.பி. 495-520) பிற்காலத்தார் 'திரிநயனப் பல்லவன்'-எனத் தவறாக உச்சரித்து விட்டிருக்கின்றனர் என்பதும் இவ் ஆசிரியர் கருத்து. இது சோணாட்டில் இரண்டாம் கரிகாலனுடையவும் (கி.பி. 500-

480), வாதாபியில் முதலாம் விஜயாதித்தனுடையவும் (கி பி., 480-500) ஆட்சிக் காலமும் ஆகும். விஜயாதித்த சளுக்கியன், திரிநயனப் பல்லவனால் ஒரு போரிடைக் கொல்லப்பட்டதாகக் கர்ண பரம்பரைச் செய்திகள்[41] கூறுகின்றன. இத்திரையனை ஆழ்வாரின் இளம் பருவத்தினனாகக் கொண்டால், இவர் பிறந்தது கி.பி. 479-இல் ஆதல் கூடுமே அல்லவா?

## இடைக்காலப் பொய்கையார் இருவரா?

மேலைப் பாடலையேயன்றி வேறு எட்டும் யாப்பருங்கல உரையில் எடுத்தாளப்பட்டுள்ளன. முன்னர்க் காட்டப்பட்ட 'வஞ்சிவெளிய குருகெல்லாம்' என்பது இவற்றுள் ஒன்று. மேலும் மூன்று பாடல்கள் 57-ஆம் சூத்திர உரையிற் போதரும் 'அரிமலர் ஆய்ந்தகண்', "பாலூர தனதுருவாய்" 'எளிதில் இரண்டடியும்' என்பன ஆகும். இவற்றின் கீழ் ஓர் இடத்தில் "அரிமலர் ஆய்ந்தகண்"-என்பது பொய்கையார் வாக்கு-என பழைய பதிப்புகளில் காணப்படுகிறது. பின்னிரண்டு பாடல்களும் முறையே பொய்கையாழ்வாரின் (முதல்) திருவந்தாதியைச் சேர்ந்த 69, 51,-ஆம் பாடல்கள் ஆதல் முன்பே கூறப்பட்டது. எனவே, 'அரிமலர் ஆய்ந்த கண்'-என்ற பாடலின் ஆசிரியர் ஆகிய பொய்கையார் பொய்கையாழ்வாரின் வேறானவர் என்பதே விருத்தியுரைகாரரின் கருத்து என்றார் அறிஞர் ந.மு. வேங்கிடசாமி நாட்டார்[42] அவர்கள். ஏனை இரண்டு பாடல்களையும் பொய்கையாழ்வார் உடையனவாகத் தெளிவாய் உரைகாரர் குறிப்பிட்டிருந்தால், இக் கருத்தை நாம் ஒப்புக்கொள்ளத் தான் வேண்டியிருந்திருக்கும். அப்படி அவர் செய்யக்காணாமையால், 'அரிமலர் ஆய்ந்தகண்' என்பது (முதலாயின)

---

41. E.I. Vol VI, p 300-9 (Nandampudi Cp of RajaRaja Chalukya of Vengi)

42. வேங்கிடசாமி நாட்டார் ந. மு., செந்தமிழ்ச் செல்வி 2 பக். 420 (1925-26)

பொய்கையார் வாக்கு எனத் திருத்திக் கொண்டார் இவ்வுரையைச் செம்மையாகப் பதிப்பித்த அறிஞர் இளங்குமரன் அவர்கள். பிற்காலத்துச் சைவப் பெரியார்களே 'முதலாயின'-என்று ஆதியில் இருந்த பாடத்தில் அச்சொல்லை நீக்கியிருக்க வேண்டும் என்பது தெளிவு. ஏனெனில், சங்க கால நல்லிசைப் புலவர்களையும், இவர் பெயர் கொண்ட ஆழ்வார், நாயன்மார்களையும் உரையாசிரியர் அனேக இடங்களில் ஒன்றாக மயங்கிக் கொள்கிறார். காட்டாக, சங்க காலத்து மாமூலரே இவர் கருத்துப்படி திருமூலரும் ஆதல், மனத்தது பாடவும், சாவவும், கெடவும் பாடல் தரும் கபில பரணர், கல்லாட மாமூலப் பெருந்தலைச் சாத்தர் இத் தொடக்கத்தோரானும், பெருஞ் சித்திரனார் தொடக்கத்தோரானும் மிகவும், குறையவும், பாடப்படுவன எல்லாம் ஆரிடப் போலி-என எழுதிச் சென்று, பின் மேற்கோள் காட்டும் போது, திருமூலரின் 'இலைநல வாயினும்'-என்ற பாடலைத் தருகிறார். எனவே, பொய்கையார் வாக்காக இவர் குறித்த பாடல்கள் எல்லாமும் ஆழ்வாருடையன அல்ல ஆகலாம். இப்பாடல்களின்* ஆசிரியர்,

---

*இவ் அதிகாரத்துள் காட்டப்பட்ட 'வஞ்சி வெறிய குருகெல்லாம்', 'ஆழி யிழைப்பப் பகல்யோம்'-என்ற இரண்டு பாடல்களையே அன்றி பொய்கையார் வாக்காகக் காட்டப்பட்ட மேலும் 5 பாடல்கள்

(1) அவிழ்ந்ததுணி அசைக்கும்; அம்பலமும் சீக்கும்;
மகிழ்ந்திடுவார் முன்னம் மலரும்;-கவிழ்ந்து
நிழல்துழாஅம் யானை நெடுமான்தேர்க் கிள்ளி
கழல்தொழாஅ மன்னவர்தங் கை- (யா.கா.36 விருத்தி உரை) இதிற் கூறப்பட்ட கிள்ளி மூன்றாம் கரிகாலனோ அல்லது சோழ நந்திவர்மனோ ஆகலாம்.

(2) அரிமலர் ஆய்ந்தகண் அம்மா கடைசி
திருமுகமும், திங்களும் சேத்துத்-தெருமந்து
வையத்தும்,வானத்தும் செல்லாது அணங்காகி
ஐயத்துள் நின்ற (து) அரவு-(யா.கா.57உரை)

(3) பகலவன்செய் தூதி! நிற் பண்பின்றி வந்தால்
இகலினில் நின்றார் வலியும்-இகலுடைய
நன்னயத்தோ(டு) ஆயாக்கால் சந்தியாம்;
அன்னான்
நடை நட்பின் நட்டாருட் பேறு-(யா.சூ.61 உரை)

(4) வரிசை பெரிதுடையார் கட்கலமும் தூயர்
புரிசை ஒருசாரார் அம்பலமும் தண்ணீரும்
தன்னிலத்த அல்ல-புரிசைக்கு
தெற்கொற்றித் தோன்றும் திருநென் மலியேநம்
பொற்கொற்றி புக்கிருக்கும் ஊர்-(யா.சூ 93 உரை)

(5) கிடங்கிற் கிடங்கில் கிடந்த கயலை
தடங்கட் டடங்கண் தளிரியலார் கொல்லார்-
கிடங்கில்
வளையாற் பொலிந்ததோள் வையெயிற்றுச்
செவ்வாய்
இளையாட்டி கண்ணொக்கும் என்று-(யா.சூ. 93
உரை)

(6) அம்ம்பவள் வரிநெடுங்கணாய்வஞ்சிக்
கொம்ம்பவள் கொடிமருங்குல்; கோங்கின்
அரும்ம் பவள்முலை ஒக்குமே;-ஒக்கும்
கரும்ம் பவள்வாயிற் சொல் - (யா. காரிகை உறுப்பியல் 7-ம் செய்யுள் உரை).

கடைசியாக, பன்னிருபாட்டியலிலும் 14 சூத்திரங்கள் பொய்கையாருடையனவாகத் தொகுக்கப்பட்டுள்ளன. கழகத்தின் திருத்தப் பதிப்பின்படி இவை எழுத்தியல், சொல்லியல், இனவியல் என்ற மூன்றிலுமாக விரவிக் காணப்படுகின்றன. இவற்றைக் கொண்டிருந்த பாட்டியல் மூல நூல் 'பொய்கையார் நூல்' என்ற பெயரால் நவநீதப் பாட்டியல் உரையிலும், யாப்பருங்கலத்து 96-ஆம் சூத்திர உரையிலும் கூறப்படுகின்றது. யாப்பருங்கல உரை கி.பி. 10-ஆம் நூற்றாண்டில் செய்யப்பட்டதாகத் தெரிதலால், இந்த கடைசிப் பொய்கையார் கி பி. 9-ஆம் நூற்றாண்டினர் ஆகலாம். உலாவைப் பற்றியும் இவர் குறிப்பிடுவதால் இஃது உறுதிப்படுகின்றது. எனவே இவரை அவிநயனாருக்கு[43] முன் காலத்தவராகக் கொள்ளலாம்

43. அறவணன், க.ப., 'அவிநய'த்தின் முன்னுரையில்

சேரநாட்டுத் தொண்டியைச் சேர்ந்தவரும்* "களவழி" செய்தவரும் ஆகிய சங்க காலப் பொய்கையாருக்கும், ஆழ்வாருக்கும் இடைப்பட்ட காலத்தவர் ஆகக்கூடும். 'இன்னிலை'-யின் தொகுப்பு† ஆசிரியர் இவ் இரண்டாம் பொய்கையாரே என்பர் மறைமலை அடிகள் (பக். 579). ஆனால், இத்தொகை நூலைப் பிற்காலப் போலி என்று (பக். 44-5 அடிக்குறிப்பு 1) ராகவையங்கார் ஒதுக்கி விட்டனர். இவ் இரண்டாம் பொய்கையாரை கி.பி. 450-550-க்கு உரியவராகக் கொள்ளலாம். இக்கால நெருக்கமே ஆழ்வாரையும், இரண்டாம் பொய்கையாரையும் 'ஒருவராக' யாப்பருங்கல விருத்தியுரைகாரரை மயங்கிக் கொள்ளச் செய்திருக்க வேண்டும்.

'பாலன் தனதுருவாய்'-(முதல் திரு. 69) என்பதும் 'எளிதின் இரண்டடியும்'-(முதல் திரு. 51) என்பதும் ஆகிய இரண்டை ஒழிந்த ஏனை ஏழு பாடல்களையும் செய்தவர் பொய்கையாழ்வார்தான் என நாட்டுதற்குப் போதிய அளவு உறுதியான சான்று ஒன்றுமே இல்லை என்பதென்னவோ உண்மை. குணசாகரரைப் பொறுத்த மட்டில் ஒன்பது பாடல்களும் ஒருவருடையனவே. ராகவையங்கார் குணசாகரரையே பின் பற்றுகிறார். தக்க சான்றுகள் கிடைக்கும் வரை இந்த மரபைப் பின்பற்றலாம் என்பது நமது கருத்து.

---

*பொய்கையாருடையதாகக் கூறப்படும் 'கோதை மார்பிற் கோதையானும்' என்ற 48-ஆம் புறப்பாட்டில் போதரும் 'கானலந் தொண்டி, அஃதெம் மூரே. அவனெம் இறைவன்' என்ற தொடர்கள் பொய்கையாரை சேர நாட்டுத் தொண்டியினராகக் காட்டுகின்றன. சங்க இறுதிக் காலத்தே வாழ்ந்த இவர் காலம் சுமார் 270-350 ஆகலாம்.

†'திரைத்த விரிக்கில் திரைப்பின் நாவாய்போல்'-என்ற பூதத்தார் அவையடக்கு இன்னிலையின் 5-ஆம் செய்யுளாக உண்மையும் இஃதொரு தொகை நூல் ஆதலைக் காட்டுகின்றது.

இதற்கு இன்னொரு சிறப்புடைக் காரணமும் உண்டு. பிற்காலத்திய ஆழ்வார்களில் அனேகமாக எல்லோரும் (திருவாசிரியம், திருவிருத்தம், பெரிய திருவந்தாதி ஆகிய நூல்களில் நம்மாழ்வாருங்கூட)வீர வைணவர்களாகவே தெரிகின்றனர். சங்க காலத்தும், அடுத்தும் இந்த நிலை இல்லை. காட்டாக, பரிபாடலில் பக்தியிற் சிறந்த புலவர்களையே காண்கிறோம். அதாவது பக்தியிற் சிறந்த புலவர்களும், புலமையிற் சிறந்த பக்தர்களும் என வைணவர் இருதிறத்தினர் என்பதும், இவர்களில் முதல் வகையினரே முந்திய காலத்தில் மிகுதியாக இருந்தவர் என்பதும் கருத்து. கி பி. 6 ஆம் நூற்றாண்டிலும், அதற்கு முற்பட்ட காலத்தும் முதல் வகையினரையே நாம் அதிகம் எதிர்பார்க்க வேண்டும். ஆனால், பூதத்தாழ்வார் ஒரு வீர வைணவரே. திருமழிசைப் பிரானை சைவத்திலிருந்து வைணவத்திற்கு மாற்றிய வகையில் பேயாரையும் சிறிதளவாவது தீவிரப்போக்கு உடையவராகவே நாம் கொள்ளவேண்டும். பொய்கையார் ஒருவரே சாத்வீக குணமும், சமரஸ நோக்கும் உடையவராகத் தென்படுகிறார். இவரை பக்தி மிக்க புலவராகக் கோடலே முறை; எனவே, 'பழுதே பலபகலும் போயின' என்று இவர் கூறுவதை வெறும் உபசார வழக்கு என்று நாம் தள்ளிவிட முடியாது உண்மையிலேயே ஆரம்ப காலத்தில் இவர் உலக வியவகாரங்களில் ஈடுபட்டு அரசர்களிடையே நல்ல செல்வாக்கு பெற்று நாடறிந்த பெரும்புலவராய் இருந்திருத்தல் கூடியதே. ஆகையாலேயே பேயாருக்கும், பூதத்தாருக்கும் இல்லாத பெரு மதிப்பு இவர் ஒருவருக்கு மட்டும் உரையாசிரியர்களால் அளிக்கப்படுகின்றது இந்நிலையில், முதல் திருவந்தாதி 11-லும், 96 லும், 94 லும் காணப்படும் வீர வைணவப் போக்கு கோவலூர் அற்புதத்திற்குப் பிறகு அழுத்தமான பக்தர் ஆனதன் பின் மாறிவிட்ட நிலையைப் பிரதிபலிப்பதாகவே நாம் கொள்ளவேண்டும்.

## *பூதத்தார், பேயார் பற்றி சில செய்திகள்*

இனி, பூதத்தார் அவையடக்காக 'அவையடக்கியலே' என்த் தொடங்கும் தொல், பொருள் செய்யுளில், 118-ஆம் சூத்திர உரையில்

"திரைத்த விரிக்கில் திரைப்பின் நாவாய்போல்
உரைத்த உரைபோகக் கேட்டும்-உரைத்த
பயன்தவா செய்வார் சிலரே; தம்நெஞ்சத்து
இயன்றவா செய்வார் பலர்"-என்ற செய்யுளைப்

பேராசிரியரும், நச்சினார்க்கினியரும் காட்டினர். இது பூதத்தாரின் இரண்டாம் திருவந்தாதியில் இல்லை. எனவே, பூதத்தார் செய்த வேறு நூல்களும் இருந்திருக்க வேண்டுதல் காண்கிறோம். அதாவது, பொய்கையார் அளவிற்கு இல்லா விட்டாலும் பூதத்தாரும் தம் இளம்பருவத்தே உலக வியவ காரங்களில் ஈடுபட்டிருந்தவரே ஆகலாம் என்பது பொருள். எனில், இவர் பழம் பெரும் புலவராகிய பொய்கையாரை அறிந்தவராதல் கூடுவதே. 'கறைப்பற் பெருமோட்டுக் காடு-கிழவோட்கு' என்ற செய்யுள் பேயாரும், பூதத்தாரும் கூட்டாகப் பாடியது என்று கேட்கப்படுவதும், கி.பி 570-இல் கோவலூரில் சந்திப்பதற்கு முன்பே இம்முதலிகள் ஒருவரை ஒருவர் அறிந்தவர் என்றே காட்டுகின்றன. இவர்கள் ஒருவரை ஒருவர் அறியாமல் நாடெங்கும் சுற்றித் திரிந்தவராகக் கேட்கப்படும் செய்தி இவர்கள் தனித் தனியாக யாத்திரை செய்ததை மட்டுமே குறிப்பிடுவதாகக் கொள்ளவேண்டும். இச் செய்தியில் இவர்கள் புலவராய் இருந்த கால நிலையையும் காணலாம். சங்க காலத்துத் தமிழ் கூறிய நல்லுலகமாம் சோலையில் கிளிகளைப் போல் செந்தமிழ்ப் புலவர் எல்லாரும் இப்படி யதேச்சையாகத் திரிந்தவர்களே.

மூவர் முதலிகளின் சாதியைப் பற்றி திட்டவட்டமாக ஒன்றும் தெரியாவிட்டாலும் பிறந்த நாட்டின் நிலையை நோக்கி ஒருவரை வன்னியராகவும், இன்னொருவரை முதலியாராகவும் எதிர்பார்க்கலாம்; மூன்றாமவர் பிராம் மணர் ஆகக் கூடும். பேய், பூதம் என்ற பெயர்களைப் பிராமணர் தரித்தல் மரபில்லையாதலால், பொய்கையாரை மட்டுமே பிராம்மணராகக் கருத இடமுண்டு. பொய்கை யாருக்குக் கொடுக்கப்படும் அதிகப்படியான மதிப்பும் சங்க

காலக் கபிலரின் திறத்துப்போல சாதி பற்றியதாகலாம். மூவருமே பிராம்மணர்களாய் இருக்கலாம் என்று ஒரு பரவலான நம்பிக்கையும் உண்டு.

பூதத்தார் செய்ததாக மேலே கூறப்பட்ட நூல் எதுவாகக் கூடும்? நன்னூல் எழுத்தியல் 37-ஆம் சூத்திர உரையில் மயிலை நாதர் மாபுராணத்ததாகக் காட்டிய 'செய்யுட்கள் ஓசை சிதையுங்கால்'-எனத் தொடங்கும் வெண்பாச் சூத்திரம் பூத புராணத்தைச் சேர்ந்ததாய்ச் சில விடங்களில் காணப்படுவதாக மயிலை சீனி வேங்கிடசாமி[44] குறித்துள்ளார். மாபுராணச் செய்யுளை பூதபுராணம் உடையாரோ அல்லது பூதபுராணச் செய்யுளை மாபுராணம் உடையாரோ தமது நூலுள் கோத்ததால் இந்த நிலை ஏற்பட்டிருக்கக் கூடும். ஆயினும், இந்த ஒரு செய்யுளைத் தவிர பூதபுராணத்தினதாக வேறெதுவும் கேட்கப்படாததால், மாபுராணமே பூதபுராணமும் ஆகக்கூடும். அதாவது, பூதத்தாரால் செய்யப்பட்டிருக்கக்கூடிய காரணத்தால், மாபுராணம், பூதபுராணம் எனவும் பட்டது என்பது கருத்து. அல்லது 'மாபூத புராணம்'-என்ற நூலின் பெயரே சுருக்கம் கருதி சில சமயங்களில் மாபுராணம் எனவும், இன்னும் சில சமயங்களில் பூதபுராணம் எனவும்பட்ட தாகலாம். பன்னிரு பாட்டியல் ஆசிரியர்களுள் மாபூதனார் என ஒருவரும் காணப்படல் இக் கருத்துக்குத்துணை ஆகின்றது. மறைந்த இந்நூலின் இப்போது கிடைக்கும் சூத்திரங்களில் 'நீதியால்' 'ஞாபகமா', 'காரணமா' என்ற சொற்களும் 'அடங்குமேனும்'-என்ற சொல்லிற் போந்த 'ஏனும்' என்ற பிற்கால வழக்கும், 'கள்' விகுதியும் இந்நூலை தொல்காப்பியத்திற்கும் முற்பட்டதாக பேராசிரியர் கூறியதைத் தவறானதாகக் காட்டுகின்றன. 'ஏனும்', 'கள்' என்ற வழக்குகள் முதலாழ்வார்களின் நூற்களில் முன்னம் காட்டப்பட்டதாலும், இந்நூலின் நூற்பாக்கள் வெண்பாவாய் இருப்பதனாலும், மாபுராணம் செய்த பூதனாரை பூதத்தாழ்வாராகக் கொள்ளத்

---

44. மறைந்துபோன தமிழ் நூல்கள் பக்.101-5.

தோற்றுகின்றது. 'திரைத்த விரிக்கின்'-என்று மேலே காட்டப்பட்ட வெண்பா இந்நூலின் அவையடக்கே ஆகக் கூடும். ஆயினும், இது மேலும் ஆராய்ச்சிக்கு உரியதே.

*முதலாழ்வார்களின் இடம்*

வைணவ வரலாற்றில் பொய்கை, பேய், பூதங்களின் இடம் யாது? இதனை அறிய, தமிழகத்தில் இவர்களுக்கு முற்பட்ட காலத்தே வைணவத்தின் நிலை என்ன-என்பதைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும். திருமால்/மாயோன் வணக்கம் அடிப்பட்டதொன்றேயானாலும், சங்க காலத்தின் முற்பகுதியில் வைணவம் என்றொரு தனிச் சமயம் இருந்தமைக்குச் சான்றில்லை இக்காலத்தின் பிற்பகுதியில் தான் இப்படிப்பட்ட இயக்கம் தோன்றியிருக்க வேண்டும் என்பது 'நாராயணா என்னாத நாவென்ன நாவே' —என்ற சிலம்படியாலும் (காதை[17]) சமயக்கணக்கர் தந்திறங் கேட்ட காதையில் 'கடல்வணன் புராணம்' (விஷ்ணு புராணம்) பற்றி மணிமேகலை மிகச் சுருக்கமாக வாகிலும் குறிப்பிட்டுச் செல்வதாலும் அறிய முடிகின்றது. எனவே, குப்தர்களின் பொற்காலத்தே வடக்கே வலுப் பெற்ற வைணவப் புயல் தெற்கு நோக்கி வீசிய போது, தமிழகத்தில் வைணவம் தனிச் சமயமாய் வீறுடன் வளரத் தொடங்கிய காலமே ஆழ்வார்கள் காலம் என்னலாம். இவ் இயக்கத்தை யுத்தமாக்க வேண்டியதன் அவசியத்தை தமது 'உய்த்துணர் வென்னும் (உள்) ஒளி விளக்கு' காட்டக் கண்டு (மூன். திரு. செ. 94) இதற்காக என்று (போர்க்) குரல் எழுப்பியதே பேயாழ்வார் செய்த பெருந் தொண்டு ஆகும். கத்தியும், ரத்தமும் இல்லாத இவ் யுத்தத்திற்காகச் சங்கநாதம் செய்த பேயாழ்வார் (திருமாலின் பாஞ்ச ஜன்யம் என்ற) சங்க அமிசரே ஆகக் கடவர்; பேயார் என்ற பெயருக்கும் இதுவே உகந்தது. ஆகவே, இவரை நந்தகம் என்ற வாளின் அமிசராகக் குருபரம்பரைகள் கற்பித்தது தவறு.

இனி, பொய்கையாரின் சாதனை என்ன? எதனால் அவர் ஆழ்வார் ஆகக் கருதப்பட்டார்? அவர் வாழ்க்கையில் ஏதோ ஒரு அதிசயம் நிச்சயமாக நிகழ்ந்திருக்க வேண்டும். மிக அழுத்தமான பக்தராய் இருந்த இவர் நியம, நிஷ்டைகளிற் சிறந்து (பிராம்மணர் என்ற வகையில்?) புறந்தூய்மையில் அபாரநம்பிக்கை கொண்டு பொழுது போக்கி வந்தனர். இப்பேர்க்கொத்தவரை கோவலூரில் ஏனை இரு ஆழ்வார்களைச் சந்திக்க வைத்து

"எல்லோரும் ஓர்குலம்; எல்லோரும் ஓரினம்
எல்லோரும் இறைவனின் மக்கள்" - என்ற

சமயத்துறை ஜனநாயக சோஷலிசத் தத்துவத்தை உணர வைத்து உய்யக் கொண்ட திருவருள் திறனே இவ் அதிசய நிகழ்ச்சி ஆகல் வேண்டும் அல்லவா? ஆனது பற்றியே, இடைகழியின் மெய்ப்பொருள் ராமானுஜம் அவர்கள் கண்டு உரைத்ததே ஆயினும், அந்தச் சொல்லில் ஆறாயிரப்படி குருபரம்பரை கோவலூர் அற்புதத்திற்கு அகச் சான்று கண்டது மட்டுந்தான் ஒதுக்கப்படுதற்கு உரியதேயன்றி, அந்நிகழ்ச்சியே அன்று என்றும், குருபரம்பரைகளின் இச் சிறு பிழைக்காக இச் சந்திப்பையே தள்ளிவிட முடியாது என்றும் அடியோம் மறுத்துவிட்டோம். அவ்வாறு செய்தல் போதிய அளவிற்கு வலிய ஆதாரம் இன்றியே அஸ்திவாரத்தை அழித்து விடும் விஷமத்தனமாக இருப்பதால், ஆசாரச் சடங்குகள் அதிகம் கொண்ட பாகவதத்திலும், வர்ணாஸ்ரம தர்மங்களுக்கு அப்பாற்பட்ட சமத்வ, சகோதரத்வங்களை அடிப்படையாகக் கொண்ட பக்தி, பிரபத்திப் புரட்சிப் பஞ்சராத்திரமே உண்மையான வைணவம் என்பதை தமிழகத்தின் வரலாற்றுக் காலத்தில் காட்டிய முதல் நிகழ்ச்சி கோவலூர் சந்திப்பே.

பொய்கையாரே முதன் முதல் அந்தாதி பாடியவர் என்பது உண்மையாகில், வைணவப் புரட்சிக்கு முதற்குரல் எழுப்பிய இவரை சங்காம்சராக குருபரம்பரைகள் கொண்

டது பொருத்தமே. மாறாக, இந்நூலிற் கூறப்பட்டபடி இக் குரலை எழுப்பியது பேயாரே ஆகில், பொய்கையாரை (திருமால் கையில் ஏந்திய) தாமரை அமிசமாகக் கோடலே பொய்கை (சுனை/குளம்) என்ற அவர்தம் பெயருக்கும், சைவ-வைணவ சமரசத்தில் நாட்டம் கொண்டிருந்த அவருடைய சாத்வீக குணத்திற்கும் உகந்ததாய் இருக்கும். குருபரம்பரைகள் முன்பே இவரை தாமரை மலரிற் பிறந்த வராய்க் கூறிவிட்டிருக்கின்றன.

பூதத்தாரோ வீர வைணவத்தின் வித்து ஆதலை முன்பே கண்டுள்ளோம். எனவே, இவரை கவ்மோதகி என்ற தண்டின் (கதையின்) அமிசராக குருபரம்பரைகள் வருணித்தது பெரிதும் பொருத்தமே.

(வைணத்து) முதல்வர் மூவர் தமிழின் கால முதன் மையால் வைணவமே சங்கத்தமிழை தெய்வத் தமிழ் ஆக்கிய சிறப்புடையது என்பதும் தப்பாமல் கவனிக்கத் தக்கது!

## ஆசிரியரின் தனியன்

காலையம் போதினில் கதிரொரு மூன்றென
மூவகை அந்தாதி மொழிவிளக்(கு) ஏற்றியே
ஆதியம் பகவர் தொழுதஅம் முதலோர்
தாளதா மரைநம் தலைமே லனவே.

# 2. ஆழிப்படை புறப்பட்டது

*திருமழிசைப் பிரான் - (வைணவ)பக்திசாரர்*

திருவாளன் எனப் பெயரிய பிரம்பறுக்கும் தொழிலாளியால் கண்டெடுக்கப்பட்டு வளர்ந்து ஆளாகியவர் திருமழிசைப் பிரான். ஏழாண்டு நிறைந்து கல்வி கற்கும் பருவம் வந்துற்ற போது, சமயத்துறையில் நாட்டம் சென்றதால் எடுத்த எடுப்பிலேயே ஆதி சங்கரரைப் போல தத்துவக் கல்வியில் ஈடுபட்டு விட்டார். ஆயினும், இவர் எந்த சமயத்திலும் நிலையாகத் தங்கியவர் அல்லர். நாடெங்கும் சுற்றித் திரிந்தார்; பொழுதிற்கும் வாதப்போரிலேயே ஈடுபட்டிருந்தார். இவர் புகழ் எங்கணும் பரவிற்று. சொல்லேருழவர் எல்லாம் இவரைக் கண்டு அஞ்சினார். சாக்கியம் கற்றார்; சமணம் கற்றார்; கடைசியில், 'சிவவாக்கியர்' எனப் பெயர் தரித்துச் சைவரும் ஆனார். அந்த நிலையில் பல சீடருடன் வந்து திரு மயிலையில் ஒரு சமயம் முகாம் இட்டிருந்தார். இவரைப் பற்றி முன்னமே கேள்விப் பட்டிருந்த பேயாழ்வாருக்கு இவரை எப்படியாவது வைணவத்திற்கு இழுக்க வேண்டும் என்ற விருப்பம் மேலிட்டிருந்தது. அதற்கு இப்பொழுது ஒரு நல்ல சமயம் வாய்த்து விட்டது. அதில் இன்னொரு விசேடம் என்னவென்றால், நாளும் அந்த சிவவாக்கியச் சித்தர் இவருடைய பூந்தோட்டப் பக்கம் போய்க் கொண்டு இருந்ததுதான். ஆகவே, சித்தர் அந்தப் பக்கம் போகின்ற சமயம் பார்த்து பல ஓட்டைகள் (துவாரங்கள்) கொண்டதோர் குடத்தை துண்டுக் கயிறுகளை இணைத்துச் செய்த ஒரு கயிற்றாற் கட்டி முகந்த நீரை செடிகளைத் தலைகீழாக நட்டு

வைத்து அவற்றிற்கு ஊற்றி வந்தார் ஆழ்வார். இதை ஒரு நாள் கண்ணுற்ற சித்தர் நின்று கைகொட்டிச் சிரித்தார். இதற்காகக் காத்திருந்த ஆழ்வார் ஏளனத்திற்குக் காரணம் வினவினார். சித்தரும் ஆழ்வாரின் பைத்தியக்காரத் தனத்தை எடுத்துக் கூறினார். ஆழ்வார் சாவதானமாக, 'முடியிட்ட கயிறு சித்தரின் பல சமயத் தத்துவ ஞானத்தை ஒக்குமென்றும், சல்லிக் குடம் எத்தத்துவத்தையும் பற்றிக் கொள்ளும வலியற்ற அவர் மனத்தைப் போன்றது என்றும், செடிகளைத் தலைகீழாக நட்டு வைத்தது இன்னமும் தெளிவுறாத சித்தரின் மயக்க நிலையைக் காட்டுதற்கே' என்றும் கூறி அமைந்தார் எவ்வாதத்திற்கும் எதிர்வாதம் செய்யும் இயல்பினரான சித்தர் இப்போது மட்டும் ஏனோ வாய் அடைத்து நின்று விட்டார்! தமது வாணாளின் பெரும் பகுதி (700 ஆண்டுகள் என்று நூல்கள் கூறும்; நாம் 70 ஆண்டுகளாகக் கொள்ளலாம்) வாளா கழிந்து விட்டது அவர் நினைவிற் கெட்டிற்று. அக்கணமே பேயார் திருவடிகளில் வீழ்ந்து, தமக்கு உறுதிப்பொருளை உணர்த்துமாறு வேண்டி நின்றார். ஆழ்வாரும் அவரை முகமலர்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு 'பக்திசாரர்' எனப் பெயரிட்டு வைணவ சமயக் கோட்பாடுகளை அறிவுறுத்தி தல யாத்திரைக்குப் போய் விட்டனர். பக்திசாரர் மட்டும் அங்கேயே சில காலம் யோகத்தில் அமர்ந்திருந்தார். இக் காலத்தே சிவ பெருமானோடும் சுக்திஹாசன், கொங்கணர் எனும் இரு சித்தர்களோடும் மோதல் ஏற்பட்டதாம், பிறகு கோவலூரிலே பேயாரையும், பூதத்தாரையும் சந்தித்து விட்டு மயிலைக்கு வந்த பொய்கையார் மழிசைப் பிரானைக்கண்டு ஆசி கூறிப்போயினர். அதற்குப் பிறகு மூவரைப் பற்றிய பேச்சே இல்லை அனேகமாக அவர்கள் காலமெய்தி விட்டிருந்ததே அதற்குக் காரணமாகலாம். திருமழிசைப் பிரானின் வரலாறு மட்டும் தொடர்கின்றது. மயிலையில் இருந்து மழிசைக்கு வந்து அங்கே சிலகாலம் கழித்த பிறகு, ஆழ்வார் தமது முதற் சீடர் ஆகிய கணிகண்ணரோடும் பொய்கையார் பிறந்தருளிய கச்சித் திருவெஃ

காவிற் சென்று சில ஆண்டுகள் தங்கியிருந்தனர். அப்போது பல்லவ மன்னனோடு ஏற்பட்ட ஒரு பூசலால் மனம் வெறுத்துப் போய் தென்திசை நோக்கிப் புறப்பட்டனர். வழியில் பெரும்புலியூரில்(தில்லையில்)சிலரோடு ஏற்பட்ட சச்சரவுகளில் வாகைசூடி கடைசியாகக் குடந்தையை அடைந்து அங்கேயே நிரந்தரமாகத் தங்கிவிட்டனராம். குடந்தை வாழ்க்கை 2300 ஆண்டுகள் என்று நூல்கள் கூறும். நாம் 23 ஆண்டுகளாகக் கொள்ளலாம். குடந்தையில் இருந்தபோது செய்யப் பட்டனவே அவருடைய நான்முகன் திருவந்தாதியும், திருச் சந்த விருத்தமும் என்பது பொதுவான நம்பிக்கை. இவ் வரலாற்றில் இங்கு நமக்கு வேண்டியதெல்லாம் முதலாழ்வார்களோடு ஏறத்தாழ ஒத்த பிராயத்தினரான இவர் இம்மூவர்க்குப் பிறகும் நெடுங்காலம் வாழ்ந்திருந்தார் என்பதுதான். எனவே, முதலாழ்வார்களுக்கு சுமார் 80 பிராயம் கொண்டால், இவருக்கு சுமார் 150 ஆண்டுகள் வரை நாம் கொள்ளத் தகும்.

பேயாழ்வாரே திருமழிசைப் பிரானை வைணவத்திற்கு இழுத்தவர் என மேலே கூறப்பட்டபடி காணப்படுவது முக்கியமாக பிரபந்நாம்ருதத்திலேயே.* பெரிய திருமுடி அடைவில்* திருமழிசையைப் பேயாரின் சீடராகவும், பேயாழ்வாரை திருமழிசையின் புருஷகாரராகவும் கூறப்பட்டிருப்பதிலும் இக்குறிப்பையே காண்கிறோம். ஆயினும், ஆறாயிரப்படி,* மூவாயிரப்படி,* வடிவழகிய நம்பிதாசரின் குருபரம்பரை*மற்றும் திவ்ய சூரிசரிதம் ஆகிய நூல்களில் மழிசைப்பிரான் மற்றைச் சமயங்களில் எல்லாம் அலைந்து திரிந்த பிறகு தாமாகவே தேர்ந்து வைணவம் புகுந்தார்

*பெரிய திருமுடி அடைவு 16-ஆம் நூற்றாண்டு; பிரபந்நாம்ருதாம் 17-ஆம் நூற்றாண்டு; வடிவழகிய நம்பி 16-ஆம் நூற்றாண்டு, முற்பகுதி; மூவாயிரப்படி 14-ஆம் நூற்றாண்டு; ஆறாயிரப்படி 13-ஆம் நூற்றாண்டு; திவ்யசூரி 15-ஆம் நூற்றாண்டு.

என்றே கூறப்பட்டுள்ளது. முன்னர்க்கூறிய இருநூல்களின் மூலம் இன்னதென்று தெரியாவிட்டாலும், மழிசைப்பிரான் திருவல்லிக்கேணியில் இருந்தபோதே வைணவம் புக்கதாக நூற்கள் எல்லாமே ஒத்து ஓதுவதால், அவர் காலத்தினராய் அல்லிக்கேணியிலேயே வாழ்ந்த பேயாழ்வாரின் திருவடிச் சம்பந்தம் அவருக்கு இருந்திருத்தல் கூடியதே. இஃது எவ்வாறாயினும், பிரபந்நாமிர்த வரலாற்றின் சிறப்பு நோக்கியே, இவ்வரலாறு 'பிரபந்த சார'த்தில் (1938) பி ஸ்ரீ. ஆசார்யா அவர்களாலும், பின்னர் 'ஆழ்வார்கள் வரலாறு' என்ற காவியச் செய்யுளில் (1970) அறிஞர் T.S. ராஜகோபாலன் அவர்களாலும் போற்றித் தழுவிக் கொள்ளப்பட்டுள்ளது.

இன்னொரு விஷயத்திலும் நூல்களிடையே வேற்றுமை காணப்படுகிறது. திருவல்லிக்கேணியில் யோகம் செய்திருந்த திருமழிசைப் பிரானை மூவர் முதலிகளும் கோவலூரில் சந்தித்ததன் பின் சென்று கண்டதாக ஆறாயிரப்படி, மூவாயிரப்படி, மற்றும் திவ்ய சூரி ஆகிய நூல்கள் அனைத்தும் ஒரு முகமாய்க் கூறுகின்றன: இவற்றிற்கெல்லாம் பிற்பட்ட பிரபந்நாம்ருதம் மட்டும் பொய்கையார் மாத்திரமே சென்று கண்டதாகக் கூறுகின்றது. பேயார் அந்தாதியின் 40-ஆம் செய்யுளிலும், பொய்கையார் அந்தாதியின் 99 ஆம் செய்யுளிலும் போதரும்,

> ''உளன் கண்டாய், நன்னெஞ்சே! உத்தமன் என்றும்
> உளன்கண்டாய், உள்ளுவர் உளத்து- உளன் கண்டாய்'' -என்ற

அடிகளை எழுத்துப் பிசகாமல் தமது நான்முகன் திருவந்தாதியில் 86-ஆம் செய்யுளில் எடுத்தாண்டதோடு இராமல், பேயாரின் அல்லிக்கேணியிலும், பொய்கையாரின் கச்சித் திருவெஃகாவிலும் சென்று மழிசைப்பிரான் தவம் செய்தவராகக் கூறப்படுகிறார். மாறாக, பூதத்தார் அந்தாதியோடு ஒற்றுமை உடைய பகுதி எதுவும் இவர் அந்தாதியில் காணக்

கூட வில்லை. வைணவர் ஆன பிறகு கடன்மல்லைக்குச் சென்றதாக வரலாறும் இல்லை; ஏன், கடன்மல்லை கூட இவரால் பாடப்படவில்லை! இங்ஙனம் பூதத்தாரோடு இவருக்கு ஏதும் தொடர்பு இருந்ததாக அகப்புறச் சான்று களால் போதராமையால், பொய்கையார் மட்டுமே கோவ லூரில் இருந்து போந்து இவரைத் திருவல்லிக்கேணியிற் கண்டதாக இந்நூலிற் கொள்ளப்பட்டது. புரட்சிப் போக் குடைய வடிவழகிய நம்பிதாசர் மட்டும், மழிசைப்பிரான் முதலாழ்வார்களில் ஒருவராக என்றுமே கருதப்படாமையை மனத்துட்கொண்டு, முதலாழ்வார்களுக்கும், இவருக்கும் எந்தவிதத் தொடர்பும் காட்டவே யில்லை!

*குணபரன் காலத்தினர்*

இனி, திருமழிசைப் பிரானின் காலத்தைக் கவனிப் போம். இவர் காலம் பற்றிய புறச் சான்றுகள் மூன்று. இவற்றுள் எல்லாம் முதலிடம் பெறுவது-இவர் முதலாழ்வார் களோடு ஒத்த பிராயத்தினர் என்பது. இவர்கள் நால்வருமே பிறந்தது ஒரு சித்தார்த்தியில் என மூவாயிரப்படி குருபரம் பரை கூறினாலும், இது உண்மை ஆதற்கில்லை என்பது மூவர் முதலிகள் பற்றிய முன் அதிகாரத்திற் காட்டப்பட்டது; பொய்கையார் ஏனை மூவரினும் மூத்தவர் ஆகக் கூடுதலும் கண்டுள்ளோம். இந்த நிலையில், பெரிய திருமுடி அடைவில் திருமழிசையின் பிறப்பாண்டு-சித்தார்த்திக்கு ஒன்பது இடங்கள் பிற்பட்ட-'விபவ' ஆகக் கூறப்பட்டு உண்மை இரண்டாவது முக்கிய குறிப்பு ஆகின்றது. மூவா யிரப்படி குருபரம்பரையின் கருத்தை நன்கு அறிந்திருக்கக் கூடிய கோயில் கந்தாடை நாயன்-மணவாள மாமுனிகளின் சீடரான கோயில் கந்தாடை அண்ணனின் குமாரர்-தமது பெரிய திருமுடி அடைவில் மாறுபடக் கூறியதற்கு ஏதோ சிறந்த சான்று இருக்கக்கூடும். எனவே, சித்தார்த்தியை மட்டும் பொய்கையாருக்கும், 'விபவ' ஆண்டை ஏனை மூவருக்கும் ஆக நாம் கொள்ளலாம். பொய்கையார் பிறந்த

சித்தார்த்தி கி.பி. 479 ஆகில், ஏனையோர் பிறந்த விபவ கி.பி. 488-89 ஆகல் வேண்டும். மூன்றாவதாக, மூவர் முதலிகளுக்குப் பிறகும், திருமழிசைப் பிரான் வாழ்ந்தவர் என்றும் குருபரம்பரைகளின் போக்கிலிருந்து மேலே முடிந்தோம். இதன்படி, திருமழிசையின் காலத்தை நாம் உத்தேசமாக கி.பி. 489-640 ஆகக் கொள்ளலாம்.

இனி, நாம் திருமழிசையின் காலம் பற்றிய அகச் சான்று களை நோக்கத்தகும். திருமாலுக்கு ஆயிரம் திருநாமங்கள் உண்டு. இவற்றுள் அடங்காத 'குணபரன்' என்பதோர்ப் பெயரை திருமழிசைப் பிரான் நான்முகன் திருவந்தாதியுள்

காப்பு மறந்தறியேன்; கண்ணனே என்றிருப்பன்;
ஆப்பங் கொழியவும் பல்லுயிர்க்கும்-ஆக்கை
கொடுத்தளித்த கோனே!குணப்பரனே!!உன்னை
விடத்துணியார் மெய்தெளிந்தார் தாம்-என்ற

பாடலுள் (எண் 93) வழங்கியுள்ளனர். இப்பெயர் முதலாம் மகேந்திர வர்மனுடையதாதல் நம் சிந்தனையைக் கிளர் வதாய் உள்ளது வேறு ஆழ்வார்கள் எவராலும் கூட இஃது எடுத்தாளப் பெறாமை இது இப்பாடல் இயற்றப்பட்ட நாளில் மட்டுமே அதிகப் பொருண்மை பெற்றிருந்ததை திட்டவட்ட மாய்ச் சுட்டுவதும், இன்னும் 'கோனே' என்ற சொல்லோடு கலந்து வழங்கப்பட்டிருப்பதும், இது மன்னன் மகேந்திர வர்மன் காலத்திய பாடல்தான் என்பதை அடித்துக் கூறா நிற்கும். மகேந்திரன்-I (கி பி 591-630) பரமபாகவதனான சிம்மவிஷ்ணு-I (558-591)-இன் மகன் என்ற வகையில் ஆரம்ப காலத்திலாகிலும் வைணவனாய் இருந்திருத்தல் கூடியதே. திருச்சிராப்பள்ளிக் குன்றின் மேல் உள்ள குகைக் கோயில் கல்வெட்டில்[1] சமண சமயத்திலிருந்து சைவத்திற்கு இவன் மாறியதாகக் கூறப்படும் நிகழ்ச்சிகள் எல்லாம் ஆட்சியின் பிற்பகுதியில் நிகழ்ந்ததாகக் கொள்ளலாம். காஞ்சிக்கருகே மகேந்திரவாடியில் இவன் அமைத்த

1) S.I.I. Vol III, No. 33834 (Trichy Rock Temple)

விஷ்ணுக் கிருகமும், மாமண்டூரிற் காணும் இன்னொரு குகைக் கோயிலும் இவன் ஒரு சமயம் வைணவனாய் இருந்ததை தெள்ளத் தெளியக் காட்டுகின்றன. எனவே, அப்பெயர் வைணவனாகிய மகேந்திரனைப் பெருமை செய்யும் நிமித்தமாகவோ அல்லது பல சமயங்களிலும் அலைந்து திரிந்து கடைசியில் வைணவம் புக்க தனக்கு நேர்மாறாக, வைணவத்தில் தொடங்கி சமணத்தில் சிலநாள் (600-610 இல்) இருந்து, பின் (கி.பி. 610இல்) சைவம் சார்ந்த மகேந்திரனுக்கு 'குணபரன்' என்ற பெயர் அடுக்காது; அது அனைத்துநற்குணங்களுக்கும் உறைவிடமான திருமாலுக்கே பொருந்துமென எண்ணி அவ்வரசனை இகழ்தல் நிமித்தமாகவோதான் மழிசைப்பிரானால் எடுத்தாளப் பெற்றிருக்க வேண்டுமென்பது நடுநிலை வழாஅ அறிஞரின் தேர்ந்த கருத்து 2,3 'குணபரன்'- என்பது மகேந்திரனை மனத்திற் கொண்டதே என சைவர்கள் ஒப்புக்கொள்ளமறுப்பது பூதத்தார் திருவந்தாதிக்குப் பிற்பட்டதாகவே நான்முகன் திருவந்தாதி கூறப்பட்டுவரும் மரபுப்படி 'மாமல்லை' என்ற பெயரை மாமல்லபுரம் என்பதன் குறுக்கமாகக் கூறக் கூடாமல் போய்விடுமே என்ற அச்சத்தாலேயே. இந்த வெள்ளையான மதவெறியோடு நமக்கு வேலையில்லை. தம் வாழ்க்கையின் கடைசிப பகுதியில், குடந்தையில் இருந்தபோதே இவர் தமது இரண்டு பிரபந்தங்களையும் அருளியதாகக் கூறப்படுவதால், கி.பி. 630-ஐ திருமழிசைப்பிரான் காலத்தின் கீழ் எல்லையாகக் கொண்டு, நாம் மேற்செல்வோம். நெடுங்காலம் வாழ்ந்தவராகக் கூறப்படும் இவர் ஆயுளை சுமார் 140 ஆண்டுகளாகவும் கொள்ளத் தகும். இங்ஙனமே நீண்ட காலம் வாழ்ந்து புகழ் பெற்ற ராமானுஜரின காலமும் கி.பி. 1025-1155-க் கிடைப்பட்ட 130 ஆண்டுகள்[4] ஆதல் ஈண்டு எண்ணத்தக்கது. இவ்வகையில், திருமழிசைப் பிரானின் காலம் சுமார் கி பி 489-630 ஆகின்றது.

2) Tamil Studies P.305

3) பல்லவ மகேந்திரவர்மன், பக் 73 & 74

4) S.I.T.I Vol III, Part-II P.

வைணவர்களுள் கிருஷ்ணசாமி அய்யங்கார் மட்டும் 'குணபரன்' என்று நான்முகன் திருவந்தாதிச் செய்யுளிற் போதரும் சொல் மகேந்திர வர்மனைக் குறிப்பதன்று என்பர் (பக்.54). ஆனால், அதற்குக் காரணம் முதலாழ் வார்களை சங்க காலத்தினராகக் கருதும் அவர், அவ் ஆழ்வார்களின் சீடர் ஆகிய திருமழிசைப் பிரானை கி.பி. 4-ஆம் நூற்றாண்டினர் ஆகக் கருதுவதுதான். ஆராய்ச்சி யாளர்களுள் ராகவையங்காரும், இவரும் இன்னொரு துருவம்!

### திருமழிசைப் பிரானும், குடமூக்கிற்பகவரும்

இனி திருமழிசைப் பிரான் வரலாற்றுக்குத் திரும்புவோம். இவர் குடமூக்கு ஆகிய கும்பகோணத்தில் தமது இறுதிக் காலத்தைக் கழித்தார் எனவும், அப்போதே நான்முகன் திருவந்தாதியையும், திருச்சந்த விருத்தத்தையும் செய்தார் எனவும் குருபரம்பரைகள் கூறும் யாப்பருங்கலம் 93-ஆம் சூத்திர உரையுள் ஆசிடக்கவி பாடுதற்கு உரிய இருடி களில் ஒருவராகக் கூறப்படும் குடமூக்கிற் பகவரை இவர் இயற்றியதாக இவ் உரையே 'வாசுதேவ சிந்தம்' என் றொரு நூலைக் குறிப்பதுக் கொண்டு திருமழிசைப் பிரானாக ஆசிரியர் ராகவையங்கார் கருதினார். சிந்தம் என்பது சந்தம் எனத் திரிதல் வழக்கே* ஆகையாலும், வாசுதேவன் என்பது வசுதேவர் மகன் ஆகிய கண்ணபிரானுக்கே உரிய சிறப்புப் பெயர்களுள் ஒன்று ஆகையாலும், எந்தச் சைவரும் வாசுதேவனைப் பாடும் அளவிற்குப் பரந்த மனப்பான்மையை அந்த நாளில் கொண்டிருத்தல் கடினமே யாகையாலும் இவர் இவ்வாறு கருதினார். 'அறிவுடை நம்பி சிந்தம்' என்றொரு நூலை இவ் உரையே குறிப்பிடு வதிலிருந்து சிந்தம் எனப் பெயரிய நூல்களும் இருந்தன

---

* பைம்பொழில் விளாகத்து (தேவா: பக். 734. பாட்டு6) நொண்டிக் கொண்டேயும் கிலாய்ப்பென் (ஷ743, பாட்டு8), சுவாமி நாதையர் பதிப்பு

வாமத் தெரிதலால், வாசுதேவ சிந்தமும் அப்படிப்பட்டதொரு நூலேயன்றி திருமழிசைப் பிரானின் சந்தம் ஆதற்கில்லை என்றும் வாதிக்கலாம். அவ் உரையே அறிவுடை நம்பி சிந்தம் வஞ்சியடிகளால் இயன்றதென்றும் கூறுகின்றது. வாதேவ சிந்தமும் வஞ்சி அடிகளான் இயன்றதாயின், உரைகாரர் அறிவுடை நம்பி சிந்தத்துடன் வாசுதேவ சிந்தத்தையும் குறிப்பிட்டிருப்பார் என்றும், அவர் அங்ஙனம் செய்யாமையால், வாசுதேவ சந்தம் என்று இருந்ததே பிற்காலத்தாரால் (அறிவுடை நம்பி சிந்தம் என்ற பெயரைப் பார்த்து) திருத்திக் கொள்ளப்பட்டிருக்க வேண்டும் என்றும் அய்யங்கார் அவர்கள் மேலை வாதத்தை மறுத்தனர். (பக். 68 & 69) வாசுதேவ சிந்தத்துள் எழுத்துக்கள் மிக்கும், குறைந்தும் வந்த ஆசிடக்கவிகள் உண்டு என உரைகாரர் கூறியவாரே திருச்சந்த விருத்தத்துள்ளும் அனேகம் செய்யுட்கள் காணப்படுவதையும் அய்யங்கார் இதற்கு இன்னொரு சான்றாகக் காட்டினார்*.

கும்பகோணத்து நாகேச்சுரர் கோயிலில் பகவர் கோயில் ஒன்று காணப்படுவதாலும், இவ்வூர்த் திருமால் கோயில்களில் இப்படிப்பட்ட கோயில் எதுவும் இன்மையாலும் அறிஞர் வரதராஜையர் யாப்பருங்கல விருத்தியுரை குறிப்பிடும் குடமூக்கிற் பகவரை ஒரு சைவராகவே கருதினர் (பக் 265). பிற்காலத்திய விஷயங்கள் பலவற்றைப் போட்டுக் குழப்பி இக் கருத்தை ஆதரித்தார், அறிஞர் மு. கோவிந்தசாமி அவர்கள்.[5] சிந்தம் என்றே பெயர்

---

*ஆதி யான வான வாணர் அண்ட கால நீயுரைத்(தி)
(திருச் சந்த வி.8-3)

நாச மாக நாளு லப்ப நன்மைசேர் பனங்கனிக்(கு)
(ஷ.80-2)

மாறு செய்த வாள ரக்கன் நாளு லப்ப வன்றிலங்(கை)
(ஷ 116-1)

5. A Survey of the Sources of the History of Tamil Literature, p 23

படைத்த நூல்கள் இருந்தமை அறியப்படுதலால், வாசுதேவ சிந்தத்தை திருச்சந்த விருத்தமாக வலிந்து கொள்ளத் தேவையில்லை என்றும் இவர் மேலும் வாதிக்கிறார். இதனை எதிர்பார்த்த முற்கூட்டியே அய்யங்கார் அவர்கள் மேற்காட்டியவாறு மறுத்திருந்தும், அதற்குத் தகுந்த சமா தானம் கூறாமல் கிளிப்பிள்ளை போல் திருப்பத் திருப்பி ஒன்றையே பேசிக் கொண்டிருப்பதற்கு உள் நோக்கம் வேறு இருக்கக்கூடும். நாம் கேட்க விரும்புவதெல்லாம் குடமூக் கிற் பகவர் சைவராகில், ஏன் வாசுதேவ சிந்தம் பாடினார் என்பதுதான். கும்பகோணத்து நாகேச்சுரர் கோயிலில் காணப்படும் பகவர் யார் என்பது பற்றி நமக்குக் கவலை இல்லை. திருமழிசைப் பிரானின் சீடராகிய கணிகண்ணனின் பாடலை எடுத்துக் காட்டும் யாப்பருங்கல உரை வாசுதேவ சிந்தம் செய் தவராகக் கூறும் 'குடமூக்கிற் பகவர்' திருமழிசைப் பிரானையன்றி வேறெவரையும் குறிக்க முடியாது என்பது வெளிப்படை. செய்யப்படுகின்ற குழப்பமெல்லாம் ஆராய்ச்சிக்காரர்களிற் பலரும் சைவராய் இருப்பதால் நேர் வனவே. அவர்கள் மனத்தில் இந்தத் திரிபுணர்ச்சிகள் அவர்களையும் அறியாமலே உண்டாகி விடுகின்றன. தான் ஆடாவிட்டாலும் (உறவுடையார் திறத்து) தன் தசை ஆடுதல் உலகியற்கை தானே! யாப்பருங்கல உரையாசிரியர் மட்டுமே இதற்கு விதி விலக்கு. சைவச் சார்புடையவராய் இருந்தும் இவர் காலத்தால் முற்பட்டவர்களின் பாடல்களைத் தேடிப் பிடித்துக் காட்டியுள்ளார். இல்லாவிட்டால் வைணவம் இருட்டடிப்பு செய்யப்பட்டு, தன் அஸ்திவாரத்தையே கூட இழந்து விட்டிருக்கும் என்பது திண்ணம் 'குணபரன்'— என்ற தனிச் சிறப்புடைய சொல் மகேந்திரனை உட் கொண்டதன்று; ஆனால், 'மாமல்லை' என்ற பொது வகைச் சொல் மட்டும் 'மாமல்லபுரம்' என்பதன் குறுக் கந்தான் என வெட்கத்தை விட்டுத் தம் திறன் அனைத் தையும் காட்டி வாதித்த (மயிலை .சீனி) வேங்கட சாமி[6]

---

6] மறைந்து போன தமிழ் நூல்கள், பக். 279

கூட வாசுதேவ சிந்தம் செய்த பகவரை சைவர் எனக் கூறக் கூடாமலும், வைணவர் என்று தம் அடிமனத்தில் இருந்த கருத்தை வெளிப்படையாகக் கூற மனம் வரா மலும் வெறுமனே விட்டுச் சென்றது குறிப்பிடத் தக்கது.

## திருமழிசைப்பிரானும், சிவ வாக்கியரும்

அடுத்து, குருபரம்பரைகளில் திருமழிசைப் பிரான் சைவராய் இருந்த காலத்திய பெயராகக் கூறப்படுவது சிவ வாக்கியர் என்பது. சிவ வாக்கியர் பாடல்களில் 308, 237 266, 265, 264, 268 ஆகியன முறையே ஆழ்வார் திருச்சந்த விருத்தத்தின் 1, 2, 3, 4, 17, 79-ஆம் பாடல்களோடு ஒத்திருத்தல் இதற்குத் துணை ஆகின்றது. ஆயினும், சிவ வாக்கியர் தம் ஏனைப் பாடல்களின் தொனி தரக் குறைவாய் இருப்பதால், இந்த சற்றே மட்டமான பாடல்களில் ஆசிரியர் ஆகிய சிவ வாக்கியரும், ஆழ்வாரும் ஒருவர் ஆதற் இல்லை என சீனிவாச அய்யங்கார் அவர் கள் விலக்கி விட்டனர். (பக். 307). இந்த ஏனைச் சிவ வாக்கியர் தேவார மூவர்க்கும், இன்னும் மாணிக்கவாச கருக்கும் கூடப் பிற்பட்டவராகப் பட்டினத்தாரால் திருவிடை மருதூர் மும்மணிக் கோவையில்* கூறப்படலால், ஆழ் வாரை நாம் முதலாம் சிவ வாக்கியர் ஆகக் கொள்ளலாம். இரண்டு சிவ வாக்கியர்களையும் பிற்காலத்தார் மயங்கிக் கொண்டு இருவர் பாடல்களையும் ஒன்றாகத் தொகுத்து விட்டனர் ஆதல் தெளிவு. திருமழிசைப் பிரான் சைவராக இருந்தபோது இயற்றிய பாடல்களில் வைணவக் கோட் பாடுகளுக்கு உகந்தவற்றை மட்டும் திருச்சந்த விருத் தத்துள் கோத்தமையே மேற்காட்டிய பாடல்கள் இரண்டி

---

* வித்தகப் பாடல் முத்திறத் தடியரும்,
திருந்திய அன்பின் பெருந்துறைப் பிள்ளையும்,
அத்தகு செல்வத் தவமதித் தருளிய
சித்தமார் சிவ வாக்கிய தேவரும்......(திருவிடை மரு.
தூர் மும்மணிக் கோவை அடிகள் 30-33)

-டத்தும் காணப்படுவதன் காரணம் ஆகலாம். தமது பாடல்களுள் பலவற்றை [அனேகமாகத் தாம் சைவராக இருந்த போது இயற்றியவற்றை] இவர் காவிரியில் விட்டெறிந்து விட்டார் எனவும், அவற்றுள் நீரோட்டத்தை எதிர்த்து வந்த சிலவற்றை [அனேகமாக மேலே காட்டப்பட்ட பொதுவகைப் பாடல்களை] மட்டும் திருச்சந்த விருத்தத்துள் தொகுத்தார் எனவும் வழங்கும் கதையும் நாம் மேலே கொண்ட கருத்துக்குத் துணை ஆகின்றது.

*திருமழிசைப் பிரானும், திருமூலரும*

சைவ, வைணவக் குரவர்களுள் திருமழிசைப் பிரானும், திருமூலரும் சமானர்கள். மிகப் பழைய காலத்தில் இருவருமே ஞான மார்க்கத்தை வீடுபேற்றிற்காக மேற்கொண்டனர். இவ்வகையில் இருடிகளாகக் கருதத் தக்க இவர்களை யாப்பருங்கல விருத்தியுரை முறையே ஆரிடமும், ஆரிடப்போலியும் பாடுதற்குரியோர் ஆகவும் கூறிப் போந்தமை முன்னதிகாரத்துள் காட்டப்பட்டது (பக் 5) ஆயினும், இவ்விருவரும் சமகாலத்தினரா? அல்லரெனில், யார் முற்பட்டவர்?- என்பன சில ருசிகரமான கேள்விகளாகும்.

திருத் தொண்டத் தொகை 5-ஆம் பாடலுள் 'நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்'-எனச் சுந்தரர் கூறிச் சேறலால், இச் சுந்தரர் காலம் ஆகிய கி.பி. 9-ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டவரே திருமூலர் என்பதற்கு ஐயமில்லை. நடை, சொல்லாட்சி போலும் இலக்கியச் சான்றுகளை* மட்டும் கொண்டு நிர்ணயிப்பதானால், திருமூலர் காலத்தை

*சிதம்பரம் (2722) சிவகாமி (2726) பராசக்தி (2757) புராதனன், புண்டரீகம் (2777) ரேகை (2759) போன்ற வட சொற்கள் திருமந்திரத்தில் பயில்கின்றன. சைவ நூலில் இத்துணை அளவு வடசொற் பயிற்சி இறப்பவும் பிற்காலத்திலேயே காண்கிறோம்.

எவ்வளவு பின்னுக்கு வேண்டுமானாலும் தள்ளலாம், திருமந்திரத்தின் யாப்பு வெண்பாவிற்கும் விருத்தத்திற்கும் இடைப்பட்ட கலி விருத்தங்களையே கொண்டதாயினும். ஆழ்வார்கள் திறத்தில் இவ் அணுகு முறைக்கே அதிக முக்யத்வம் கொடுத்த சைவப் பெரியார்கள், திருமூலர் திறத்தில் மட்டும் இதனைப் பின்பற்றவில்லை. மாறாக, திருஞான சம்பந்தரே திருமந்திரத்தைத் தேடிப் பிடித்து வெளிப்படுத்தினார்-என்ற கதைக்கே இலக்கியச் சான்றைக் காட்டிலும் அதிக மதிப்பு கொடுக்கின்றனர்[7]! இங்கு இதனைக் கேள்விப்பட்டிருக்கக்கூடிய சேக்கிழார் பெருமான் தமது பெரிய புராணத்தில் குறிப்பிடாமல் தள்ளிவிட்ட போதிலும் என்பதுதான் குறிப்பிடத்தக்கது! ஆயினும், அப்பர், சம்பந்தர் திருவாக்கில் அனேகம் பகுதிகள் திருமந்திரப்பகுதிகளை ஒத்திருக்கக்காண்டலால்,* மேலைச் செவி வழிச் செய்தியை நாமும் தற்காலிகமாக உடன்படலாம். நமது கொள்கைப்படி ஞானசம்பந்தர் காலம் கி.பி. 661-77 ஆதலால், இவர் திருமந்திரத்தை வெளிப்படுத்தியதை சுமார் கி.பி. 670-இல் ஆகக் கொள்ளலாம். இதற்கும் 10 அல்லது 20 ஆண்டுகள் முன்னரே திருமூலர் மறைந்திருக்க வேண்டுமாதலால், திருமூலர் இயற்கை எய்தியதை கி பி. 650-இல் ஆகக் கொள்ளலாம்.

இவர் காலத்தை நுணுக்கமாகக் கணிக்க கோயிற் புராணத்தில் குறிப்பு ஒன்று உதவுகின்றது. அம்பலவாணர் கோயில் திருக்குளத்தில் மூழ்கித் தன் நோய் நீங்கி மேனி பொன்போல் ஒளிரப் பெற்றான் சிம்மவர்மன்; அதுபற்றி அவன் ஹிரண்யவர்மன் எனவும் பட்டானாம். இவனே தில்லை அம்பலத்தை முதன் முதல் பொன் வேய்ந்தான்

7) மாணிக்கவாசகர் வரலாறும், கால ஆராய்ச்சியும், பக் 300

* அப்பர் தேவாரத்தை ஒத்த பகுதிகள் பதினைந்தும். சம்பந்தர் தேவாரத்தோடு ஒத்த பகுதிகள் எட்டும் திருமந்திரத்துள் உண்டு. திருமந்திர ஆராய்ச்சி, பக்-179.

என உமாபதி சிவத்தின் கோயில் புராணம் கூறுகிறது. அப்பரால் தில்லைப் பொன்னம்பலம் குறிப்பிடப்படலால் [2:4,5,6&8], பொன்வேயப்பட்டது கி.பி. 7-ஆம் நூற்றாண்டிற்கு முன்பே ஆதல் காண்கிறோம். தண்டன் தோட்டச் செப்பேடுகளில் பல்லவமல்லனின் தந்தை ஆகிய ஹிரண்யவர்மனுக்கு முன்னும் அம்மரபில் ஒரு ஹிரண்ய வர்மன் இருந்ததாய்க் கூறப்பட்டுள்ளது ஆயினும், அதுவே கூறும் குடிவழியில் ஹிரண்யவர்மன் என்ற பெயர் இல்லை. எனவே, கூறப்பட்டோருள் ஒருவனின் மறு பெயரே இது ஆகல் வேண்டும். ஹிரண்யவர்மனின் உண்மையான பெயரை சிம்மவர்மன் என கோயில்புராணம் கூறுதல் மேலே கண்டோம். ஆதலால், இவன் இக் குல முதல்வனாகிய பீமவர்மனின் தந்தை ஆகிய [நான்காம்] சிம்மவர்மனே[8] ஆகல் வேண்டும். இவன் காலம் கி.பி. 550-570. திருமந்திரத்துள் பொன்னம்பலம் குறிப்பிடப்படலால்* தில்லைச் சிற்றம்பல முகட்டை முதன் முதல் பொன் வேய்ந்தவனாகக் கருதப்படும் நான்காம் சிம்மவர்மனுக்குத் [கி.பி. 550-70] திருமூலர் பிற்பட்டவரே ஆகல் வேண்டும். இங்ஙனம் கி.பி. 550-650க்கு இடைப்பட்ட திருமூலர் காலத்தை இன்னமும் நுணுக்கமாகக் கணிக்க வழியுண்டா என இனிக் காண்டல் வேண்டும்.

---

8. சிம்மவர்மனை பீமவர்மனின் தந்தையாக வடமொழிப் (பெரிய) புராணத்துள்ளும் கூறப்பட்டு உள்ளதாம் (M.A R. 1925 p. 9-12, மூலம் சைவ சமய வளர்ச்சி பக் 53-4)

* சிற்பரஞ் சோதி சிவானந்தக் கூத்தனை
சொற்பத மாமந்தச் சுந்தரக் கூத்தனை
பொற்பதக் கூத்தனை பொற்றில்லைக் கூத்தனை
அற்புதக் கூத்தனை யாரறி வாரே-திருமந். 2723

அண்டத்தில் தேவர்கள் அப்பாலைத் தேவர்கள்
தெண்டிரை சூழ்புவிக் குள்ளுள்ள தேவர்கள்
புண்டரி கப்பதப் பென்னம்பலக் கூத்து
கண்டுசே வித்துக் கதிபெறு வார்களே-திருமந்.2777

திருமழிசைப் பிரான் சைவ சமயத்தில் இருந்தே வைணவம் புக்கவர். அவர் சங்கரனார் ஆக்கிய ஆகம நூலைப் பயின்றதாகக் கூறியுள்ளார். திருமூலர் தமது ஆசிரியராகக் கூறும் நந்தியை சிவபெருமான் ஆகவே உரை ஆசிரியர்கள் வரைந்திருப்பது கண்டு பெரிதும் எண்ணத் தக்கது. திருமந்திரம் பற்றி ஆழ்வார் ஏதும் கூறாதது ஏன் என்று நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். மேலும், திருமந்திரம் முன்பே இருந்ததெனில், அவர் [கி.பி. 560-இல்] வைணவத்திற்கு மாறியிருப்பாரா என்பது ஐயப்பாட்டிற்குரியதே. கி.பி. 620- அளவில் செய்யப் பட்ட நான்முகன் திருவந்தாதியில் 'சிறியார் சிவப்பட்டார்' என்றெல்லாம் அவர் சைவத்தைச் சாடும் வன்மையை நோக்கும் போது, திருமந்திரம் தமிழுலகில் இன்னமும் மலரவில்லை என்றே சொல்லத் தோற்றுகின்றது. ஆகவே, திருமந்திரத்தின் காலத்தை கி.பி. 630-ஐ ஒட்டியதாகவே நாம் கொள்ள வேண்டும்.

நந்தியிடம் ஆகமம் பயின்ற திருமூலரின் குரு பரம்பரை காலாங்கி-போகர்-கொங்கணர் வழியாகத் தொடர்வதை

"கேளப்பா மூலர்க்கு காலாங்கி பிள்ளை;
கெட்டியான காலாங்கி மைந்தர் போகர்;
நீளப்பா போகர் பிள்ளை கொங்கணர்தான்"-என்ற

பாடல் அறிவிக்கின்றது.[9] திருமழிசைப் பிரான் ஒரு கொங் கண சித்தரோடு வாதிட்டதாகவும் ஒரு வரலாறு உண்டு. எனவே, மூலர் மழிசைப் பிரானுக்கும் முற்பட்டவர் என்பது சிலர் வாதம். வள்ளுவர் பற்றிய செய்திகளுள் கூட ஒரு கொங்கணர் காணப்படுவதால் இந்த நியாயத்தின் அடிப் படையில் மூலரை திருவள்ளுவருக்கும்கூட மிக முற்பட்ட வராகக் கொள்ள வேண்டிவரும். ஆனால், இதைவிட பைத்தியக்காரத்தனமான ஆராய்ச்சி வேறு இருக்கமுடியாது என்பது வெளிப்படை. சிலம்பிற்கும், மணிமேகலைக்கும், பெருங்கதைக்கும் மிக முற்பட்ட வள்ளுவரின் காலக் கொங்

9) கலைக் களஞ்சியம், பாகம் 4, (1956) பக். 644

கணர் எப்படி வேறானவரோ அப்படியே கி.பி.575 அளவில் திருமழிசைப் பிரானோடு திருவல்லிக்கேணியில் போட்டியிட்ட கொங்கணரும், மூலர் குருபரம்பரையில் [10] வந்த கொங்கணரினும் வேறானவரே. சேலம் மாவட்டத்து ராசிபுரத்துக்கு மேற்கே 2 கல் (மைல்) தொலைவில் உள்ளது கொங்கணமலை. இப்பகுதியைச் சேர்ந்தோரே மேலே கூறப்பட்ட கொங்கணர்கள் எல்லாரும் ஆகக்கூடும்.

திருமூலர் காலத்தை வேறு வகையிலும் கணக்கிடலாம். அரசர்கள் நாற்பது பிராயத்தளவில் முடிசூடிக் கொள்ளும் வழக்கப்படி கி.பி. 953-இல் சோழப் பேரரசன் ஆகிய கண்டராதித்தன் பிறந்தது சுமார் கி.பி. 913-இல் ஆகல் வேண்டும். இவன் முதல் பராந்தக சோழனின் இரண்டாம் மைந்தனும் ஆனபடியால், இப்பிறப்புக் காலம் சரியானதே ஆகக் கொள்ளலாம். இனி, கண்டராதித்தனோ திருவிசைப்பா ஆசிரியர்கள் ஒன்பதின்மருள் நான்காமவன் ஆவன்*. எனவே இரண்டாமவராகிய கருவூர்த் தேவர் பிறந்தது இதற்கும் முன்பாகவே இருக்க வேண்டும். இவர் கங்கை கொண்ட சோழீச்சுரத்தையும் (6-ஆம் பதிகம்) பாடியுள்ளார் கங்கை கொண்ட சோழபுரம் ஏற்பட்டது கி.பி.

---

* திருவிசைப்பாவின் இரண்டாம் ஆசிரியராகக் கருதப்படும் சேந்தனார் முதல்வராகிய திருமாளிகைத் தேவரே ஆதல் திருவீழிமிழலைக் கல்வெட்டால் புலனாகிறது. (இ.சா. வழ. பக். 172) என அறிஞர் கோபிநாத ராவ் அவர்கள் காட்டியுள்ளார். (செந்தமிழ் III, 359-60, 1904-5). எனவேயே, கருவூர்த் தேவரை இரண்டாமவராகவும், கண்டராதித்தரை நான்காமவராகவும் கொண்டோம். திருவிசைப்பாவின் இறுதியிற்காணும் திருப்பல்லாண்டின் ஆசிரியரான சேந்தனார் திருமாளிகைத் தேவரான முதலாம் சேந்தனாருக்குப் பின் வாழ்ந்த வேறொருவரே ஆகவேண்டுதலால், இன்னமும் திருவிசைப்பா ஆசிரியர்கள் ஒன்பதின்மரே ஆதல் காணலாம்.

## 10) சித்தர் பரம்பரை

(மூலம் : இலக்கிய வரலாறு 2-ஆம் பாகம், கா. சு. பிள்ளை, 1970, பக்கம் 305-11)

- அகத்தியர்
  - நந்தி
    - மூலர் (கி.பி. 600-750)
      - காலாங்கி (700 850) கஞ்சமலைச் சித்தர்
        - போகர் (கி.பி. 800-950)
          - திருமாளி கைத்தேவர் (கி.பி 910-1000)
          - கொங்கணர் ஊதியூரினர் (கொங்குமண்டல சதகம் 37)
            - இடைக்காடர்
              - கமலமுனி (கம்மாளர்)
          - புலிப்பாணி
          - சட்டைமுனி (சேணியர்)
            - பாம்பாட்டிச் சித்தர் (மருதமலையில் வசித்தார்)
          - மச்சமுனி
            - கோரக்கர்
          - சுந்தரானந்தர்
          - நந்தீசர்
      - இந்திரன்
      - சோமன்
      - பிரமன்
      - உருத்திரன்
      - கந்துரு
  - தேரையர்

கி.பி 102-இல் எனவே, இவர் காலம் கி. பி. 910-1030 ஆகலாம். இவ்விதத்தில் கருவூர்த் தேவரோடு உடன் பயின்றவரும்,[11] ஆனால் தஞ்சை ராஜ ராஜேச்சுரத்தைப் பாடாதவருமாக அறியப்படும் திருமாளிகைத் தேவர் காலம் கி.பி. 910-1000 ஆகக் கூடும். இவரை போகரின் மாணாக்கராகவும் கூறுவதுண்டு. இவ்வகையில் போகர் காலம் கி.பி. 800-950 ஆகும். எனவே, காலாங்கியின் காலம் 700-850 உம், மூலரின் காலம் கி.பி. 690-750 -உம் ஆகற்பாலன. ஆகவே, மூலருக்கு நாம் கொண்ட கி.பி 600-650 அப்படி ஒன்றும் பிற்பட்டதன்று என்பது மட்டும் அல்ல; கி.பி. 650-ஐ கூட சற்று முற்பட்டதுதான் என்பதும் தெளிவு.

திருமந்திரத்தை வெளிப்படுத்திய சம்பந்தர் திருவாவடுதுறை மடத்துத் தம்பிரானே ஆகக் கூடும் சேக்கிழார் இக்கதையைக் குறிப்பிடாமற் போனாலும் இதனையே குறிப்பாகச் சுட்டுகின்றது. கி.பி. 11-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தவரும், தமிழ் நூற் கடலின் கரை கண்டவரும் ஆன குணசாகரர் (யாப்பருங்கல விருத்தியுரைகாரர்) சங்க கால மாமூலரையும், திருமூலரையும் ஒன்றாகக் குழப்பிக் கொண்டமையும் இவரால் காட்டப்பட்ட 'இலைநல வாயிலும்' என்ற செய்யுள் இவர் மிக்கு வந்ததாகக் கூறிய கூன் சீர் இல்லாமல் திருமந்திரத்துள் 204-ஆம் செய்யுள் ஆக அமைந்திருப்பதும் இந்நூல் (திரு மந்திரம்) கி.பி. 11-ஆம் நூற்றாண்டின் தொடக்க மட்டிலும் மறைபட்டே கிடந்ததைத் தெளியக் காட்டுகின்றன. அப்பர், சம்பந்தர்களின் திருவாக்கோடு பொருந்திக் காணும் திருமந்திரப் பகுதிகள் மூலர் பெருமான் இப் பேர் அடியார்களுடைய அருளிச் செயல்களை ஆழ்ந்து பயின்றதன் விளைவேயும் ஆகலாம். இது காறும் கூறியவற்றால் திருமந்திரம் கி.பி 700-750க்கு முற்பட்டது அன்மை காணப்படும். இந்நூலின் முகப்பில் காணும் விநாயக வணக்கத்தாலும், சிற்றம்பலம் என்பதன் சிதைவாகிய சிதம்பரம் என்ற உலகு வழக்குச் சொல்லை இவர் கையாளுதலாலும் இது உறுதிப்படுகின்றது. இக் காலம் காஞ்சி கயிலாச நாதர் கோயில் கல்வெட்டுக்களில் 'ஆகமப் பிரியன்' எனவும், சைவ 'சித்தாந்தப் பேரறிவாளன்' எனவும் புகழப்படும் பல்லவ ராஜசிம்மனின் (கி.பி.690-728)

காலமும் ஆகும். ஆகமம் பற்றிய பேச்சு இவனுக்கு முற்பட்ட காலத்திய கல்வெட்டுக்களில் காணப்படாமை குறிப்பிடத் தக்கது. எனவே, திருமழிசைப் பிரான் திருமூல நாயனா ருக்கு மிக முற்பட்டவரே என்பதில் ஐயம் திரிபிற்கு இடம் இன்மை காணப்படும். திருமந்திரத்தின் சரியான காலம் கி.பி.710-ஐ ஒட்டியது என்பதே இவ் ஆசிரியர் கருத்து.

*திருமழிசையும் திருப்பாணாழ்வாரும்*

ஆழ்வார்கள் பன்னிருவருள் பொய்கையார், பூதந்தார், பேயார் ஆகிய முதலாழ்வார்கள் மூவரை ஒழிந்த ஏனை யோரை இரு தொகுதியினராகப் பிரிக்கலாம். தமது ஒவ்வொரு நூல் அல்லது பதிகத்தின் இறுதிச் செய்யுளிலும் தம் பெய ரையும், ஓதுவார் எய்தும் பலனையும் குறித்துச்சென்றோரும், அங்ஙனம் குறிப்பிடாதோரும் என. முதலாழ்வார்களுடை யவும், அவர்களோடு தொடர்புற்றிருந்த திருமழிசைப்பிரா னுடையவும் நூற்கள் எல்லாம் இவ்வித முத்திரைக் கவி இல்லாதனவே ஆதலால், முத்திரைக் கவி இல்லாமல் நூல் செய்த திருப்பாணாழ்வாரையும் மழிசைப் பிரானுக்குச் சமீப காலத்தினராகவே கருத இடமுண்டு. இதனை ஆராய்ந்து காண்போம்.

உறையூர்ப் பாண்குலத்துப் பிறந்த இவரை பாணாழ்வார் என்றே கூறிப் பழக்கப்பட்டு விட்டதால் இயற்பெயர் அடி யோடு மறக்கப்பட்டு விட்டது. இவ் ஆழ்வார் நாளும் காவிரியின் தென்கரையில் நின்று கொண்டு திருவரங்கப் பெருங்கோயிலின் கொடிமரத்தைப் பெருமாள் ஆகவே பாவித்துச் சேவித்துக் கொண்டு இன்னிசை பாடி அந்நேரம் மெய்ம்மறந்து இருப்பது வழக்கம். அப்படி இருந்த போது ஒரு நாள் லோகசாரங்க முனிவர் தமது சீடர்களுடன் காவிரிக்கரைப் பக்கம் வந்தார். இழிகுலத்தவரான இவரை விலகிப் போகச் சொல்லி எவ்வளவோ கூச்சலிட்டும் பல னில்லை. எனவே, முனிவரின் சீடர்கள் கல்லால் அடித்து பாணரின் திருமேனியைக் காயப்படுத்தினர். கண் விழித்துப் பார்த்த ஆழ்வார் நடந்ததை உணர்ந்து கொண்டு, முனிவர் பக்கம் நோக்கி தெண்டனிட்டு தனது

பிழையைப் பொறுத்தருள வேண்டுமாய்ப் பெரிதும் வேண்டிக் கொண்டனர். முனிவர் மனம் கரைந்து கலங்கிற்று. மெய்ம் மறந்த தியானத்தில் இருந்த மெய்யடியாரை அடித்துத் துன் புறுத்திய படுபாவத்திற்குப் பரிகாரமும் உண்டோ என்று பரிதவித்த நிலையில் அன்றிரவு அவர் சற்றே கண் மூடினார் கனவில் அரங்கநகர் அப்பன் தோன்றி, 'பாண் பெருமானைத் தோளில் சுமந்து வந்து நம்மை சேவிக்கச் செய்து துன்பம் தவிர்க'-என்று கூறி மறைந்தனன். திரு வருளின் ஆணைப்படிக்கு பெருங்கோயிலுள் கொண்டு போகப்பட்ட ஆழ்வார் தமது சிந்தனையில் தேனூறி நின்று தித்தித்த எம்பெருமானை நேரிற் கண்டு களிப்புற்று 'அமல னாதிபிரான்' என்பதோர் தனிப்பெரும் பதிகம் பாடி திருவடி நீழல் சார்ந்தனர். அன்று தொட்டு அவருக்கு திருவரங்கப் பெருங்கோயிலில் வழிபாடும் நிகழத் தொடங்கிற்று. இந் நெடுஞ் செய்தியே,

> பழுதிலா ஒழுகலாற்றுப் பலசதுப் பேதிமார்கள்
> இழிகுலத் தவர்களேலும் எம்மடி யார்களாகில்
> தொழுமின் நீர் கொடுமின்; கொண்மின் என்று
> நின்னோடும் ஒக்க
> வழிபட அருளினாய் போன்ம் மதிள்திரு அரங்கத்
> தம்மானே

என்ற திருமாலைச் செய்யுளில் (எண் 42) குறிப்பாய்ச் சுட்டப்படுகின்றது. இன்னும். 'தொண்டைக் குலமெலாம் தொழுகுலமே'-என்று சொல்லி பாணருக்கு தொண்டரடிப் பொடிகள் வக்காலத்து வாங்குவது போலவே உள்ளது-

> ''அமரவோர் அங்கமாறும் வேதமோர் நான்கும் ஓதி
> தமர்களில் தலைவராய சாதியந் தணர்களேலும்
> நுமர்களைப் பழிப்பராகில் நொடிப்பதோர் அளவில்
> ஆங்கே
> அவர்கள் தாம் புலையர் போலும் அரங்கமா
> நகருளானே''

என்ற அடுத்த செய்யுளும் (திருமாலை 43). ஆகவே, பாணரை தொண்டரடிப் பொடிகளுக்குப் பிற்பட்டவராக

குருபரம்பரைகள் கூறுவதை ஏற்பதற்கில்லை. இனி, தொண்டரடிப் பொடிகள் காலம் கி.பி. 667-772 ஆதல் அடுத்த அதிகாரத்துள் காட்டப்படும். இவ்வகையில், பாணர், கி.பி. 650க்கு முற்பட்டவரே ஆக வேண்டுதலால், மழிசைப் பிரானுக்கு மிக நெருங்கிய காலத்தினர் ஆகக் கூடும் என மேலே கொண்ட கருத்து உறுதிப்படுகின்றது. இராமானுஜ நூற்றந்தாதியில் இவர் நான்காமிடத்திற் கூறப்படலால் திருமழிசைக்கும் முன்பே கூட இவர் மறைந்தவர் ஆகக் கூடும்.

மூவாயிரப்படி குருபரம்பரையில் ஒரு துன்மதி, கார்த்திகைத் திங்கள், ரோகிணி நட்சத்திரம், தேய்பிறைத் துவிதியை கூடிய புதன் அன்று பாணாழ்வார் பிறந்ததாகக் கூறப்பட்டுள்ளது. இந் நாள் கி.பி. 15-11-601 என திவான் பகதூர் சாமிக்கண்ணுப் பிள்ளை அவர்களாலும், கி.பி. 7-11-781 என மு. கோவிந்தசாமி அவர்களாலும் கணிக்கப்பட்டுள்ளது. ஆயினும், மேற்காட்டிய நமது கொள்கைப்படி கி.பி. 630 இல் மறைந்த திருமழிசைப் பிரானுக்கும் முன்னமே இயற்கை எய்தியவர் பாணர். ஆகவே, அறிஞர் கோவிந்தசாமி குறித்த காலம் இவருக்குக் கொஞ்சமும் பொருத்தமாக இல்லை. திருப்பாணரின் ஆயுள் காலம் 50 ஆண்டுகள் ஆக மூவாயிரப்படி குருபரம்பரையிலேயே கூறப்படலால், சாமிக்கண்ணுப் பிள்ளை அவர்களின் கணிப்பையும் நாம் ஏற்பதிற்கில்லை. எனவே, இவர் பிறந்த துன்மதி கி.பி. 541-ஐய துன்மதியேயும், இவர் காலம் கி.பி. 541-91-உம் ஆகக் கூடுதலும் காண்கிறோம். மூவர் முதலிகளும் இவருக்கு முந்தியே இயற்கை எய்தியவர் ஆக இராமானுஜ நூற்றந்தாதியிலிருந்து ஊகிக்கப்படுதலால், மூவர் முதலிகளுள் இளையவராகத் தோன்றும் பூதத்தார் மறைந்த காலம் கி.பி. 590 ஆக முன் அதிகாரத்தில் கொள்ளப்பட்டது.

பத்து செய்யுட்களால் இயன்ற பதிகங்களுள் சைவ சமயத்தைச் சார்ந்தவற்றுள் எல்லாம் காரைக்கால் அம்மை

யாரின் திருவாலங்காட்டுப் பதிகங்களே பழையன ஆன படியால் மூத்த பதிகங்கள் எனப்பட்டவாறு போல, வைணவத்தின் மூத்த பதிகம் பாணர் செய்ததே ஆதல் குறிப்பிடத் தக்கது. இதில் இன்னொரு சிறப்பு என்னவென்றால், பாணர் பதிகத்தில் நாந்திச் செய்யுள் (அதாவது முத்திரைக் கவி) இல்லாமை. எனவே, பாணரின் பதிகமே சைவ, வைணவப் பதிகங்களின் முன்னோடி என்னலாம்.

இனி, மறைமலை அடிகளோ வழக்கம் போல சொல்லாராய்ச்சி செய்து திருப்பாணாழ்வாரை இறப்பவும் பிற்பட்ட காலத்தினராகக் கருதுவர். வட சொற்களும், கொச்சைச் சொற்களும் சமகாலத்திய நூல்களிலேயே சைவத்தினுடையவற்றைக் காட்டிலும் வைணவ நூற்களிலும், பக்திக் காதல் பாட்டுக்களில் விட தத்துவப் பாடல்களிலும், மற்றைச் சாதியினர் பாட்டுக்களில் விட பிராம்மணர் பாட்டுக்களிலும், சற்று அதிகம் படித்தோர் பாட்டுக்களில் விட அங்ஙனம் பயிலாதோர் பாட்டுக்களிலும், இன்னும் தனித் தமிழ் தீவிர வாதிகளின் பாட்டுக்களினும் மிதவாதிகளின் செய்யுட்களிலும் சற்று அதிகம் காணம்படல் இயல்பே. இதை மட்டுமே வைத்துப் பெரிய ஆராய்ச்சி ஒன்றும் செய்துவிட முடியாது. மீறிச் செய்தால், அது வெறும் மண் கோட்டையைப் போலச் சரிந்து போகும் என்பது உறுதி. மேலும் எந்த சொல் எந்த நாளில் வழக்குற்றது என்று எவ்வாறு உறுதியாய்க் கூறமுடியும்? சொல் ஆராய்ச்சியில் அவ்வளவு அழுத்தமான நம்பிக்கை இருந்தால் திருமந்திரத்தின் திறத்தில் இதை ஏன் பின்பற்றவில்லை?

காலம் எதுவாயினும், பாணரின் பதிகம் சமயத் தமிழின் பொன்னான பகுதிகளில் ஒன்று என்பது மட்டும் உறுதி. எளிமையோடு இனிமையைக் குழைத்துச் செய்த இந்தப் பதிகம் வைணவர்களின் 'திருத் தினசரி' (நித்தியானு சந்தானம்)யிலும் இடம் பெற்றுண்மை குறிப்பிடத் தக்கது. இப்பதிகத்தின் பேரழகில் தம் மனத்தைப் பறிகொடுத்து விட்ட அந்தணச் சாதி வேதாந்த தேசிகர் என்னும் வித்தகர்

கூட இதற்கொரு 'முனிவாகன போகம்' என்ற தனிப் பேருரை வகுத்துள்ளார். இப் பதிகத்தைப் பின்பற்றி திருமாளிகைத் தேவரும், திருவாலி அமுதனாரும் ஆளுக்கொரு இப்படிப்பட்ட பாதாதிகேசப் பதிகத்தை தில்லை நடேசப் பெருமான் மீது பாடியுள்ளதும் ஈண்டு நினையத் தகும். இப்படிப் பின்பற்றப்படும் அளவுக்கு ஆழ்வாரின் பதிகத்தில் தன்னை மறந்த நிலையில் செய்யப்பட்ட ப்ரபத்தி அமிசம் மிகுந்த பக்தி காணப்படுகின்றது!

மழிசைப் பிரான் வரலாற்றிற் போல பாணாழ்வாருடையதிலும் ஒரு பெரும் புரட்சிக் கூறு உள்ளது. இது தீண்டாமை ஒழிப்பு. தீண்டாமையின் அடிப்படை சுகாதாரமே கோவலூரில் மழைக்காக ஒரு வீட்டுத் திண்ணையில் ஒதுங்கியிருந்த பொய்கையார், பேயார், பூதத்தார் ஆகிய உயர் சாதி ஒழுக்க சீலர்களே ஒருவர் மீது ஒருவர் பட்டுக் கொள்ளாமல் இருக்க விழைந்ததிலிருந்து இதனை ஊகிக்கலாம். ஆயினும், இது மக்களிடையே சமத்துவ, சகோதரத்வ உணர்ச்சிக்கு ஒரு தடையாக இருப்பதால், பஞ்சராத்திர வைணவம் இதனை ஒப்புக்கொள்வதில்லை. வர்ண தர்ம பாகவதப் போக்கை எதிர்த்து பஞ்சராத்திரம் செய்த முதல் புரட்சியே மூவர் முதலிகளின் வரலாறு நமக்கு அறிவிக்கும் முக்ய செய்தி. பாணர் வரலாற்றில் தீண்டாமை ஒழிப்பின் உச்ச கட்டம் தென்படுகிறது. மேற்கொண்ட தொழிலில் முனைந்து நிற்றல் ஆகிய கர்ம யோகத்தை கீதை வற்புறுத்துவது உண்மையே. அதைச் சாதிப்பதற்காக வேண்டி, 'குலவிச்சை கல்லாமற் பாகம் படும்' என்ற அடிப்படையில், ஒரு குலத்துக்கு ஒரு தொழில் வந்தது, அப்படி ஒரே தொழிலை மேற்கொண்ட குலங்களை சாதியாகத் தொகுத்ததால், தாழ்ந்த தொழில்களில் ஈடுபட்டிருந்த சாதிகள் தாழ்ந்தவைகளாகக் கருதப்பட்டன; அது பற்றித் தீண்டத்தகாதனவும் ஆயின. ஆயினும், சேற்றில் மலர் போல, இம் மாதிரியான குலங்களில் பிறந்தோர் உள்ளும், கல்வி-கேள்வி- ஒழுக்கங்களில் மிக்கோர் சிறப்பிற்கு உரியர் ஆதலை,

"வேற்றுமை தெரிந்த நாற்பால் உள்ளும்,
கீழ்ப்பால் ஒருவன் கற்பின்
மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே"—

என்ற ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியனின் புறப்பாட்டு (செ.183) அடிகளால் உணரலாகும். இந்த பஞ்சராத்திரக் கோட்பாட்டை உடம்பட்ட மேற்பாலவர் ஆகிய லோக சாரங்க முனிவர் பாண்பெருமாளை தம் தோளில் சுமந்து சென்று செய்த முதல் 'ஆலயப் பிரவேசம்' ஒரு மாபெரும் புரட்சி ஆகாதெனில், இவர்களுக்கு ஆயிரத்து நானூறு ஆண்டுகளுக்குப் பின் காந்தி அடிகள் தலைமையில் இந்த நூற்றாண்டில் செய்யப்பட்ட ஆலயப் பிரவேசங்கள் மட்டும் எப்படி ஒரு சமுதாயப் புரட்சி ஆகிவிட முடியும்?

*திருமழிசைப் பிரான் - போர்க்களத்தில்*

குருபரம்பரைகளில் திருமழிசைப் பிரானுடையதாகக் கூறப்படும்

"சாக்கியம் கற்றோம்; சமணம் கற்றோம்; சங்கரனார்
ஆக்கிய ஆகம நூல் ஆராய்ந்தோம்;-பாக்கியத்தால்
செங்கண் கரியானைச் சேர்ந்தோம்; யாம் தீதிலமே
எங்கட் கரியதொன் றில்-என்ற பழம் பாடலிலும்,

அறியார் சமணர்; அயர்த்தார் பவுத்தர்;
சிறியார் சிவப்பட்டார்; செப்பில்-வெறியாய
மாயவனை மாலவனை மாதவனை ஏத்தாதார்
ஈனவரே ஆதலால் இன்று- என்ற நான்முகன் திருவந்தாதிச் செய்யுளுள்ளும் (எண் 6) சமண, பவுத்த சமயங்களிடத்திற் காட்டிலும் சைவத்திடமே இவருக்கு அதிகக் காட்டம் இருந்ததைக் காண்கிறோம். இன்னும் இதனையே

"நான்முகனை நாராயணன் படைத்தான்;
நான்முகனும்
தான் முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்
தான்"-எனவும் (நான். திரு. 1).

"இனியறிந்தேன் ஈசற்கும் நான் முகற்கும் தெய்வம்
இனியறிந்தேன் எம்பெருமான் உன்னை" எனவும்
(நான். திரு. 96)

"நீறாடி,
தான்காண மாட்டாத தாரகலச் சேவடியை
யான்காண வல்லேற்கு இது" எனவும் (நான். திரு. 27),

"மற்றுத் தொழுவார் ஒருவரையும் யான் இன்மை
கற்றைச் சடைமுடியான் கரிகண்டாய்"- எனவும்
(நான். திரு. 26),

"குறைகொண்டு நான்முகன் குண்டிகை நீர்பெய்து
மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்தி-கறை
கொண்ட
கண்டத்தான் சென்னி மேல் ஏறக் கழுவினான்
அண்டத்தான் சேவடியை ஆங்கு"-(நான். திரு. 9)

எனவும் வரூஉம் நான்முகன் திருவந்தாதிச் செய்யுட்களால் இனிதின் உணரலாகும். பொய்கையாரும், பேயாரும் கண்ட 'சங்கர நாராயண' உருவில் சைவ-வைணவத் தோழமை உணர்ச்சியே மிளிர்கின்றது. ஆனால், சைவத்திலிருந்து வைணவம் புகுந்த திருமழிசைப் பிரானுக்கோ இஃதொரு ஏமாளித் தனமாகவே தென்படுகிறது. முதலில் வலப்பாகம் என்பார்கள்; பிறகு இடப்பாகம் என்பார்கள்; சிலகாலம் சென்றதும் அடிப்பாகம் என்பர்; கடைசி சட்டத்தில் அடிமை ஆகவும் ஆக்கி விடுவர்-என அவர் அஞ்சினார். இவ் அச்சத்தை பின் விளைந்த நிகழ்ச்சிகளும் நிரூபித்து விட்டன. காரைக்கால் அம்மையாரும், திருஞான சம்பந்தரும் சிவபிரானின் வலப்பக்கத்தை திருமாலுக்குக் கூறியதை மறுத்து, சமணத்திலிருந்து சைவத்திற்கு மீண்ட அப்பர் 'அரியலால் தேவி இல்லை' என்று ஒரு புரட்சிக் கொள்கையைப் படைத்து திருமாலை இடப்பாகத்திற்குத் தள்ளி விட்டதை 'குடமாடி இடமாகக் கொண்டான் கண்டாய்'

என்ற அவர் வாக்கிற் காண்கிறோம். வைணவர்களின் தனிப் பெருங்கடவுள் ஆகிய திருமால் பன்றியாக்கப்பட்டு சிவபெருமானின் திருவடிகளைத் தேடி நிலத்தை அகழும் படியும் செய்யப்பட்டார். நந்திவர்ம பல்லவ மல்லன் தில்லை நடேசப் பெருமானின் ஆலயத்தில் ஒரு உட் கோயில் செய்து அதில் திருமாலைப் பள்ளி கொண்ட கோலத்தில் நிறுவியதை மணிவாசகப் பெருமான் திருக் கோவையார் 86-இல்

"புரங்கடந் தானடி காண்பான் புவிவிண்டு புக்கறி
யாது
இரங்கிடு எந்தாய் என்(று) இரப்ப—தன் ஈரடிக்(கு)
என் இரண்டு
கரங்கள் தந்தான்-ஒன்றுகாட்ட மற்றதுவும் காட்
டென்று
வரங்கிடந்தான் தில்லை அம்பல முன்றிலிலம்
மாயவனே"-எனப் பாடி

ஏளனம் செய்தார்! மெஜாரிட்டி பலம் இல்லாதவர்களுக்குக் கூட்டில் நட்டமே ஏற்படக் கூடியதை தாம் பரந்த உலகானு பவத்தாலும், உயர்ந்த கல்வியறிவாலும் முற்கூட்டியே உணர்ந்து கொண்ட திருமழிசைப் பிரானின் தீர்க்க தரிச னத்தை என்னென்பது! சைவத்தில் இருந்த போது அங்கு வைணவத்தின் கொடிய விரோதிகள் காலம் நோக்கி கரந் திருந்ததை உணர்ந்து வைத்திருந்ததால், தாம் வைணவம் புக்க போது, இவர்களின் சூழ்ச்சியிலிருந்து அதனைக் காப் பாற்ற வீர வைணவ இயக்கத்தைத் தொடங்குவதொன்றே வழி எனக் கண்டு அதனைப் பிரகடனமும் செய்தார். அதன் விளைவுதான் சிவன் நான்முகன் படைப்பாக்கப் பட்டு மூன்றாம் இடத்திற்குத் தள்ளப்பட்டது. பேயார், பொய்கையார் வாக்கிற் கண்ட 'உளன் கண்டாய்' எனத் தொடங்கும் இரண்டடிகளை முற்கூறியவாறு போல எடுத் தாண்டும், அவர்கள் பிறப்பிடங்களில் தங்கித் தவம் புரிந்தும் அவர்பால் தமக்கிருந்த மதிப்பை வெளிப்படையாக்க்

காட்டிக் கொண்ட திருமழிசைப் பிரான் சிவபிரானைப் பற்றிய மட்டில் இவ்வித முற்றிலும் மாறுபட்ட கொள்கையினராகக் காணப்படுகிறார். ஆயினும், இஃது அக்காலத்தே அப்படி ஒன்றும் புதுமையானதல்ல. இவரைப் போலவே முற்ற முதிர்ந்த கல்வியும், அறிவும், பிராயமும் நிரம்பப் பெற்றிருந்த திருநாவுக்கரசர் பெருமானுங்கூடத்தான்

''தாயினும் நல்ல சங்கரனுக் கன்பர்
ஆய உள்ளத்(து)அமுதருந் தப்பெறார்
பேயர் பேய்முலை உண்டுயிர் போக்கிய
மாயன் மாயத்துப் பட்டமனத்தரே''- எனவும்

''செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று
பத்தி செய்ம்மனப் பாறைகட் கேறுமோ
அத்தன் என்(று) அரி யோடு பிரமனும்
துத்தி யஞ்செய நின்றநற் சோதியே''-எனவும்

''நூறு கோடி பிரமர்கள் நுந்தினார்;
ஆறு கோடி நாராயணர் அங்ஙனே;
ஏறு கங்கை மணலின் எண்ணில் இந்திரர்;
ஈறி லாதவன் ஈசன் ஒருவனே''-எனவும்

பாடுகின்றார். ஆகவே, எந்த அளவுக்கு அப்பரடிகள் ஒரு தீவிர சைவரோ, அதற்குக் குறைவில்லாமல் ஆழ்வாரும் வீர வைணவரே என்பதற்கு ஐயமில்லை. உண்மையில், ஆழ்வாரும், அப்பரடிகளும் ஒருவரோடு ஒருவர் போட்டியிடுவதுபோலவே காண்கின்றனர். ஆயினும்,தீவிரவாதக் கோட்பாட்டின், ''மறந்தும் புறந்தொழாஅ மாந்தர்''—என்ற மூல மந்திரத்தை அழுத்தம் திருத்தமாக முதன் முதல் உச்சரித்தவர் (நான். திரு : 68 திருமழிசைப் பிரானே). திருமாலே தமக்கு முழு முதற் கடவுள் ஆயினாற் போல, 'தம்மை விட்டால் வீர வைணவத்தைப் பரப்புவதற்கு அவனுக்கும் வேறு ஆளில்லை'—என்பது போலவே உள்ளது-

"நானுன்னை அன்றியிலேன்; கண்டாய்,
நாரணனே!
நீயென்னை அன்றி இலை"--(நான். திரு:7)

என்ற இவர்தம் திருவாக்கும்!

திருமழிசைப் பிரானுக்கு இருந்த சைவ சமய வெறுப்பைக் காட்ட வேறொரு வரலாறும் உண்டு. ஒரு சமயம் சிவ பெருமானும், உமையம்மையும் இடப வாகனத்தின் மீது அமர்ந்து வான் வழியே போய்க் கொண்டிருந்தனராம். வழியில் திருமழிசைப் பிரான் திருவல்லிக்கேணியில் தவம் செய்து கொண்டிருந்த இடம் குறுக்கிட்டது இக் கடவுள் தம்பதிகளின் நிழல் தம்மீது படாமல் ஆழ்வார்—கந்தல் ஒன்றை தைத்துக் கொண்டிருந்தவர்- ஒதுங்கிக்கொண்டார். இவ்விபரீத நடத்தையைக் கண்ட இறைவி இவரைப்பற்றி ஈசனிடம் உசாவினார். ஈசரும் இறைவிக்கு ஆழ்வாரின் ஆழ்ந்த விஷ்ணு பக்தியை எடுத்துரைத்தனர். இப்பக்தியின் திறத்தைச் சோதித்துப் பார்க்க வேண்டுமென்று ஒரு விசித்திரமான ஆசை அம்மையின் உள்ளத்தே எழுந்தது. வேறு வழியில்லாமல் இறைவரும் உடம்பட்டு இறைவியோடு மண்ணுக்கு இறங்கி ஆழ்வார் முன் தோன்றினர். ஆழ்வாரோ இவ் அம்மை-அப்பர்களை கண்ணெடுத்தும் பார்க்கவே இல்லை. இறைவர் ஆழ்வாரை அறை கூவி தம் வரவை அறிவித்து, வேண்டும் வரம் பெறக் கோரினர். ஆனால், ஆழ்வாரோ அவர்களால் தமக்கு ஆகவேண்டியது ஒன்றும் இல்லை என்று மறுமொழி இறுத்தனர். ஆயினும் தம் வரவு வீண்போகக் கூடாது-என்று எடுத்துக் கூறி ஏதாகிலும் கேட்கும்படிக்கு இறைவர் வற்புறுத்தினார். எனில், பரமபத வீடுபேறு அருளும்படி ஆழ்வார் கேட்டார். அது திருமால் ஒருவராலேயே ஆகும் என்றும், ஆகவே வேறு கோருமாறும் ஈசர் பணித்தார். ஆயின், தமது மரணத்தை ஒன்றிரண்டு நாட்கள் ஒத்திப்போட முடியுமோ? என்று ஆழ்வார் கேட்டார். 'அதுவும் இயலாது'-என்று இறைவர் கூறவே, 'எனில், இவ் ஊசி வழியே நூல்வர அருளும்'-

என்று கூறினாராம் ஆழ்வார். இவ் ஏளனத்தைப் பொறுக்கக் கூடாத ஈசன் தமது நெற்றிக் கண்ணைக் காட்டினார். பிருகு வமிசத்தவரான ஆழ்வாரும் தமது கால் பெருவிரலில் இருந்த தோர் கண்ணைத்* திறந்து கனலைப் பொழிந்தார். பிறகு, இறைவரும் தமது சடாமுடிகளில் இருந்து நீரைச் சொரிந்தார். ஆனால், அந் நீர்க்கடலில் தளர்ச்சியின்றியே பாற்கடலுள் பரமனைப் போல இருந்தார் ஆழ்வார். ஆழ்வாரின் பக்தித் திறத்தினை மெச்சி அக்கடவுட்டம்பதிகள் கயிலை புக்கனர் என்பது ஒரு கதை. முடை நாற்றம் வீசும் இந்தக் கதையை குருபரம்பர ப்ரபாவம் செய்த வடிவழகிய நம்பி தாசர் கூறாமலே போய்விட்டது குறிப்பிடத் தக்கது. ஆயினும், இதில் ஆழ்வார் திருவல்லிக்கேணியில் இருந்த போதே சிவனடியார் கூட்டத் தலைவர்களோடு ஏற்பட்ட மோதலைக் காணலாம். இறைவன் - இறைவியரை இடப வாகனத்தின் மேல் அமர்த்தி ஊர்வலம் வந்தபோது, ஆழ்வாரும் அவர் அடியார்களும் அலட்சியமாக நடந்து கொண்டதைப் பொறுக்கக் கூடாத சிவனடியார்களுக்கும், ஆழ்வாரின் சீடர்களுக்கும் ஏற்பட்ட கைகலப்பே இக்கதையின் மூலமாய் இருக்க வேண்டும். இந்தப் போராட்டம் காஞ்சியிலும் தொடர்ந்ததை இனிக் காண்போம்.

கச்சித் திருவெஃகாவில் தமது பிரதம சீடராகிய கணி கண்ணரோடும் ஆழ்வார் வசித்து வந்தபோது, ஒரு வேசி நாளும் வந்து மெழுகித் துப்புரவு செய்து ஆழ்வார் இருந்த ஆசிரமத்தில் பணி புரிந்து சென்றாள். அவளின் சேவை

*பிருகு மகரிஷிக்கே காலில் ஒரு கண் இருந்தது எனவும், அதன் காரணமாக அவர் தருக்கித் திரிந்தனர் எனவும், அவர் வைகுந்தம் சென்று திருமாலை உதைத்தபோது, திருமால் காலைக்கழுவி உபசரிப்பதுபோல் நடித்து, முடிவில் அக்கண்ணைப் பறித்து அவர் செருக்கை அடக்கி விட்டனர் எனவும் புராணம் கூறுதலால், பார்க்கவ குலத்தினராகக் கொள்ளப்பட்ட திருமழிசைப் பிரானுக்கும் காலில் ஒரு கண்ணை குருபரம்பரைகள் கற்பித்துக் கொண்டன.

யைக் கண்டு மனங் குளிர்ந்த ஆழ்வார் அவளைக் குமரி ஆக்கினார். அப்போது அவள் பேரழகில் மயங்கி அவளை மணந்து கொண்டான் பல்லவ மன்னன். இருவருமாகக் கூடி இன்பம் துய்த்து வந்த நாளில் அவள் வாட்ட மின்றியே இருக்க, தான் மட்டும் மூப்பினை நோக்கி விரைந்து போய்க் கொண்டிருந்ததைக் கண்டான் அவன். வேசியின் இளமையின் இரகசியம் ஆழ்வாரின் அருளே என்று அறிய வந்ததும், அவன் ஆழ்வாரின் சீடராகிய கணிகண்ணரை அழைத்து ஆழ்வார் தன்னைப் பாடும்படிக்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். அது நடக்காது என்று தெரிந்ததும் கணிகண்ணரைப் பார்த்து 'நீராவது பாடும்' என்று மன்றாடினான். அவரோ,

"ஆடவர்கள் எவ்வாறு அகல்வர், அணிவெஃகாவும்
பாடகமும், ஊரகமும், பஞ்சரமா-நீடியமால்
நின்றான், இருந்தான், கிடந்தான் இதுவன்றோ
மன்றார் பொழிற்கச்சி மாண்பு?" - என அரச

னுக்குப் பதிலாக அவனுடைய கச்சிப் பதியின் தெய்வ மணத்தை மட்டுமே மெச்சிப் பாடினார். அது கேட்டு வெகுண்ட பல்லவன் நாட்டை விட்டு வெளியேறும்படி அவருக்கு ஆணையிட்டான். இதனைக் கேள்வியுற்ற ஆழ்வார் தாமும் வெளியேற எண்ணி,

"கணிகண்ணன் போகின்றான்; காமரு பூங்கச்சி
மணிவண்ணா! நீகிடக்கா வேண்டா-துணிவுடைய
செந்நாப் புலவனும் போகின்றேன்; நீயுமுன்றன்
பைந்நாகப் பாயைச் சுருட்டிக் கொள்"- என்று

விளம்பவும் பெருமாளும் கூடவே புறப்பட்டு விட்டாராம். ஆனது பற்றி, வெஃகாவில் துயிலமர்ந்த பெருமாளுக்கு 'யதோக்தகாரி' அல்லது 'சொன்ன வண்ணம் செய்த பெருமாள்' என்ற பெயர் பண்டுதொட்டு வழங்கி வருகிறது. "பழமறைகள் துதி செய்யப் பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங் கொண்டலே"- என்ற அடிகளில் குமர குருபர அடிகளும் இதற்காகத் திருமாலைப் பாராட்டினார். பெரு

மாள் கூடப்போன வரலாறு, வைணவர்கள் வெஃகாவில் துயிலமர்ந்த பெருமானின் சிலையைப் பெயர்த்து எடுத்துக் கொண்டு கூட்டமாக ஆழ்வாரைப் பின் தொடர்ந்ததையே குறிப்பிடுவ தாகலாம். அன்றிரவு ஆழ்வார் நகருக்கு வெளியே தங்கியிருந்த இடம் அக்காரணத்தால் 'ஓரிரவிருக்கை' என்று இன்றும் அறியப்படுவதாக குருபரம்பரைகள் கூறுகின்றன. பெருமாள் உடையவும், ஊராருடையவும் வெளியேற்றத்தைக் கேள்வியுற்ற அரசன் விரைந்து போந்து ஆழ்வாரிடம் மன்னிப்புக் கோரியதன் பேரில், அவர் நகருக்குத் திரும்பினார் என்று கூறப்பட்டாலும், பிறகு அவர் குடந்தைக்குப் போய்விட்டதிலிருந்து, பெருமாளை மாத்திரமே மீட்டுக் கொண்டு வந்து அரசன் பிரதிட்டை செய்திருக்கலாம் என்று மட்டுமே நாம் கொள்ளக் கிடக்கின்றது. கச்சிக்குத் திரும்பும் நிலையில் ஆழ்வார்,

**"கணிகண்ணன் போக்கொழிந்தான்; காமரு பூங்கச்சி**
**மணிவண்ணா நீகிடக்க வேண்டும்;-துணிவுடைய**
**செந்நாப் புலவனும்போக் கொழிந்தேன்; நீயுமுன்றன்**
**பைந்நாகப் பாய்படுத்துக் கொள்" - என்று**

திருமாலை அறைகூவி அழைத்தார் என்றும் சொல்வதுண்டு. ஆயினும், இது பிற்காலப் படைப்பென்றே தோன்றுகிறது.

திருமழிசைப் பிரானின் பிறசமய எதிர்ப்புப் பிரசாரத்தால் நகரில் கலகம் ஏற்படுவதைக் கண்டே பல்லவ மன்னன் ஆழ்வாரையும், அவர்தம் சீடரையும் நாடு கடத்தினான் என்று கருதினார் சைவப் பேரறிஞராகிய மயிலை சீனி. வேங்கிடசாமி அவர்கள் (பக். 221). அரசியல் காரணங்களுக்காக நாடு கடத்தப்பட்டதை மறைக்கவே கிழட்டுக் கணிகையை குமரி ஆக்கிய கதையை வைணவர்கள் கட்டிவிட்டிருக்கின்றனர் எனபதே அவருடைய உள்ளார்ந்த கருத்து. பதினாறாம் நூற்றாண்டினராகிய வடிவழகிய நம்பி தாசரும் கூட ஆழ்வார் கிழவியைக் குமரி ஆக்கிய கதையை ஒதுக்கிவிட்டு, அரசன்-கணிகண்ணர் சம்பந்தப்பட்ட

பகுதியை மட்டுமே உரைத்துச் சென்றமையும் இங்கே எண்ணத்தக்கது. ஆகவே, அறிஞர் வேங்கிடசாமி அவர்கள் கருத்து கூடியதே என்றாலும், ஆழ்வார் அரசன் நடத்தையை ஒருதலைச் சார்பானதாகக் கருதியதை அவருடைய நான்முகன் திருவந்தாதியின் 93-ஆம் செய்யுளில் திருமாலை, "கோனே! குணப்பரனே!"-என மகேந்திரவர்மனின் பெயரிட்டு விளித்துண்மையால் அறிகிறோம். ஒரு சொட்டுத் தண்ணீர் கூடக் கொடுக்காதவளுக்கு 'காவேரி' என்று பெயரானாற்போன்றது மகேந்திரனுக்கு 'குணபரன்' என்ற பெயர்; உண்மையில் அது அனைத்து நற்குணங்களுக்கும் உறைவிடமான திருமாலுக்கே அடுக்கும் என்ற உட்பொருளே 'கோனே! குணப்பரனே!' என்ற ஆழ்வாரின் ஆட்சியில் தொனிக்கின்றது.

கி.பி. 7-ஆம் நூற்றாண்டில் காணாமுகம், பாசுபதம், காபாலிகம் போன்ற சைவக் கிளைச் சமயங்களின் கொட்டம் தலைவிரித் தாடியமை மகேந்திரனின் மத்தவிலாசப் பிரகசன*த்தில் விளக்கமாக விமர்சிக்கப்பட்டு உள்ளது. பெரிய புராணத்திலேயே பிள்ளைக்கறிக்கு ஆசைப்பட்ட அடியாருடையவும், மாற்றான் மனைவியை விரும்பிய அடியாருடையவும் வரலாறுகளைக் காண்கிறோம். நரபலியிட்டு காளி முதலிய தெய்வங்களை வணங்குவோரிடம் வன்முறைகளுக்கு வரம்பே இருக்க வழி இல்லை. சிவபிரானே ஒரு உருத்திர மூர்த்தி! இந்த நிலையில் 'அன்பே சிவம்' என்பது வெறும் விருப்பமேயன்றி உண்மை வழக்காகக் கொள்ளமுடியாது. தம் சமயத்தாரிடம் காணப்பட்ட ஆவேசத்தைத் தணிப்பதற்காகவே திருமூலர் இப்படி ஒரு கோஷத்தைக் கிளப்பிவிட்டிருக்கிறார். முப்புரத்தை மும்மலமாக இவர் திரித்து உரைத்ததனாலும் இவர் தம் சீர்திருத்த முற்போக்கு தெற்றெனத் தெரிகின்றது. சமண, பவுத்தங்கள் செல்வாக்குப் பெற்றிருந்த அந்நாளிலும் சைவமே பெரும்பான்மை மக்களின் சமயமாக இருந்தது.

---

*மத்தவிலாசப் பிரகசனம்-குடியன் கூத்து; ப்ரகசனம்;-கூத்து

அந்த 'மெஜாரிடி' (Majority) பலம் திருடனுக்கு இருட்டைப் போல் பயங்கர வாதிகளுக்கு அனுகூலமாய் அமைந்தது. இந்தச் சூழ்நிலையில் தான் திருமழிசைப் பிரான் தமது புதிய சமயமாகிய வைணவத்தை மக்களிடையே பரப்பிக் கொண்டிருந்தார். சிவ சித்தராக இருந்த இவர் இப்படி மதம் மாறி விட்டதைப் பொறுக்கக்கூடாத சைவத் தீவிரவாதிகள் நகர் எங்கிலும் பயங்கரக் கலகம் செய்தனர். அவர்களைத் திருப்தி செய்வதற்காக புதிய சைவனாகிய மகேந்திரன் ஆழ்வாரை மட்டும் தண்டித்தான். இரண்டாம் குலோத்துங்கனின் நாட்களில் இராமானுஜரைப் போல நாட்டை விட்டு இவர் ஓட வேண்டியிருந்தது.[12] அரசனின் ஒரு தலைச் சார்பான நடவடிக்கை ஆழ்வாருக்குப் பிடிக்கவில்லை. இதுவே மன்னன் மகேந்திர 'குணபர'னிடமும் (பக்தி மார்க்கத்தைத் தழுவிய சைவ, வைணவங்களின் பொதுப்பகை ஆகிய சமண, பவுத்தங்களிடத்திற் காட்டிலும்) சைவத்திடமும் ஆழ்வார் ஏக காலத்தில் வெறுப்புக் காட்டுதற்குக் காரணமாகல் வேண்டும். சைவத்தை எதிர்த்து ஆழ்வார் செய்த புரட்சிக்கு மறைமலை அடிகள் போன்ற முரட்டுச் சைவர்களே பொறுப்பேற்க வேண்டும். இதுவே நமது விளக்கம். சைவப் பேரறிஞர்கள் நன்கு சிந்திப்பார்களாக.

## இன்னும் சில சிறப்பியல்புகள்

திருமழிசைப் பிரானின் ஆயுட் காலத்தை 4700 ஆண்டுகளாக நூல்கள் கூறும். இதில் 47 என்பது மட்டுமே முக்கிய பகுதி (significant figures). நமது கொள்கைப்படி இவரது ஆயுட் காலம் சற்றேறத்தாழ 140 ஆண்டுகளே. மற்றைச் சமயங்களில் அலைந்து திரிந்த 70 ஆண்டுகளையும், குடந்தையில் தங்கியிருந்த 23 ஆண்டுகளையும் இதிலிருந்து கழித்துவிட்டால், எஞ்சி நிற்பது மேலே கண்ட 47 ஆகவே உண்மை குறிப்பிடத் தக்கது. எனவே, ஆழ்வாரின் திரு

12) காண்க மேற்கோள் 4.

வல்லிக்கேணி-திருமழிசை-காஞ்சி வாழ்க்கைக் காலம் இந் 47 ஆண்டுகளாகவே இருக்கவேண்டும். திருவல்லிக் கேணியில் இவர் வதிந்தது 700 ஆண்டுகள் என நூல்கள் கூறும். இதன் பொருள் திருவல்லிக்கேணியில் தொடங்கிய இவரின் வைணவ சமய வாழ்க்கை 70 ஆண்டுகள் என்பதே ஆகலாம். இங்ஙனம், இவர் காலம் ஆகிய கி.பி. 489-680 உறுதிப்படுவதால், இவர் காஞ்சியை விட்டு வெளியேறியதை கி. பி. 607-இல் ஆகக் கொள்ளலாம். ஆழ்வார்கள் அனைவருள்ளும் இவரே நெடுங்காலம் வாழ்ந்த யோகீஸ்வரர் என்னலாம்.

ஆழ்வார் சித்த முறைகளிலும் கைதேர்ந்தவர். சித்த முறை என்பது மாஜிக் (magic) என்று குறிப்பிடப் பெறும் சில தந்திர வித்தைகளையும், தென்னாட்டிற்கே உரிய ஒரு மருத்துவ முறையையும் குறிப்பது. இவருடைய சித்த மருத்துவ ஆற்றலை கிழவியைக் குமரி ஆக்கிய கதையின் வாயிலாக முன்னமே அறிந்துள்ளோம். மாஜிக் ஆற்றலுக்கும் இரண்டு கதைகள் வழங்குகின்றன. விண் வழியாகச் சென்று கொண்டிருந்த சுக்கிரயாரனின் புலிவடி வத்து வாகனப் பொறி ஆழ்வாரின் இருப்பிடத்துக்கு நேராக வந்துற்ற போது, அப்படியே தம்பித்து நின்று விட்டது. கீழே ஆழ்வாரை தவ நிலையில் கண்டு தாழ்ந்து வந்த சித்தன் ஆழ்வாரின் ஆடை கந்தலாய் இருப்பது கண்டு இரங்கி ஒரு பொன்னாடையைப் பரிசளித்தான். ஆனால், ஆழ்வார் தமது சித்து வன்மையால் அதனினும் சிறந்ததோர் அணிகலனை ஆக்கி அச்சித்தனுக்கு அளித்தார். சித்தன் தான் அணிந்திருந்த பொன்னாரத்தைக் கழற்றி அதனை யாவது ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினான். அதை மறுத்து, ஆழ்வார் தமது தாமரை மணிமாலையை அவனுக்குக் காட்ட, அது ஒரு நவமணி மாலைபோல் அவன் கண்களுக்குத் தென்பட்டது சுக்கிரயாரன் ஆழ்வாரின் சித்துத் திறனை மெச்சி, தாழ்ந்து பணிந்து, தன்வழி போய் விட்டானாம்.

ஆழ்வாரின் சித்து வல்லமையை விளக்கும் இரண்டாவது கதையில் முன்னமே நாம் திருமூலர் பற்றிய பகுதியில் கண்ட கொங்கணச் சித்தர் வருகிறார். இவர் அளவில்லாத இரும்பை ஆடகப் பொன் ஆக்க வல்ல குளிகை ஒன்றை ஆழ்வாருக்குப் பரிசு அளித்தார். ஆழ்வாரோ தமது மேனியில் படிந்திருந்த அழுக்கினைத் திரட்டி அவர் முன் வைக்க, அது பசும்பொன்னாய் அவர் கண்களுக்குப் புலப் பட்டது. 'இது மிக அற்புதம்'-என்று வியந்து கூறி அந்தச் சித்தர் அகன்று போனார். சித்தருள் சிவவாக்கியரையும் ஒருவராகக் கூறுவர். இந்த சிவவாக்கியர் திருமழிசைப் பிரானே ஆகக் கூடும். வைணவர்களுள் திழுமழிசைப் பிரான் ஒருவர் மட்டுமே சித்தராகக் கூடுதல் எண்ணத் தக்கது. திவ்யசூரி சரிதம் சூக்திஹாசன் என்ற பெயரை விட்டொழித்து, புலி வாகனத்தை சிங்க வாகனம் ஆக்கி, இதனையும், கதையையும் கொங்கணர் கதையுட னேயே கலந்துவிட்டது. ஆயினும், தற்காலத்தே இதனைத் தமிழில் மொழி பெயர்த்துக் காப்பியம் செய்த வங்கிபுரம் சீனி வாசாச்சாரியார் இச் சிங்க வாகனத்தை விலக்கி விட்டார். புரட்சிப்போக்குடைய வடிவழகிய நம்பிதாசர் இரண்டு சித்தர் கதைகளையுமே வெறும் கற்பனையாகக் கொண்டு விலக்கி விட்டனர். இருந்தும், அண்மையில்(1970)ஆழ்வார்கள் வர லாற்றைத் தமிழிற் பாடிய அறிஞர் டி எஸ். ராஜகோபாலன் அவர்கள் இரண்டு கதைகளையும் கூறிப் பழம் போக்கிலேயே சென்றமை வருந்தத்தக்கது.

இவற்றின் பிறகு நாடு கடத்தப்பட்டு, காஞ்சியிலிருந்து குடந்தைக்குப் போகும் வழியில் ஆழ்வார் சிலகாலம் தில்லையில் வதிந்தமை முன்னமே கூறப்பட்டது. அப்போது ஒரு சமயம் ஒரு பிராமணர் வீட்டுத் திண்ணைப் பக்கமாக இவர் ஒதுங்க நேர்ந்தது. உடனே, உள்ளே வேதம் ஓதிக் கொண்டிருந்தவர்கள் ஓதுதலை நிறுத்தி விட்டனர். அது கண்ட ஆழ்வார் சற்றுத் தள்ளிப் போய் நின்று கொண்டு அந்தப் பிராமணர்களையே உற்றுப் பார்த்துக் கொண்டி

ருந்தார். அவர்களும் தமது பாராயணத்தைத் தொடங்க முயற்சித்தனர். ஆனால், முடியவில்லை; விட்ட இடம் மறந்து போயிற்று. உடனே, ஆழ்வார் சில குறிப்புகள் மூலம் அவ் இடத்தை நினைவுறுத்தினார். அனைவரும் ஆழ்வாரின் வேத சாத்திர ஞானத்தைக் கண்டு வியந்தனர். இந்த வரலாற்றிலிருந்து வேதங்களில் ஒன்றாகிய சோதிடத்திலும் ஆழ்வார்க்கு நல்ல பயிற்சி இருக்கக்கூடுதல் காண்கிறோம். ஆகவே, "தாரா கணப்போர் விரித்து ரைத்தவெந் நாகத் துன்னை"-என்ற அடியை (திரு.ச. விருத்தம். செய் 63) 'தாரா கணப்போர் விரித்துரைத்த என் ஆகத் துன்னை'- எனத் திருத்தி, ஆழ்வார் செய்த தாராகண (அதாவது நட்சத்திரங்கள் பற்றிய சோதிட) நூல் ஒன்றும் இருந்தது என ராகவையங்கார் கருதுவது பொருத்தமாகவே தோன்றுகிறது [13]

தில்லையில் இருந்த சமயத்தில் பெரும்புலியூர் அடிகள் என்ற தீட்சிதர் ஒரு வேள்வி நடத்திக் கொண்டிருந்தார். ஆழ்வாரின் அருஞ் செயற்களை எல்லாம் கண்டு களித்த அடிகள் ஆழ்வாரை யாக சாலைக்கு அழைத்துச் சென்று அக்கிர (தலைமைப்) பூசை செய்விக்க முயன்றார். வழக்கம் போல் எதிர்ப்பு உருவாயிற்று. அடிகளின் வேண்டுகோள் பேரில் சாதித் திமிர் கொண்ட அந்தப் பிராமணர்களுக்கு இறைவன் உறைவிடங் கொண்ட தம் உயிர்நிலையைக் காட்ட வேண்டி

**அக்கரங்கள் அக்கரங்கள் என்றுமாவ தென்**
**கொலோ?**
**இக்குறும்பை நீக்கி என்னை ஈசனுக்க வல்லையேல்,**
**சக்கரங் கொள்கையனே! சடங்கர் வாய் அடங்கிட,**
**உட் கிடந்த வண்ணமே புறம்பொசிந்து காட்டிடே!**

---

13) 1941 - இல் வெளியிடப்பட்ட 3-ஆம் பதிப்பில் (பக். 44&45) காணப்பெறும் இந்தப் பகுதி 2-ஆம் பதிப்பில் இல்லாததால், 1981-இல்வெளியான இதன் மறு அச்சில் இடம் பெற வில்லை.

என்று பாடினார் (தனிப்பாடல்). திருமாலும் அப்படிக்கே இவர் திருமேனியில் தோன்றியதாக வரலாறு. இதன் முக்கிய அம்சம் இவர் பிராமணரோடும் போரிட்டு வாகை சூடியதுதான். அத்துணைப் பழுத்த ஞானம் இருந்தது, நாற் குலங்களிலும் இழிந்த குலத்தில் பிறந்த இவருக்கு. தற்காலத்திய அறிஞர் குப்புஸ்வாமி சாஸ்திரியும் திருமழிசைப் பிரானை பிரம்ம சூத்திர உரைகளிற் கூறப்படும் திராமிட சார்யர்* என்பர்[14]

தில்லையில் இன்னொரு அதிசயமும் நிகழ்ந்ததாக நூல்கள் கூறும். இவ் ஊரில் இவர் சென்ற பக்கமெல்லாம் இறைவன் திரும்பி நின்றாராம். இப்படித் திரும்பிய மூர்த்தி திருமாலாய்த்தான் இருக்க வேண்டும். இருந்தாலும் இவற்றிற்கும் பிறகே, குடந்தையில் இருந்த போது இவர் இயற்றியனவாக நம்பப்படும் இரண்டு பிரபந்தங்களுள்ளும் தில்லை குறிப்பிடப்படவே இல்லை. தில்லையில் திருமால் கோயில் அந்த நாளில் இல்லை என்பதே இதன் பொருள் என்பர் அறிஞர் சீனிவாச அய்யங்கார் அவர்கள் (பக். 305). அரசனுக்கும் அஞ்சாத இவ் வணங்காமுடி முனிவரின் வீரத்தை வியந்து மக்கள் வெள்ளம் இவர் சென்ற பக்கமெல்லாம் இவரைச் சூழ்ந்து கொண்டதையே மேலை வரலாறு குறிக்கலாம் போலத் தோற்றுகின்றது. தில்லை கோவிந்தராஜப் பெருமாள் ஆலயம் நந்தவர்ம பல்லவ மல்லனால் புதிதாகச் சமைக்கப்பட்டதாகக் கருதப்படுகின்றது. இது திருமங்கை மன்னர் பற்றிய (இந்நூலின்) ஐந்தாம் அதிகாரத்தில் காட்டப் பெறும்.

---

* வேதாந்த குருபரம்பரை (6000-படி குருபரம்பரைப் பதிப்பில் உள்ளபடி)

வியாசர் - போதாயனர் - டங்கர் - திரமிடாசார்யர் (திருமழிசைப் பிரான்) - குஹதேவர்-பாருசி இதர இருடிகள்.

14) மேற்கோள் 5. பக். 28.

தத்துவங்களை எண்ணிக்கைகள் ஆக்கி, அந்த எண்களை வைத்து சித்திரக் கவிகள் புனையும் வழக்கம் ஒன்று நெடுங்காலமாக உண்டு. திருஞான சம்பந்தருடையவும், திருமங்கை ஆழ்வாருடையவும், நக்கீரதேவ நாயனாருடையவும் திருவெழுக்கூற்றிருக்கைகள் இதற்குச் சிறந்த எடுத்துக் காட்டுகளாம். திரு மூலரின் திருமந்திரத்திலும், திருமழிசைப் பிரானின் திருச் சந்த விருத்தத்திலும் இம்மாதிரிக் கவிதைகள் நிரம்ப உண்டு*. இவ் வழக்கம் என்று தோற்றிற்று? பெரியவாச்சான் பிள்ளைக்கு முன்பே திருச் சந்த விருத்தத்திற்கு உரை ஒன்று இருந்தது. திருச்சந்தவிருத்தம் 181-ஆம் பாசுரத்தில் "உடைந்த வாலி தந்தனக் குதவவந் திராமனாய்" என்ற அடியுள் "வாலிதந்தனக்கு என்ற தொடரில் மவ்வுக்கு 'ந' ஆதேசமாய் 'தம்பி' என்றத்தை 'தந்' என்று கடைக் குறைத்தலாய்க் கிடக்கிறது என்று ஒரு தமிழன்"- என பெரியவாச்சான் பிள்ளையே எழுதும் உரையால் இதனை அறிகிறோம். வாசுதேவ சிந்தம் என்ற பெயரில் திருச் சந்த விருத்தம் யாப்பருங்கல விருத்தி உரையுள் குறிப்பிடப்படுதலும் முன்பே காட்டப்பட்டது. இதன் பழமை இவற்றால் எல்லாம் நன்கு அறியப்படுகின்றது. எனவே, இதுவே இந்நுறையில் முன்னோடி ஆகலாம் போலத் தெரிகின்றது.

அதுகிடக்க, சம்பந்தருடைய திருப்பாடல்களில் அவர் தம் இளமைக்கேற்ற ஒரு துடிப்பும், மிடுக்கும் காணப்படுகின்றன. அப்பரடிகள் அருளிச் செயல்களில் அவர் வயதிற்கும், ஆழ்ந்த கல்வியறிவிற்கும் ஏற்ற நயமும், பணிவும் பரிணமிக்கின்றன.

---

*"எட்டுமெட்டும் எட்டுமாயோர் ஏழுமேழும் ஏழுமாய்
எட்டு மூன்றும் ஒன்று மாகி நின்றஆதி தேவனை
எட்டினாய வேதமோ(டு) இறைஞ்சிநின்ற
வன்பெயர்
எட்டெழுத்தும் ஓதுவார்கள் வல்லர் வானம்
ஆளவே"--(செ.77)

என்ற செய்யுள் காண்க.

திருமழிசையின் பாடல்களிலோ அவர் அப்பர் பெருமானை விட வயதேறப் பெற்ற நிலையில் பாடப் பட்டனவாய் இருந்தும், சம்பந்தருடையவற்றில் உள்ளதைக் காட்டிலும் அதிகமான மிடுக்கே காணப்படுகின்றது! ஆழ்வார்கள் நாயன்மார்கள் உள்ளிட்ட திருவருட் செல்வர் அனை வருள்ளும் இவர் ஒரு பெரிய நக்ஸலைட் [Naxalite] போல வே தோற்றுகிறார், வயதேறப் பெற்றும் குன்றாத வாலிபத் துடிப்புடன்! இதில் இன்னொரு சிறப்பு என்னவென்றால் 'குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன் என்ற [திரு. ச. வி. 90] இவர் வாக்கின் படியே தாழ்வான குறவர் குலத்தில் பிறந்த இவரிடம் அரிசன வகுப்பின ரான திருப்பாணரிடம் காணப்படும் 'தாழ்ச்சி மனப்பான்மை' கிஞ்சித்தும் காணப்படாததுதான். இவரை பிருகு வமிசத்த வராக நூல்கள் கூறுவது யாருக்கும்பணியாதஇவரது வாழ்வு, வாக்குகளின் வன்மைகளைக் கண்டே எனத் துணிந்து கூற லாம். பார்க்கவர்கள் வீரத்திற்குப் பெயர்பெற்றிருந்தமையைப் புராணங்களில் பரக்கக் காண்கிறோம். காட்டாக, தாசராக்ஞ, ராமாயண, பாரதப் பரசுராமர்கள் மூவரும், மார்க்கண்டேய மகரிஷியும் பார்க்கவர்களே,

சமயத் தமிழில் திருக்குறள் வாடை முதன் முதல் காணப்படுவது திருமழிசைப்பிரானின் வாக்கில்தான். அதாவது, இவர் நூல்களுக்கு முற்பட்ட முதல், இரண்டு, மூன்றாம் திருவந்தாதிகள், மற்றும் காரைக்கால் அம்மை யாரின் திரு இரட்டை மணிமாலை, அற்புதத் திருவந் தாதி, இரண்டு திருவாலங்காட்டுப் பதிகங்கள் ஆகியவற்றுள் எதிலும் குறளோடு ஒற்றுமைப்பட்ட பகுதிகள் இல்லை- என்பது கருத்து. ஆழ்வாரின் நான்முகன் திருவந்தாதி 28-ஆம் செய்யுளின்

''வித்தும் இடல் வேண்டுங் கொல்லோ விடை அடர்த்த
பத்தி உழவன் பழம் புனத்து''-- என்ற அடிகள்

''வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்''--

என்ற குறளை ஒத்துள்ளன. அடுத்து, வான்மீகத்துள் காணப்படாமல், இன்று வழக்கில் உள்ள ராமாயணக் கதைகளின் மூளையை இவர் அருளிச் செயலில்தான் முதன் முதல் காண்கிறோம். மந்தரையின் கூன் முதுகில் ராமபிரான் களிமண் உருண்டைகளைக் கொண்டு அடித்ததாகக் கம்பர் கூறுவது* "கூனகம் புகத் தெறித்த கொற்றவில்லி" (திருச்சந்த வி. 30) எனவும்,

"கொண்டை கொண்ட கோதைமீது தேனுலாவு கூனிகூன்
உண்டைகொண்ட ரங்க வோட்டி உள்மகிழ்ந்த நாதனூர்"

(திருச்ச. வி. 49) எனவும் வரும் திருமழிசைப் பிரான் வாக்குகளிலிருந்து கடன் பெற்றே ஆதல் குறிப்பிடத்தக்கது. 'மன்மருங் கறுத்த மழுவாள் நெடியோன்' என்ற அகப் பாட்டுக் குறிப்பில் (அகம் 220); பரசுராமர் 'நெடியோன்' எனப்படுவதில் அவதாரக் குறிப்பு தென்பட்டாலும் பரிபாடலிலும், பொய்கை, பேய். பூதம், பாண்பெருமாள் ஆகியோர் அருளிச் செயல்களிலும் இவ் அவதாரம் இடம் பெறாதது போலவே திருமழிசைப் பிரான் பாடல்களிலும் இல்லை! அரங்க மென்பர் நான் முகத்து அயன் பணிந்த கோயிலே" என்ற திருச்சந்தத் தொடரில் (எண் 51) அரங்கப்படிம வரலாறு கூறப்பட்டுள்ளது. இவர் பாடிய 14 தமிழ்நாட்டுத் தலங்கள் அரங்கம், அல்லிக்கேணி, அன்பில், ஊரகம், எவ்வுள், கவித்தலம், குடந்தை, குறுங்குடி, கூடல், கோட்டியூர் பாடகம், பேர்நகர், வெஃகா, வேங்கடம் ஆகியன. இவற்றுள் அன்பில், எவ்வுள், கவித்தலம், குறுங்குடி, பேர் நகர் ஆகிய ஐந்தும் இவருக்கு முற்பட்ட மூவர் முதலிகளுள் எவராலும் பாடப்படாதன.

இன்னொரு விஷயத்திலும் திருமழிசைப் பிரானுக்கு முதன்மை கூறலாம். காதலும், வீரமும் கவிதைக் குரிய

*அயோ : மந்த. ப. 41; கிட். அர. பட. 82

கருப்பொருளாக இருந்து வந்த பண்டை இலக்கிய மரபை மறுத்து, இறைவனே அச்சிறப்பிற்குரிய அரும்பொருள் என்று கூறிய முதற்கவி இவரே. "கவிக்குரிய நிறை பொருளை நேர்ப்பட்டேன் யான்"- என்று இவர் கூறுதல் (நான். திரு. 69) காண்க. இப்படிக் கவிக்குரிய நிறை பொருளைக் கண்டுபிடித்து விட்ட பின் 'நாக் கொண்டு மானிடம் பாடேன்'-- (நான். தி. 75) என்று இவர் செய்த பிரகடனமே பிற்காலத்தில் ஆழ்வார்கள் நாயன்மார்கள் அனைவர்க்கும் ஓர் மாக்னகார்டா (Magnacarta) மகா சாசனமாய் அமைந்தது. 'நாமார்க்கும் குடியல்லோம்'— என்ற அப்பர் திருவாக்கு இவ்வழியில் வந்ததேயன்றி வேறில்லை. 'வாய்ச் சொல்லில் வீரரடி, கிளியே!'- என்று பிறர் நையாண்டி செய்யும் அளவிற்கு இல்லாமல், இவர் செயல் வீரர் ஆகவும் இருந்ததை பல்லவ மல்லனோடு ஏற்பட்ட பூசலாலும் அறிந்துள்ளோம். அப்பருடையவும், இவருடையவும் தீவிரப் போக்கிற்கு இருவருமே சிலகாலம் சமணத்தில் இருந்ததே காரணம் ஆகக்கூடும்.

## சாதித்தது என்ன - வீரவைணவம்?

தனிமனிதன் மட்டத்தில் ஜைன, பவுத்த மகா சமயங்களை எதிர்த்துப் போராடிய முதல் சனாதனர் திருமழிசைப் பிரானே. அதாவது, சம்பந்தரின் மாபெரும் போராட்டம் பாண்டியர் தம் வல்லரசின் பேராதரவோடு செய்யப்பட்டது என்பது கருத்து. ஆயினும், திருமழிசைப் பிரானின் சாதனைகளுள் எல்லாம் மிகப்பெரியது சைவத்தின் இரும்புப் பிடியை உடைத் தெறிந்து இவர் இயற்றிய மாபெரும் புரட்சியே. இந்தப் புரட்சியினால் விடுவிக்கப்பட்டதனால் தான் வைணவம் பின்னாளிலாவது தனக்கென்றே ஒரு தனித் தகுதி பெற்ற பெருஞ் சமயமாய் தலையெடுக்க முடிந்தது. பூதத்தார் பாடல்களிலேயே சைவத்தை வெறுத்து வைணவம் செய்த புரட்சியின் வித்துக் களைக் காண்கிறோம் என்பது உண்மை. ஆனது பற்றியே குருபரம்பரைகளில் இவர் திருமாலின் ஐம்பெரும் ஆயுதங்

களில் தண்டு (கதை) அம்சராக வருணிக்கப்படுகிறார். ஆயினும், பூதத்தாரைக் காட்டிலும் திருமழிசைப்பிரானுக்கே இதில் அதிகம் பங்குண்மையை இருவர் அந்தாதிகளையும் நன்கு கற்றோர் அறிவர்.

"உலகாள உனதுதாய் உயிர்வாதை அடைகிறாள்
உதவாதினி ஒருதாமதம் உடனேவழி வைணவா'
என்பதும்

"கொலைவாளினை எடடா மிகுகொடியோர் செயல்
அறவே"-

என்பதுவும் போன்ற வீர வாசகங்களை இவர்தம் நான்முகன் திருவந்தாதியில் கேட்கிறோம். மேலும், இப்புரட்சியின் விளைவாக இவர் நாடு கடத்தப்பட்டதும் இக்கருத்தை மேலும் உறுதி செய்கின்றது. நிலவுலக (பூலோக) வைகுந்தம் ஆகிய திருவரங்கத்தையும், முக்தி தரும் நகரங்கள் ஏழனுள் ஒன்றும், பொய்கை ஆழ்வார் உடையவும், தம்முடையவும் பிறப்பிடமான காஞ்சியையும், விசிஷ்டாத்வைத குருபரம்பரையின் ஆதிநாதனாகிய நம்மாழ்வார் பிறந்தருளிய குருகூரையும், திவ்வியப் பிரபந்தத்தை உலகுய்ய வெளிப்படுத்தி அருளிய ஆசார்ய நாதமுனிகள் பிறப்பிடமான காட்டு (கார் நாட்டு) மன்னார் கோயிலையும் விடுத்து திருக்கச்சி நம்பிகள்

"உலகும் மழிசையும் உள்ளுணர்ந்து தம்மில்
புலவர் புகழ்க் கோலால் தூக்க-உலகுதன்னை
வைத்தெடுத்த பக்கத்தும் மாநீர் மழிசையை
வைத்தெடுத்த பக்கம் வலிது"-எனக் கூறுவரேல்

பார்த்துக் கொள்ளலாம் மழிசைப் பிரான் புரட்சி வைணவத்திற்கு ஆற்றியுள்ள பணிகளின் அருமையை.

பாணாழ்வார் வரலாற்றில் 'விடுதலை! விடுதலை! பறையருக்கும், இங்கு தீய புலையருக்கும் விடுதலை!!!'- எனவும், 'சாதிகள் இல்லையடி பாப்பா'- எனவும் உலகவர்க்குப் பஞ்சராத்திர வைணவம் பறை சாற்றியதைக்

கண்டோம். சாதிக் கொடுமையின் இன்னொரு கோலத்தை 'சாதிக் குறும்பு'-என்று குருபரம்பரைகள் கூறும். செல்வமும், கல்வியும் பற்றிய செருக்கு அல்லது குறும்புகளோடு சாதிச் செருக்கையும் சேர்த்து முக்குறும்புகள் என்றல் வழக்கு. மேல் சாதிப் போர்வையில் ஒழுக்கங் கெட்ட இழிசினர்களும், யந்திரப் போக்கில் பொருள் அறிவின்றியே மந்திர உச்சாடனம் செய்யும் மூடர்களும் குளிர் காய்ந்து கொண்டிருக்கும் கண்ணராவியை இன்னமும் காண்கிறோம். தில்லை தீட்சிதர்களின் இந்த சாதிக் குறும்பையும், குணபரப் பல்லவ மகேந்திர வர்மனின் அதிகாரத் திமிரையும் திருமழிசைப்பிரான் தாம் ஒருவர் தனியரேயாய் எதிர்த்து இழைத்தன வெல்லாம் அறப்போர்களே. இங்ஙனம் ஓயாமல் கடும்போர் நடத்தியதால்தான் இவர் திருமாலின் தோலாத பெருஞ்செல்வத்து ஆழிப்படையின் அமிசமாக குருபரம்பரைகளால் வாயார வாழ்த்தப்படுகிறார்.

கடைசியாக, தென்னாட்டில் பேயார் தொடங்கி வைத்த தனி வைணவ இயக்கமும், பொய்கையார் கண்டு கொடுத்த புரட்சிப் பஞ்சராத்திரமும், பூதத்தாரின் வீர வைணவமும், பாணாழ்வார் பிரபத்தியும் ஆகிய சிற்றாறுகள் அனைத்தும் கலந்தோடிய பேராறே திருமழிசைப் பிரான். முற்காலத்திய வைணவத்தின் முன்னணி (front-line) வீரர்கள் (மூவர் முதலிகள், பாணர், மழிசைப் பிரான் ஆகிய) ஐவருள்ளும் சிறப்பால் முதல்வர் திருமழிசைப் பிரானேஎன்பதற்கு ஐயமில்லை தமிழ் இலக்கிய வரலாற்றுத் தந்தையருள் ஒருவரான அறிஞர் சீனிவாச அய்யங்காரும் ஆழ்வார் பதின்மரில் சிறந்தோர் மூவருள்* ஒருவராக இவரைத் தேர்ந்தனர்.

### ஆசிரியரின் தனியன்

மானுடம் பாடவே மறுத்தான்; மாலலால்
தேவுவேறில்லை-என்(று) அறுத்தான்; வந்தே
மாதர(ம்) மாலியம் வாழ்கவென்(று) எடுத்தான்,
மாகுரல் புரட்சியின் மழிசைக்கு இறைவனே.

*ஏனை இருவர்—திருமங்கை மன்னரும், நம்மாழ்வாரும்.

# 3. புரட்சியின் மறுமலர்ச்சி
## (கி. பி. 650 - 700)

*விப்பிரநாராயணர் — பால சந்நியாசி*

ஆழ்வார்கள் பன்னிருவருள் ஆண்டாளையும், மதுர கவிகளையும் சிலர் ஆழ்வார்களாக ஒப்புக் கொள்வதில்லை. மணவாள மாமுனிகளின் உபதேச ரத்தின மாலையைச் சேர்ந்த

**பொய்கையார், பூதத்தார், பேயார், புகழ்மழிசை**
**அய்யன் அருண்மாறன், சேரலர்கோன்-துய்ய பட்ட**
**நாதன், அன்பர்தாள்தூளி, நற்பாணன், நற் கலியன்**
**ஈதிவர்தோற் றத்தடைவாம் இங்கு-**

என்ற நான்காம் செய்யுளில் இம் மரபைக் காணலாம். ஏனைப் பதின்மருள் தொண்டரடிப் பொடிகளும் பெரியாழ்வாரும் மட்டுமே பிராமணர்கள். இதில் ஒரு விசேடம் என்ன வென்றால் இருவருமே மூங்கிற் குடியினர் ஆவதுதான். பெரியாழ்வாருடையதாகக் கூறப்படும் 'வேயர் குலம்' என்ற தொடரில் 'வேய்' மூங்கில் என்ற பொருளினதாகும். இன்னொரு சிறப்பு இருவருடையவும் பிறந்த தேதிகள் குருபரம் பரைகளிற் காணப்படும் குறிப்புகளிலிருந்து ஒன்றிற்கொன்று அணித்தான கி.பி. 27-5-725உம், கி பி. 16-12-727உம் ஆவதே. இராமானுஜ நூற்றந்தாதியுங் கூட இவ்விரு ஆழ்வார்களையும் இடைக் காலத்தினராகவே கூறுகின்றது.

சோணாட்டிலே காவிரியின் தென்கரையில் பாபனாசம் வட்டத்தைச் சேர்ந்த புள்ளம்பூதங்குடிக் கண்மையில உள்ள மண்டங்குடியில் முன்குடுமிச் சோழியப் பிராமணர் வகுப்பில் மூங்கிற் குடியினரான விசாரதரின் அருந்தவப் புதல்வர் விப்பிர நாராயணர். இளம் பிராயத்தேயே அந்தணர்க்குரிய கலைகள் அனைத்திலும் தேர்ச்சி பெற்றுவிட்டிருந்த இவர் தாம் உலகில் வந்த காரியத்தைத் தொடங்குவதற்காக திருவரங்கம் வந்து சேர்ந்தார்; பெரியாழ்வாரைப் போல நந்தவனம் ஒன்று அமைத்து பெரிய பெருமாளுக்கு பூமாலை தொடுத்துக் கொடுக்கும் பணியில் ஈடுபட்டார்.

சா[illegible]

அக்காலத்தில், தேவதேவி என்பாள் ஒரு கணிகை; உறையூர்ச் சோழனின் அவையில் ஆடல் புரிந்து வந்தவள். அரசவையில் தனது பணியை முடித்துக் கொண்டு ஊருக்குத் திரும்பினாள், வழக்கம் போல, தன் தமக்கையோடும் கூட. வழியில் களைப்புற்ற அவள் ஆழ்வாரின் நந்தவனத்து அழகில் ஈடுபட்டு, அங்கே தங்கிச் சற்று இளைப்பாறினாள். அந்து போழ்து, விப்பிரநாராயணர்-அப்பக்கமாகச் சென்றவர்-அவளைக் கொஞ்சமும் ஏறெடுத்துப் பார்க்கவே இல்லை. சினத்தொடு வியப்பு முற்ற தேவதேவி தன் தமக்கையைப் பார்த்து வினவினாள்-“யார் இந்தக் கபோதி” என்று.

“கலையக் கூடிய இளமை வேடத்தில் வெறுப்புற்ற விரதர் விப்பிர நாராயணர்”-விடையிறுத்தாள் தமக்கை.

“ஓகோ, இவர்தானா அந்த விப்பிர-நாராயணர்! சரி, எப்படியும் இவரை என் வசப்படுத்துவேன்”-சவால் விட்டாள் தங்கை.

“வசப்படுத்தி விட்டால், உனக்கு நான் ஆறு மாத காலம் அடிமை செய்வேன்”-அந்தச் சவாலை ஏற்றுக் கொண்டாள் தமக்கை.

“தவறினால், உனக்கு நான் அது செய்வேன்”- சூள் உரைத்தாள் இளையவள். உடனே புறப்பட்டும் விட்டாள்,

அந்த யோகி இருந்த இடம் நோக்கி. அழகுக்கு அழகு செய்த அணிகலன்களைக் களைந்து விட்டு எளியதோர்க் கோலம் பூண்டு எம்பெருமான் மேல் பெரிதும் நேசமுடையவள் போல அடிகளை அணுகி "ஐயன்மீர்! அடியேன் உறையூர் அரசவையில் பணிபுரியும் கணிகை ஆவேன். தேவதேவி என்று என்னை அழைப்பர். எனது தொழிலில் எனக்கு எள்ளளவும் நிம்மதியே இல்லை. அரங்க நகர் அப்பனுக்கு அடிமை பூண்ட தேவரீர்க்கு ஏவல் செய்யும் விருப்பினேன் வந்தடைந்தேன்; இவ் எளியேனை இன்னள் என இகழாது ஏற்றருள வேண்டும்"-இரந்து நின்றாள். வேசியின் வேடத்தில் ஆசிரம வாசிகளில் எவருக்குமே நம்பிக்கை இல்லை. ஆயினும், வஞ்சம் அறியாத அப் பால சந்நியாசி அவ் இளையவளை வீடணனுக்கு இராமபிரான் காட்டிய கருணையை எண்ணி ஏற்றுக் கொண்டார். கவர்ச்சியும், குறிப்பறிந்து செய்து வந்த சேவையின் செம்மையும் யோகியின் அடிமனத்தில் அவரையும் அறியாமல் அவளுக்கு ஒரு தனியிடத்தை விரைவிலேயே பிடித்துக் கொடுத்து விட்டன!

அது மழைக் காலம். அப்போது நல்ல மழை. நல்ல காலமாக விப்பிர நாராயணர் தம் குடிசைக்குள்ளேயே இருந்தார். ஆனால், பாவம், எங்கோ ஒரு மூலையில் வேலை பார்த்துக் கொண்டிருந்த தேவி மட்டும் மழையில் அகப்பட்டுக் கொண்டாள். யோகியின் குடிசைச் சுவற்றிலிருந்து சற்றே வெளியில் நீட்டிக் கொண்டிருந்த சாரற் பக்கம் ஓடி வந்து ஒண்டிக் கொண்டாள் அவள். சாளரத்தின் வழியாக அவ் அவல நிலையைக் கண்ணுற்ற யோகியும் இரக்க மிகக் கொண்டு அவளை உள்ளே அனுமதித்தார். தயங்கிய வண்ணமே உட்புக்க சீடையும் உடம்பைத் தன்னிரு கைகளாலும் இறுகப் போர்த்துக் கொண்டுதான் நின்றாள். ஆயினும், அம் மென்மையான உடலம் நடுங்கவே செய்தது. மயிலின் மாட்டு ஆவியர் கோமான் பேகன் கொண்டது போல மனிதாபிமானத்தால்

யோகியின் நெஞ்சு நெகிழ்ந்தது; தமது உத்தரீயம் ஒன்றை எடுத்துக் கொடுத்து ஈர உடையை மாற்றிக் கொள்ளப் பணித்தார். ஒதுப்புறமாகவே இருந்து அவளும் உடையை மாற்றிக் கொண்டா ளானாலும், பருவத்தின் மெருகேறிய அவள் மேனி எழில் அந்த ஒளி மழுங்கிய நிலையிலும் அவர் கண்ணில் படாமல் இல்லை. மின் வெட்டுப் போல ஒரு கணப் பொழுதில் முடிந்து விட்ட அந் நிகழ்ச்சிகளின் பிம்ப மட்டும் வாலிபத்தின் வரம்பைக் கடவாத அவ் யோகியின் கண்களில் அப்படியே நிலைத்து நின்றது; உள்ளுக்குள்ளே என்னென்னவோ செய்ததுங்கூட; வெளியில் காட்டிக் கொள்ளாமல் படுக்கைக் கேகினார். சின்னேரத்திற் கெல்லாம மின்னல் பாய்ந்தது போல் அவர் உடம்பு சிலிர்த்தது. கண் விழித்துப் பார்த்தார். தேவி தன் குருநாதரின் கால்களைப் பிடித்து விட்டுக் கொண்டிருந்தாள். யோகியின் பார்வையில் அவளுக்கும் ஓர் துணுக்கம் ஏற்பட்டது. அவள் மயங்கி அவர் மீது சாய்ந்தாள். யோகியால் தடுக்கக் கூடவில்லை; தப்பித்துக் கொள்ளவும் முடியவில்லை. இருவருமே சின்னேரம் சிந்தை மயங்கி மெய்ம் மறந்தனர். புனல் தரு புணர்ச்சியில் இது ஒரு புது வகை!

அன்று வரை இந்தக் கல்லும் கரையுமோ?-என்று நாளுக்கு நாள் நம்பிக்கை தளர்ந்து செத்துக் கொண்டு, அந்த அளவிற்கு அவர்பால் மதிப்பையும் வளர்த்து பக்குவப் பட்டு வந்த அவள் மனம் அந் நிகழ்ச்சிக்குப் பிறகு, பளிச் சென்று மாறிவிட்டது. வெற்றிப் போதையில் பண்டைக் கர்வம் மண்டைக்கேறி விட்டது, விக்ரமாதித்தன் கதையில் வரும் வேதாளத்தைப் போல. இரண்டொரு நாட்களுக்குள் கரம்பனூரில் இருந்த தன் இல்லத்திற்குத் திரும்பி விட்டாள் அவள். யோகியால் மட்டும் தேவியின் துணையின்றி இருக்கக் கூடவில்லை; நிழலைப்போலப் பின் தொடர்ந்தார்; பொருள் செலுத்தியே அவளைக் காணவேண்டியிருந்தது; யோகியும் பின் வாங்க வில்லை. அதனால், கோவலனைப்

போல் பரம்பரைப் பணக்காரராய் இருந்த அவர் சொத் தெல்லாம் காலப் போக்கில் கரைந்து போயிற்று, திருவரங் கத்தில் அமைத்திருந்த நந்தவனத்தைத் தவிர வேறொன்றும் அவர் கையில் மிஞ்ச வில்லை ஆயினும், அந்த சிற்றின்ப மயக்கத்திலும் அரங்கனை மறவா திருந்த படியால், அவரால் அதனை விற்கக் கூடவில்லை. "இரு பாடெரி கொள்ளியினுள் எறும்பேபோல்" துடித்தார். ஆனால், இரக்கமின்றி தேவியின் தாய் மட்டும் அவரை வெளியில் தள்ளித் தாளிட்டாள். வேசியின் வீட்டு வாசலில் அரங்க தாசரின் பாட்டைக் கண்ட ஆத்திகர் அகங்கரைந் தனர்; ஆனால், இளைஞரோ கள்ள வேடம் புனைந்த தென எள்ளி நகையாடினர்.

*பெண் பித்தர் தொண்டரடிப் பொடி ஆனது*

மாலை சாய்ந்து இரவுப் பொழுதேறி மெல்லமெல்ல எப்படியோ போய் விட்டிருந்தது. ஊரடங்கி உறக்கமேற் கொண்டதும், ஒருவர் தேவியின் வீட்டுக் கதவைத் தட்டி னார். அதை எதிர் பார்த்தவள் போல் தேவியின் தாய் வந்து தாழ் நீக்கினாள். 'அழகிய மணவாளர்' என்று தம்மை அறிமுகப்படுத்திக் கொண்ட அந்த நபர் ஒரு பொற்பாத்திரத்தைக் கொடுத்து, 'விப்பிர நாராயணர் அனுப்பினார்'-என்று கூறிப் போய் விட்டார். பெற்றுக் கொண்ட தேவியின் தாய் புழக்கடைப் பக்கம் மயங்கிக் கிடந்த விப்பிர நாராயணரை எடுத்துச் சென்று தேற்றி, தேவியிடம் சேர்ப்பித்தாள். அந்த இரவு இன்பமாகக் கழிந்தது.

மறுநாள் காலை. திருவரங்கப் பெருங்கோயில் வழக்கம் போலத் திறக்கப்பட்டது. பூசனைக் குரிய பொற் பாத்திரங் களுள் ஒன்று காணப்பட வில்லை. செய்தி உடனே சோழ மன்னனுக்குத் தெரிவிக்கப் பட்டது. காவலர் விரைந்தனர். தேவியின் வீட்டு வேலைக்காரியின் மூலம் அது அவள் வீட்டில் இருப்பது தெரிந்தது. வேசியின் வீட் டார் கைது செய்யப்பட்டு அரசன் முன் நிறுத்தப்பட்டனர்.

விசாரணையில் பாத்திரம் விப்பிர நாராயணரின் சீடராகிய அழகிய மணவாளரால் கொடுக்கப் பட்டமை வெளியாயிற்று. அவர்கள் விடுவிக்கப்பட்டனர்; விப்பிர நாராயணர் கூண்டில் நிறுத்தப் பட்டார். 'அது விஷயம் தமக்கொன்றும் தெரியாது' என அவர் அரங்கன் மேல் ஆணையிட்டுக் கொடுத்த வாக்கு மூலத்தின் பேரில் வழக்கு ஒத்திவைக்கப் பட்டது விப்பிர நாராயணர் காவலில் வைக்கப் பட்டார்.

நாட்கள் பல உருண்டோடின. பாத்திரத்தைத் திருடிய அழகிய மணவாளன் யார்?-என்று எவ்வளவு துருவிப் பார்த்தும் யாதொரு துப்பும் துலங்கவில்லை. குறும்பு செய்த துட்டன் திருவானைக்காவைச் சேர்ந்த ஒரு சைவத் தீவிரவாதியே ஆதல் வேண்டும். தொண்டரடிப் பொடிகளை இழிவு செய்யும் உள்ளார்ந்த நோக்கம் இச் செயலில் தென்படுவதால், அவர்களைத் தவிர வேறு யாரும் இதைச் செய்திருக்க முடியாது. இவனும், இவனுக்கு உதவியாக இருந்த அரங்க நகர் பூசனைக்காரனும் காஞ்சி நகரில் அழகிய மணவாளரைத் தொழுது அகப்படாமல் தப்பித்துக் கொண்டனர். 'கப்பல் ஓட்டிய தமிழ'னைப் போல விப்பிர நாராயணர் மட்டும் சிறையில் கிடந்து வாடினார். சீடர் குழாமெல்லாம் கூடி, தம் குருநாதர் விடுதலைக்காக திருவரங்கப் பெருங்கோயிலுள் நாதனை வேண்டி நாளும் தவம் கிடந்தனர். இதற்கிடையில், உலகறிய வீற்றிருந்த பெரு வாழ்விற்கு இப்படி ஒரு இழிதகவும் வந்துற்றதே!-என எண்ணி ஏங்கினார் ஆழ்வார். ஏங்கியேங்கி மனம் இடிந்த அவரின் உடல் நலம் மிகவும் மோசம் அடைந்தது; படுத்த படுக்கையாகி விட்டார். உற்ற பழியை உயிரைப் பலியிட்டுத் துடைக்க வேண்டிய நேரம் நெருங்கி விட்டது போல் இருந்தது. அந்த நிலையிலும் நாமட்டும், "ரங்கா! ரங்கா!"- என்ற திருநாம ஸ்மரணையை மறக்கவேயில்லை. அம் மகாத்மாவைக் காண வந்த மக்கள் வெள்ளம் எல்லாம் 'இது என்ன பாவமோ!'- என்று மிகவும் இரக்கப் பட்டனர். ஏதும் அறியாத அப் பாவியை ஏமாற்றி, தனது அகம்பாவத்தினால் இப்படி

அம்பலத்திற்குக் கொண்டு வந்து நிறுத்தி விட்ட பாவம் எதிற் சென்று முடியுமோ?'- என்று வயிர மனத்து வஞ்ச மகள் தேவியும் உள்ளுக்குள் அஞ்சினாள். ஒவ்வொரு நாள் நகர் சோதனையின் போதும் மக்களிடம் விப்பிர நாரா யணர் பால் எழுந்த பரிவைக் கண்ட அரசன் மனத்தில் 'கண்ணகியின் திறத்துத் தென்னவர் கோமான் போல, அப்பெருந் துறவிக்கு ஏதும் முறைகேடு செய்து விட்டோ மோ'-என்ற கவலையும், அச்சமும் தலை தூக்கின. ஒரு நாள் விடியலிற் கண்ட கனவின் போது, "நாமே நீர் தேடும் அழகிய மணவாளன். நம் மனக் கினிய தொண் டரைத் தடுத்தாட் கொள்ள வேண்டியோர் திருவிளை யாடல் செய்தோம். ஆகவே, விப்பிர நாராயணரை உடனே விடுதலை செய்க"-என்றொரு அசரீரி அரங்கப் பிரான் ஆணையாக எழுந்தது. கண் விழித்த சோழன் அடிகளிடம் ஓடி வந்து, தான் கண்ட கனவைக் கூறி, சிறைநீடு அளித்து, சிறப்புகள் பல செய்தான். விப்பிர நாராயணர் உய்ய கொண்ட பெருமானின் கருணைத் திறத்தை எண்ணி யெண்ணி, நெஞ்சு நெக்குருகி, 'தொண்டரடிப் பொடி'-என்ற தாச நாமம் தரித்து தமது தொல்லைத் தொண்டிற்கே மீண்டனர். திருமாலையும், தேனைத் தித்திக்கும் திருப் பள்ளியெழுச்சியும் ஆம் பாமாலை களைத் தொடுத்து, பூமாலைகளோடு உடன் சார்த்தித் தம் பண்டைப் பெருநிலை வந்து எய்தப் பெற்றார் நம் தொண்டரடிப் பொடிகள் எனச் சுருதிகள் முழங்குகின்றன.

*தேவதேவி பற்றிய வரலாறு உண்மையா?*

விப்பிர நாராயணர் அருளிச் செய்த திருமாலையுள்

**"மெய்யெலாம் போகவிட்டு விரிகுழலாரிற் பட்டு**
**பொய்யெலாம் பொதிந்து நின்ற போழ்க்கனேன்"-**
**(திருமாலை33)** எனவும்

"சூதனாய்க் கள்வனாகித் தூர்த்தரோ டிசைந்த காலம்
மாதரார் கயற்கண் என்னும் வலையுட்பட் டழுந்துவேனை
'போதரே'-என்று சொல்லிப் புந்தியுள் புக்குத் தன்பால்
ஆதரம் பெருகவைத்த அழகனூர் அரங்க மன்றே"-
(திருமாலை 16, எனவும்

வரூஉம் அடிகளில் வீசுவது இவர் தேவதேவியோடு ஆடிய காதல் நாடகத்தின் வாடையே என்பது பொது வான நம்பிக்கை. இந்த வரிகளில் இருந்தே மேற்படி வரலாறு படைத்துக் கொள்ளப்பட்டிருக்கலாம் என்று ஒரு கருத்தும் நிலவுவதாக பி. ஸ்ரீ.[1] அவர்கள் குறித்துள்ளனர். ஆனால், 'தேவதேவி; அதிலும் குறிப்பாக, கரம்பனூர்க் குரியவள்' என்ற திட்ட வட்டமான செய்திகளில் உள்ளூர உண்மை ஒன்று ஒளிர்ந்து கொண்டுதான் இருக்கிறது.

விப்பிரநாராயணர்-தேவதேவி பற்றிய உரைகள் எல்லாம் உண்மை வரலாறே ஆகக்கூடுதலை வேறொரு விதத்தாலும் ஊகிக்கலாம். வெறுங் கவிஞர் எல்லாம் ஆழ்வார் ஆகக் கூடாமையை, சிறந்த வைணவரும், பல்லவர் காலத்தினருமே யான 'பாரத வெண்பா'—பாடிய பெருந்தேவனார்க்கு அப் பெரும்பதம் கிடைக்காமையிலிருந்து எளிதில் உணரலாம். பழைய நூலை அது எவ்வளவு பயனற்றதாக இருந்தாலும் செந்தமிழ்ப் பனுவல் என்று கூறிப் பழக்கப்பட்ட நம் தமிழ் நாட்டில் திருமாலைப் பாடிய பரிபாடல் ஆசிரியர்களுக்கும் கூட இச் சிறப்பு இல்லாமையும் எண்ணத் தக்கது. ஆகவே, அருமை செய்தார்க்கே இப் பெருமை அளிக்கப்பட்ட மையைக் காண்கிறோம். 'செயற்கரிய செய்வாரே பெரியர்' என்பது வள்ளுவர் வாக்கு அல்லவா? ஆழ்வாராகக் கருதப்

---

1. துயிலெழுப்பிய தொண்டர் பக். 29, 30, & 32

படும் அளவிற்கு விப்பிர நாராயணர் வாழ்க்கையில் நிகழ்ந்த அதிசயம் அல்லது அற்புதந்தான் என்ன? இவர் தேவ தேவியோடு ஆடிய ஆட்டத்தின் இறுதியில் வந்துற்ற இழிவின் போது அரங்கத் தம்மான் தலையிட்டு தடுத்தாட் கொண்டதாக மக்கள் நம்பும் படிக்கு நிகழ்ச்சிகளின் நிரல் அமைந்ததன்றோ? இராமாயணத்திற்குக் கைகேயியின் மனமாற்றம் அச்சாணியாக அமைந்ததை,

**அரக்கர் பாவமும், அல்லவர் இயற்றிய அறமும்**
**துரக்க நல்லருள் துறந்தனள் தூமொழி மடமான்**
**இரக்கம் இன்மையன் றோவின் றுலகங்கள் இராமன்**
**பரக்கும் தொல்புகழ் அமுதினைப் பருகுகின் றதுவே-**

எனக் கம்பர் பெருமான் கற்பனை செய்தவாறே தேவதேவி யின் நெஞ்சம் இல்லையேல், விப்பிர நாராயணரின் மன் புகழ் இல்லை என்றே எளிதிற் கூறி விடலாம். சொல்லப் போனால், வைணவத்திற்குச் சுவைக் கூட்டும் முப்பெருங் காதல் ஓவியங்களுள் முதலாவது விப்பிர நாராயண ஓவியம், தேவதேவி என்னும் கலையுலக நட்சத்திரமும் கலந் தாடிய நாடகமே. 'விப்பிர நாராயணா' என்ற தெலுங்குத் திரைக் காவியத்தை வைணவத்தின் சிலப்பதிகாரமாதை காணக் கொடுத்து வைத்த யார்க்கும் ஆழ்வாரின் ரங்க நாம ஸ்மரணையின் ரீங்காரம் காதுகளில் ஒலித்த வண்ணமே இருக்கும்.

---

*முப்பெருங் காதல் ஓவியங்கள் ஆவன-

1) விப்பிர நாராயணர்-தேவதேவி காதல் நாடகம்.
2) குடிக் கொடுத்த சுடர்க் கொடி அரங்கன் மேல் காமம் காழ்க் கொண்டு கடத்திய கைக்கிளை வாழ்க்கை.
3) திருமங்கை மன்னர்-குமுதவல்லித் தம்பதிகளின் அன்பின் ஐந்திணைக் காதல் வாழ்க்கை.

அரங்கர் விப்பிர நாராயணர் சார்பாக தேவதேவியின் வீட்டுக்கு நடந்ததாகக் கூறப்படுவதை சுந்தரருக்காக சிவபிரான் பரவை நாச்சியாரிடம் தூது சென்றதோடு ஒப்பிட்டு, விப்பிர நாராயணரை வைணவத் 'தம்பிரான் தோழர்' என பி. ஸ்ரீ அவர்கள் வருணித்துள்ளனர். இதனால் விப்பிர நாராயணர் வரலாற்றை சுந்தரர் வரலாற்றின் வைணவப் பதிப்பாக நாம் கருதிக் கொள்ளக் கூடாது. ஒரே மாதிரியான இரண்டு வரலாறுகளை வீரபாண்டியக் கட்டபொம்மன்-ஊமைத்துரை வரலாற்றிலும், மருது பாண்டியர்கள் வரலாற்றிலும் நாம் நன்கு அறிந்துள்ளோம். இதை நாம் ஏன் கூறுகிறோமென்றால், சிலர் வைணவம் எல்லாவற்றிலும் சைவத்தைப் பார்த்து காப்பி அடித்ததாகக் கூறுவதையே தமது வாழ்க்கைப் பெரு நோக்காகக் கொண்டுள்ளனர்!

தொண்டரடிப் பொடிகள் என்ற தாச நாமத்தை விப்பிர நாராயணர் தரித்துக் கொண்டது தேவதேவியோடு நடத்திய வாழ்க்கையில் ஏற்பட்ட திருப்பத்தின் பிறகே என்பது உண்மையாதலால், இந் நாமத்தை முத்திரைக் கவியில் கொண்டிலங்கும் இவரது இரண்டு பிரபந்தங்களும் கூட இந்நிகழ்ச்சியின் பிறகே செய்யப்பட்டன என்ற நம்பிக்கை உறுதிப் படுகின்றது. அணில்கள் சேது பந்தனம்செய்ய இராமபிரானுக்கு உதவியதாக நாட்டு மக்களிடையே நிலவுகின்ற கதையை முதன் முதலாக நாம் காண்பது அடிகளின்

**"குரங்குகள் மலையை நூக்க குளித்துதாம்**
**புரண்டிட் டோடி**
**தரங்நீர் அடைக்க லுற்ற சலமிலா அணிலும்**
**போலேன்"** - (திருமாலை-27)

**என்ற வாக்கிலேயே என்பதும் ஈண்டு குறிப்பிடத் தக்கது. ஆனால், இந்தக் கதையை ஒட்டி கம்பர் தமது பார காவி**

---

**2. மேற்கோள் 1. பக். 33-7**

யத்தில் ஏதும் கூறவில்லை. எனவே, வேறு பொருளும் இதற்கு இருக்கக் கூடுமோ என்பதும் ஆராயத் தக்கதே. 'சலமிலா வணிலும்' என்பதை 'சலம்இலா வள்நிலமும்' என மாற்றிக் கொண்டு நீரில்லாத (சலம்-நீர்) வரண்ட (வள்-வறண்ட) நிலமும் போல்வேன் எனப் பொருள் செய்தார், அறிஞர் ஸ்ரீநிவாச முதலியார்[3] அவர்கள். பெரிய வாச்சான் பிள்ளை செய்த 'பாசுரப்படி ராமாயணம்'-என்ற தொகுப்பிலும் இவ் 'அணில் கதை' இடம் பெறாததால், இது பிற்காலத்திய கற்பனையே-என்ற முதலியார் அவர்கள் கருத்து உறுதிப்படுத்துகின்றது.

ஆழ்வார் காலம்

இவர் காலத்தைப் பற்றிய ஆராய்ச்சிக்கு சிறந்த கருவியாக உள்ளது திருமங்கை மன்னர் திருவரங்கப் பெருங் கோயிலின் நான்காம் திருச் சுற்றைக் கட்டிய போது தொண்டரடிப் பொடிகள் திருப்பணி செய்து வந்த இடம் குறுக்கிட, அதை விட்டொதுங்கி, வேறு பக்கமாகத் தம் கட்டளைப் பணியைச் செய்து முடித்தார் எனவும், அது கண்டு களிகூர்ந்த அடிகள் திருமாலை கொய்கிற தமது ஆயுதத்துக்கு திருமங்கை மன்னரின் விருதுகளில் ஒன்றான 'அருள்மாரி' என்ற பெயரை இட்டுச் சிறப்பித்தனர் எனவும் குருபரம்பரைகள் கூறும் வரலாறே. இதில் தொண்டரடிப் பொடிகள் திருமங்கை மன்னருக்கு மூத்த சமகாலத்தவராதல் தெற்றெனத் தெரிகின்றது.

"சுரும்பமர் சோலைசூழ்ந் தரங்கமா கோயில் கொண்ட
கரும்பினைக் கண்டுகொண்டென் கண்ணிணை களிக்கு மாறே"-என்ற திருமாலை

17-ஆம் பாசுரத்தின் அடிகளை திருமங்கை மன்னா தமது திருக் குறுந்தாண்டகத்தின் 13-ஆம் செய்யுளுள் எழுத்துப்

3. திவ்விய பிரபந்தமும், திவ்யார்த்த தீபிகை உரையும்

பிசகாமல் எடுத்து ஆண்டுண்மையும் இதற்குத் துணை ஆகின்றது. ஆதலின், சமீபத்தில் ராகவையங்கார்[4] அவர்கள் திருமங்கை மன்னரின் காலத்தை கி.பி. 710-90 ஆகக் கொண்ட கொள்கை வழி நோக்கினுங் கூட, அவர் இதே பட்டியலில் தொண்டரடிப் பொடிகளுக்கு கி.பி. 740-780-ஐ உரித்தாக்கியமை எட்டுணையும் பொருந்துவதாக இல்லை. மேலும், இவர் அடிகளுக்குக் கொண்ட ஆயுள் நாற்பது ஆண்டே. ஆனால் குருபரம்பரையில் இது நூற்றைந்து என்றே கூறப்படுகின்றது. இனி, திருமங்கை மன்னர் காலம் கி.பி. 716-821 ஆதல் நமது ஆராய்ச்சியில் நன்கு புலப்படுகின்றது. இது இவ் ஆழ்வார் பற்றிய ஐந்தாம் அதிகாரத்தில் காட்டப் பெறும். இங்கு நாம் திருமங்கை மன்னர் திருவரங்கப் பெருங் கோயிலைத் தமது வாழ்க்கையின் இடைக் காலத்தே கட்டினார் எனக் கொண்டு நோக்குமிடத்து, இக் காலம் கி.பி. 770-ஐ ஒட்டியதாகின்றது. இக். கி.பி. 770-இல் திருமங்கை மன்னரின் வயது சுமார் 55 ஆவதால், தொண்டரடிப் பொடிகளுடையதை சுமார் எழுபதாகக் கொள்ளலாம். தொண்டரடிப் பொடிகளின் ஆயுட் காலத்தை மூவாயிரப்படி குருபரம்பரை 105 ஆண்டாகக் கூறுவதால், இவர் காலத்தை கி.பி. 700-800 ஆகக் கொள்ளலாம் இவர் பிறந்த ஆண்டு [பிரபவ], திங்கள் [மார்கழி], நட்சத்திரம் [கேட்டை] ஆகியவற்றை மட்டும் ஒப்புக் கொண்டால், இந்த பிரபவ கி.பி. 667-ஐ பிரபவ ஆண்டே ஆக வேண்டுதல் காணலாம். எனவே, இவர் காலம் கி.பி 667-772 ஆகும்.

ஆழ்வாரின் காலத்தை அரண் செய்யும் வேறு சான்றுகளும் உள்ளன. கி.பி. 770 இல் ஜடில பராந்தகனால் வெளியிடப்பட்ட வேள்விக்குடிச் செப்பேடுகளின் இறுதியில் காணப்படும் சுலோகங்கள் நான்கு விஷ்ணு தருமோத்திரம் என்ற வடமொழி நூலைச் சேர்ந்தன வாகத் தெரிகிறது. இங்ஙனம் தென்னாட்டினர்க்கு அறிமுகமாய் இருந்த இந்த

4. இலக்கியச் சாஸன வழக்காறுகள் பக். 299.

நூலின் 17-ஆம் அத்தியாயத்துள் கூறப்படும் க்ஷத்திர பந்துவின் வரலாறு, திரு மாலையின் 4-ஆம் செய்யுளுள்ளும் குறிப்பிடப்படுவதைக் கண்ட திரு கோபிநாத ராவ் அவர்கள் இவ் வரலாற்றை தொண்டரடிப் பொடிகள் விஷ்ணு தருமோத்திரத்திலிருந்தே பெற்றிருக்க வேண்டுமென முடிந்தார். [பக். 20] திருமாலையின் 12-ஆம் செய்யுளிற் காணும் முத்கலன் வரலாறு விஷ்ணு தருமோத்திரத்தின் 90-ஆம் அத்தியாயத்துள் உண்மையை திருவாளர் சுப்பு ரெட்டியார் அவர்கள் [பக். 181] சுட்டிக் காட்டியுள்ளனர். கி.பி. 770-இல் எடுத்தாளப்படும் அளவுக்கு மக்களிடையே பிரபலம் அடைந்து விட்டிருந்த இந்த விஷ்ணு தருமோத்திரம் தென்னாடு புகுந்ததைக் கி.பி. 670 ஆகத் தயக்கமின்றிக் கொள்ளலாம். கி.பி. 400 அளவில்* செய்யப்பட்டதாகத் தோன்றும் விஷ்ணு தருமோத்திரத்தின் வாடை எதுவும் முதலாழ்வார்கள் உரையிலும், திருமழிசைப் பிரான்

---

*விஷ்ணு தருமோத்திரம் பதினென் உப புராணங்களுள் ஒன்று. கி.பி 628-இல் உபகுப்தரால் செய்யப்பட்ட பிரம்மஸ்புட சித்தாந்தத்திலிருந்தே விஷ்ணு தருமோத்திரம் பைதாமக சித்தாந்தத்தைக் கடன் பெற்று வழங்கிற்று என்று அறிஞர் விண்டர்நிட்ஸ். W.C.[5] கருதினாலும், விஷ்ணு தருமோத்திரத்தில் இருந்தே உப குப்தர் இங்ஙனம் பெற்றார் என்று ஒரு கருத்தும் நெடுங்காலமாக உண்டு. இந்த நிலையில், குப்த வமிசத்து இரண்டாம் சந்திர குப்தனின் [கி.பி. 380-414] நிருப சந்திரன், நரேந்திர சந்திரன், நரேந்திர சிம்ஹன் என்ற விருதுக்களையே இது 18 தடவைகள் கையாள்வதைக் கொண்டு, கி.பி. 400-500 க்கு இடைப்பட்ட காலத்தில் செய்யப்பட்டு இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.[6]

5. Winternitz, W.C., J. University of Gauhati,
6. Hazira, R.C., J. University of Gauhati, Vol. 3, p. 62 & J. Univ. Gauhati, Vol. I, p. 211 & 212

பாண் பெருமாள் ஆகியோருடையவும் பாடல்களில் காணப் படாமையும் இதை உறுதி செய்கின்றது. இந்த வகையில் திருமாலையின் காலம் கி.பி. 700க்கு முற்பட முடியாமை காண்கிறோம். இந்த கி.பி 700-இல் விப்பிரநாராயணர்க்கு சுமார் 20 பிராயமாவது இருந்தால் மட்டுமே, இவர் திருமாலையைச் செய்யுமுன் தேவதேவியோடு நடத்திய காதல் வாழ்க்கைக் காண காலத்திற்கு வகை செய்ய முடியும். இவ்விதத்தில் இவர் பிறந்த காலம் கி.பி. 680-ஐ ஒட்டியதே ஆகப் பெறப்படுதல் மேலே காட்டிய கி.பி. 667-ஏ இவர் பிறந்த பிரபவ ஆண்டு ஆகக் கூடுதலை அரண் செய்கின்றது.

''மற்றுமோர்த் தெய்வ முண்டே? மதியிலா மானிடர்காள்!......அவனலால் தெய்வமில்லை''-(திருமாலை செ.9) என திருமாலை மனத்துட் கொண்டு உலகோர்க்கு அத் திருமாலின் பரத்துவத்தை உணர்த்தும் விப்பிரநாராயணர்க்கு சமண, பவுத்தங்களைப் போலவே சைவமும் உடன்பாடன்று. ஆனாலும், சைவத்தைப் பற்றி முன் எச்சரிக்கையோடு ஒன்றும் கூறாமல் சமண, பவுத்த சமயங்களை மட்டும் காட்டமாகச் சாடுகின்றார்! இதிலிருந்து இவர் சைவம் மேலுக் கெழுந்து சமண, பவுத்தங்கள் முற்றிலும் அழிவுறாத காலப் பகுதியில் திருமாலையைச் செய்திருக்க வேண்டு மென்பது தெளிவாகின்றது.7 இது சம்பந்தர்-அப்பர் காலத்திற்கு அணித்தான கி.பி. 700-ஐ ஒட்டியதே ஆகுமல்லவா? இப்படி கி.பி. 700 அளவில் திருமாலையைச் செய்த இவர் பிறந்தது கி.பி. 667-ஐ பிரபவவில் ஆக வேண்டுதல் தெளிவு.

கி.பி. 667-இல் பிறந்து கி.பி. 700 அளவில் திருமாலையை தொண்டரடிப் பொடிகள் இயற்றியது உண்மையாகில், இவருடைய பிரபாவமே முதலிகள் ஐவரை ஒழிந்த ஆழ்வார்கள் அனைவருடையவும் வரலாறுகளுக்கு முற்பட்ட

---

7. மறைமலை அடிகள். பக். 459 & 542

தாகல் வேண்டும். ஆழ்வார்களின் வரிசை முறையைக் கூறும் நூல்களுள் எல்லாம் முந்தியதாகிய இராமநுச நூற்றந்தாதியில் திருமழிசைப் பிரானை அடுத்து தொண்டரடிப் பொடிகளே கூறப்படுவதும் எண்ணத் தக்கது. ஆண்டாளையும், மதுரகவிகளையும் நீக்கி எண்ணப்படும் ஆழ்வார்கள் பதின்மரில் தொண்டரடிப் பொடிகளை எட்டாமவராகக் கொள்ளும் குருபரம்பரைகளின் கருத்து இதன் மூலம் நிராகரிக்கப்படுகின்றமை தேற்றம்.

கடைசியாக இவருக்கு இரண்டு ஆண்டுகள் மட்டுமே மூத்தவராக மூவாயிரப்படி குருபரம்பரையில் கூறப்படும் பெரியாழ்வாரின் காலமும் கூட கி. பி 655-750 ஆகத் தெரியப்படுதல் ஈண்டு அறிந்து இன்புறத்தக்கது. பெரியாழ்வாரின் இக்காலம் அடுத்த அதிகாரத்தில் காட்டப்பெறும்.

தொண்டரடிப் பொடிகளின் காலம் பற்றிய நமது கொள்கைக்கு ஒரு முக்கியமான தடையும் உண்டு. திருவெண்ணெய் நல்லூரில் சுந்தரருக்கு நடைபெறவிருந்த திருமணத்தின்போது, சிவபிரான் ஒரு முதியவர் வேடத்தில் வந்து சுந்தரரின் பாட்டனார் தனது வழித் தோன்றல்களை எல்லாம் தமக்கு அடிமைப் படுத்தி ஒரு முறிச் சீட்டு எழுதிக் கொடுத்திருப்பதாகவும், அதன்படி சுந்தரர் தமக்கு அடிமை என்றும், ஆகவே சுந்தரர் மணம் செய்து கொள்ளாமல் தம்மைப் பின்தொடர வேண்டுமென்றும் வாதிக்க, அது கேட்டு வெகுண்டெழுந்த சுந்தரர் அம் முதியவரை 'பித்தா' என அழைத்ததாகவும் வழங்கும் வரலாறு நாடறிந்தது. இப்படி கடுத்தாட் கொள்ளப் பெற்ற பின்னர் 'பித்தா! பிறைசூடி!! பெருமானே! அருளாளா'—என்றெடுத்து அவர் பாடத் தொடங்கியதையும் அனைவரும் அறிவர். இவ்வாறு சுந்தரர்-தேவாரப் பிரசித்தமான 'பித்தன்' என்ற சொல்லை தொண்டரடிப் பொடிகளும் திருமாலை 4-ஆம் செய்யுளில் திருமாலைக் குறிக்க வழங்கியுள்ளார். எனவே, இவர் சுந்தரருக்கும் பிற்பட்டவரே ஆதல் வேண்டும் என்பர் ஆசிரியர் மறையலை அடிகள் (பக். 457). சுந்தரர் சிவகதி

அடைந்த காலம் கி.பி. 844 ஆதல் இன்று நன்கு அறியப் பட்டுவிட்டது.[8] எனவே, மறைமலை அடிகளின் கூற்று உண்மையாகில், தொண்டரடிப் பொடிகளின் காலம் கி.பி. 9-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியாகக் காண்கிறோம்.

மறைமலை அடிகளின் ஆராய்ச்சி, பாவம்! இங்கேயும் பயனற்ற சொல் ஆராய்ச்சி ஆகவே உள்ளது. 'பித்தன்' என்ற ஒருசொல்லில் இவர் இத்தனை காண்கிறார்! ஆனால், 'குணபரன்' - என்பது போல ஒரு நபரின் பெயராக இல்லாமல் இது மொழியின் ஒரு பொதுச் சொல்லே ஆகும். மேலும் சுந்தரருக்கு அமைந்தாற் போன்ற ஒரு காரணம் இல்லாத போழ்தும், முற்பட்ட சம்பந்தர் ''பெண் ஆண் அலியாகும் பித்தா பிறைசூடி!'' - என 'படையார் தருபூத' - என்னும் திருவெருக்கத்தம் புலியூர்ப் பதிகத்தில் (I-89, 3) அதே தொடரால் இறைவனை அழைத்திருக்கக் காண்கிறோம். அப்பரடிகளும்,

''பித்த னைப் பெருங் காடரங் காவுடை
முத்த னைம்முளை வெண்மதி சூடியை
சித்த னைச்செம் பொனம்பலத் துணின்ற
அத்த னையடி யேன்மறன் துய்வனே''—

(தே. 5-ஆம் திருமுறை 2:5ஆம் பாடல்) என்ற பாடலில் இறைவனைப் பித்தன் என்றனர். எனவே, இவ் வழக்கு இறைவன் அடியார்க்கு உற்ற இடர்களையும் பித்துப் பிடித்தவன் என எல்லாச் சமயத்தும் காணப்படும் ஒரு பொது நம்பிக்கையின் பாற் பட்டதே ஆகல் வேண்டும். இதற்கு (வைணவ சமயத்திலேயே) கஜேந்திர மோட்சம், [துருவனுக்கு ஒரு தனிப் பெரும் பதம் அளித்தமை], இரணியன் குறித்த தூணில் பிரகலாதனுக்காகக் தோன்றியது, திரவுபதியின் மானங் காத்தது போன்ற சிறப்பான வரலாறுகள் உள்ளன. அனைவரும் அறிந்த இவற்றை விடுத்து க்ஷத்திர பந்து என்ற அடியவரின் கதையை

8. Studies in Kerala History, p. 221

இப்பித்துக்கு இன்னொரு புதிய சாட்சியமாகக் காட்டுகிறார் என்றால், பார்த்துக் கொள்ளுங்களேன், இதை நாட்டுவதில் இவருக்கு உள்ள ஆர்வத்தை!

"மொய்த்த வல்வினையுள் நின்று மூன்றெழுத்
துடைய பேரால்
கத்திரபந் துமன்றே பராங்கதி கண்டு கொண்டான்;
இத்தனை அடிய ரானார்க் கிரங்குனம் அரங்க
னாய
பித்தனைப் பெற்றும் அந்தோ! பிறவியுள் பிணங்கு
மாறே"-

(திருமாலை-4) என்ற பாசுரத்தில், "சூழப்பட்ட தீவினைகளால் நரகத்தில் கிடந்து இடருற்ற காலை [வடமொழியில் மூன்று எழுத்துக்களாலான]* 'கோவிந்த' என்ற திருநாமத்தை உச்சரித்ததன் மூலம் க்ஷத்திரபந்து மல்லவா, பரகதிக் கேகினான்! இவ்வளவு தூரம் அடியார்பால் கழிபேர் இரக்கங் கொண்ட அரங்கன் ஆகிய பித்தன் இருக்கவேயும் பிறவித் துன்பத்துள் பட்டு உழல்கின்றார்களே" என்று மக்களின் பேதைமைக்காக ஏங்குகின்றார் ஆழ்வார். 'பக்தியே ஒரு பித்தம்; அது பிடித்து விட்டவர்களுக்கு உதவ வேண்டும், என்று இறைவனுக்கு ஒரு எதிர்ப் பித்தமும் திண்ணமாக உண்டு என்பது கருத்து. அரங்கனால் தடுத்தாட் கொள்ளப்பட்ட இவர் வாழ்க்கையே இப் பித்துக்கு இனிய சான்றாக இருக்க, இன்னொருவரைப் பார்த்துத் தான் தொண்டரடிப் பொடிகள் இதனைக் கற்றுக் கொண்டு பாடுகின்றார் என்பதற்கு இம்மியேனும் இட முண்டா என்பது அறிஞர்களின் ஆராய்ச்சிக்கே விடப்படுகின்றது. அப்படிப் பார்த்துச் செய்ததாகவே வைத்துக் கொண்டாலும், அப்பர்-சம்பந்தர்களைப் பார்த்துச் செய்ததாகக் கொள்ளலாமே!

* 'ந்த' என்பதற்கு வடமொழியில் ஒரே எழுத்துண்டு.

## ஆழ்வாரும், திருவரங்கமும்

ஆழ்வார் காலத்திய உறையூர்ச் சோழன் யாராகக் கூடும்? இதற்கான பதில் திருவரங்க வரலாற்றோடு பின்னிப் பிணைந்து கிடக்கிறது. அரங்கர் படிமம் ஆதியில் பிரம னால் வணங்கப் பட்டதை 'அரங்க மென்பர் நான்முகத் தயன்ப ணிந்த கோயிலே' என்ற திருச் சந்த விருத்தத் தால் (எண்51) அறிகிறோம். இட்சுவாகுவுக்குப் பிரம்மா வினால் கொடுக்கப்பட்ட இது அயோத்தி மன்னர்களின் குல தெய்வமாய் இருந்து வந்தது. இராமபிரான் காலத்தே விபீஷணன் இதை இவரிடமிருந்து அன்பளிப்பாகப் பெற் றான் இங்ஙனம் பெறப்பட்ட அரங்கர் படிமத்தை காவிரிக் கரையில் விட்டுப் போய் தனது மாலைக் கடன்களை முடித்து விட்டு வந்து மீண்டும் எடுக்க முயன்று முடியாமற் போகவே, அப்படிமத்தை அங்கேயே வீடணன் விட்டுச் சென்றானாம்; அது கேட்ட உறையூர்ச் சோழன் தர்மவர்மா அதனைச் சுற்றி ஒரு கோயில் அமைத்தானாம். அது வெள்ளத்தால் புதைபட்டுப் போக இன்னொரு உறையூர்ச் சோழன் அங்கே இளைப்பாறி யிருந்த சமயம் கீழே அரங் கர் படிமம் இருப்பதாக ஒரு கிளியினால் அறிவிக்கப் பட்டு அதனை அகழ்ந்தெடுத்து மீண்டும் அங்கே ஒரு புதுக கோயிலை அமைத்ததாகவும், அதனால் அவனுக்கு கிளிச் சோழன் என்றொரு பெயர் ஏற்பட்டதாகவும் நெடுங்காலமாக ஒரு வரலாறு உண்டு. நூற்றெட்டு அத்யாயங்களில் கருட புராணத்திலும், பத்து அத்தியாயங்களில் பிரும்மாண்டத் திலும், இன்னும் சற்றே சுருக்கமாக மத்ஸ்ய, பத்ம புராணங் களிலும் மற்றும் வான்மீகி ராமாயணத்திலும் கூறப்படும் இவ்வரலாறு கோயிலொழுகுவிலும் ரத்தினச் சுருக்கமாகக் கூறப்படுகின்றது. இது கோகர்ணத்தில் சிவலிங்கம் பிரதிஷ் டையான கதையின் வைணவப் படைப்பே. சோழர் களுக்கு 'கிள்ளி' என்ற பெயரும் சங்க காலத்தே பெரு வழக்காய் இருந்ததை அறியாத பிற்காலத்தாரின் கற்ப னையே இஃதாதல் கூறாமலே பெறப்படும்.

*சிலப்பதிகாரத்திலேயே*

**நீலமேக நெடும்பொற் குன்றத்துப்**
**பால்விரிந் தகலாது படிந்தது போல**
**ஆயிரம் விரித்தெழு தலையுடை அருந்திறல்**
**பாயற் பள்ளிப் பலர்தொழு தேத்த**
**விரிதிரைக் காவிரி வியன்பெருந் துருத்தி**
**திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்-**
(காதை 11; அடி 35-40)

எனப் போற்றி உரைக்கப்பட்டுள்ள இப் பழம்பெரும் திருப்பதி சங்க காலத்தில் இருந்தே இருந்து வருவது தான் எனத் திண்ணமாகக் கூறலாம். அரங்கப் பிரானே தொன்று தொட்டுப் 'பெரிய பெருமாள்' என்று அழைக்கப்பட்டு வருவதால் திருமாலுக்கென்று தனிக்கோயில்கள் உண்டான வரிசையில் இதுவே முதலாவதாகலாம் போலவும் தோற்றுகின்றது. உறையூர் முதுகூற்றனாரால் அகம் 137-இல் கூறப்படும் அரங்கம் திருவரங்கமே என்பது வரதராஜ அய்யர்[9] அவர்கள் கருத்து. சைவ கேந்திரமாகிய தில்லை சங்க இலக்கியங்களிலோ அல்லது சிலப்பதிகாரமும், மணிமேகலையும் போலும் பழைய காப்பியங்களிலோ கூடக் கூறப்படாமை குறிப்பிடத்தக்கது.

மேலை வரலாற்றில் சோழன் கிள்ளிக்கு முற்பட்ட விருத்தாந்தங்களை யெல்லாம் பவுராணிகக் கற்பனை யாகக் கருதி நாம் தள்ளிவிட்டாலும், அதிற் போந்த தர்மவர்மாவை அங்ஙனம் ஒதுக்கி விடுவது சாத்தியமில்லை. திருவரங்கப் பெருங் கோயிலின் முதல் திருச் சுற்று 'தர்மவர்மா திருவீதி' எனப்படுவதே இதற்குக் காரணம், மற்றைச் சுற்றுகள் அவற்றைப் புதிதாகக் கட்டிய அல்லது கருங்கல்லால் புதுப்பித்தவர் பெயர்களால் வழங்கி வருமாறு போலவே, தர்மவர்மா திருவீதியும் தர்மவர்மாவினால் கட்டப்பட்டதாகக் கொள்வதே முறை. சோழன் கிள்ளியை

9. இலக்கிய வரலாறு, வரதராஜ அய்யர், பக். 285

கிளிச் சோழன் எனச் சிறிதளவே சிதைத்து உரைக்கும் கோயிலொழுகு தர்மவர்மாவின் திறத்தும் உண்மைப் பெயரையே கூறுவதாகக் கொள்ளலாம். இவ்வட மொழிப் பெயர் இவன் திண்ணமாக பல்லவர் காலத்தவனே ஆதலைக் காட்டுகின்றது. தசவர்மா என்பதாக இடைக்காலப் பல்லவர் காலத்திய சோழருள் ஒருவன் கர்ணபரம்பரைச் செய்திகளில் கூறப்படுதலும் எண்ணத் தக்கது. எனில், சோழன் கிள்ளியால் கட்டப்பட்ட கோயிலின் முதற் பிரகாரத்தை மட்டும் இவன் கருங்கல்லால் புதுப்பித்தவன் ஆதல் வேண்டும். இஃது ஒப்புக் கொள்ளப்படுமாகில், இந் நிகழ்ச்சி தமிழகத்தின் முதல் கற்கோயில் ஆகிய மாமல்லபுரத்துக் கடற்கரையிற் காணும் ஜலசயனப் பெருமாள் கோயில் கட்டப் பெற்ற கி.பி. 635-க்கும் பிற்பட்டதே ஆகல் வேண்டும். இவ் வகையில் கி.பி. 670 அளவில் தர்மவர்மாவின் பணியை நாம் எதிர்பார்க்கலாம் கி.பி 650-ஐச் சேர்ந்த சிங்கத் தூண்கள் சில 5-ஆம் திருச் சுற்றிலுள்ள திருவரங்கத்து அமுதனார் கோயிலிற் காணப்படுதலும் இதற்கு ஓரளவு துணை ஆகின்றது. எனவே, தர்மவர்மா தொண்டரடிப் பொடிகளைத் தண்டித்த சோழனின் தந்தையாக வாவது ஆதல்[10] சாத்தியமே. நிற்க.

தொண்டரடிப் பொடிகள் திருமாலை முழுமுதற் கடவுளாகக் கொண்டிருந்ததோடு மட்டுமின்றி, திருமால் மூர்த்தங்களுள்ளும் அரங்க மேய அழகிய மணவாளனைத் தவிர வேறு தெய்வம் அறியாத மகா பதிவிரதருங்கூட. சிலம்பில்,

> “வீங்குநீர் அருவி வேங்கட மென்னும்
> ஓங்குயர் மலயத் துச்சி மீமிசை
> விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி
> இருமருங் கோடிய இடைநிலைத் தானத்து
> மின்னுக் கொடி யுடுத்து, விளங்குவிற் பூண்டு
> நன்னிற மேகம் நின்றது போலப்

10. Hist. vaishnavism in S. India upto Ramanuja, p. 216.

பகையணங் காழியும், பால்வெண் சங்கமும்,
தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி,
நலங்கிளர் ஆர மார்பிற் பூண்டு,
பொலம்பூ ஆடையிற் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்"

(காதை 11, அடிகள் 41-51)

எனப் போற்றிப் புகழப்பட்டதும், வைணவத்தின் இடக் கண்ணும் ஆகிய திருவேங்கடத்தை குறிப்பிட்டுங் கூடக் கூறாத் ஆழ்வார் இவர் ஒருவரே. திருப்பள்ளியெழுச்சிப் பதிகம்,

"குடதிசை முடியை வைத்து, குணதிசைப் பாதம் நீட்டி
வடதிசைப் பின்புகாட்டி, தென்றிசை இலங்கை நோக்கி"

(திருமாலை, 19)

"கங்கையிற் புனிதமாய காவிரியின் நடுவுபாட்டு
பொங்குநீர்ப் பரந்துபாயும் பூம்பொழில் அரங்கம் தன்னுள்"

(திருமாலை, 23)

அன்புடனே பள்ளிகொண்ட அம்மானை உய்யுமாறெண்ணி, எண்டிசையும் போர்த்து, காணக் காத்துக் கிடக்கும் பதினெண் கணத்து அடியார்க்கும் நாளோலக்கம் அருள வேண்டி, இவர் கன்னித் தமிழில் பாடிய, தமிழின் முதல் 'சுப்பிரபாதம்' ஆகும். இரண்டாவது பிரபந்தம் ஆகிய 'திருமாலை'-யுங் கூட 'திருவரங்கத்து மாலை'யே தான். இதனுள் திருப்பாணர் வரலாற்றை இவர் குறிப்பாகச் சுட்டுவதும் கூட திருவரங்க மான்மியத்தை எடுத்துரைத்த தாகவே கொள்ளத் தகும். திருவரங்கப் பெருங்கோயில் 4-ஆம் திருச்சுற்றளவிற்கு திருமங்கை மன்னரால் கட்டி முடிக்கப்பட்டதுங் கூட இவர் காலத்தேயே.

கோயிலொழுகுவில் கூறப்படும் இன்னொருவன் பெயர் நந்த சோழன் என்பது. இவனுக்கும், ஆழ்வாருக்கும் உள்ள தொடர்பு அடுத்து ஆராயத் தக்கது. அழகிய மணவாளர் ஆடவர், பெண்டிர் ஆகிய இருதிறத்து அடியாரையும் ஒருங்கே நெடுங்காலமாக வசீகரித்து வருபவர். கண்ண பிரான் மாட்டுப் போல இவர் பாலும் பெண்டிர் பலர் காதல் கொண்டதுண்டு. இவருள் எல்லாம் காலத்தால் முற்பட்டவர் உறையூர் நாச்சியார். இவர் இயற் பெயரை கமல வல்லி எனவும், தந்தையை தர்மவர்மாவின் வழிவந்த நந்த சோழன் எனவும் கோயிலொழுகு கூறும். தனது தவமகள் கமலவல்லிக்காக இந் நந்த சோழன் உறையூரில் ஒரு தனிக் கோயிலே எடுத்ததாகவும் கோயிலொழுகுவில் மேற்கொண்டு கூறப்பட்டுள்ளது. 'கூடலும், கோழியும் கோயிலாக் கொண்ட கோவலரே ஒப்பர்'- (பெரிய திரு மொ : 9-2,5) என்ற திருமங்கை மன்னரின் திருவாக்கில் கோழியகத்ததாகக் கூறப்படும் திருமால் கோயில் உறையூர் நாச்சியார் சமேத அழகிய மணவாளர் திருக்கோயிலே.

உறையூர் நாச்சியாரின் தந்தையை தர்மவர்மா என ஆறாயிரப்படி குருபரம்பரை கூறாநிற்க, திவ்ய சூரியோ தர்மவர்மாவின் வழிவந்த சோழனாகக் குறிக்கின்றது. கோயிலொழுகு மட்டுந்தான் தர்மவர்மாவின் வழிவந்த நந்த சோழன் என இன்னமும் விளக்கமாகக் கூறுகின்றது. தர்மவர்மாவின் வழிவந்த சோழன் மகளாக உறையூர் நாச்சியார் ஆறாயிரப்படிக்கும் பிற்பட்ட நாளில் (கண்டு பிடிக்கப்பட்ட கல்வெட்டினால்) அறியப்பட்டதன் பின் செய்யப்பட்ட திவ்ய சூரி இதை இணைத்துக் கொண்ட தென்றும், இந்த பிற்காலச் சோழனின் பெயர் நந்தன் என்பது (இன்னொரு கல்வெட்டால்) இன்னமும் பிற்பட்ட காலத்தே தான் தெரிய வந்ததென்றும் கொண்டால், அனைத்துச் செய்திகளுமே ஒரு விளக்கம் பெறுகின்றன. காலங்கள் தோறும் உயர்த்தப்பட்டு (update செய்யப்பட்டு) வந்த கோயிலொழுகுவில் எந்த புதுச் செய்தியையும் எந்த நேரத்திலும் இணைத்துக் கொள்ளும் வசதி இருந்

தாற் போல (ஒரே ஆசிரியரால் செய்யப்பட்ட) திவ்ய சூரியில் இல்லாமற் போனதே இரண்டின் வேற்றுமைக்குக் காரணம் என்பது கருத்து நிற்க,

உறையூர் நாச்சியாரைப் போலவே தமது உயிருக்கும் மேலாக திருவரங்கனைக் காதலித்த இன்னொருவர் வில்லி புத்தூர் நாச்சியார் ஆகிய ஆண்டாள். பாணர் வரலாற் றைச் சூசகமாகச் சுட்டிய தொண்டரடிப் பொடிகள் இரு நாச்சியார்களின் சிறப்பான வைபவங்களைப் பற்றி ஏதும் மூச்சு விடாதது பெரியதோர் வியப்பே. இந்த நிலை, திரு மாலை இவ்விரண்டிற்கு முன்பே பாடி முடிக்கப்பட்டு விட்டதனால் ஆகலாம். புதுவை நாச்சியாரின் திருக்கல் யாண காலம் சுமார் கி.பி. 732 அளவில் ஆதல் அடுத்த அதிகாரத்தில் விரிவாய் ஆராய்ந்து காட்டப் பெறும். எனவே, உறையூர் நாச்சியாரின் தந்தை ஆகிய நந்த (வர்ம) சோழனை நாம் இரண்டாம் நந்திவர்ம பல்லவன் (கி.பி. 731-795) காலத்திய உறையூர்ச் சோழனாகவும் கொள்ளலாம். எனில், இவன் காலம் சற்றேறத் தாழ கி.பீ. 735-760 ஆகலாம். இவ் வகையில் இவன் முன் னோனும் திருவரங்கப் பெருங்கோயிலின் முதல் திருச் சுற் றைக் கருங்கல்லாற் சமைத்தவனும் ஆகிய தர்மவர்மா தொண்டரடிப் பொடிகளை தண்டித்த சோழனின் தந்தை யாக ஆவது ஆதல் சாத்தியமே என நாம் முன்னம் கொண்ட கருத்து வலியுறுகின்றது. தொண்டரடிப் பொடி களைத் தண்டித்த சோழன் தர்மவர்மாவே-என்று (நமது கருத்திற்கு மிக நெருக்கமான) ஒரு கருத்தை, விளக்கம் கூறாமல், அறிஞர் K.G. சங்கர் அவர்கள் 1927-லேயே கூறிச் சென்றமை இங்கே குறிப்பிடத் தக்கது. (பக்.844).

## முன்னை இட்ட தீ

ஆயினும், உண்மை வேறு விதமாகவும் இருக்கலாம் போலத் தெரிகின்றது. தொண்டரடிப் பொடிகளைத் தண் டித்த சோழன் பெயரை எந்த முந்நூலும் குறிப்பிடாமை யைக் காட்டி அறிஞர் ராமானுஜம் அவர்கள் ஏற்க மறுத்து விட்டனர். இதே நிலையை ஆதரிக்கும் வேறு காரணங் களும் உண்டு.

உறையூர் நாச்சியார் வரலாற்றை விரித்துக் கூறி வடமொழியிற் செய்யப் பட்ட 'லட்சுமி காவியம்' என்ற நூலில் நாச்சியாரின் திருமண காலம் பங்குனி உத்திரமாகக் கூறப் பட்டுள்ளது. தடாதகைப் பிராட்டியார் (மீனாட்சியம்மை)-இன் திருமண நாள் ஆகிய ஆவணி அவிட்டம் மதுரையில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டவாறு போல, இறையனார் அகப் பொருள் 16-ஆம் சூத்திர உரையில் கூறப்படும் உறையூர்ப் பங்குனி உத்திர விழாவையும் உறையூர் நாச்சியார் திருமண காலத்திருந்தே கொண்டாடப்பட்ட தாகக் கருதலாம். தமிழகத்து தலைநகர விழாக்களைக் குறிப்பிடும் இவ்விடத்தில் புகார் நகரத்து இந்திரவிழா இடம் பெறாமை குறிப்பிடத்தக்கது. எனவே, புகார் அழிந்த கி.பி.2-ஆம் நூற்றாண்டுக்குப் பின்னரேயே இவ்வுரை எழுந்திருக்க வேண்டுதல் தெளிவு. உரையாசிரியர் ஆகிய நக்கீரர் கடைச் சங்க இறுதிக்காலத்தினர் என்று அவ் உரையே கூறுவதால், நந்த சோழன் கடைச் சங்க காலத்தினனே ஆகலாமோ என்றொரு ஐயப்பாடு எழுவது இயல்பே. ஆயினும், இம்மாதிரியான பெயர் வழக்கு ஏதும் சங்க இலக்கியங்களில் இல்லாததாலும், இப்பெயர் பல்லவர் காலத்தியது போலவே இருப்பதாலும், பங்குனி உத்திர விழா நாச்சியாரின் திருமண காலத்திருந்து புதிதாகத் தொடங்கப்பட்டதாக நாம கருதுவதற்கு இல்லை.

இனி, சம்பந்தரின் பிரமாபுரப் பதிகத்துள் (1,63*) கழுமல நாடாண்ட சிற்றரசருள் சிலர் தருமன், நந்தன்

---

* (1) முதல் திருமுறை - 63-ஆம் பதிகம் (பிரமாபுரம்)

"செங்கோல் நடாஅவிப் பல்லுயிர்க்கும் செய்வினை மெய்தெரிய
எங்கோள் 'தருமன்' மேவி ஆண்ட வெங்குரு மேயவனே" 4

"பொருதேர் 'வலவன்' மேவி ஆண்ட புறமவர் புண்ணியனே" - 8

"தவர்செய் நெடுவேல் 'சண்டன்' ஆள சண்பை அமர்ந்தவனே" — 10

"கழல், நா கரையன்' காவல் ஆகக் காழி அமர்ந்தவனே" — 11

"நாட்டார் நடுவே 'நந்தன்' ஆள நல்வினையால் உயர்த்த
கோட்டா றுருத்ததண் வயல்சூழ் கொச்சை அமர்ந்தவனே" — 12

என்ற பெயரினராகத் தெரிகின்றனர். எனவே, இதே பெயர் கொண்ட உறையூர்ச் சோழர்களை கி.பி. 7-ஆம் நூற்றாண்டிக்கு முற்பட்ட வராகவும் கருதலாம். இரண்டாம் கரிகாலனின் (கி.பி. 500-520) மகனாகக் கூறப்படும் தசவர்மாவே (கி.பி. 520-540) வடமொழிப் பெயர் தரித்த முதல் சோழனாகத் தெரிதலால், நந்த சோழனை கி.பி. 550-ஐ ஒட்டி வாழ்ந்தவனாகக் கருதலாம் ஆறாயிரப் படியும், திவ்யசூரியும் கமலவல்லியின் தந்தையை பாணாழ் வார் காலத்தினராகக் கூறலால், இவன் காலத்தை நாம் கி.பி 540-590 ஆகக் கொள்ளலாம். இதே காலத்தில் தெலுங்குச் சோழருள் ஒரு நந்திவர்மன் (கி.பி. 540-580) ஆண்டு கழிந்திருப்பதும் இங்கே எண்ணத் தக்கது. எனவே, உறையூர் நந்தன் இவனுடையவோ அல்லது பல்லவ முத லாம் நந்தி (கி.பி. 430-95) யினுடையவோ மகள் வயிற்றுப் பெயரன் ஆதலாம்.

நந்த சோழனுக்கு, நாம் மேற்கொண்ட கி.பி. 540-590-க்கு ஆதரவாக இன்னொரு சான்றும் உண்டு. (நந்த சோழன் காலத்தில் மண்மாரி பெய்து உறையூர் அழிந்து விட்டது என்று கோயிலொழுகு மேற்கொண்டு கூறுகின்றது இவ் அழிவு காவேரியில் ஏற்பட்ட வெள்ளப் பெருக்காலேயே என்பது திண்ணம். திருச்சிக்கு இப்படியே ஆபத்து இந்நாளிலும் அடிக்கடி நிகழ்ந்து வருவதை நாம் அறிவோம். 'தஞ்சாஹரஹ' என்ற சிராப்பள்ளி மலைக் கல்வெட்டு தஞ்சையை வென்றே சிம்ம விஷ்ணு அப் பகுதியை கைப்பற்றியதையும், இது சிம்ம விஷ்ணுவுக்குச் சற்று முற்பட்ட காலத்தே (வெள்ளப் பெருக்கால்) உறை யூர் அழிந்து விட்டதையே சுட்டுவதையும் முதலாழ்வார்கள் பற்றிய முதல் அதிகாரத்திலேயே கண்டுள்ளோம். கோயி லொழுகு கூறும் (நந்த சோழன் காலத்திய) மண் மாரி யையும், இதனையும் இணைத்து நோக்கும் போது, நந்த சோழன் சிம்ம விஷ்ணு (கி.பி. 550-590) வின் காலத் தவன் ஆகலாம் போலத் தெரிகின்றது.

தர்மவர்மாவை கி.பி. 650 ஐ ஒட்டி வாழ்ந்தவனாக நாம் முற்காட்டியது ஒன்றுமே நந்த சோழனுக்கு நாம் கொண்டுள்ள காலத்திற்குத் தடை ஆகின்றது. ஆயினும், 'தசவர்மாவின் வழிவந்த சோழன்' என்ற வாசகமே திருப் பணிகள் பல செய்த தர்மவர்மாவின் சிறப்பினால் 'தர்ம வர்மா வழிவந்த சோழன்' எனப் பிற்காலத்தே குருபரம் பரைகளால் மாற்றப்பட்டிருக்கலாம் என்பது இவ் ஆசிரியர் கருத்து. 'தசவர்மா' என்பதை ஆதிப் பாடமாக நாம் கருது வதற்கு இரண்டாம் கரிகாலனுக்குப் பின் சோழப் பேரரசு இரண்டு, மூன்று துண்டங்களாய்ப் பிளவுபட்டதாகவும், அதில் உறையூர்க் கிளையின் முதல்வனே தசவர்மா ஆகவும் ஆந்திர நாட்டு கர்ண பரம்பரைச் செய்திகள் கூறுவதே காரணம். எனவே, திருவரங்கத்தில் முதன் முதலில் கொளுவப்பட்ட (பக்தித்) தீ உறையூர் நாச்சியா ரேலேயே ஆகக் கூடுதல் காண்கிறோம். அடுத்து இதை அணியாமல் காத்தவரே பாணாழ்வார் என்னலாம்.

*மறுமலர்ச்சித் தந்தை*

இனி, வைணவ சமய வரலாற்றில் தொண்டரடிப் பொடிகளின் இடம் யாது என்பது காணத் தக்கது. அப்பர்-சம்பந்தர் காலமே சைவத்தின் பொற்காலம் ஆகும். அக் காலத்தவர் என்று அடித்துச் சொல்லக்கூடிய அள விற்கு எந்த ஆழ்வாரும் இல்லை. எனவே, மூவரால் தொடங்கப் பட்டு மழிசைப் பிரானால் முன் நின்று நடத்தப் பட்ட வைணவப் புரட்சி சைவ எழுச்சியின் முன் நிற்க மாட்டாமல் ஸ்தம்பித்துக் கிடந்த தென்றே சொல்ல வேண்டும். திண்ணமாக அப்பர்- சம்பந்தர் காலத்திற்குப் பிற்பட்டவரே ஆக வேண்டும் ஏனை ஆழ்வார்களுள் தொண்டரடிப் பொடிகளின் பாடல்களில் தான் புரட்சிக் கனலின் உறைப்பைக் காண்கிறோம். வைணவ சமயத்தின் வளர்ச்சிக்காக, "தலையறுப்புண்டும் சாவேன் சத்தியம் காண்மின்"- (திருமாலை,7) என்று சூளுறுப்பதோடு நில் லாமல்,

"வெறுப்பொடு சமணர் முண்டர் விதியில் சாக்கி
யர்கள் நின்பால்
பொறுப்பரி யனகள் பேசில் போவதே நோய தாகி
குறிப்பெனக் கடையுமாகில் கூடுமேல் தலையை
ஆங்கே
அறுப்பதே கருமம் கண்டாய் அரங்கமா நகரு
ளானே-(திருமாலை,8)

எனவும் ஆர்ப்பரிப்பதைப் பாருங்கள். இது துஷ்டநிக்ரகம் என்ற வைணவ சித்தாந்தின்பாற் படும். இன்னும், திருமாலையின் 14-ஆம் பாசுரத்தில்

"வண்டினம் முரலும் சோலை; மயிலினம் ஆலும்
சோலை;
கொண்டல்மீ தணவும் சோலை; குயிலினம் கூவும்
சோலை;
அண்டர்கோன் அமரும் சோலை; அணிதிரு
அரங்கம்" என்னா
மிண்டர் பாய்ந் துண்ணும் சோற்றை விலக்கி
நாய்க் கிடுமி னீரே"

என்றும் கொரித்துக் கொட்டுகின்றார்! பிறப்பில் பிராமணராய் இருந்தும் அக் 'குளித்துமூன் றனலை ஓம்பும் அந் தண்மை தன்னை ஒளித்து'- (திருமாலை, 25) பக்தி மேலீட்டால் வர்ணாஸ்ரம தர்மங்களை யெல்லாம் தாண்டிப் போய்

'வானுளார் அறிய லாகா வானவா!' என்பராகில்
'தேனுலாம் துளப மாலைச் சென்னியாய்!' என்ப
ராகில்
ஊனமாயினகள் செய்யும் ஊனகா ரகர்க ளேலும்
போனகம் செய்த சேடம் தருவரேல் புனித மன்றே-

(திருமாலை, 41) போனகம் — போசனம்; சேடம் — எச்சில் சோறு) என்றும்,

அமரவோர் அங்க மாறும் வேதமோர் நான்கும் ஓதி
தமர்களில் தலைவ ராய சாதிஅந் தணர்க ளேலும்
நுமர்களைப் பழிப்ப ராகில் நொடிப்பதோர் அளவில் ஆங்கே
அவர்கள் தாம் புலையர் போலும் அரங்கமா நகரு ளானே - (திருமாலை, 43)

எனவும் பறை சாற்றுகின்றார். வைணவர்களுள் தாழ்த்தப் பட்டோருக்காக இங்ஙனம் இவர் வாங்கும் வக்காலத்தைச் 'சிஷ்ட பரிபாலனம்' என்னலாம். ஏழை என்றும் அடிமை என்றும் எவனு மில்லை வைணவத்தில்; இழிவு கொண்ட மனிதர் என்போர் இச்சமயத் தில்லையே' -என்ற புரட்சித் தத்துவமே இவ் வக்காலத்தில் தொனிக்கிறது. அரங் கனையும் பேச வைத்த அடிகள் இப்படிப் பல சாதி அடி யார்களையும் திரட்டி, "தொண்டைக்குல மனைத்தும் தொழு குலமே" — என்ற தமது பஞ்சராத்திரப் புரட்சித் தத்துவத்திற் கேற்ப அவரோ டெல்லாம் வேற்றுமை யின்றிக் கலந்து, நாள் முழுவதும் ஆடிப் பாடியது வைணவ உலகில் மீண்டுமோர் விழிப்பைத் தோற்றுவித்தது. திரு வரங்க கேந்திரத்தில் உண்டான இம் மாபெரும் 'பக்தி இயக்க'த்தின் அலைகள் திசை எட்டினும் பரவி அரசியல் எல்லைகளைக் கடந்து அப்பாலும் போய், இத் தமிழ் உலக முழுதுண்டன.

"தூராத மனக் காதல் தொண்டர் தங்கள்
குழாம் குழுமி, திருப்புகழ்கள் பலவும் பாடி,
ஆராத மனக்களிப்போ டழுத கண்ணீர்
மழைசோர நினைந்துருகி ஏத்தி, நாளும்
சீரார்ந்த முழவோசை பரவை காட்டும்
திருவரங்கம்" - (பெருமாள் தி, 1, 9)

என்பதே எங்கும் பேச்சாயிற்று. இப்புத்துணர்ச்சியின் உறைப்பை "வண்பொன்னிப் பேராறு போல் வரும் கண்ண நீர் கொண்டு அரங்கன் கோயில் முற்றத்தை (தொண்ட ரடிப் பொடிகளின் காலத்திலிருந்து) அடியார்கள் சேறு

செய்யும் (பெருமாள் திரு: 2,3) அக்காண்பரிய காட்சி யைச் சென்று என்று காண்பேன்?'' - (பெருமாள் திரு 1.10 எனச் சேய்மைக் கண் சேர நாட்டில் குலசேகரப் பெரு மாள் உருகு மாற்றாலும் உணர்கிறோம் எனில், 'புரட் சியின் மறுமலர்ச்சித் தந்தை' நம் விப்பிரநாராயண அடி களே என்றால், அதனை வெற்றுரை என்று விலக்க அந்த மறைமலைக்கும் ஆகாது! அரசனோடு அடிமைகளும், பணக் காரர்களோடு ஏழைகளும், அந்தணரோடு அரிசனங்களும், இன்னும், ''ஆண்களோடு (தேவ தேவி போலும் கணிகை யரும் உள்ளிட்ட) பெண்களும் சரிநிகர் சமானமாய் வாழ்வம் நாங்கள் வைணவத்தில்'' — என்பதே இவர் வரலாறு போதிக்கும் புரட்சித் தத்துவம். இந்து சமயத்தின் மறு மலர்ச்சிக்குக் காரணமான பக்தியையும் பாவமன்னிப்பை யும் வைணவ வரலாற்றில் இங்கேதான் முதன்முதலில் காண்கிறோம்.

*வைஜயந்தி ஆயசர் அல்லர்; வாளார்ச்சரே*

'தலையை அறுப்பதே கருமம் கண்டாய்'- என்று இவர் கொக்கரித்ததை மேலே கண்டோம். இதில் இவர் சண்டீசப் பதத்திற்குத் தாவுவதன் அறிகுறி தென்படுகிறது.

புலையறம் ஆகின்ற புத்தொடு சமணமெலாம்
கலையறக் கற்ற மாந்தர் காண்பரோ, கேட்ப ரோதாம்?
தலையறுப் புண்டும் சாவேன்; சத்தியம்; காண்மின், ஐயா!
சிலையினால் இலங்கை செற்ற தேவனே தேவ னாவான். - என்ற

சூளுரையில் (திருமாலை-7) இவரின் நவகண்ட* விழை வைக் காண்கிறோம். இங்கே இவர் வைணவத்தின் அரி வாள் தாயர் ஆகக் காட்சி அளிக்கின்றார். 'அறுப்பேன்' என்றும், 'அறுப்புண்டு சாவேன்' - என்றும் போதரும் வீர வாசகங்கள் தொண்டரடிப் பொடிகள் திருமறம் ஆகும்.

---

*நவகண்டம் — விரதம் முடித்த வீரன் தன் தலையை அறுத்து கொற்றவைக்கு பலியிடும் தியாகம்.

அறுப்புது பற்றிய மறம் பேசிய வைணவ மறுமலர்ச்சித் தந்தையை வைஜயந்திஅமிசராகக் கோடலினும், திருமாலின் நந்தகம் என்ற வாளாம்சராகக் கோடலே பொருந்தும்.

அப்பரின் அடிச்சுவட்டில்

விப்பிரநாராயணர் பிறந்து வளர்ந்த மண்டங்குடிக்கு நாவுக்கரசர் தம் கடைசி நாட்களைக் கழித்த புகலூரைப் போலவே சம்பந்தப் பெருமானின் சீர்காழியும் சமீபத்தியதே. சோணாடெங்கணும் அப்பர் திருப்பாடல்களைப் போலவே ஆளுடைய பிள்ளையாரின் பாடல்களும் செவியிர முழுங்கவே செய்திருக்கும். இருந்தும் அப்பர் பெருமானின் சாயலையே[11] தொண்டரடிப் பொடிகளின் வாழ்விலும் வாக்கிலும் காண்கிறோம். தொண்டரடிப்பொடி என்ற பெயரே 'என் கடன் பணி செய்து கிடப்பதே என்ற அப்பர் திருவாக்கை நினைவூட்டுவதாக உள்ளது. உழவாரப் படையோடு அப்பரடிகள் நாடெல்லாம் அலைந்து திரிந்தாற் போலவே, விப்பிர நாராயணரும் 'தொடையொத்த துளவமும், கூடையும் பொலிந்த தோளினராய்' காலமெல்லாம் கழித்தார். இவர் திருமாலை முழுவதும் அப்பரின் குறைந்த திருநேரிசை (குறுந் தாண்டகம்)வகைச் செய்யுட்களே. 'குனித்த புருவமும்'- என்ற அப்பர் பாட்டும், 'பச்சைமா மலைபோல் மேனி' என்ற திருமாலைச் செய்யுளும் பொருள் ஒற்றுமைக்குப் பெயர் சிறந்தன. இன்னும் இப்படிப்பட்டவை எத்துணையோ இருந்தாலும்,

"உள்குவார் உள்கிற் றெல்லாம் உடனிருந் தறிதி யென்று
வெள்கினேன் வெள்கி நானும் விலவறச் சிரித்திட் டேனே"- என்ற

அப்பர் தேவார அடிகட்கும் (4. 75.3)

"உள்குவார் உள்கிற் றெல்லாம் உடனிருந் தறிதி யென்று
வெள்கிப் போயென் உள்ளே நான் விலவறச் சிரித்திட் டேனே,'

11. மறைமலை அடிகள், பக். 454-9

என்ற திருமாலைக்கும் (செ. 34) அதிகம் வேற்றுமை இல்லை. இங்ஙனமே 'என் செய்வான் தோன்றினேனே'- என்ற அடி திருநாவுக்கரசர் திரு நேரிசையிலும் ( ) திருமாலையின் 26-ஆம் செய்யுளிலும் காணப்படுகின்றது. காரணம் என்ன? அப்பர் காலம் இன்னதென்று தெரிந்து கொண்டாலே இதற்கு விடை கூற முடியும்.

அப்பர் காலம் நமது கொள்கைப்படி கி.பி. 610-691.* எனவே, இவர் இயற்கை எய்திய கி.பி. 691-இல் விப்பிர நாராயணர்க்கு 28-பிராயம் ஆய்விட்டிருந்தமை ஈண்டு குறிப்பிடத் தக்கது. அடிகளின் மறைவு மற்றவர்களின் மனத்தைத் தொட்டிருக்கக் கூடியதைப் போலவே விப்பிர நாராயண இளைஞரின் மென்மையான உள்ளத்தையும் உருக்கியிருக்கக் கூடும். இதனாலேயே இவர் தமக்கு நினைவு தெரிந்த நாளில் வாழ்ந்து கழிந்த நாவுக்கரசர் பெருமானை முன் மாதிரியாகக் கொண்டு செயல் பட்டிருக்கிறார்! நமது இந்த விளக்கம் மேலும் பல அறிஞரின் ஆராய்ச்சிக்கு உரியதே. நம்மைப் பொறுத்த மட்டில் எப்படியும் சம்பந்தரையும் திருமங்கை மன்னரையும் தொடர்பறுத்தும் குருபரம்பரைகளின் கதையைக் காட்டிலும் தொண்டரடிப் பொடிகளின் அப்பர் ஈடுபாட்டில் அதிகம் பொருண்மை உண்டு.

### ஆசிரியரின் தனியன்

தொண்டைக் குலமெலாம் தொழுகுல மேதான்
பண்டை உறக்கனீர் ஒழித்தெழு வீரெனா
அண்டர் கோனைமுன் இட்டடி யார்தனம
தண்டி எழுப்பினார் தாளிணை வாழ்த்துவாம்

(தண்டி - தட்டி; 'ட்', 'ண்' ஆகத் திரிந்தது மெலித்தல் விகாரம்)

குறிப்பு : அண்டர் கோனை முன்னிட்டு அடியார்களைத் தட்டி எழுப்ப இயற்றியதாக இந்தத் தனியனில் குறிப்பிடப்படுவது ஆழ்வாரின் திருப்பள்ளி யெழுச்சியே.

---

*அப்பர் காலம் நாயன்மார் காலம் பற்றிய இன்னொரு நூலில் விரிவாய் ஆராய்ந்து காட்டப்பெறும்.

# 4. புரட்சியின் வெற்றி

## (கி. பி. 700 - 750)

---

*பட்டர் பிரான்*

பாண்டி மண்டலத்து மல்லி வள நாட்டைச் சேர்ந்த வில்லிபுத்தூரிலே வேயர் குலத்துக்கோர் விளக்காய்த் தோன்றியவர் ஆழ்வார்களில் முதல் பிராமணராகிய விஷ்ணுசித்தர். பெயரளவில் மாத்திரமே யன்றி சிந்தையிலும் விஷ்ணுசித்தராகவே இருந்த இவர் அந்தணராயிருந்தும் விப்பிர நாராயணரைப் போல முறைப்படி சாஸ்திரம் பயின்றவர் அல்லர். ஆயினும், அது பற்றிய கேள்வி ஞானம் நிரம்பப் பெற்றிருந்தார். வழிவழியாகத் திருமாலுக்குத் தொண்டு செய்து வந்த குடியிற் பிறந்ததால் இவர் மனம் பூந்தோட்டம் அமைத்து அவ்வூரில் கோயில் கொண்டிருந்த வடபத்திரசாயிக்கு* மலர் மாலை தொடுத்துக் கொடுக்கும் பணியையே நாடிற்று. இதனால் கோயில் மரியாதைகளோடு 'பட்டர்பிரான்' என்ற சிறப்புப் பெயரும் பெற்று பெரிதும் கவுரவிக்கப்பட்டிருந்ததை,

"நெய்யிடை நல்லதோர் சோறும் நியதமும் அத்
தாணிச் சேவகமும்,
கையடைக் காயும், கழுத்துக்கு பூணொடு காதுக்
குக் குண்டலமும்,
மெய்யிட நல்லதோர் சாந்தமும் தந்தென்னை
வெள்ளுயிர் ஆக்கவல்ல
பையுடை நாகப் பகைக்கொடி யானுக்குப் பல்
லாண்டு கூறுவனே",
(திருப் பல்லாண்டு - 8) எனவும்,

---

*(வடம்-ஆலமரம்; பத்ரம் - இலை; சாயி - துயில்பவன்

"உடுத்துக் களைந்த நின் பீதக ஆடை உடுத்துக்
கலத்த துண்டு
தொடுத்த துழாய்மலர் சூடிக் களைந்தன
சூடுமித் தொண்டர்களோம்"

(திருபல்லாண்டு 9) எனவும்,

"தோட்ட மில்லவள் ஆத்தொழு ஓடை துடைவை
யும், கிணறுமிவை எல்லாம்
வாட்டமின்றியுன் பொன்னடிக் கீழே வளைப்பகம்
வகுத்துக் கொண்டிருந்தேன்"

(பெரியாழ். தி. 5. 1 5.) எனவும்

"வன்மை யாவதுன் கோயிலில் வாழும் வயிட்
டணவன் எனும்
வன்மை கண்டாய்!"- (பெரியாழ். தி. 5-1, 3)
எனவும் வருஉம்

இவர்தம் வாக்குகளாலும், "பட்டர் பிரான் கோதை சொன்ன"- என்ற (திருப்பாவை-30) தொடராலும் உணரலாம். இவர் மனைவியின் பெயர் விரஜை. ஆயினும், இத் தம்பதிகளுக்கு பிள்ளைப் பேறு மட்டும் இல்லை வாழ்க்கை இப்படியாகப் போய்க்கொண்டு இருக்கையில்.

கோதை வாலப் பருவம

நள ஆண்டு. ஆடிப் பூரம். ஆழ்வார் தோட்டத்தில் மலர் பறித்துக் கொண்டிருந்தார். 'வீர்! வீர்! -திடீரென ஒரு குரல் ஒலித்தது. அது வந்த திசை நோக்கி விரைந்தார் ஆழ்வார். சென்றவருக்கு ஒரு துளசிச் செடியின் பக்கத்தில் அழகிய பெண் பிள்ளை ஒன்று காத்துக் கிடந்தது. அதனைக் கொணர்ந்து 'கோதை' என்று பெயர் சூட்டி மண்ணிற் கிடைத்த பிள்ளையை 'மண்மகள்' ஏ (பூதேவி) போலக் கருதி வளர்த்து வந்த இவர் நினைப்பு வீண் போகவில்லை. அதன் வாலப் பருவத்து சேட்டைகளும், ஆட்டங்களும் ஆழ்வார் முன் ஆயர் பாடிக்

கண்ணனையே கொண்டு வந்து நிறுத்திவிட்டன. அவர் அசோதையும். நந்தகோபனும் ஆனார். பூரிப்பில் திளைத்து விட்ட அவரால் சும்மா இருக்கக் கூடவில்லை; கவி பாடினார்; தமிழின் கன்னிப் 'பிள்ளைத் தமிழ்' உருவெடுத்தது; அந்த 'கண்ணன் பிள்ளைத் தமிழ்' - இன் உள்ளே கோதை மாதிரியாகக் (Model) கரந்து நின்றாள். பெரியாழ்வார் திருமொழியின் முதல் மூன்று பத்துக்களில் பரிமளித்துக் கொண்டிருக்கும் இதனை கோதை சரிதையின் பிள்ளைத் தமிழ்ப் படலமாகக் கருதலாம். 'ஆண்டாள் பிள்ளைத் தமிழ்'[1] என்றொரு நூல் (பெயர் அறியக் கூடாத ஆசிரியர் ஒருவரால் ஆக்கப்பட்டு) உண்மையும் ஈண்டு உன்னத் தக்கது. இங்ஙனமே பெரியாழ்வார் திருமொழியின் பிள்ளைத் தமிழ்ப் பகுதிகள் 'கண்ணன் பிள்ளைத் தமிழ்' என்ற பெயரால் சாம்பசிவனாராலும்[2], 'பெரியாழ்வார் பிள்ளைத் தமிழ்' என்ற தலைப்புடன் அறிஞர் ராஜகோபலன்[3] அவர்களாலும் அச்சிடப்பட்டுள்ளன. ஆண்டாள் பிள்ளைத் தமிழையும், (பெரியாழ்வாரின்) கண்ணன் பிள்ளைத் தமிழையும் கலந்து 'கண்ணன் பாதி, கோதை பாதி பிள்ளைத் தமிழ்'— என்றொரு படலம் 'கயிலைபாதி, காளத்தி பாதி அந்தாதி' யைப் போலச் செய்யும் வாய்ப்புண்மை அறியத் தக்கது.

இராமாயணம், பாரதம், ஹரிவமிசம், விஷ்ணுபுராணம் விஷ்ணு தருமோத்திரங்களோடு, பொய்கையார், பேயார், பூதத்தார், மழிசைப் பிரான், பாணர் மற்றும் தொண்டரடிப் பொடிகள் ஆகிய முந்திய காலத்து ஆழ்வார்களின் வரலாறுகள் எல்லாம் பாலோடு கலந்துண்டு வளர்ந்தாள் கோதை. பட்டர் பிரான் ஊட்ட 'ஞானப் பால்' உண்ட இந்தப் பிள்ளையின் கல்வி அறிவு பிரமிக்கத் தக்கதாய் இருந்தது. கற்பனைத் திறனும், கவிதா சக்தியும் இவளிடம் இயற்கையாகவே காணப்பட்டன. ஆனைக் கருள் செய்த

1,2,3 பற்றிய விவரங்கள் பின்னிணைப்பிற் காணும் மேற்கோள் நூல் பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ளன.

வரலாறும், அரக்கர் குலத்துப் பிரகலாதனுக்காகத் தூணி டைத் தோன்றிய வரலாறும் இவளைப் பெரிதும் கவர்ந்தன. சிறுவர்களுக்கும், இன்னும் வாயில்லாச் சீவன்களுக்கும் அருள்புரிந்த திருமாலின் பால் இவளின் பிஞ்சு நெஞ்சில் பக்தி வெள்ளம் கரை புரண்டு ஓடிற்று. பெரியாழ்வார் பூரித்துப் போனார்.

காதல் வாழ்க்கை

ஆயினும், வயது ஏற, ஏற பக்தி காதலாக மாறிற்று; ஆழ்வார் திடுக்கிட்டார்.

"காறை பூணும்; கண்ணாடி காணும்; தன்
கையில் வளை குலுக்கும்;
கூறை உடுக்கும்; அயர்க்கும்; தன்கொங்கைச்
செவ்வாய் திருத்தும்;
தேறித் தேறி நின்று ஆயிரம் பேர்த் தேவன்
திறம் பிதற்றும்;
மாறில் மாமணி வண்ணன் மேலிவள் மாலுறு
கின்றாளே"- எனவும்

(பெரியா. தி. 3-7, 8)

"பெருப் பெருத்த கண்ணால்ங்கள் செய்துபேணி
நம் இல்லத்துள்ளே
இருத்துவான் எண்ணி நாமிருக்க இவளுமொன்
றெண்ணுகின்றாள்"

(பெரியாழ். தி. 3-7, 10) எனவும் முணு முணுத்தார். ஆயினும், மகளின் கவனத்தைத் திருப்பும் வழி தெரிய வில்லை; காலம் கடந்து விட்டது; அவர் கவலையுள் ஆழ்ந்தார். ஆனால், அந்தக் கவலை கோதைக்கில்லை; அவள் கற்பனையில் ஆழ்ந்தாள்; ஆயர்பாடி கோவிகை களுள் ஒருவளாகவே தன்னை பாவிக்கத் தலைப்பட்டாள். அங்கே உருவான அந்த கண்ண மணாளனுக்குத் தான் தகுந்த ஜோடிதானா என எண்ணத் தொடங்கினாள். அதை சோதித்துப் பார்க்க வேண்டும்-என்றொரு விபரீத

ஆசையும் ஏற்பட்டது. தந்தை பெருமாளுக்கென்று வைத்திருந்த மாலைகளை அவர் அறியாமல் எடுத்தணிந்து (கண்) ஆடி முன்சென்று நின்று கொண்டு அழகு பார்க்கத் தொடங்கி விட்டாள். ஒருநாள் அப்படிச் சூடி கொடுக்கப்பட்ட மாலைகளில் தங்கிவிட்டிருந்த முடி ஒன்று ஆழ்வார் கண்ணிற் பட்டுவிட்டது. அதுவந்த விதத்தை மகளிடம் கேட்டுத் தெரிந்து கொண்டதும் அவர் அவைகளை பெருமாளுக்குத் சார்த்தவில்லை. இரவு தூக்கம் பிடிக்காமல் வேதனைப் பட்டுக்கொண்டு இருந்து விட்டு வெகுநேரம் கழித்துச் சற்றே கண்மூடினார். உடனே பெருமாள் கனவிடைத் தோன்றி கோதை சூடி கொடுத்த மாலைகளிலே தனக்கு விருப்பம் மிக உண்டென்று கூறி, நாளும் அவற்றையே கொணர்ந்து சார்த்து மாறும் பணித்தனன். கண் விழித்த ஆழ்வார், "பின்னைகொல்! நிலமா மகள் கொல்!! திருமகள் கொல்!!! பிறந்திட்டாள்".- (திருவாய் 6 5, 10) என வியந்தவராய், தம் மகள்பால் விசேட பிரதிபத்தி பண்ணி, தம் பணியில் முன்னிலும் பன்மடங்கு மும்முரமாய் ஈடுபட்டார். இப் பகுதியை கோதையின் 'சூடி கொடுத்த படலம்' ஆகக் கருதலாம்.

இளமைக் காலத்து வெயிலின் வேகம் கோதையைச் சுட்டெரித்தது. மலர் மாலை தொடுக்கும் பணியிலேயே வெறும் பொழுது போக்கிக் கொண்டிராமல், அந்த மன்னவனுக்கே மாலையிடும் வழிகளை நாடினாள். மார்கழியில் நோன்பிருந்தாள்; பாவை பாடினாள் (திருப்பாவை 1-30) தைந் நீராடி மீண்டும் நோன்பிருந்து தை, மாசி, பங்குனிகளில் காமனையும், அவன் தம்பி சாமனையும்* பதிகம் பாடி மிகவும் வருந்தி வழிபட்டாள். (நா தி. 1) பின்வந்த வேனிற்காலத்தே பூங்காவின் உட்புக்கு ஆங்கே மலர்ந்திருந்த மல்லிகை, முல்லை முதலிய மலர்களோடு மலராய், காதல் போதையில் மயங்கி நின்றாள். (நா.தி. 9, 10). அவற்றோடு கலந்துரையும் ஆடினாள். தூதுபோகச் சொல்லி காளிதாசனையும் விஞ்சு

---

*சாமன் — சாம்பன்; கண்ணனுக்கு சாம்பவதியின் இடமாகப் பிறந்த மகன்.

மோர் மேக்தூர்தம் செய்தாள் (நா.தி. 8). குயில் பத்து பாடினாள் (நா.தி. 5). வேங்கிடவன் கையிற் கொண்ட பாஞ்ச ஜன்யத்திடம்'கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ மாதவன் செவ்வாய் அமுதம்'—எனக் கனிவுடன் வினா-வினாள். அதன்மீது அழுக்காறு கொண்டு அவதூறும் சொன்னாள் [நா.தி. 7]. 'கண்ணன் என்னும் கருந் தெய்வ'க் காட்சியில் கலங்கி நின்றாள் [நா.தி. 13]. 'மற்றிருந்தார்க் கறியலாகா மாதவன் என்பதோர் அன்பு தன்னை, உற்றிருந்து ஊமையும், செவிடு மானாள் [நா.தி 12]. கூடற்குறி செய்து தன் ஆசை கைகூடுமோ என அடிக்கடி சோதித்தும் பார்த்தாள் [நா.தி. 4]. 'வாரண மாயிரம் சூழ வலஞ்செய்து, நாரண நம்பி நடந்து வந்து' தன்னைக் கைத்தலம் பற்றியது போல் கனாக் கண்டாள். கண்ட திறத்தை ஓர் கற்பனைத் தோழிக்கும் கூறினாள் [நா.தி. 6]. இப்படி எத்தனை விதங்கள் உண்டோ அத்தனை விதங்களாலும் தான்பட்ட தாபத்தைக் கொட்டிக் காட்டிய கவிதைகளின் கோப்பே இன்று நம்கையில் 'நாச்சியார் திருமொழி' ஆகத் திகழ்வது. தானே எழுதி, தானே நடித்த நாடகமாக இராமல் கோதை தன் வளமை மிக்க இளமைத் துடிப்பை மாற்று குறையாமல் வார்த்துத் கொடுத்த விதத்தால் இந்தப் பாடல்கள் என்றும் புலராத யாணர் நாட் செல்லுகினும், நின்றலர்ந்து தேன் பிலிற்றும் வாடா வண்ண நறுமலர்கள் ஆயின. சுருங்கக் கூறினால், நாச்சியார் திருமொழியை கோதை சரிதையின் 'மன்மதோ பாலம்பனப் படலம்' ஆகக் கருதலாம்.

### *திருவரங்கத்துத் திருமணம்*

பருவம் வந்துற்றும் மணம் வந்தெய்தப் பெறாத தம் தவ மகளைக் காணும்போதெல்லாம் மற்றவர்களைப் போல வே மனம் கலங்கினார் ஆழ்வார். கோதை கேட்க ஆழ்வார் அரங்கநகர் அப்பனின்குழலழகும், வாயழகும், கண்ணழகும் கொப்பழில் எழுகமலப் பூவழகும் எல்லாம் எடுத்து விரித் துரைத்தார். அவ் அழகனுக்கே தானும் வாழ்க்கைப்பட

விரும்பி அவனை அவள் நாளும் மன, மொழி, மெய்களால் வழிபடலானாள். கோதையின் காதலும், ஆழ்வாரின் கவலையும், உச்ச கட்டத்தை எட்டின; அவர்கள் வாழ்க் கையின் ஓரத்திற்கே போய்விட்டனர். இருபேர் அடியார் களின் இடுக்கணையும் களைகிறாற் போல் ஒருநாள் அரங்கத்தம்மான் ஆழ்வார் கனவில் தோன்றி கோதையைத் தம் கோயில் திருமுற்றத்திற்கு அழைத்துவந்தால், மணந்து கொள்வதாகக் கூறி மறைந்தனன். திருவருளின் ஆணைப் படி பெண்ணின் கோஷ்டி வடக்குநோக்கிப் புறப்பட்டது. அது கேட்ட கோயில் பெருமக்கள் அரங்க நகர் எல்லை யில் திருக் கோஷ்டியை எதிரேறிச் சென்று வரவேற்று இறைவர் திரு முன்பிற்கு அழைத் தேகினர். கருங் கடற் பள்ளியில் கலவி நீங்கிப் போய்ப் பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ? - எனக் கம்பர் பெருமான் வியந்த வாறு போல, நேருக்கு நேராய் அரங்கற் கெதிரே நின்ற போது, ஆழ்வார் திருமகளார் ஆனந்த பாஷ்ப மேலிட்டுப் போய் அடியற்ற மரம் போல் நெடுநிலம் சேர்ந்தார்; பிறகு எழவே இல்லை; இதயத் துடிப்பும் அடங்கி விட்டது! அரங்கன் அழைத்துக் கொண்டு விட்டான் என்று அடியார்கள் பேசிக் கொண்டனர்.

இது காறும் காணப்பட்ட வதுவைப் படலம் ஆறா யிரப்படி குருபரம்பரையிற் கண்ட குறிப்புக்களில் இருந்து ஊகித்து எழுதப்பட்டது. ஆனால், திவ்யசூரி சரிதத்திலோ இத் திருமண வரலாறு இன்னொரு விதமாக உள்ளது. வித்வானான விஷ்ணு சித்தர் தம் புத்திரியின் யவ்வன தசையையும், அவளுக்கு எம்பெருமானிடத்துள்ள அனு ராகத்தையும் நன்றாக ஆலோசித்துப் பார்த்து, பாண்டிய தேசாதிபதியான வல்லப தேவன் எனும் தம் சிஷ்யனு டனும், புத்திரியுடனும், குருகை நகரத்தை அடைந்து, அங்கு உறங்காப்பளியின் கீழ் ஜ்யேஷ்டராய் திருப்பாணாழ் வாரும், திருமங்கை மன்னரும் ஒழிந்த ஆழ்வார்கள் அனை வரும் புடைசூழ எழுந்தருளியிருந்த ஸ்ரீசடகோபர்க்கும்

ஏனை ஆழ்வார்களுக்கும் தண்டனிட்டு தாம் வந்த காரியம் ஆராய்ந்து அருளும்படிக்கு வேண்டி நின்றனர். அவரும் அர்ச்சாவதார எம்பெருமான்களில் சிறந்த வரனைத் தேடும் பொறுப்பிற்கு வல்லப ராஜனையும், மதுரகவியையும் நியமித்தனர். நடைபெற்ற சுயம்வரத்தில் கோதை திருவரங்கச் செல்வனான அழகிய மணவாளனையே வரித்துத் திருமணம் புரிந்து கொண்டாள். அவனுடன் மணக்கோலமோடு திருவரங்கம் போகும் வழியிலே திருமங்கை மன்னன் அவர்களைத் தம் வாள்வலியால் வழிமறித்து மந்திரோபதேசம் பெற்றாராம்.

சுயம்வரத்தின் போது முதலாழ்வார்களும், அவர்களுடைய சீடரான திருமழிசைப் பிரானும் இருந்தனர் என்பது அப்பட்டமான பொய் ஆதல் கூறாமே போதரும். குலசேகரரும், நம்மாழ்வாரும் ஆண்டாள் காலத்தினர் அல்லராதல் பிறிதோரிடத்துக் காட்டப்படும். திருப்பாணாழ்வார் இருந்திருக்க முடியாது என்பது உண்மையே. ஆனால், அது திவ்யசூரி சரிதமும், மூவாயிரப்படி குரு பரம்பரையும் திருப்பாணரை நாச்சியார்க்கும் பிற்பட்ட காலத்தினராகக் கருதுவதால் அன்று என்பது முன்னமே திருமழிசையின் டரட்சி பற்றிய அதிகாரத்தில் காட்டப் பட்டது. திருமங்கை மன்னர் ஆண்டாள்-அரங்கர் தம்பதிகளின் கோஷ்டியை அவர்கள் குருகூரிலிருந்து அரங்கத்திற் சேகிய போது வழிமறித்தார் என்றல் முன்னுக்குப் பின் முரணாக உள்ளது. ஏனெனில், திருமங்கை மன்னர் கொள்ளை யடித்தது நாங்கூரை அடுத்துள்ள திருமணங் கொல்லையில் என ஆறாயிரப்படி குருபரம்பரையில் கூறப் பட்டுள்ளது. இவற்றால் எல்லாம் [கதை] நயத்திற்காக வேண்டி இடம், கால முரண் பற்றி கொஞ்சமும் கவலைப் படாமல் கருடவாகன பண்டிதர் சினிமாக் கதை ஆசிரியரைப் போல ஆழ்வார்கள் வரலாற்றை சித்தரித்துச் சேறல் வெளிப்படை.

ஆண்டாள் - வனமாலாம்சநீ

நாச்சியாரை பூமிதேவியின் அம்சராக குருபரம்பரைகள் கூறுகின்றன. இவ்வாறு கருதுவதற்கு கோதையார் பூங் காவில் துளசிச் செடியின் அருகில் மண் மீது கண்டு எடுக்கப்பட்டதே காரணம் ஆகல் வேண்டும். ஆயினும், கோதையார் வாழ்க்கை மாலையையே மய்யமாகக் கொண்டிருப்பதால், இவரைத் திருமாலுக்கு அணி செய்யும் 'வனமாலை' யின் அம்சமாகக் கற்பித்தலும் பொருத்தமே. மாலின் கழுத்திற்கும், தோளுக்கும், மார்பிற்கும் இம்மாலை எத்துணைத் துடிதுடித்தது!

பெரியாழ்வார் ஆலயாதந்திரை

கோதையின் திருமணத்தோடு அவர் சரிதை முடிந்து விட்டதாகக் கருதக் கூடாது ஏனெனில், மகத்தான நிகழ்ச்சி ஒவ்வொன்றிற்கும் பின் விளைவுகளும் பெரிதாகவே இருக்கக் காண்கிறோம் அசோகன் கலிங்க வெற்றிக்குப் பிறகு மன் மனம் மாறிப் போரையே வெறுத்து 'ராஜரிஷி' ஆனான். அவனாலேயே புத்தம் இன்று உலக மகா சமயங்களில் ஒன்றாய் இருத்தலை அனைவரும் அறிவோம். அங்ஙனமே, பாரதப் போருக்குப் பின் தருமபுத்திரனுக்கு ஏற்பட்ட மாபெரும் குழப்பத்தை மாற்றுவதற்கு மகாபார தத்தில் சில பருவங்களையே புகுத்த வேண்டிய நிலை பண்டையோர்க்கு ஏற்பட்டது. சிலப்பதிகாரத்திலும் கண்ணகியின் தற்கொலைக்குப் பிறகும் கதை தொடர் கின்றது, வஞ்சிக் காண்டம் என்ற வடிவத்தில். இவ்விதமே கோதையின் திருமணத்திற்குப் பிறகு பெரியாழ்வார் உள்ளத்தும், மன்னனிடமும், அந் நாட்டு மக்களிடமும் காணப்பட்ட மன நெகிழ்ச்சிகளின் பல தரங்களையும் காண்டல் வேண்டும். அத்தகைய நெகிழ்ச்சிகள் நிச்சய மாக இருந்திருக்கும்.

பெரியாழ்வார் திருமொழியின் சில பாடல்களில் தம் மகளைப் பிரிந்தபிறகு அவர் உள்ளத்தில் ஏற்பட்ட சலனங்

களின் எதிரொலி கேட்கின்றது. அவருக்கு ஒரு மகள் இல்லாமலே போய்விட்டிருந்தாலோ அல்லது அவள் வாழ்க்கை மற்றையவர்களுடையதைப் போன்று சாமான்யமானதாக அமைந்து விட்டிருந்தாலோ, அப் பாடல்களை நாம் வெறுங் கற்பனையாகக் கருதிக் கொள்ளலாம்.

**'மானிடவர்க் கென்று பேச்சுப் படில் வாழகில்லேன் கண்டாய் மன்மதனே** [நா. தி. 1,5,7] எனவும்,

**"பெண்மையைத் தலைமையுடைத் தாக்கும் வண்ணம்**
**கேசவ நம்பியைக் கால் பிடிப்பாள்**
**என்னுமிப் பேறெனக் கருள்கண்டாய்"-**
(நா.தி.1,8) எனவும்,

**"வேங்கிட வாணன் என்னும் விளக்கி னிற்புக**
**என்னை விதிக்கிற்றியே"-** (நா.தி,1,3) எனவும்,

எல்லாம் வாதைப்பட்ட திருமகளின் தந்தையார் உள்ளத் துடிப்பே

**"நல்லதோர் தாமரைப்பொய்கை நாண்மலர்மேற் பனிசோர**
**அல்லியும் தாதுமுதிர்ந்திட் டழகழிந்த தொத்ததாலோ!**
**இல்லம் வெறி ஒடிற்றாலோ! என்மகளை எங்கும் காணேன்;**
**மல்லரை அட்டவன் பின்போய் மதுரைப்புறம் புக்காள் கொல்லோ!"**
(பெரியா. தி, 3-8,1) எனவும்,

**"ஒருமகள் தன்னை உடையேன்; உலகம் நிறைந்த புகழால்**
**திருமகள் போல வளர்த்தேன்; திருமால்தான் கொண்டுபோனான்**
(பெரியா, தி. 3-8,4) எனவும்,

"வேடர் மறக்குலம் போல வேண்டிற்றுச் செய்தென் மகளை
கூடிய கூட்டமே யாகக் கொண்டுகுடி வாழுங் கொல்லோ!
நாடும், நகரும் அறிய நல்லதோர் கண்ணாலம் செய்து
சாடிறப் பாய்ந்த பெருமான் தக்கவா கைப்பற் றுங்கொலோ!"

(பெரியா. தி.3-8,6) எனவும்,

"அண்டத் தமரர் பெருமான் ஆழியான் இன்றென் மகளைப்
பண்டப் பழிப்புகள் சொல்லி பரிசற ஆண்டிடுங் கொல்லோ!"-

(பெரியா. தி 3-8 7) எனவும் வெளிப்பட்டது எனத் துணிந்து கூறலாம். எனவே, பெரியாழ்வார் திருமொழியின் பிற்பகுதி, நாச்சியார் மறைவுக்குப் பின், உண்மை உணர்ச்சியால் எழுந்ததே என்ற அய்யங்காரின் முடிவு (பக். 113-4) சரியானதே ஆகும். இன்னும், பல தலங்களைப் பற்றிய பதிகங்கள் எல்லாமுங்கூட, ஊரில் தனியாக இருக்கப் பிடிக்காமல், ஆழ்வார் தல யாத்திரை மேற்கொண்ட போது பாடியனவாகக் கோடலே முறை. திருவரங்கத்தையும், திருமாலிருஞ்சோலையையும் பற்றிய பதிகங்கள் மும் மூன்றாக இருப்பதைக் கொண்டு குறைந்தது மூன்று தடவைகள் இவர் இத் திருப்பதிகளுக்குச் சென்று வந்தனராகக் கருதலாம்.

*பாண்டியன் பரிசு*

மன்னன்பால் ஏற்பட்ட மனமாற்றம் அடுத்தபடியாகக் காணத் தக்கது. ஒருநாள் இரவு பாண்டியன் ஸ்ரீ வல்லப தேவன் நகர் சோதனையின்போது ஒரு வீட்டுத் திண்ணையில் உறங்கிக்கொண்டிருந்த ஓர் அந்தண யாத்திரிகனை எழுப்பி விசாரிக்க நேர்ந்தது. அது போழ்து, அவ்அந்தணன்

கூறிய சுலோகம் கேட்ட நாளிலிருந்து அவனை என்னவோ செய்துகொண்டிருந்தது. 'மழைக் காலத்துக்கு வேண்டிய தைப் பகலிலும், முதுமைக் காலத்துக்கு வேண்டியதை இளமையிலும், மறுமைக் கானதை இம்மையிலும் தேடுக'- என்பது அதன்பொருள். அரசன் சிந்தித்தான். 'இக வாழ்க்கைக்கான பொருள்அனைத்தையும் பெற்றிருப்பதால் இனித் தான் தேட வேண்டியதெல்லாம் பரவாழ்க்கைக்குத் தேவையானதே'- என எண்ணி, அந்தப் பெரும் பதத்தை நல்க வல்ல பரம்பொருளின் குணாதிசயங்களை அறியும் பொருட்டு, முன்னாளில் வங்கியசேகர பாண்டியன் செய்ததாகத் திருவிளையாடற் புராணங்களில் கூறப்படுமாறு போல, ஒரு போட்டிக்கு ஏற்பாடு செய்தான். அரசற்கு உறுதிப் பொருளின் தன்மையைத் தக்கவாறு உணர்த்து வோர்க்கு 'பொற்கிழி' ஒன்று பரிசாக அளிக்கப்படுமென நாடெங்கும் பறை சாற்றப்பட்டது. குறித்த நாளில் சமயக் கணக்கர் பலரும் வந்து பாண்டியன் பேரவையிற் கூடினர். உலகப்பற்றெல்லாம் அறுத்து, நிச்சிந்தையராய்'தெய்வமே!' என இறைவன் திருவடித்தாமரை ஒன்றுமே பற்றிக்கொண்டு பொழுது போக்கிவந்த ஆழ்வாருக்கு போட்டி, கீட்டி-என்று எதிலும் மனம் செல்லவில்லை. ஆனால், அரச புரோகிதரும் இவரின் அருமை நண்பரும் ஆன கோட்டியூர் செல்வ நம்பியோ விடுவதாய் இல்லை. இவரை எப்படியும் போட்டியிடச் செய்ய வேண்டுமென்று ஒற்றைக்காலில் நின்றார். முடிவில் நம்பியின் வற்புறுத்தலால், வேண்டா வெறுப்புடன் விஷ்ணு சித்தரும் அச்சபைக்கு எழுந்தருளினார். வைகுந்த பதவி அடைந்துவிட்ட தம்மகளாரின் மேலும், தம் வழிபடு கடவுள் ஆகிய வடபத்திரசாயியின் மேலும் பாரத்தைப் போட்டுவிட்டு அவர் தம்முறை வந்துற்றபோது உரையைத் தொடங்கினார். ஆரம்பத்தில் கொஞ்சம் மந்தமாகவே இருந் தாலும், போகப்போக குடுபிடித்தது. உச்ச கட்டத்தில் விசிஷ்டாத்வைத பரமாக பரம்பொருளின் தன்மையையும் அதனை எய்துதற்கான வழிகளையும் அவுர்எடுத்துரைத்த பேர்முகு பின்னாளில் சிக்காகோ மாநகரில் விவேகானந்தர்

ஆற்றிய பேருரையைப்போல அனைவர் நெஞ்சையும் அள்ளிக் கொண்டது. 'மனனக மலமற மதிநலங் கண்ட' மன்னவர் கோமான் மட்டற்ற மகிழ்வோடு பொற்கிழியைப் பரிசளித்து ஆழ்வாரை பட்டத்து யானைமேல் அமர்த்தி ஊர்வலமாக அழைத்துச் சென்றான். அக்குழாம் கூடலழகர் கோயில்முன் வந்துற்றபோது, ஆலயத்தார் அழகரை கருட வாகனத்தின் மேல் பிரத்யேகமாக எழுந்தருள்வித்துப் பெருமை செய்தனர். சேவிக்கப்பெற்ற அவர் ஆனந்த பாவ சராய், யானைமேல் தொங்கவிடப்பட்டிருந்த மணிகளையே தாளமாகக்கொண்டு 'பல்லாண்டு' பாடினார்.

இவ்வரலாறு ஆண்டாள்திருக்கல்யாணத்திற்கு முன்பே நிகழ்ந்ததாகக் கோடல் மரபு. ஆயினும், இதுபற்றிய குறிப்பு ஏதும் நாச்சியார் திருமொழியில் இல்லை. எனவே, இந்நிழ்ச்சியை திருக்கல்யாணத்தின் பின் நிகழ்ந்ததாகக் கோடலே நேரிதாம். ஆண்டாள் வாழ்வும், வாக்குமே பாண்டியனையும் பரவாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்கத் தூண்டின வாகல் வேண்டும். முன்னமேயே பக்குவப்பட்டு இருந்ததனால் தான் அரசன் மனத்தில் அந்தணன் கூறிய அந்தச் சாதாரண சுலோகம் அவ்வளவு சுருக்கென்று ஏறியது.

"கொன்னவில் கூர்வேல் கோநெடுமாறன் தென்கூடற் கோன்

தென்னன் கொண்டாடும் தென்திரு மாலிருஞ் சோலையே",

---

திருமங்கை ஆழ்வாரால் பாடப்பட்ட கூடலை பெரியாழ்வார் பாடவில்லை என்றும், அதனால் பெரியாழ்வார் காலத்தில் கூடலழகர் திருக்கோயில் மூடப்பட்டுக் கிடந்ததென்றும் அறிஞர் M. சீனிவாச அய்யங்கார்வாதித்தனர். [பக். 323]. ஆனால் திருப்பல்லாண்டு கூடலழகர் மேல் பாடப்பட்டது என்பதே பொதுவான நம்பிக்கை.

(பெரியா. தி. 4-2,7) என்று திருவாக்கில் மாலிருஞ்சோலை மேய மணாளனை பரம்பரைச் சைவர் குலத்துப் பாண்டியன் வழிபட்டான் என ஆழ்வார் கூறுதலால், இக் கோநெடு மாறன் குருபரம்பரைகள் கூறும் சீவல்லப தேவனே ஆக வேண்டுதல் காண்கிறோம். ஆயினும், குருபரம்பரைகளில் பரத்வ நிருபணம் கோதை நாச்சியார் திருக் கல்யாணத் திற்கு முன்பே நிகழ்ந்ததாகக் காணப்படுவது எதனால்? இந்தக் கேள்விக்கும் தகுந்த விடை கண்ட பிறகே, திருக் கல்யாணத்திற்குப் பின்பே பரத்வ நிருபணம் நிகழ்ந்தது என்ற புதிய கொள்கையை ஒப்புக் கொள்வது சாத்தியம். பெரியாழ்வார் வரலாற்றையும், கோதையார் வரலாற்றையும் முற்ற முழுக்கப் பிரித்து [Clean separation] உரைத்து வந்த ஆசார்யர்கள் மூத்தவரான பெரியாழ்வார் வரலாற்றை முற்படக் கூறவேண்டி யிருந்தது. இவ்வழக்கமே பின் னெழுந்த குருபரம்பரைகளில் இவ் வரலாறுகளின் கால முறையையும் இப்படியே நிலைப்படுத்தி விட்டது என்றே தோற்றுகின்றது.

## பெரியாழ்வார் - சேஷாம்சர்

சரி. விஷ்ணுசித்தர் பெரியாழ்வார் ஆனது எப்படி?- என்று பார்ப்போம். திருமகள் சமேதனாக எழுந்தருளிய பெருமாளைச் சேவித்த போது, 'திருக் கண்டேன் பொன் மேனி கண்டேன்' எனத் தாம் கண்டதைக் கண்டவாறே உரைத் தேகினார், பேயார். திருப்பாணரும் அழகிய மணவாளர் திருமுன்பிற்கு வந்தெய்திய காலை அடிதொட்டு முடிகாறும் கண்ணுற்ற அழகினை எல்லாம் வருணித்து மெய்ம்மறந்து, உயிர் துறந்தார். தொண்டரடிப் பொடி களோ வெனில், துயில் அமர்ந்த பெருமாளுக்கு 'பள்ளி யெழுச்சி' பாடிப் பலரோடுங் கூடியாடி திருவரங்க முற்றத்தை முழுக்கவும் சேறாக்கினார். பெரியாழ்வாருக்கு மட்டுமே பல்லாண்டு பாடத் தோன்றிற்று. பெருமாளைப் பிள்ளையாக்கி தாலாட்டு பாடியவருக்கு, பின்னும் அவற்குப் பெண்ணும் கொடுத்து மாமனாரும் ஆகி, பெருமாளைவிட

மூத்த நிலையிலேயே இருந்து பழகிவிட்ட அவருக்கு 'பல்லாண்டு' பாடத்தானே தோன்றும்! ஈசனை ஆண்டா னாகக் கருதி வழிபட்ட அப்பர், தந்தையாகக் கருதிக் கொஞ்சிய சம்பந்தர், தோழனாகக் கருதி அவனால் பல பணிகளைச் செய்து கொண்ட சுந்தரர், அவனோடேயே ஒன்றிவிட்ட மாணிக்க வாசகர் - இந்நாற்பெரும் [சைவக்] குரவர் நெறிக்கும் அப்பாற் பட்டுப் போய் ஒரு அன்பு நெறி கண்ட விஷ்ணுசித்தரை பிற்காலக் குருபரம்பரை அவர் ஆர்வப்படியே 'பெரியாழ்வார்' எனப் பெயரிட்டு மகிழ்ந்தது. உபதேச ரத்தின மாலையில் [செ. 18] மணவாள மாமுனிகள்

"மங்களா சாஸனத்தின் மற்றுள்ள ஆழ்வார்கள்
தங்களார் வத்தளவு தானன்றிப்—பொங்கும்
பரிவாலே வில்லிப்புத்தூர்ப் பட்டர்பிரான் பெற்றான்
பெரியாழ்வார் என்னும் பெயர்"

என்று கூறுவதிலிருந்து இதனை நாம் அறிகிறோம். பிள்ளைத் தமிழும், பல்லாண்டும் இப் பெருநெறியிற் பிறந்த பிரபந்த வகைகள் என்னலாம் இவற்றுள் திருப்பல்லாண்டு சைவ சமயத்துச் சேந்தனாரால் பின்பற்றப்பட்ட பெருமை உடையது. இவரது அளப்பரிய வாத்ஸல்ய பக்தியை நோக்கும் போது இவரை கருடாம்சர் என்பதை விட சேஷாம்சர் என்றலே சிறப்புடைய தாகும்.

ஞான மார்க்கத்தைப் பின்பற்றிய ஜைன, பவுத்த மகா சமயங்களுக்குச் சாவு மணி அடித்த சம்பந்தருக்குப் பிறகு, சைவமே தமிழகத்தில் தன் நேரிலாத சமயமாக தலையெடுத்து இருந்தது. தொண்டரடிப் பொடிகளின் வாழ்வும், பணியும் வைணவர்களுக்கு ஒரு புதிய ஊக்கம் அளித்தன; அவ்வளவே. ஆகவே, பாண்டியன் கூட்டிய அவையில் [அறிஞா K.G. சங்கர் அவர்கள் கருதுமாறு போல இரண்டொரு ஜைன, பவுத்தர்கள் இருந்திருக்கக் கூடுமெனினும்] சைவப் புலவர்களே மிக்க தன்னம்பிக்கை

யோடும், மிகுந்த எண்ணிக்கையிலும் இருந்திருக்க வேண்டும் என்றும், இவர்களை வென்று கொண்டே பெரியாழ்வார் கருடக் கொடியை உயர்த்தினார் என்றும் ராகவையங்கார் அவர்கள் கோடிட்டுக் காட்டியுள்ளனர் [பக். 80]* வைணவத்தை பாண்டி மண்டலத்தில் பரவச் செய்தவர் என்பதோடல்லாமல் ஆதை சம்பந்தர் வெற்றிக் கொடி நாட்டிய அதே மதுரையில், அவரால் என்றும் நிலவும் படிக்கு நிறுத்தப்பட்ட சைவத்தின் பலத்த எதிர்ப்பைத் தகர்த்தெறிந்து சாதித்த வகையிலும் குருபரம்பரைகளால் அளிக்கப்பட்ட பெரியாழ்வார் என்ற கவுரவப் பட்டம் இவருக்குப் பெரிதும் பொருத்தமானதே. 'பட்டர் பிரான்' என்ற பட்டம் சீலத்தால் அவர் தாமே, இதற்கு முன்பே, தேடிக் கொண்டதே யன்றி, குருபரம்பரைகள் கூறுகின்றாற் போல பாண்டியனால் கொடுக்கப்பட்ட தன்று. இது ''பாண்டியன் கொண்டாடப் பட்டர் பிரான் வந்தார்'' என வரூஉம் பழம் பாட்டாலும் தெளிவாகின்றது. 'பட்டர்பிரான்' என்ற பட்டம் இவருக்கு முன்பே இல்லாதிருந்தால், 'பாண்டியன் கொண்டாட விட்டுசித்தர் வந்தார்'- என்றே அப்பாடல் எழுதப்பட்டிருக்கும்.

## *ஸ்ரீவல்லப தேவன் - ஸ்ரீமாறனா?*

இனி, ஆழ்வார் காலத்திய மாறவர்மன் ஸ்ரீவல்லப தேவன் யார்?- எனக் கண்டறிவதும் நம் கடமை ஆகும். கி.பி. 740-லோ அல்லது அதற்குச் சற்று முன்னரோதான்

---

* பெரியாழ்வார் சைவத்தோடு போட்டியிடவில்லை என்று அறிஞர் K.G. சங்கர் கூறுவர். 'பரத்வ நிருபணம்' என்பதன் பொருள் திருமாலே பரம்பொருள் எனக் காட்டுதலையே குறிக்க வேண்டுதலால், சிவன் ஒரு சில்லரை தெய்வமே எனச் சைவர்களோடு வாதிட்டுக் காட்டினார் பெரியாழ்வார் என்பது கூறாமே அமையும். ஆகவே, ராகவையங்கார் கொண்ட கருத்தே அமைவுடையதாகும்.

கட்டப்பட்டதாகக் கருதப்படும்[4] திருவெள்ளறைக் கோயிலைப் பெரியாழ்வார் பாடியிருப்பதால், இவரால் பாடப்பட்ட மாறனும், ஆட்கொள்ளப் பட்டவனாகக் கூறப்படும் சீவல்லப தேவனும் இருவேறு அரசர்கள் ஆகிலும் கூட இவருள் முன்னவன் காலமே கி.பி. 720-750-ஓ அல்லது அதற்கும் பிற்பட்ட தேயோ தான் ஆகல் வேண்டும். [இந்தப்படியே] சீவல்லப தேவனை ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் [கி.பி. 840-862) ஆகக் கருதினார் திரு கோபிநாத ராவ் அவர்கள். ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனுக்கு 'கோ நெடுமாறன்' என்ற பெயரும் 'எருக்கங்குடி' கல்வெட்டில்[5] பயிறலைக் கண்ட அறிஞர் நாகசாமி அவர்கள் [பக். 17&18] ராயர் கருத்தே சரியானது எனவும் சாதித்தார். திருமங்கை மன்னரும், இன்னும் பாண்டிய நாட்டினரே ஆகிய நம்மாழ்வாரும் கூட வில்லிப்புத்தூரைக் குறிடபிடாமையும் பெரியாழ்வாரும் அவர் தம் திருமகளாரும் ஏனை ஆழ்வார்கள் அனைவர்க்கும் பிற்பட்டோரே ஆகக் கூடுதலை குறிப்பாகச் சுட்டுவனவாய் உள்ளன. இவர்கள் அருளிச் செயல்களே திவ்வியப் பிரபந்தத்தில் வட சொல் கலப்பிலும், கொச்சை மொழி வழக்கிலும் முதலிடம் பெறுவதைக் காட்டி, மறைமலை அடிகளும் இக் கருத்தே கொண்டனர். [பக். 544] அறிஞர் சீனிவாச அய்யங்காரும் [பக்.323] பெரியாழ்வாரின் காலத்தை கி.பி. 840-915 என்றே குறித்தனர். ஆயினும், பெரியாழ்வார் குரோதன ஆண்டிற் பிறந்து 85 ஆண்டுகள் வாழ்ந்திருந்தார் என்ற மூவாயிரப் படி குருபரம்பரை கூறுவதால், சீனிவாச அய்யங்கார் இவருக்கு கி.பி.785-870 என்ற காலத்தையே குறித்திருக்க வேண்டும். இவற்றின் உண்மையை இனி ஆராய்வோம்.

இடைக்காலத்தில் இருந்து, பாண்டியர்களிடையே சடைய வர்மன், மாற வர்மன் என மாறி, மாறிப் பட்டங்கள்

---

4. திருவெள்ளறை பக்.
5. S.I.I. Vol 14, No. 44 [எருக்கங்குடிக் கல்வெட்டு]

புனைந்து கொள்ளும் வழக்கம் ஒன்று ஏற்பட்டிருந்தது. இதன்படி ஒரு சடையனுக்கு மக்களாய்ப் பிறந்த அனைவரும் மாறர்களே. இவர்களுள் மூத்தோனாகிய நெடுமாறனே அரசுரிமை படைத்தவன் ஆனபடியால், முடிசூடிக் கொண்ட மாறர்களிற் பெரும்பாலோர் நெடுமாறர்களே ஆகக் கடவர். இங்ஙனமே, அரசர்களாய் வீற்றிருந்த சடையர்களும் அனேகமாய் நெடுஞ்சடையர்களே. நெடுமாறன் என்ற பெயர் இங்ஙனம் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் ஒருவனுக்கே உரிய சிறப்புப் பெயர் ஆகக் கூடாமையால், ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனே ஆழ்வாரால் குறிப்பிடப் பெறும் 'கோநெடு மாறன்' என்று அறிஞர் நாகசாமி கொண்ட கருத்து ஏற்புடைத் தன்று.

இன்னும் வில்லிப்புத்தூரை திருமங்கை மன்னரும், நம்மாழ்வாரும் குறிப்பிடாமையை வைத்து நாம் எந்த முடிவிற்கும் வர இயலா தென்பதை பெரியாழ்வாரும், ஆண்டாளும் கூட வேறெவர் பிறந்த ஊரையும் குறிப்பிடாமையிலிருந்து அறிந்து கொள்ளலாம். திருமழிசைப் பிரான் பிறந்த மழிசையையும், தொண்டரடிப் பொடிகள் பிறந்த மண்டங்குடியையும் கூடத்தான் இவர்களுக்கு பிற்பட்ட ஆழ்வார்களுள் எவரும் குறிப்பிடவில்லை. ஆகவே ஆழ்வார்களின் பிறப்பிடங்களை அவைகள் பண்டு தொட்டு யாத்திரைக்குரிய இடங்களாகப் பெயர் சிறந்து இருந்தாலன்றி, குறிப்பிடாமையே பண்டைய 'வைணவ பாணி' ஆதல் காண்கிறோம் பெரியாழ்வாரும், ஆண்டாளுமே கூட தமதூர்ப் பெருமான் மேல் ஒரு பதிகந்தானும் பாடவில்லை என்பதையும் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். பெரியாழ்வார் திருமொழி 2-2, 9-ல் ஒரு முறையும் நாச்சியார் திருமொழி 1-5, 5-இல் ஒரு முறையும் ஆக இரண்டுமுறை பெயர் மட்டுமே (இதுவும் இவர்களால் மாத்திரமே) இத் திருப்பதி குறிப்பிடப் பட்டதால் மட்டுமே இவ்வூர் நூற்றெட்டு திருப்பதிகள் பட்டியலில் இடம் பெற்றது.

மூன்றாவதாக சுந்தரரால் திருவதிகைப் பதிகத்தில்

"பொன்னான மயிலூர்தி முருகவேள் தாதை
பொடியாடும் நெடுமாறன்"

எனப் பாடப்பட்ட மாறன் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் ஆகவே அண்மை ஆராய்ச்சியால் தெரிய வந்துள்ளது. இப்பாடலிற் கண்டுள்ளபடி சிறந்த சைவன் ஆகிய இவன் பின்னர் பெரியாழ்வாரால் வைணவன் ஆக்கப்பட்டான் என்றே கொள்ள வேண்டும். ஆனால், இவன் பெயரில் இரண்டு முறை காணப்படும் 'ஸ்ரீ' பாண்டி நாட்டிலும் வடமொழி மோகம் வேரூன்றி விட்டதை மட்டுமே காட்டுகின்றதே யன்றி, இவன் சமயத்தை வைணவம் ஆகக் காட்டப் போதியதன்று.

இன்னும், ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனே ஆழ்வார் காலப் பாண்டியன் எனில், ஆழ்வார் நாதமுனிகளுக்கு (கி.பி. 823-918 ராகவையங்கார் கருத்துப்படி, கி. பி. 883-943 நம் கருத்துப்படி) சற்றே மூத்த சமகாலத்தவர் அல்லது சற்றே முற்பட்ட காலத்தவர் ஆகிறார். ஆனால், இக்கொள்கை நாதமுனிகள் காலந்தொட்டு இடையறாது ஒழுகி வருகின்ற குருபரம்பரையோடு தொடர்புடைய பின்பழகிய பெருமாள் ஜீயர் கூறும் 'ஆழ்வார்கள் சோதிக் கொழுந்தருளி நெடுங் காலம் ஆயினவாறே' என்ற வாசகத்திற்கு முரணாக உள்ளது. மேலும், நமக்கு கிடைத்துள்ள 'ஆழ்வார்கள் அவதாரக் கிரமம்' (தோற்றத் தடைவு) பற்றிய கொள்கை கள் எதிலும் பெரியாழ்வாரும், அவர் தம் திருமகளாரும் எல்லோர்க்கும் பிற்பட்டவராகக் காட்டப்பட வில்லை.

மாறாக, இவ் இருவரின் காலம் கி.பி. 800-க்கு முற் பட்டதே என்று நமது ஆராய்ச்சியில் தெளிவாகவே தெரி கின்றது. பள்ளிக் கொண்ட கோலத்து அரங்கனுக்கு தொண்டரடிப் பொடிகள் செய்த பள்ளியெழுச்சியும், பெண் ணாய்ப் பிறந்து கண்ணனையே காதலித்த கோதையார் நோன்பெடுத்துப் பாடிய பாவையும் அவர்தம் நேச நெஞ் சங்களில் இயற்கையாகவே எழுந்த எண்ண அலைகள்

ஆகும். நட்டம் பயின்றாடு நாதனுக்கு மணிவாசகப் பெருமாள் பள்ளியெழுச்சி பாடியதிலும், உண்மையாக எந்த நோன்பும் எடுக்காமல் தாமாகப் பாவித்துக் கொண்டு 'எம் பாவை' (பாவை அன்று!) பாடியதிலும் இத்தன்மை இல்லை: சமயப்பற்றால் எழுந்த ஒருவித போட்டி மனப்பான்மையே தெற்றெனத் தெரிகின்றது. இதுபோல 'மதுரைப் புறத் தென்னை உய்த்திடுமின்' என்று நாச்சியார் (திருமொழி 12-இல்) தம் உண்மைக்காதல் உணர்ச்சியைக் கொட்டிப் பாடிய படிக்கே திருமங்கை மன்னர் தலைவிக் கோலம்பூண்டு 'குறுங் குடிக் கென்னை உய்த்திடுமின்' (பெரிய: 9-6-இல்) என்று அருளிச் செய்ததில் ஒரு செயற்கைத் தன்மையே காணப் படுகின்றது. இன்னும், இளங்கண்ணனின் (பால கிருஷ்ண னின்) சேட்டைச் செயல்களில் ஈடுபாடு மிகக் கொண்டு பெரியாழ்வார் பாடிய பால பாகவகத்தின் சில அம்சங்களை மட்டும் திருமங்கை ஆழ்வார் பாடியதெல்லாமும் (பெரிய தி. 10-4, 10-2, 10-6, 10-7, 10-8, 10-9, 10-10) பெரியாழ்வார்-ஆண்டாள் இணையரின் (ஜோடியின்) பிறகே ஆக வேண்டுதல் கண்கூடு. திருமங்கை மன்னரின் திரு மடல்கள் இரண்டுமே ஆண்டாளின் ஆற்றாமையைக் கண்டு செய்யப்பட்டன என்பதே இவ்வாசிரியர் கருத்து. ஆழ்வார் களுள் எல்லாம் பெரியாழ்வாரும் அடுத்து ஆண்டாளுமே (பிற இலக்கியங்கள் எதையும்) ஓதாமலே (இலக்கணம் மட்டும் பயின்று கவிதை செய்வது) உணர்ந்தவராதலாலும் நாம் கொண்ட கருத்து மேலும் உறுதிப்படுகின்றது. இனி, திருமங்கை மன்னர் கி. பி. 795-800க்குமேல் ஓய்வுபெற்று விட்டவராகத் தெரிகின்றார்*. எனவே பெரியாழ்வாரும், அவர் தம் அருமைத் திருமகளாரும் கி. பி. 800-க்கும் முற்பட்டவரே ஆதற்குத் தடை ஏதும் உண்டோ?

கடைசியாக, மறைமலை அடிகள் கருத்து பற்றியும் ஒன்றிரண்டு சொல்லவேண்டும். இது எப்போதும் போல்

* இது இவரைப் பற்றிய அடுத்த அதிகாரத்தில் விரிவாய் ஆராய்ந்து காட்டப்பெறும்.

சொல் ஆராய்ச்சியே. அதிலும் எந்தவிதத் தெளிவும் இல்லை. ஏனெனில், எந்த சொல் எந்த நூற்றாண்டில் எந்தப் பிராந்தியத்தில் வழக்குற்றது என்று அவர் ஆதாரங் காட்டிப் பேசவில்லை. இந்த நிலையில், இவ்வித ஆராய்ச்சி எட்டுணையும் ஆழ்வார்கள் கால ஆராய்ச்சிக்குப் பயனற்ற தாதலை பல விடங்களிலும் சுட்டிக் காட்டியுள்ளோம். எனவே, இப்போது சான்றுகள் உள்ள நிலையில் ஸ்ரீ வல்லபப் பெயர் தரித்த பாண்டியன் ஒருவன் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனுக்கு முன்பும் இருந்தான் என்றமுடிவுக்கே நாம் வரவேண்டி யிருக்கிறது. இவன் யார் என்பதை பாண்டியர் வரலாற்றைத் துருவிப் பார்த்து கண்டுபிடிப்பதே இப் பொழுது நம் முன் உள்ள பிரச்சினை ஆகும். ஏனெனில், வேறெந்த ஆழ்வார் வரலாற்றைக் கொண்டும் பெரியாழ் வார், ஆண்டாள் காலத்தைக் கணிக்க வழியில்லை இவர் கள் வாழ்க்கையும் வாக்கும் வேறெவருடையவற்றோடும் இணையாமல் தனித்து நிற்பன!

*இரண்டாம் ராஜசிம்மனா?*

பாண்டியர் வரலாற்றை அறிதற்குப் பெருந்துணையாக உள்ள கருவிகள் இரண்டு. ஜடில பராந்தனால் வெளியிடப் பட்ட வேள்விக்குடிச் செப்பேட்டுத் தொகுதி[6] இவற்றுள் முதலாவது. பரகேசரி பராந்தக சோழன் காலத்திய ராஜ சிம்மன் வெளியிட்ட சிம்மனூர் பெரிய செப்பேட்டுத் தொகுதி[7] இன்னொன்று. இவ்இரண்டின் துணை கொண்டு பாண்டியர் குடி வழியை முதன் முதலாக அறிஞர் வெங்கையா[8] 1907-இல் வெளியிட்டனர். இதே செப்-பேட்டுச் செய்திகளை வேறு விதமாகப் பொருள் செய்து பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார் இன்னொரு குடி வழியை 1929-ல் தமது 'பாண்டிய ராஜ்யம்'[9] என்ற

6&7. பாண்டியர் செப்பேடுகள் பத்து
8. Venkayya, V., ARE (1907-8) p.51
9. Pandyan Kingdom

ஆங்கில் நூலில் வெளியிட்டனர். இவற்றுள் அறிஞர் வெங்கையாவின் வழியே மெய்யானதாதல் இவ்வாசிரியரால் வேறிடத்தில் காட்டப்பெறும். இவ்வாசிரியர் கருத்துப்படி அமைந்த காலத்தோடு கீழே பாண்டியர் குடிவழி காட்டப் பெற்றுள்ளது. அறிஞர் வெங்கையா சேந்தனை "செழியன் சேந்தன்" எனக் குறித்தது தவறான தாதலை சாஸ்திரியார்[10] சுட்டிக் காட்டி யுள்ளபடியால் 'செழியன்' என்ற (அடைச்சொல்) அடைப்புக் குறிகளுக்கிடையே காட்டப்பட்டுள்ளது. இப்படத்தில் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனுக்கு முந்திய மாறன், ராஜசிம்மன்-II ஆகக் காண்கிறோம். இவனே பெரியாழ்வாரால் குறிப்பிடப்பட்ட 'கோநெடு மாறன்' ஆகக் கூடுமோ என்பதே இங்கே நம் கவனத்திற் குரியது. இதனைச் சற்றே விரிவாக ஆராய்வோம்.

### பாண்டியர் குடிவழி

| | | |
|---|---|---|
| 1. | கடுங்கோன் | (கி.பி. 600-620) |
| 2. | மாறவர்மன்<br>அவனி சூளாமணி | (கி.பி. 620-640) |
| 3. | (செழியன்) சேந்தன் | (கி.பி. 640-660) |
| 4. | அரிகேசரி<br>நெடுமாறன் | (கி.பி. 660-710) |
| 5. | கோச்சடையன்<br>ரணதீரன் | (கி.பி. 710-720) |
| 6. | மாறவர்மன்<br>அரிகேசரி<br>பராங்குசன் (எ)<br>ராஜசிம்மன்-I (எ)<br>ஸ்ரீ கண்டன்-I (எ)<br>ஸ்ரீ வல்லபன் | (கி.பி. 720-767) |

10. மேற்கோள் 7, அடிக்குறிப்பு பக். 33

7. நெடுஞ்சடையன்
பராந்தகன் (எ) ஸ்ரீவரன் } (கி.பி. 767-790)

8. ராஜசிம்மன்-II (எ)
சடகோபன் (எ)
பராங்குசன்-II (எ)
மானாபரணன்-I } (கி.பி. 790-821)

9. வரகுணன்-I (எ)
பராந்தகன்-II (எ)
திவ்ரகோபன் } (கி.பி. 821-836)

10. ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் (கி.பி.836-859) (எ) பரசக்ர கோலாகலன் (எ) அவனிப சேகரன்

மாபாண்டியன்
|
வீர பாண்டியன்-I

11. வரகுணர்-II (கி.பி. 862-905)

12. பராந்தக வீர நாராயணன் (எ) அரிமர்த்தனன் (கி.பி.862 907)
|
13. ராஜசிம்மன்-III (எ) மானாபரணன்-II (எ) அபிமான மேரு (கி.பி 907-931)
|
சுந்தர பாண்டியன்-I

வீர பாண்டியன்-II (கி பி. 946- )

வேள்விக்குடிச் செப்பேட்டுத் தமிழ்ப் பகுதியின் இறுதியில் மகாசாமந்தனான மாறங்காரி கங்க ஸ்ரீபுருஷனின் மகளான பூசுந்தரியை ராஜசிம்மன்-1க்கு மணம் புரிவித்த போது, பூர்வ ராஜரான வல்லபர் தாக்கினர் என்றும், அவ்வல்லபரை மாறாங்காரி வெண்பையில் தாக்கி அவர் தம் பன்றிக் கொடியை அழித்தான் என்றும் கூறப்

பட்டுள்ளது. கடத்திக் கொண்டு வரப்பட்ட பூசுந்தரியை முதலாம் ராஜசிம்மனே மணந்து கொண்டான் என்று ஆரம்பத்தில் இதற்குப்பொருள் கொள்ளப்பட்டது. ஆயினும், இதே செப்பேடுகளின் வடமொழிப் பகுதியில், ராஜ சிம்மனுக்கு மழவர் மகளினிடமாகப் பிறந்தவன் ஜடில பராந்தகன் என்று காணப்படுவதால், பூசுந்தரி இச் ஜடில பராந்தகனுக்கே ராஜசிம்மனால் மணந்துக்கொள்ளப் பட்டாள் என்று பின்னாளில் அறிஞர் சிறப்பான வகையில் திருந்தமாகப் பொருள் கொண்டுள்ளனர்.11 இப் புதிய கொள்கையின்படி ஸ்ரீபுருஷனுக்கு (கி. பி 725-788) ஸ்ரீ வல்லபன் என்றபெயரும் உண்மையால்12, இரண்டாம் ராஜ சிம்மனுக்கே தாய்வழிப் பாட்டனின் நினைவாக 'ஸ்ரீவல்ல பன்' என்ற பெயரும் இடப்பட்டிருக்கலாமோ என்று எண்ணத் தோன்றுகிறது. ஆகவே, பெரியாழ்வாரால் ஆட் கொள்ளப் பெற்ற மாறன் இவ் இரண்டாம் ராஜசிம்மனே ஆகலாம் கூடும். இஃது இரண்டாம் கொள்கை.

பெரியாழ்வார் பிறந்த நாளை குரோதன ஆண்டு, ஆனித் திங்கள், வளர்பிறைப் பக்கத்து ஏகாதசியோடு சுவாதி மீன்கூடிய ஞாயிற்றுக் கிழமையாக மூவாயிரப்படி குருபரம்பரை கூறும். இந்தநாளை கி.பி. 27-5-725 ஆகக் கணித்துள்ளார் திருவாளர் சாமிகண்ணுப் பிள்ளை அவர் கள். பெரியாழ்வாரின் ஆயுட்காலம் 85 ஆண்டுகளாக மேற்படி குருபரம்பரையிற் காணப்படுவதால், இவரை கி. பி. 725-810க்கு உரியவராகக் கருதலாம். இது ராஜ சிம்மன்-II-இன் காலமாகிய கி. பி. 790-810க்கு உள்ளும் வருதல் இரண்டாம் கொள்கைக்கு ஓரளவு ஆதரவாகின்றது. ஆனால், பஞ்சாங்கக் குறிப்புகள் நம்மாழ்வார் ஒருவரை ஒழிந்த ஏனையோர் திறத்து சிறிதும் நம்பத் தக்கனவாய் இன்மையால், இரண்டாம் கொள்கை வேறு சான்றுகளால் உறுதி செய்யப்படாதவரையில் உண்மையாகக் கொள்ளப் படத் தக்க தன்று.

---

11. தென்னிந்திய வரலாறு, பக். 245
12. History of Western Ganges p.

## நெடுஞ்சடையன் பராந்தகனா?

பாசுரத்தில் குறிப்பிடப்பெறும் மாறனும், குருபரம்பரைகள் கூறும் சீவல்லபதேவனும் வெவ்வேறானவர் ஆதலும் கூடுவதே. எனில், சீவல்லப தேவன் பாசுரத்தில் குறிப்பிடப்பட்ட மாறனின் தந்தை ஆகல் வேண்டும். மாறன் இரண்டாம் ராஜசிம்மன் ஆகில், சீவல்லப தேவன் வேள்விக்குடி, சீவரமங்கலம் மற்றும் சிறிய சின்னமனூர்ச் செப்பேடுகளை வெளியிட்ட நெடுஞ்சடையன் பராந்தகன் ஆகக்கடவன். பாண்டியர்களுள் எல்லாம் வெகு அதிசயமாய் இவன் பரம வைஷ்ணவன் ஆக விளங்கியபடியால், இது சாத்தியமே எனக் கருதினார் அறிஞர் கோபிநாதராவ் அவர்கள் (பக். 35). சைவப் பேரறிஞரும் வரலாற்றுப் பேராசிரியரும் ஆகிய பண்டாரத்தார்க்கும்[13] இஃது உடன்பாடே.

இம்மூன்றாம் கொள்கையின் சாதக, பாதகங்கள் என்ன? சகம் 705-இல் (கி.பி 783) ராஷ்டிரகூட வமிசத்து இந்திராயுதன் வடநாட்டையும், ஸ்ரீவல்லபன் தென்னாட்டையும் ஆண்டு கொண்டு இருந்தபோது தாம் (பூர்வ மகாபுராணம் ஆகிய) ப்ருகத் ஹரிவம்ச புராணத்தைச் செய்ததாக ஜினசேனர் கூறுகிறார். இந்த தென்னாட்டு அரசன் பாண்டியனே ஆகக் கூடும் என்பது இந்தச் செய்தியைக் கண்டு வெளியிட்ட அறிஞர் சாமா சாஸ்திரி அவர்களின்[14] நம்பிக்கை. கி.பி. 783-இல் பாண்டியன் ஆக இருந்தவன் நெடுஞ்சடையன் பராந்தகனே ஆனதால், பராந்தகனுக்கு ஸ்ரீவல்லபப் பெயரும் இருந்ததாகப் பெறப்படுதலும், ''மனுதர்சித மார்க்கத்தினால் குருசரிதம் கொண்டாடி'' என்ற சீவர மங்கலச் செப்

---

13. பாண்டியர் வரலாறு, சதாசிவ பண்டாரத்தார் பக்.
14. The Epoch of Kun Pandya, Dr. Shama Sastry in The Report of the Third Oriental Conference, Mysore, 1925/6, p.223-7

பேட்டடி ['குருசரிதம் அனுஸ்ருத்ய' என்ற ரகுவம்சத் தொடரின் மொழிபெயர்ப்பாகவே அறிஞர் K.G. சங்கர் கூறுமாறு போல இருக்கலாமெனினும்], "பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் வந்தான்" என்ற பாண்டிய பட்டரின் தனியன் வாசகத்தோடு இணைந்து பெரியாழ்வார் வரலாற்றைக் குறிப்பது போலவே உண்மையும், வேறெ வரும் செய்யாத வகையில் நெடுஞ்சடையன் குரு சரிதம் கொண்டாடியதிலிருந்து இவன் காலத்திய குரு ஒரு விசேட மிக்கவர் ஆகத் தெரிதலும் கோபிநாத ராயர் கருத்திற்கு ஆதரவாய் உள்ளன[15]. ஆனால், கர்நாடக நாட்டு ஜின சேனரால் தெற்கு என்ற குறிப்பிடப்பட்டது தமிழ் நாட்டா ரால் தெற்காகக் கூறப்படும் பாண்டிய நாடாக இருப்பதற் கில்லை. கி.பி. 783-இல் ராஷ்டிரகூடப் பேரரசனாய் இருந் தவன் துருவனே. இவனை விட்டொழித்து இந்திராயதனை மட்டும் ராஷ்டிரகூடனாக ஜினசேனர் குறித்தனர் என்பதும் பொருத்தமாக இல்லை 'ராஷ்டிரகூட' என்ற தொடரைக் கொண்டு கூட்டி இந்திராயதன், ஸ்ரீவல்லபன் ஆகிய இரு வர்க்குமே அடையாகக் கொள்வதே முறை. எனவே, ராஷ்டிரகூடப் பேரரசின் வடபாகத்தை இந்திராயதனும், தென்பகுதியை ஸ்ரீவல்லபனும் ஆண்டு கொண்டிருந்த காலத்தையே ஜினசேனர் குறித்தனர் ஆகல் வேண்டும். ஆகலின், துருவனே ஸ்ரீவல்லபனும் ஆகக் கடவன். பாரதீய வித்யாபவனின் வரலாற்று நூலிலும் துருவனுக்கு இப்பெயர் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது[16].

நெடுஞ்சடையனே ஸ்ரீவல்லபதேவன் ஆகக் கூடா மைக்கு இன்னொரு காரணமும் உண்டு. இக் கருத்து

---

15. ஆழ்வார் காலநிலை. பக். 101 அடிக்குறிப்பு
16. History of India, Vol.4 p. 4 Bharatiya Vidya Bhavan, 1956

உண்மையாகில், பாண்டியர்களுள் எல்லாம் வெகு அதிசய மாய் பரம வைஷ்ணவனாக விளங்கிய இப் பாகவதனை 'பருப்பதத்துக் கயல் பொறித்த பாண்டியர்க் குலபதி' யைக் (பெரியா. தி. 5-4, 7) குறித்த பெரியாழ்வார் தமது பாடல் களில் எங்காகிலும் ஓரிடத்திலாவது குறித்திருக்கவே செய் வார் என நாம் எதிர்ப்பார்க்கலாம். இந்த அடிப்படையில்

"கொங்கும், குடந்தையும், கோட்டியூரும், பேரும்
எங்கும் திரிந்து விளையாடும் என்மகன்"—
(பெரி. தி. 2-6,2)

என்ற அடிகள் "பூஞ்சோலை அணிபுறவிற் காஞ்சிவாய்ப் பேரூர்புக்கு திருமாலுக்கு அமர்ந்துறையக் குன்றம் அன்ன தோர்க் கோயி"லை நெடுஞ்சடையன் பராந்தகன் செய்த தைக் குறிப்பாய்ச் சுட்டுவ தாகலாம் என்று எண்ணினார் பெரும்புலவர் அய்யங்கார் அவர்கள். (பக்.92). ஆயினும், ஆழ்ந்து நோக்கும்போது,ஆழ்வார் வாக்குக்கும் வேள்விக்குடி செப்பேட்டுச் செய்திக்கும் சம்பந்தம் இருப்பதாகத் தெரிய வில்லை. ஏனெனில், 'கொங்கும்' என்ற சொல் கொங்கு நாட்டையும், 'பேரும்' என்ற சொல் அந் நாட்டுக் காஞ்சி (நொய்யல்) ஆற்றின்கரையில்(கோயம்புத்தூருக்கு அருகில்) உள்ள பேரூரையுமே குறிப்பனவாகில்,இரண்டும் இணைந்து 'கொங்கிற்பேரும், குடந்தையும், கோட்டியூரும்'- என்றோ அல்லது 'கொங்கிற் பேரும், கோட்டியூரும், குடந்தையும்'- என்றோ தான் ஆழ்வாரின் திருவாக்கு அமைந்திருக்கவேண் டும்.அங்ஙனமின்றி,'கொங்கும் குடந்தையும்' என்று மட்டுமே இருப்பதால் கொங்கு குடந்தைக்கு அடைமொழியாகவே பயன்படுத்தப்பட்டிருக்கின்றமை தெளிவாகின்றது. ஆகவே, இப்போதுள்ள பாடத்திற்கு 'வாசனை மயமான குடந் தையும்' என்று பெரியவாச்சான் பிள்ளை கொண்ட பொரு ளோ அல்லது கொங்கு என்ற சொல்லுக்கு தேன் என்று ஒரு பொருளும் உண்மையால், 'தேன் மலிந்த' என்ற

பொருளோ தான் பொருத்தமானதாகும். கொங்குக் குடந்தையும் என்று இருக்கவேண்டியது 'கொங்கும் குடந்தையும்' என மெலிந்ததாக அவர் கூறுவர். 'கொங்கிற் பொலிந்த தாமரையின்'- (சுந்தரகாண்டம்-திருவடி தொழுத படலம்) எனக் கம்பர் பாடுதலால், "கொங்கிற் குடந்தையும்" என்பதே பெரியாழ்வார் பாட்டின் பழம் பாடமாக இருத்தலும் கூடுவதே. எனவே, பேரும் என்பது கொள்ளிடத்தின் தென்கரையில் உள்ள 'திருப்பேர் நகர்' ஆகிய கோயிலடியைக் குறிப்பதாக தொன்று தொட்டு இருந்து வரும் நம்பிக்கையே இன்னமும் சரியான தாகும்.

## *முதலாம் ராஜசிம்மனே*

பரம வைஷ்ணவன் ஆகிய நெடுஞ்சடையன் பராந்தகன் ஆழ்வாரால் குறிக்கப்படாமையால், இவனே சீவல்லப தேவன் ஆகலாம் என்ற ராயர் கருத்து பொருந்தாமையும், ஆழ்வாரின் காலம் இவற்கும் முன்னமேயே முடிவுற்றதாக வேண்டுதலும் காணலாம். கி.பி. 770க்கு சமமான தனது மூன்றாம் ஆட்சி ஆண்டில் வெளியிட்ட வேள்விக்குடிச் செப்பேட்டில் காஞ்சிவாய்ப் பேரூர்க்கண் அமைத்ததாகக் குறிப்பிடும் திருமால் கோயிற் பணியை ஆட்சி முதல் ஆண்டிலேயே தொடங்கியிருக்க வேண்டுமாதலால், இவன் வைணவன் ஆகவே அரியணை ஏறியமை தெரியப்படும். இங்ஙனம் வைணவத்தோடேயே இவன் ஆட்சி தொடங்கியது இவன் தந்தை யாகிய முதல் ராஜசிம்மனும் கூட வைணவனாய் இருந்தமையாலேயே ஆகக் கூடும். பரம்பரைச் சைவரான பாண்டியர் குலத்தில் முதலாம் ராஜசிம்மனும், நெஞ்சடையன் பராந்தகனும் மாத்திரம் பரம வைணவராய் அமைந்த அதிசயத் திருப்பத்துக்கு ஒரு தக்க காரணம் இருக்க வேண்டும். மேலைச் சான்றுகளின் வழிநோக்கும் போது, பெரியாழ்வார் வரலாறு இதற்கு ஒரு இனிய விளக்கம் தருவதாய் அமைந்துள்ளது. மூன்றாவதாக, பெரும்பான்மையும் சைவரே ஆன மறவர் குலத்தவனும் கி.பி. 770-க்கும் முன்பே காலஞ்சென்று

விட்டவனும் ஆகத் தெரியும் மாறங்காரி என்ற உத்தர மந்திரி வைணவன் ஆகவே இருந்தமை மதுரைக் கடுத்த ஆனைமலையிற் காணும் நரசிங்கப் பெருமாள் குகைக் கோயில் கல்வெட்டினால் புலப்படுதலும் பெரியாழ்வாரால் ஆட்கொள்ளப் பெற்ற பாண்டியன் முதலாம் ராஜசிம்மனே ஆதலைக் குறிக்கின்றது, மன்னனைப் பின்பற்றி அமைச்சர்களுட் சிலரும் வைணவம் புக்கிருத்தல் கூடியதே ஆகையால். இங்ஙனம் சுற்றுப்புறச் சான்றுகள் அனைத்தும் பெரியாழ்வாரால் ஆட்கொள்ளப் பெற்றவன் மாறவர்மன் அரிகேசரி பராங்குசன் ஆகிய முதலாம் ராஜசிம்மன் என்றே காட்டுதலால், இவனே திருமாலிருஞ்சோலைப் பதிகத்தில் ஆழ்வாரால் கூறப்படும் கோநெடுமாறனும் ஆக வேண்டுதல் திண்ணம். குருபரம்பரைகள் கூறும் சீவல்லபதேவன் என்ற பெயர் உண்மையான தாகில், இது இவ் இராஜசிம்மனுடையதே ஆகல் வேண்டும். காடுவெட்டி ஆகிய பல்லவனை (பரமேஸ்வரன்-II?) திருக்கோவலூருக்கு அருகில் உள்ள விளந்தைப் போரிற் கொன்று அவற்குரிய 'பெருமானடிகள்' என்னும் பட்டத்தை கங்க ஸ்ரீ புருஷன் தனதாக்கிக் கொண்டாற் 17, 18 போல, இவ் ஸ்ரீ புருஷனை 'வெண்பை'ப் போரில் வென்ற ராஜசிம்மனும் இவற்குரிய ஸ்ரீவல்லபப் பெயரை தானும் தரித்திருத்தல் கூடியதே. ராஷ்டிரக்கூடந் துருவனும் கி.பி. 780-இல் ஸ்ரீபுருஷனை வென்று இப் பெயரை தரித்துக் கொண்டமை இங்கே நினையத்தக்கது. பெரியாழ்வார் காலம் பற்றிய இந்தக் கொள்கை நான்காவதும், மிகச் சரியானதும் ஆகும்.

திருமாலிருஞ்சோலைப் பதிக மொன்றில் 'குறுகாத மன்னரைக் கூடு கலக்கி வெங்கானிடை, சிறுகால் நெறியே

---

17. E.C. Vol. III Nagar 35 (Hūmcha stone record) (via) Gangas of Talakkad p. 25
18. M.A.R., 1920 p. 51-2 & M.A.R. 1918 para 76. Also தென்னிந்திய வரலாறு, பக். 242

போக்கு விக்கும் செல்வன் பொன்மலை'- [பெரியா. தி 4-2, 8] எனப் போதரும் பகுதியில் கூறப்படும் 'குறுகாத மன்னரைக் கூடு கலக்கி வெங்கானிடை சிறுகால் நெறியே போக்குவிக்கும் செல்வனைப் பாண்டியனாகவே கொண்டு, ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனுக்கும் சம்பந்தர் காலத்திய அரிகேசரி மாறவர்மனுக்கும் இடைப்பட்ட காலத்தில் அத்தகைய வலிமை படைத்த மாறவர்மன் முதலாம் ராஜசிம்மனே யாதலால், இவனே ஆழ்வாரால் ஆட்கொள்ளப் பட்ட வனும் ஆகல் வேண்டும் என வாதித்தனர் அறிஞர் அய் யங்கார் அவர்கள் [பக். 96 & 97]. ஆனால், அப்பதிகத் தின் மற்றைய பாக்களில் இம்மாதிரி வரும் இடங்களி லெல்லாம் திருமாலின் செயல்களே திட்டத் தெளிவாகக் குறிப்பிடப்படுகின்ற படியால் அய்யங்கார் கொண்ட குறிப்பு பொருந்தா தாகின்றது. இங்ஙனமே, இதற்கு முந்திய பாடலின் 'மன்னர் மறுக மைத்துனன்மார்க்கு ஒரு தேரின் மேல் முன்னங்குச் சென்று மோழை எழுவித்தவன் மலை'- [பெரியா. தி. 4-2, 7] என்ற அடிகட்கும் அய்யங்கார் கொண்ட பொருள் பொருத்தமாக இல்லை. "பார்த்த சாரதியாய் அமர்ந்து பாரதம் கைசெய்த திருமாலின் மலை" என்ற இதன் பொருளில், ராஜசிம்மன் தனது மைத்துன ராகிய கங்கருக்காக சளுக்கியரோடு இழைத்த வெண்பைப் போர் பற்றிய குறிப்பு பொதிந்து இருப்பதாக அவர் கருது கிறார் [பக். 93-95]. ஆனால், வேள்விக்குடிச் செப்பேடு களில் குறிப்பிடப் பெறும் வெண்பைப் போர் பூசுந்தரியைக் கடத்திக் கொண்டு போய்க் கடிமணம் செய்து கொண்ட பாண்டியரை சளுக்கியர் துணையோடும் கங்கர் தாக்கியதின் விளைவே ஆகல் வேண்டும். அது அய்யங்கார் கருதுமாறு போல, கங்கருக்கும் சளுக்கியருக்கும் இடையே ஏற்பட்ட தன்று. கங்க ஸ்ரீபுருஷனின் மனைவியாகிய விஜயமகாதேவி சளுக்கிய விஜயாதித்யனின் மகளாதலால், இதனை நாம் அடித்துக் கூற முடியும். இங்ஙனம் அய்யங்கார் கொண்ட குறிப்புகளை மறுத்துரைப்பதால், ஆழ்வார் முதலாம் ராஜ சிம்மன் காலத்தினர் அல்லர் எனக் கூறியதாகக் கொள்ளக் கூடாது.

*ராஜசிம்மன் வரலாறு*

நெடுஞ்சடையான் அரியணை ஏறிய கி.பி. 767-இல் இருந்து தலைமுறைக்கு 25-30 ஆண்டுகளாகக் கொள்ளும் வழக்கப்படி கணக்கிட்டு, முதலாம் ராஜசிம்மனின் காலத்தை கி.பி. 740-767 ஆக அய்யங்கார் கொண்டனர் (பக். 85). ஆயினும், பெரியகுளம் வட்டத்தைச் சேர்ந்ததும் 'அரிகேசரி நல்லூர்' எனப் பண்டை நாளில் அழைக்கப் பெற்றதும், 'ராஜசிம்மேச்சுரம்' என்ற சிவாலயத்தை தன்னகத்தே கொண்டதுமான சின்னமனூரில் சடையன் மாறன் ஒருவனின் 46-ஆம் ஆண்டில் வெட்டுவிக்கப்பட்ட கல்வெட்டு[19] ஒன்று கிடைத்துள்ளது. இவன் யார் என்று விளங்கவில்லை என இதன் பதிப்பாசிரியர் குறித்துள்ளனர். இவ்வளவு நீண்ட ஆட்சிக்காலம் மூன்றாம் ராஜசிம்மனுக்கு இருக்க வழியில்லை. இரண்டாம் ராஜசிம்மன், ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் ஆகிய இரு சடையன் மாறர்களுள்ளும் எவருக்கும் கூட இது பொருந்தி வரவில்லை சின்ன மனூருக்கு அரிகேசரி நல்லூர் எனப் பெயரிட்டு, ராஜ சிம்மேச்சுரத்தையும் அங்கே அமைத்த முதலாம் ராஜ சிம்மனுடையதே மேலைக் கல்வெட்டு ஆகல் வேண்டும். இஃது ஒப்புக்கொள்ளப் படுமாகில், முதலாம் ராஜசிம்மனின் ஆட்சிக்காலம் கி.பி. 720-767 ஆகக் காண்போம்.

மேலே கூறப்பட்ட சின்னமனூர்க் கல்வெட்டில் 'ஸ்ரீகண்டன் வாய்க்கால்' பற்றியும் ஒரு குறிப்பு உள்ளது. எனவே, 'ஸ்ரீகண்டன்'—என்ற விருதுப் பெயரும் முதலாம் ராஜசிம்மனுக்கு இருந்தமை தெளியப்படும். மதுரை வட்டத்தைச் சேர்ந்த கீழ் மாத்தூரில்[20] சடையன் மாறன் ஒருவனின் 5-ஆம் ஆட்சி ஆண்டில் அமைக்கப்பட்ட இரண்டு கல்வெட்டுக்களில் தென்னவன் கண்டன் சாத்தன் என்ற

19. S.I.I. Vol. 14. no. 78
[சின்னமனூர், சடையன் மாறன் 46-ஆம் ஆண்டு]

20. S.I.I. Vol. 14. no. 84 & 85 [கீழ்மாத்தூர்]

அதிகாரி ஒருவன் இட்ட (கல்லால் ஆன) குறுக்குச் சட்டத்தில் அச் சிவாலயம் ஸ்ரீகண்டேஸ்வரம் என்று கூறப்படுகிறது. ஆயினும், இவ் ஆலயம் முதலாம் ராஜசிம்மனால் அமைக்கப்பட்டதன்று. இதனை அமைத்தவன் சாத்தனின் தந்தை ஆகிய கண்டன் ஆகல் வேண்டும். இவன் அனேகமாக முதலாம் ராஜசிம்மன் ஆட்சிக் காலத்தில் பிறந்தவனோ அல்லது அதிகாரியாக இருந்தவனோ ஆகக் கூடும்.

முதலாம் ராஜசிம்மன் கொள்ளிடத்தின் வடகரையில் உள்ள மழகொங்கத்தை அடிப்படுத்திய தாக வேள்விக்குடிச் செப்பேடுகள் கூறுகின்றன. இந்தப் படையெடுப்பு கி.பி. 720 அளவில் நிகழ்ந்திருக்க வேண்டும். ஏனெனில், அடுத்து அரியணை ஏறிய நெடுஞ்சடையன் பராந்தகனை, மழ நாட்டை வென்ற பிறகு மணந்து கொண்ட அந்நாட்டு அரசன் மகளின் இடமாகப் பிறந்தவனாக மேற்படி செப்பேடுகளின் வடமொழிப் பகுதியில் கூறப்பட்டுள்ளது. அரசர்கள் சுமார் நாற்பது பிராயத் தளவில் பட்ட மெய்தும் வழக்கப்படி கி.பி. 767-இல் முடிசூடிக்கொண்ட நெடுஞ்சடையன் பராந்தகன் கி.பி. 720 அளவில் பிறந்தவன் ஆகல் வேண்டும். திருச்சிக்கு வடகிழக்கே 12 மைல் தொலைவில் உள்ள மங்கலமே மழநாட்டின் கோநகராக இருந்தது[21]. இது ஆனாய நாயனார் பிறந்த ஊர். திருச்சிக்கு அண்மையில் உள்ள திருவெறும்பூரின்[22] பழம் பெயர் ஆகிய ஸ்ரீகண்ட சதுர்வேதி மங்கலம் முதலாம் ராஜசிம்மனின் பெயரால் ஏற்பட்டதே.

கி.பி. 721 அளவில் பிறந்த ஜடில பராந்தகன் மணப் பருவம் ஆகிய 50 ஆண்டை அடைந்து, கி.பி. 741

---

21. இலக்கிய சாஸன வழக்காறுகள் பக். 121
22. S.I.I. Vol, XIII No. 165 p. 88(ஸ்ரீகண்ட சதுர்வேதி மங்கலம் (எ) திருவெறும்பியூர்) Also AR No. 105 of 1914 No. 163 p. 86. Also A.R. No. 102 of 1914 No. 162 p. 85. Also A.R. No. 101 of 1914.

அளவில் ஆகற் பாற்று. கி.பி. 745-இல் சளுக்கிய இரண்டாம் விக்ரமாதித்தன் கால மெய்தி இரண்டாம் கீர்த்திவர்மன் முடிசூடிக் கொண்டான். பூசுந்தரியை நெடுஞ்சடையன் பராந்தகன் கடிமணம் புரிந்து கொண்டதன் விளைவாக ஏற்பட்ட வெண்பைப் போரில் இறந்தவனை கீர்த்திவர்மனாகக் கொள்வதே வழக்கம் என்றாலும், அவன் விக்ரமாதித்தனே என்ற இவ் வாசிரியர் கருத்தே பூசுந்தரியை மணந்து கொண்டவன் பராந்தகனே என்ற புதிய கருத்தோடு இயைந்த தாகும். இந்த வகையில் ராஜசிம்மனுக்கு 'ஸ்ரீவல்லப'ப் பெயர் ஏற்பட்டது இந்தக் கி.பி. 745-லேயே ஆகல் வேண்டும் எனில், பெரியாழ்வார் சீவல்லபதேவன் முன்பு செய்த பரத்வ நிரூபணத்தை கி.பி. 746-இல் நிகழ்ந்ததாகக் கொள்ளலாம்.

தமிழின் முதல் கோவையாகிய பாண்டிக் கோவையின் பாட்டுடைத் தலைவனும் நம் முதலாம ராஜசிம்மனே. இது இவ் ஆசிரியரால் வேறோர் இடத்தில் காட்டப்பெறும். வரலாற்றில் நந்திக் கலம்பகத்தைப் போல முக்கிய இடம் பெற்றுத் திகழும் இந் நூலுள் 'வெண்பைப் போர்' இடம் பெறாமை குறிப்பிடத் தக்கது. இதுபோலவே வேள்விக் குடிச் செப்பேடுகளில் பல்லவ மல்லனோடு ராஜசிம்மன் இழைத்தனவாகக் காணும் போர் பற்றிய விவரங்களும் இதில் இல்லை. எனவே, பல்லவ மல்லன் முடிசூடிக் கொண்ட கி.பி. 731-ஐ ஒட்டிய காலப்பகுதியில் இந்நூல் இயற்றப் பெற்றதாகக் கோடல் தகும். இந்நூலின் இரண்டு பாடல்கள் ராஜசிம்மனின் சிவபக்திக்குச் சான்று கூறலால், ராஜசிம்மன் பெரியாழ்வாரால் ஆட்கொள்ளப் பெற்றது கி.பி. 730க்கும் பிறகே ஆதல் தெளிவாகின்றது.

## பெரியாழ்வார் காலம்

பெரியாழ்வார் பிறந்த நட்சத்திரம், திங்களோடு ஆண்டையும் ஒப்புக் கொள்வதானால், ராஜசிம்மன் ஆட்சிக் காலத்தேயே மறைந்துவிட்ட இவர் பிறந்த குரோதன

கி.பி, 665 ஆகக் காண்போம். எண்பத்தைந்து ஆண்டுகள் இவர் வாழ்ந்தவராகக் கூறப்படுவதால், இவர் மறைந்த ஆண்டு கி.பி. 750 ஆகின்றது. இவர் காலத்தை கி.பி. 700-785 ஆக அய்யங்கார் அவர்கள் கொண்டது 24 கொஞ்சமும் பொருத்தமாக இல்லை. ஏனெனில், கி.பி. 716 'நள'வில் பிறந்த ஆண்டாளுக்கு கி.பி. 700-இல் பிறந்த ஆழ்வாரை, அவர் உண்மையான தந்தை ஆகாத நிலையில், தந்தை என்பதை விட தமையன் என்றே அழைக்கத் தோன்றியிருக்கும். 'ஆழ்வார்கள் காலநிலை'-என்ற முதல் நூலில், இவருக்குக் கொள்ளப்பட்ட காலம் ஆகிய கி.பி. 690-775 இவ்வகையில் ஓரளவு சிறப்புடையதே என்னலாம். (பக்.102),

ஆண்டாளுக்கு அய்யங்கார் கொண்ட கி.பி. 716-732 ஒப்புக்கொள்ளத் தக்கதே. கி.பி. 732-இல் நிகழ்ந்த கோதையின் மறைவு கி.பி. 746-இல் பாண்டியனின் மனமாற்றத்திற்குக் காரணமாகி, பெரியாழ்வாரின் பரத்வ நிருபணத்தில் முடிந்தது என்றல் அத்துணைப் பொருத்தமாக இல்லை. எனவே, பெரியாழ்வார் பரத்வ நிருபணம் கி.பி. 746 க்கு மிக முன்பே எனவும், ஆயினும் கி.பி. 745-ல் வெண்பைப் போருக்குப் பின் ஸ்ரீவல்லபப் பெயரை இவன் தரித்துக் கொண்டது வைணவன் ஆன பிறகேயும் ஆனதால் வைணவ உலகில் இதுவே இவனுக்கு மிகவும்

---

*துரைசாமி பதிப்பில்23 286-ஆம் பாடலும், 310-ஆம் பாடலும்முறையே சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் 1953-இல் வெளியிட்ட இறையனார் அகப்பொருள் உரையில் மேற்கோளாகக் காணும் 262-ஆம் பாடலும், 286-ஆம் பாடலுமாக உள்ளன. இவை முறையே 'முன்தான் முகிழ்முலை'-எனவும், 'மெல்லிய வாய்'- எனவும் தொடங்குவன.

---

23 இப் பதிப்பு விவரங்களை பின்னிணைப்பில் உள்ள மேற்கோள் நூல் பட்டியலில் காணலாம்.

24 இலக்கியச் சாஸன வழக்காறுகள் பக். 299.

பிரசித்தமான பெயராக இருந்தது என்றும் கொள்ள வேண்டும்.

### திருப்பாவையின் காலம்

இனி, ஆழ்வார் திருமகளாரின் வரலாறு, வாக்குகளி லிருந்து கால ஆராய்ச்சிக்கு உதவும் குறிப்புகளைக் காண் பதும் நம் கடனே. இப்படிப்பட்ட குறிப்பொன்றை அரிதின் முயன்று அய்யங்கார் அவர்கள் தேடி அளித்துண்மை (பக் 116-123) தமிழிலக்கிய வரலாறு செய்த தவப் பயனே என்னலாம். திருப்பாவை 13-ஆம் பாசுரத்தி

வெள்ளியெழுந்து வியாழம் உறங்கிற்று
புள்ளும் சிலம்பினகாண் போதரிக் கண்ணினாய்!-

என்ற அடிகளில் பொழுது விடிந்ததை ஆழ்வார் திருமகளார் "வெள்ளி உதயமாகி, வியாழன் அஸ்தமித்து விட்டது; பறவைகளும் ஆரவாரிக்கத் தொடங்கிவிட்டன"-என வருணித்தல் குறிப்பிடத்தக்கது. குளிர் காலத்தில் விடி வதற்குச் சற்று முன் வெள்ளி முளைத்து விடுவதை நாம் அறிவோம். மிக முற்பட்ட காலத்திலிருந்தே வெள்ளியைப் பார்த்து மக்கள் விடியற்பொழுதை அறிந்து தம் காரியங் களைத் தொடங்கியதை

"வெள்ளியும் இருவிசும் (பு) ஏர்தரும்; புள்ளும்
உயர்சினைக் குடம்பைக் குரல்தோற் றினவே"—
(புறம். 397) எனவும்,

"வெள்ளி தோன்ற, புள்ளுக்குரல் இயம்ப,
புலரி விடியற் பகடுபல வாழ்த்தி"—
(புறம். 385) எனவும்,

"மதிநிலாக் கரப்ப, வெள்ளி ஏர்தர,
பொறிமயிர் வாரணம் பொழுதறிந் தியம்ப"—
(புறம். 395) எனவும்,

"விளக்குறு வெள்ளி முளைத்துமுன் தோன்ற,
தெளித்தலைத் தண்ணீர் குளித்தனன் ஆடி"—
(பெருங்கதை 1, 53-81) எனவும்,

"வெள்ளி முளைத்த நள்ளிருள் விடியல்"—
(பொருநர். 72) எனவும்,

பண்டை இலக்கியங்களில் பரவலாகக் காணப்படும் குறிப்புகளும் அறிவிக்கின்றன. ஆகவே, இதில் வியப் பொன்றும் இல்லை. ஆனால், பிராட்டியாரோ 'வெள்ளி யெழுந்து, புள்ளும் சிலம்பின" என்னாமல், இடையில், "வியாழன் உறங்கிற்று" என்றொரு செய்தியை அதிகப் படியாகக் கூறுகிறார். ஆகவே, இப்பாடல் இயற்றப்பட்ட அன்று விடியற்காலை அவ் அதிசயத்தைக் கண்டு வியந்து அப்படியே அதனை அவர்தம் பாடலில் பொறித்து வைத் திருக்கிறார் என்பது தெளிவு. இந்தத் தெளிவான செய்தியை திரு ராமானுஜம் அவர்கள் (பக். 215) அசட்டை செய்து விட்டு ஆழ்வாரினுடையவும், அவர்தம் திருமகளாரி னுடையவும் காலங்களை ஆராய்ச்சி செய்வதன் பொருள் நமக்கு விளங்க வில்லை. வியாழன் உறங்குவதும் பொழுது விடிவதற்கு அறிகுறி தான் என்று நாட்டுதற்கு உரனும், திறனும் இன்றி ஒதுக்கிவிட்டு, ஆராய்ச்சி என்ன வேண்டிக் கிடக்கிறது என்று கூட எண்ணிப் பார்க்காமலே மேற்போய், ஜடில பராந்தகனுக்கே ஸ்ரீவல்லபப் பெயர் சின்னமனூர்ப் பெரிய செப்பேடுகளில் காணப்படுவதாக மனம் வந்து ஒரு பொய்யையும் கூறிப்போகிறார். (பக். 211)†. போகட்டும். நம்மைப் பொறுத்தவரை அய்யங்கார் அவர்கள் முதன் முதல் எடுத்துக் காட்டியவாறு இஃதொரு அதிசய நிகழ்ச்சியே. ஆகவே, இவ் வான சாத்திர நிகழ்ச்சி எப் போது நிகழ்ந்தது என அறிவதொன்றே கால நிர்ணயத் திற்குப் போதியதாகும். வேறு கல்வெட்டு, புதைபொருட் சான்றும் இவ் வலிய சான்றின் முன் நிற்க முடியாதென்பது தெளிவு.

---

† சின்னமனூர்ப் பெரிய செப்பேடுகளின் வடமொழிப் பகுதியில் நெடுஞ்சடையனுக்கு ஸ்ரீவல்லபப் பெயர் காணப் படவில்லை. அது ஸ்ரீமாறனுக்கே காணப்படுகிறது.

இனி, கால நிர்ணயத்தையும் கூட அய்யங்கார் அவர்களே முடித்து வைத்து விட்டனர். (பக். 124-6). இவர் வேண்டுகோளின் பேரில் சேது சமஸ்தானத்தைச் சேர்ந்த வழக்குரைஞ ரான சவும்ய நாராயண அய்யங்கார் கி.பி. 7, 8, 9-ஆம் நூற்றாண்டுகளில் வெள்ளியெழுந்த சின்னேரத்திற்குள் வியாழன் உறங்கிய நாட்களைக் கணக்கிட்டு கீழ்க்காணும் பட்டியலைத் தயாரித்தளித்தார். இந்நாட்களை K. G. சேஷ அய்யர், K. G சங்கர அய்யர் மற்றும் சோம சுந்தர தேசிகர் ஆகிய வேறு அறிஞர்களும் சோதித்து உறுதிப் படுத்தினர்.

அட்டவணை — 1.

திருப்பாவைக்கு ராகவையங்கார் குறித்த காலங்கள்

| எண் | நூற்றாண்டு | கி.பி. | ஆங்கில மாதம் | தேதி | வியாழன், வெள்ளி களுக்குள் இருந்த இடைவெளி | மணி (அதி) காலை |
|---|---|---|---|---|---|---|
| 1. | 7 | 600 | நவம்பர் | 27 | 17! | 3.20 |
| 2. | 8 | 731 | டிசம்பர் | 18 | 171 | 3.50 |
| 3. | 9 | 885 | நவம்பர் | 25 | 180 (182) | 5.08 |
| | | 886 | டிசம்பர் | 14 | 165 (162) | 5.20 |

இந்த நாட்கள் எல்லாம் மார்கழிப் பவுர்ணிமைகள் ஆகும். திருப்பாவை முப்பது பாடல் களும் ஒரேநாளில் பாடப்பட்டன என்ற அடிப்படையில் இந்தக் கணிப்பு செய்யப்பட்டிருக் கிறது. மார்கழித் திருவாதிரையில் நோன்பு முடியும் என்று ராகவையங்கார் கூறுவது மெய்யாகில், அன்றே முப்பது பாடல்களும் பாடப்பட்டனவாதல் கூடுவதே. அவ்வாறின்றி,

மார்கழி பவுர்ணமியன்று தொடங்கி நாள் தோறும் ஒவ்வொரு பாடலாக பிராட்டியார் பாடினார் என்னில், மார்கழிப் பவுர்ணமியிலிருந்து 13-ஆம் நாள் அன்று அவர் இந் நிகழ்ச்சியைக் கவனித்தாராகல் வேண்டும். இரண்டாவதையே மெய்யாகக் கொண்டாலும், ஆண்டில் மாற்றம் இருக்க முடியாது. ஆயினும், அய்யங்கார் கொண்ட முதல் வழியே சரியானதாகத் தோன்றுகிறது. ஏனெனில், 'தையொரு திங்களும்' என்று தொடங்கும் நாச்சியார் திருமொழியின் முதற் பாட்டிலும், தொடர்ந்து வருவனவற்றுள்ளும் தை, மாசி, பங்குனி ஆகிய மூன்று மாத காலம் காமனையும், அவன் தம்பி சாமனையும்* தாம் இன்னொரு நோன்பிருந்து வழிபட்ட செய்தியை ஆண்டாளே கூறியுள்ளார்.

பாவை நோன்பு-என்பது மகளிர் தாம் விரும்பும் கணவரை அடைதற்காகக் கொண்டாடும் நோன்பு. சங்க காலத்தில் இது 'அம்பா ஆடல்' எனப்பட்டது. 'தைந் நீராடல்' என்ற பெயரும் அதற்கு உண்டு பூர்ணிமாந்த சந்திரமானப்படி மாதங்கள் கணக்கிடப்பட்ட அப் பழங்காலத்தே திருவாதிரைப் பவுர்ணமியன்று இரவோடு மார்கழி முடிவுற்று, விடியலில் இருந்து தை மாதம் தொடங்கியதே அதற்குக் காரணம். இந்த 'அம்பா ஆடல்' அல்லது 'தைந் நீராடலி'ல் மகளிர் சடங்கறிந்த முது பார்ப்பனிமார் முறைமை காட்ட, பனியை உடைய புலர்தற்கண் நீராடி விட்டுக் கொண்டாடினர் என்பதை

"ஞாயிறு காயா நளிமாரிப் பிற்குளத்து
யிருந் திங்கள் மறுநிறை ஆதிரை
அம்பா ஆடலின் ஆய்தொடிக் கன்னியர்
முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப்
பனிப் புலர்பு ஆடி"- (பரிபாடல் 11)

என்ற பரிபாட்டால் அறியலாம்.

---

* சாமன் எனப் பாசுரத்தில் குறிப்பிடப் பெறுபவன், கண்ணபிரானுக்கு சாம்பவதியின் இடமாகப் பிறந்த சாம்பன் என்ற மகன்.

எனவே, இந் நீராட்டம் சூரியோதயத்துக்கு முன்பே முடிந்து விடுதல் காண்கிறோம். இக் காலம் காலை 5 மணி அளவில் ஆக வேண்டும். இதன்படி கி.பி. 600 ஐய நிகழ்ச்சி பொருந்தா தாகின்றது. கி.பி. 885உம், 886உம் ஆழ்வார் களுக்கே பொருத்தமற்ற நாதமுனிகள் காலம் ஆகும். மேலும், இந்த இரண்டு வாய்ப்புகளின் போதும் வெள்ளி- வியாழன்களுக்கு இடையில் இருந்த கோண அளவு முறை யே 182, 162 பாகைகள் என்பது அறிஞர் K.G சங்கர் அவர்கள் துணிபு. இந்த அளவு 165-180 பாகைகளுக்குள் இருந்தால் மட்டுமே ஒரே சமயத்தில் வெள்ளியின் எழுச்சி யையும், வியாழன் உறக்கத்தையும் காண இயலுமாதலால், இருவரும் இவற்றை நிராகரித்து விட்டனர்.

அட்டவணை 2.

திருப்பாவைக்கு K. G. சங்கர் குறித்த காலங்கள்

| எண் | தேதி | ஞாயிறு பாகை | வெள்ளி | வியாழன் | வெள்ள , வியாழனுக்கிடையில் இருந்த பாகை அளவு |
|---|---|---|---|---|---|
| 1. | 26.11.600 | 246 | 200 | 29 | 171 |
| 2. | 1.12.624 | 251 | 204 | 39 | 165 |
| 3. | 5.12.648 | 255 | 208 | 37 | 171 |
| 4. | 18.12.731 | 266 | 223 | 47 | 176 |
| 5. | 23.11.850 | 240 | 235 | 65 | 170 |
| 6 | 27.11.874 | 245 | 243 | 74 | 169 |
| 7. | 25.11.885 | — | 223 | 41 | 182 |
| 8. | 14.12 886 | — | 240 | 78 | 162 |

அறிஞர் சங்கர்[25] இதே நூற்றாண்டுகளில் வேறு நான்கு ஆண்டுகளிலும் இவ் வாய்ப்புகள் ஏற்பட்டன என்று கணித்

25. Shanker, K.G., "The Age of Tirupavai in J.O.R. p. 167-9 (1927)

துள்ளார். இவை அட்டவணை 2-இல் காட்டப்பட்டுள்ளன. இவற்றுள் ஐந்தாவதன் காலம் ஆகிய கி.பி. 850 ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனின் ஆட்சிக் காலமும் ஆகும். ஆகலின், அதுவே திருப்பாவை எழுந்த காலமும் ஆகல் வேண்டும் என்பது இவர் கருத்து. ஆனால், அறிஞர் சங்கர் மணியைக் குறிப்பிடாததால் இவற்றின் திறத்தே நாம் ஏதும் சொல்வதற்கில்லை. மேலும், குருபரம்பரைகள் கூறும் சீவல்லப தேவன் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் ஆதற்கில்லை என்பது முன்பே காட்டப்பட்டது. எனவே, அய்யங்கார், அறிஞர் சங்கர்— இருவர் பட்டியலிலும் காணும் பொதுக் காலம் ஆகிய கி. பி. 731 டிசம்பர் 18 ஆம் நாளே திருப்பாவை தோன்றிய நன்னாள் என்னலாம்.

ஆயினும், பிராம்மணப் பெண்கள் இத்தகைய நோன்பு இருப்பது வழக்கம் இல்லையென்றும், தம்மை ஆயர்பாடிச் சிறுமியாக ('மார்கழித் திங்கள்' என்ற முதற் பாசுரத்தில் கண்டுள்ளபடியே பாவித்துக் கொண்டு) ஆண்டாள் ஒரு மரபைப் பின்பற்றிப் பாடினாரேயன்றி வேறில்லை என்றும், பெரியவாச்சான் பிள்ளையின் உரையும் இவ்வாறே கூறுகிறது என்றும் கூறி, ஆசிரியர் ராமானுஜம் அவர்கள் பேராசிரியர் ராகவையங்கார் அவர்களின் கருத்தை ஏற்கவில்லை.

திருப்பாவையில் கூறப்பெறும் தோழிமார்கள் கற்பனைப் பாத்திரங்களே என்பதை நாமும் ஏற்றுக் கொள்ளுகின்றோம். ஆனால், ஆண்டாள் பாவை நோன்பு நோற்றதையே கற்பனை என்பதை நம்மால் ஒப்புக் கொள்ளக் கூடவில்லை. 'முனித்துறை முதல்வியர் முறைமை காட்ட'—என்ற பரிபாடலும், அதற்கு அந்தணரே ஆகிய பரிமேல் அழகர் வரைந்துள்ள உரையும் பிராம்மணப் பெண்களும் நல்ல கணவரை அடைவதற்காக அத்தகைய நோன்பு நோற்றனர் என்றே காட்டுகின்றன. இவர் கருத்தை உண்மையென்றே கொண்டாலும், ஆண்டாள் பிராம்மணரின் வளர்ப்பு மகள் மட்டுமே ஆதல் குறிப்பிடத் தக்கது. அவ்வுண்மையை அவரும் அறிந்திருந்ததனாலேயே பிராம்மணசாதி வரனுக்கு ஆசைப்படாமலும், வேற்றுச்சாதியில் மணந்துகொள்ள விருப்பமில்லாமலும் தம்மை அந்த அரங்கநகர் அப்பனுக்கே அவர் அர்ப்பணித்துக்

கொண்டு விட்டார்! ஆயினும், ராமானுஜம் அவர்கள் கருது வதே போல் பிராம்மணர்களுக்கு இத்தகைய நோன்பு இல்லாமற் போனது பிற்காலத்தில் ஆகலாம். சங்க காலத்தில் கபிலர் போலும் அந்தணர்கள் மற்றையவர்களைப் போல ஈசல் முதலியவற்றை உண்டதாக அவர்களே பாடி யுள்ளனர். (புறம்)

அறிஞர் ராமானுஜம் அவர்கள் இன்னொரு தடையையும் எழுப்பி உள்ளார். அதிகாலை 3.50 மணி அளவில் பறவை கள் பாசுரத்தில் கூறப்பட்டுள்ளவாறு ஒலிப்பதில்லையாம். வெள்ளி எழுந்து வியாழன் உறங்கியதைக் கண்டவுடனேயே ஆண்டாள் பாட்டு எழுதிவிட்டார் என்று கொண்டு இவ் வாசிரியர் இவ்வாறு எல்லாம் முரண்டு செய்கிறார். ஆனால், பிராட்டியாரோ அக்காட்சியைக் கண்ணுற்று அதிசயித்தவர் தமது சடங்குகளை எல்லாம் முடித்துக் கொண்டு விட்டு, புள் சிலம்பும் நேரத்தில் பாட்டு எழுதியிருப்பார் என்று நாம் நிச்சயமாகச் சொல்ல முடியும்—நோன்பின் போது சடங்கு முக்யமே தவிர பாட்டல்ல என்பதனால். ஆண்டாள் தன்னந் தனியாக நோன்பேதும் எடுக்கவே இல்லை; மானசீகமாகவே பாடுகின்றார்—என்றே கொள்ளினுங்கூட 4 மணி அளவில் கண்ட காட்சியை அப்பொழுதே பாடிவிட்டார் என்று நாம் ஏன் கொள்ளவேண்டும்? ஆர, அமர பின்னருங்கூட இதே மாதிரி கற்பனை செய்து கொண்டு பாடியிருக்கலாம் அல்லவா? வெள்ளி எழுந்து வியாழன் உறங்கிய நிகழ்ச்சி மட்டுமே நமது கவனத்திற்குரியது. மற்றவை அல்ல. எனவே, கி.பி. 731 டிசம்பர் 18-ஆம் நாளைய காலையே (அதி காலை அன்று!) திருப்பாவை தோன்றிய காலம் என்ற அளவிற்காவது அய்யங்கார் கண்டுபிடிப்பில் உண்மை இருப்பதை யாரும் மறுப்பதற்கில்லை. தமிழ் இலக்கிய வர லாற்றில் நம்மாழ்வார் பிறப்புக் காலத்துக்கு அடுத்தபடியாக நுண்மைக் கணிப்புக்கு திருப்பாவையின் காலத்தைத்தான் குறிப்பிட முடியும். இவ்வரிய சேவையை செய்தளித்த காரணத்தால், இவ் அதிகாரம் அய்யங்கார் அவர்களுக்கே உரிமை ஆக்கப்படுகின்றது. ஏனெனில், நான்கு தொகுதி

யினராக உள்ள ஆழ்வார்களுள் பாணர்—தொண்டரடிப் பொடி—திருமங்கை மன்னர்—குலசேகரப் பெருமாள் தொகுதியை பொய்கை—பேய்—பூதம்—மழிசைப்பிரான் என்ற தொகுதியோடு ராமானுஜ நூற்றந்தாதியிற் காணும் பாணர் இடம் பற்றிய குறிப்பினாலும், நம்மாழ்வார்—மதுர கவி என்ற தொகுதியோடு கோயிலொழுகு தரும் திருவாய் மொழி அத்யயனம் பற்றிய குறிப்பினாலும் இணைக்க முடிகின்றது. மாறாக, பெரியாழ்வார்—ஆண்டாள் தொகுதி மட்டும் ஏனைய மூன்று தொகுதிகளுள் எவற்றோடும் இணைக்கப்பட முடியாமல் தனித்து நிற்கின்றது எனவே, இவ் இருவரின் காலத்தை தனிச் சான்று (independent evidence) கொண்டே அறுதியிட வேண்டுவதாய் உள்ளது. நிற்க,

ஆழ்வார் திருமகளார தமது பிரபந்தங்களைச் செய்த நாளில் தக்க பிராயம் நிரம்பப் பெற்று இருந்தமையை

"ஊனிடை ஆழிசங்கு உத்தமர்க் கென்று
உன்னித் தெழுந்தஎன் தடமுலைகள்
மானிடவர்க் கென்று பேச்சுப்படில்
வாழகில்லேன் கண்டாய், மன்மதனே''—
(நாச். தி. 1, 5) எனவும்,

"அவரைப் பிராயம் தொடங்கி என்றும்
ஆதரித் தெழுந்தவென் தடமுலைகள்
துவரைப் பிரானுக்கே சங்கற்பித்துத்
தொழுது வைத்தேன் ஒல்லை விதிக்கிற்றியே''
(நா. தி. 1, 4 எனவும்,

"உள்ளுளே உருகிநைவேனை உளளோ
இலளோ என்னாத
கொள்ளைகொள் இக்கள்வன் கோவர்த்த
னனைக் கண்டக்கால்
கொள்ளும் பயன் ஒன்றில்லாவிக் கொங்கை
தம்மைக் கிழங்கொடும்
அள்ளிப் பறித்திட்டு அவன் மார்பில் எறிந்
தென் அழலை தீர்வேனே''
(நா. தி. 13, 8)

எனவும் எல்லாம் காதல் கனிந்த பாட்டுக்களே நமக்கெல்லாம் பறை சாற்றுவனவாய் உள்ளன. இவர் பிறந்த ஆண்டாக மூவாயிரப்படி குருபரம்பரை கூறும் 'நள' ஆண்டிலிருந்து கணக்கிட்டால், கி.பி. 731 மார்கழியில் இவருக்கு 15 ஆண்டுகள் நிரம்பி விட்டிருந்தமை காண்கிறோம். இது நல்ல மணப்பருவமே யாதலால், மேற்படி குருபரம்பரையில் அதிகப் படியாகக் காணும் திதி, மற்றும் கிழமை ஆகிய இரண்டை மட்டும் ஒதுக்கிவிட்டு, கி.பி. 716 நள ஆண்டு ஆடிப் பூரத்தை அவர் பிறந்த நாளாகக் ஐயமின்றிக் கொள்ளலாம். ஆகலின், பிராட்டியார் காலத்தை 716-732 கி.பி ஆக அய்யங்கார் அவர்கள் கொண்டது முற்ற முழுக்கப் பொருத்தமானதே. ஆயினும், ஆண்டாள் காலத்தை கி.பி 716-33 ஆகவும் கொள்ளலாம். மாறாக, கி பி 885 886-ஐ திருப்பாவை எழுந்த ஆண்டாகக் கொண்டால், ஆண்டாள் பிறந்தது ஒரு 'நள' ஆண்டில் என்ற செய்தியை அறவே ஒதுக்கிவிட நேரிடும். ஏனெனில், கி.பி. 885-886க்கு முற்பட்ட காலத்தே கி.பி 836-இல் போதரும் நள-ஏ மிகச் சமீபத்தியதாகும். இது கி.பி. 885-886க்கு 50 ஆண்டுகட்கும் முற்பட்டதாகின்றது. இது மேற்காட்டிய உண்மைக் காதல் கனிந்த பாட்டுக்கள் பாட ஏற்ற பருவம் அன்று.

*கோகாஞ்சலி :*

சரி, வைணவ வரலாற்றிலும், தமிழ் வரலாற்றிலும் கோவை நாச்சியார் இடம் எது? தமிழகம் தந்த மங்கையர் திலகர்மூவருள் பத்தினித் தெய்வமாகிய கண்ணகி பல்லவர் காலத்தில் பாஞ்சாலியாக உருமாறி பிறகு இப்போது தான் மீண்டும் கண்டுபிடிக்கப் பட்டாள். அடுத்த பெரும் புகழானரான அவ்வையோ இன்று ஆராய்ச்சியாளரால் அப்பெயர் கொண்ட ஐந்தாறு பேர்களின் மொத்த உருவமாதல் காணப் பட்டுள்ளது. 26 எஞ்சி நிற்கும் கோதையின் புகழ் மட்டுமே

---

26. "தமிழ் இலக்கிய வரலாறு-பன்னிரண்டாம் நூற்றாண்டு" பாகம்-1, பக். 438-519.

யண்டு தொட்டு ஒரு படித்தாக நாடெங்கும் நின்று நிலவி வருகின்றது. ஆர்பெற்றார் அரவணைமேல் அரங்கத்து அம்மானோ டோர் சரியாசனம்-பெரும்பேர் அரசர்க்கும் கிட்டாத பெரியாசனம்? கன்னியாகுமரியைப் போலாது, வரலாறு அறிந்த இக்குமரிக் கடவுளுக்கு திருமால் கோயில் தோறும் உண்மை வடிவில் வழிபாடு நடைபெறுவதை அறியாதார் யார்? அளவிற் சிறியதாயினும் கோதையின் சரிதை காப்பியம் புனைதற்குப் பெரிதும் ஏற்றதே - சிலம்பையும், மணிமேகலையையும் போல. தெலுங்கின் ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றும், விஜய நகரப் பேரரசர் ஆகிய கிருஷ்ண தேவ ராயரால் செய்யப் பெற்றதும், சூடிக் கொடுத்தவள்'— எனப் பொருள் படுவதும் ஆகிய 'ஆமுக்த மால்யதா' நமது நாச்சியாரைப் பற்றியதோர்க் காப்பியமே. வடிவழகிய நம்பி தாசரின் குருபரம்பரா பிரபாவம் என்ற நூலில் 484 விருத்தப்பாக்களால் ஆன 'சூடிக் கொடுத்த நாச்சியாரின் பிரபாவமும் உள்ளது. ஆயினும், இதனைச் சுவை மிக்கதோர்ப் பார காவியமாக ஆக்க வல்ல கவியரசன் தோன்று நாள், தமிழன்னை சிலம்போடும், மேகலையோடும் மற்றுமோர் வாடா வனமலர்க் கோதையும் (மாலையும்) புனைந்து ஒப்பிலா வனப்போடு ஒளிர்வாள் என்பது திண்ணம். கோதாஞ்சலி என்பது நம் மனத்துள்ள இதன் பெயர். இந்த திட்டத்தின் அடிப்படையில் நாச்சியார் வரலாற்றை சுருக்கமாகவும் கண்டுள்ளோம்.

கோதையார் மறைவுக் காலத்திலிருந்தே அவருக்கு அஞ்சலி தொடங்கிவிட்டது. திருவரங்கத்தில் அவர் தங்கியிருந்த இடத்தில் சீவல்லப தேவன் (வெளி ஆண்டாள் சந்நிதி என்று இந்நாளில் கூறப்படும்) ஒரு ஆலயத்தைக் கட்டி இவ் அஞ்சலியைத் தொடங்கி வைத்தான்- என்று கோயிலொழுகுவில் காணப்படும் குறிப்பிலிருந்து அறிகிறோம். திருமங்கையாழ்வார் செய்த கோதாஞ்சலியைப் பற்றி முன்னமே கூறப்பட்டது. தமிழ் நாடு முழுவதும் திருப்பாவை முப்பதையும் மார்கழியில் வைணவர்கள் ஓதி

வந்ததைக் கண்ட மணிவாசகப் பெருமான் அதன் வனப்பால் கவரப்பட்டு தாமும் இப்படிக்கே சைவத்திற்கு என்று ஒரு திருவெம்பாவையைப் படைத்தார். திருவாசகத்தில் காணப்பெறும் குயில் பத்தும் மணிவாசப் பெருமான் செய்த மறைமுகக் கோதாஞ்சலியே.

அடுத்தாற்போல் குறிப்பிடத் தக்கது இராமானுஜருடைய சேவை ஆகும். திருக்கோட்டியூரில் எம்பெருமானார் ஒரு நாள்

உந்து மதகளிற்றன், ஓடாத தோள்வலியன்;
நந்த கோபாலன் மருமகளே! நப்பின்னாய்!
கந்தம் கமழும் குழலீ! கடை திறவாய்;
வந்தெங்கும் கோழி அழைத்தன காண்! மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவின
காண்!
பந்தார் விரலியுன் மைத்துனன் பேர்பாட,
செந்தாமரைக் கையால் சீரார் வளை ஒலிப்ப
வந்து திறவாய் மகிழ்ந்தேலோர் எம்பாவாய் —
(திருப்பா. 18)

என்று பாடிக் கொண்டே கோட்டியூர் நம்பியின் இல்லத்தின்முன் வந்து நிற்பதற்கும், நம்பியின் திருமகளாரான தேவகிப் பிராட்டியார் கதவைத் திறந்து கொண்டு வெளியே வருவதற்கும் சரியாக இருந்தது! தம்மை மறந்த நிலையில் இருந்த ராமானுஜர் உடனே பிராட்டியார் முன் தண்டனிட்டு வீழ்ந்து விட்டார். மிரண்டு விட்ட பிராட்டியார் ஓடிப்போய் நம்பிகளிடம் சொல்ல, சிரித்துக் கொண்டே வெளியே வந்த நம்பிகள், "என்ன ஜீயரே! "உந்து மதகளிற்றன்' - அனுசந்தானமோ" என்ன, தலை அசைத்துச் சிலையாய் நின்றார் எம்பெருமானார். அவ்வளவு ஈடுபாடு அவருக்கு, திருப்பாவையில். அது பற்றி, அப்போதிருந்து 'திருப்பாவை ஜீயர்' என்ற பெயர் ஆசார்யருக்கு உளதாயிற்று.

பிறகு, சுமார் கி. பி. 1151-இல்* ஒரு நாள். நாச்சியார் திருமொழிக்கு உரை சொல்லிக் கொண்டிருந்தார், எம்பெருமானார். அப்போது,

"நாறு நறும்பொழில் மாலிருஞ்சோலை நம்பிக்குநான்
நூறு தடாவில் வெண்ணெய் வாய்நேர்ந்து பராவி வைத்தேன்;
நூறுதடா நிறைந்த அக்கார அடிசில் சொன்னேன்;
ஏறுதிரு வுடையான் இன்றுவந்திவை கொள்ளுங்கொலோ"-

(நா.தி. 9,6) என்ற பாசுரத்திற்கும்,

இன்றுவந் தித்தனையும் அமுது செய்திடப் பெறில்நான்
ஒன்றுநூ றாயிரம் ஆகக் கொடுத்துப் பின்னும் ஆளுஞ்செய்வன்;
தென்றல் மணங்கமழும் திருமாலிருஞ் சோலை தன்னுள்
நின்றபிரா னடியேன் மனத்தே வந்து நேர்படினே

(நா.தி. 9,7)

என்ற பாசுரத்திற்கும் பொருள் உரைக்கவேயும் அவர் நெஞ்சு நெகிழ்ந்தது. "நாச்சியார் வேண்டுகோளை நாம் தலைக்கட்டவேண்டும்" —என்று சொல்லிப் புறப்பட்டுவிட்டார் திருமாலிருஞ்சோலைக்கு, கூரத்தாழ்வார் உடனே. அங்கே 100 தடா வெண்ணெயும், 100 தடா அக்கார அடிசிலும் தயாரித்து இருங்குன்ற மேய பிராற்கு அமுது செய்வித்துப் போய், வில்லிபுத்தூரில் கோதை நாச்சியாரை வணங்கி நின்றனர். அவ்வளவில் அருச்சகர் ஆண்டாளின் சார்பாக ஆசார்யருக்கு "நம் கோயில் அண்ணர்" என்ற விருது அளித்து மகிழ்ந்தனர். இதனால், "பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே"-என்ற வாழ்த்துப் பாடலும் ஆண்டாளுக்கு அன்று தொட்டு அமைவதாயிற்று. இங்ஙனமே,

* இராமானுஜர் காலம் (1025-1155 கி.பி.)

**கூடாரை வெல்லும்சீர் கோவிந்தா! உன்றன்னைப்**
**பாடிப் பறைகொண்டு யாம்பெறு சன்மானம்,**
**நாடு புகழும் பரிசினால் நன்றாக**
**சூடகமே,தோள்வளையே,தோடே,செவிப்பூவே,**
**பாடகமே என்றனைய பல்கலனும் யாமணிவோம்;**
**ஆடை உடுப்போம்; அதன்பின்னே பாற்சோறு**
**மூட நெய்பெய்து முழங்கை வழிவார**
**கூடி யிருந்து குளிர்ந்தேலோர் எம்பாவாய்—**
(திருப்பாவை 27)

என்ற திருப்பாவைப் பாடலுக்கேற்ப மார்கழி 27-ஆம் நாள் காலை 'கூடார வள்ளி' என்ற பெயரோடு வைணவர் இல்லங்களில் மணம் பெறாத கன்னியர் பொங்கலிட்டு, புத்தாடை உடுத்தி ஒரு விழாவும் நெடுங்கால மாகக் கொண்டாடி வருகின்றனர்.

பின் வந்த பிள்ளை உறங்கா வில்லிதாசர் என்றொரு அடியார்க்கு இன்னொரு ஆசை பிறந்தது ஆண்டாள் திருக் கல்யாணத்தை ஆண்டுதோறும் கண்டு களிக்க வேண்டும் என்று. அதற்காக வேண்டி சில நிவந்தங்களை அளித்து, சில நடைமுறைகளையும் வகுத்து வைத்தார். 27 இவை வில்லிபுத்தூர்க் கோயிலில் இன்னமும் காணப்படுகின்றன.

இன்னும், 16-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மூன்று கடலும் சூழ்ந்த தென்னக முழுமைக்கும் பேரரசராய் வீற்றிருந்த கிருஷ்ணதேவராயர் (கி பி. 1509-29) 'ஆமுக்த மால்யதா' மகா காவியத்தைச் செய்தும் தம் ஆசை தீரப் பெறாமல் படித்தறியாத பாமரர்க்கும் நாச்சியார் பெருமை புலனாம்படிக்கு பாண்டி மண்டலத்திலேயே மிக உயர்ந் ததும், 18 அடுக்குகள் கொண்டது மானதோர் ராஜ கோபுரத்தை ஆண்டாளின் வில்லிபுத்தூரிலே சமைத்துத் தம் சிந்தையை உறுத்தியச் சுமை நீங்கிச் சுகம் பெற்றார்.

---

27. ARE 577 of 1926&S.I.T.I. vol T Part I.p 149-51

வானுற நீண்ட இக் கோபுரத்தின் உயரம் சுமார் 192 அடிகள் அல்லது 64 மீட்டர்கள். 28 அங்கயற்கண்ணி அம்மையின் திருக்கோபுரங்களுள் எதுவுங்கூட இத்துணை உயர்ந்த தன்று!

இன்னமும் பிற்காலத்தில், அழகிய சொக்கநாதபிள்ளை என்ற இன்னொரு அடியார் 'கோதை கும்மி' எனவும், 'கோதை அந்தாதி' எனவும் இரண்டு பிரபந்தங்கள் செய்து அஞ்சலி செய்தார். இப்படிக் காலங்கள் தோறும் செய்யப் பெற்று வந்துள்ள பணிகளையெல்லாம் நமது உத்தேசக் காப்பியத்தில் இணைப்பதற்கான உத்திகளைக் காண்டல் வேண்டும். இதற்கான மாதிரித் திட்டம் ஒன்றும் பின் இணைப்பில் கொடுக்கப்பட்டு உள்ளது. இவ் எமது கனவுக் காப்பியம் (utopia) புனைய வல்லார் உளரேல், அவர் மூல மாகக் கிடைக்கட்டும் எல்லார்க்குமோர் கவிதை மழை! இதோடு வைணவத்தின் புரட்சி முடிந்து விடுகின்றது; இனித் தொடரப் போவது பொற்காலம்.

**ஆசிரியரின் தனியன்**

**உள்ளமே உடைந்தென உணர்ச்சி பொங்கினாள்;**
**கள்ளமொன் றறிகிலாக் காதல் நெஞ்சினாள்**
**'வள்ளலார்க் கன்றிநான் வாழ்க்கைப் படேன்'—**
**எனக்**
**கிள்ளையாய் மிழற்றியின் கீதங்கள் பாடியே**
**தெள்ளியோர் சிந்தையுள் தேவும் ஆயினாள்.**

28. Temples of Tamilnad, p 54

# 5. அரியாதனத்தில்

## (கி.பி. 750-800)

---

*திருமங்கை மன்னர்*

பல்லவர் காலத்திய சோணாட்டின் உட்பிரிவுகளில் ஒன்று ஆலிநாடு. ஆலிநாட்டுக் குறையலூரில் கள்ளர் மரபில் நீலன் என்பவருக்கு மகனாய்த் தோன்றியவர்தான் பின்னர் 'திருமங்கைமன்னர்' என்று பிரசித்தமான ஆழ்வார். இவருடைய பெயரும் 'நீலன்' என்றே குருபரம்பரைகள் கூறினும், ஆயிரத்துக்கும் மேற்பட்ட இவர் பாடல்களில் 'கலியன்' அல்லது 'கலிகன்றி' என்பதையே இவர் தமது பெயராகக் கூறிக்கொள்கிறார். 'பரகாலன்' என்பதுவும் சிறப்பாக வழங்கியதெனத் தெரிகின்றது. சைவராகப் பிறந்த இவர் வைணவக் குமுதவல்லியார் மேல் கொண்ட காதலால் அவர் விருப்பப்படிக்கு வைணவர் ஆனார் எனக் குருபரம்பரைகளில் காணப்படுகின்றது. ஆனால்,

"எந்தை தந்தை தம்மான் என்று எமர் ஏழ் அளவும்
வந்து நின்ற தொண்டர்"— (பெரிய தி.4,9,9)

"எந்தாதை தாதை அப்பால் எழுவர் பழவடிமை
வந்தார்"
—(பெ.தி.7,2,6) எனவும்,

"எம்மானும் எம்மனையும் என்னைப்பெற்று
ஒழிந்ததற்பின்
அம்மானும் அம்மனையும் அடியேனுக் காகி
நின்ற கூடரே"
—[பெரிய தி.7,2,3] எனவும்

போதரும் இவர் வாக்குகளால் இவர் பரம்பரை வைணவர் என்றே தெரிகின்றது. இவருக்கு மனைவியர் பலர் இருந்த மையை 'காவிரித் தடங்கண் மடவார் கேள்வன்' (பெ.தி. 6, 10, 10), 'கொங்குமலர்க் குழலியர்வேள்' (பெ.தி. 3, 4, 10) என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. இவருக்கு மக்களும் பலர் ஆதலை 'பிரிந்தேன் பெற்றமக்கள்' (பெரிய தி. 6.2,4) என்ற வாக்கு தெரிவிக்கின்றது. வேட்டையில் இவருக்கு விருப்பம் மிக்கிருந்ததை 'சினத்தொழில் புரிந்து திரிந்து நாயினத்தொடும் திளைத்திட்டு ஓடியும், உழன்றும் உயிர்களே கொன்றேன்' (பெரிய தி. 1, 6, 6) என்ற அடியால் உணர்கிறோம். தொடக்கத்தில் இவர் அரசர்க்கு உழைத்து வாழ்நாளின் ஒரு முக்கிய பகுதியைப் பாழ் அடித்ததை 'பெரியேன் ஆயினபின் பிறர்க்கே உழைத்து ஏழை ஆனேன' (பெரிய தி. 1, 9, 7) என்ற அடியில் காணலாம்.

இவரை ஒரு சோழன் தானைத் தலைவராகக் கொண்டிருந்தானாம். இவ் அரசன் யார் என்று மட்டும் குரும் பரம்பரைகள் கூறவில்லை. தொடக்கத்தில் ஆழ்வாரால் ஆளப்பட்ட ஆலிநாடு வரைக்கும் உறையூர்ச் சோழனுக்கு அந்த நாளில் அதிகாரம் இருந்திருக்க முடியாது. இந்நிலையில் பழையாறையில் ஒரு சோழன் இருந்ததாக திருநாவுக்கரச நாயனார் புராணத்தில் சேக்கிழார் பெருமான் கூறிச் சேறலால், ஆழ்வாரைத் தானைத் தலைவராகக் கொண்டிருந்த சோழன் இப் பழையாறைச் சோழருள் ஒருவன் ஆகலாம் என்று எண்ணவும இடம் உண்டு. சிறைப்பட்டபோது குடந்தையை அடுத்த நறையூர்க் கோயிலில் இவர் காவலில் வைக்கப்பட்டதாகச் சொல்லப்படுவதால், இவன் குடந்தைச் சோழனே என்பது உறுதிப்படுகின்றது.

### காதலால் கதிபெறுதல்

அக்காலத்தே நாங்கூரைச் சேர்ந்த வெள்ளக்குளத்தில் மருத்துவர் ஒருவரின் வளர்ப்பு மகள் குமுதவல்லி. நாட்டியம் பயிலத் தொடங்கி அதில் நல்ல தேர்ச்சியும் பெற்று

விட்டிருந்தள்ா. அவளின் அரங்கேற்றத்தைக்காண மிகப்பல பிரமுகர்கள்கூடியிருந்தனர்.சேனாபதிகலியரும்வந்திருந்தார். நிச்சிந்தையாக வந்தவர் விழா முடிவில் மனச் சுமையோடு வீடு திரும்பினார். முன்னமே மனைவிமார் பலரும், மக்கள் பலரும் உடையவராய் இருந்தும்,அம்மெல்லியலாள் மாட்டும் மையல் கொண்டு, அவர் மனம் அலை பாய்ந்தது. பெண் கேட்டு ஆள் அனுப்பினார். ஆனால், பாகவத சிரோன் மணியாக விளங்கிய குமுதவல்லி ஒரு சிறந்த வைணவ அடியார்க்கன்றி வாழ்க்கைப்படேன் என்று உறுதியாகக்கூறி மறுத்து வந்தவர்களைத் திருப்பியடித்து விட்டாள். அதன் பேரில், திரு நறையூர் நம்பிகளிடம் சென்று திரு இலச்சினை களை யெல்லாம் பொறித்துக் கொண்டு மீண்டும் வந்து வேண்டினார். நாளும் 1008 அடியார்க்கு ஓராண்டு காலம் அமுது படைக்க வேண்டும் என்று இன்னொரு விதியும் விதித்தாள் குமுதா. அதற்கும் ஒப்புக் கொண்டு, அவளை மணந்து கொண்ட ஆலிநாடர் அவ்வாறே செய்தும் வந் தார். அவர் செல்வமெல்லாம் அப்பணியில் கரைந்து போ யிற்று. அதனால், அவ்வாண்டு அரசனுக்குரிய திறைப் பொருளைச் செலுத்த முடியவில்லை. திறை கேட்டு வந்த வர்களிடமும் முரட்டுத்தனமாக நடந்து கொண்டார். அத னால் ஏற்பட்ட போரில் இவரை வெல்லும் வகை அறியாத சோழன் சமாதானத்திற்கு என்று அழைத்து சிறைபிடித்து விட்டான். நறையூர்க் கோயிலில் இவர் காவலில் வைக்கப் பட்டிருந்ததாகச் சொல்லப்படுவதால், இவரே இப்படிக் கேட்டுக் கொண்டிருக்கலாம் என்று எண்ணத் தோன்று கிறது. சிறையிருந்தபோது, இவர் உண்ணா நோன்பிருந்து நறையூர்ப் பொருமானை வேண்டிக் கொண்டனராக, காஞ்சி யில் முன்பொருகால் இவர் பல்லவனுக்கு உதவியாகப்போய் பகைவர் நாட்டில் கொள்ளையிட்ட பொருளைப் புதைத்து வைத்திருந்தது நினைவிற் கெட்டிற்று. இப்படி ஒளி பிறந் தவுடனே, காஞ்சிக்கு அழைத்துச் சென்றால் கடனை அடைத்து விடுவதாக அரசரிடம் விண்ணப்பித்துக் கொண் டார். அதன்பேரில் அவ்வாறே கொண்டு செல்லப் பெற்ற

அவர் வேகவதி ஆற்றின் கரையில் இருந்த புதையலை எடுத்துக் கொடுத்து சிறை வீடு பெற்றாராம். கனவிடை இறைவனால் புதையலின் இருப்பிடம் அறிவிக்கப் பெற்றார் என்று ஊரெங்கும் 'பேச்சு அடிப்பட்டது; பல்லவன் போற் றினான்; சோழன் பணிந்தான்.

அன்னதானப் பணி தொடர்ந்தது. பொருள் போத வில்லை. ஆலிநாடர் வழிப்பறியில் ஈடுபட்டாராம். ஒருநாள் நாங்கூரை அடுத்த திருமணங்கொல்லைப் பகுதியில் போய்க் கொண்டிருந்த ஒருதிருமணக்கோஷ்டியைக் கொள்ளையடித் துச்சேர்த்த பொருளை மூட்டையாகக்கட்டி அதனை எடுக்க முயன்றார்; முடியவில்லை. மாப்பிள்ளை ஏதோ மந்திரம் செய்து விட்டார் என்று வெகுண்டு அவர் மேல் பாய்ந்தார். ஆனால் அந்தமாப்பிள்ளையோ சாவதானமாக ஆலிநாடரை அருகில் அழைத்து அவர் காதில் திருவெட்டெழுத்தை ஓதி னாராம். உடனே, உணர்ச்சிபொங்கி மெய்ம்மறந்தவர்முன் இறைவர் கருடாருடராகக் காட்சி அளிக்க, 'வாடினேன் வாடி.'-என்றெடுத்துக் கான மழை பொழிந்தார் ஆழ்வார் என்பது வரலாறு.

'கள்ளர்' சாதியினர் என்பதைக் கொண்டே மேலைய வரலாறு புனைந்து கொள்ளப்பட்டிருக்கலாம் என்பது ஒரு சாரார் கருத்து. 'வாடினேன் வாடி' என்ற பதிகத்திற் காணும் 'நான் கண்டுகொண்டேன் நாராயணா வென்னும் நாமம்'-என்ற தொடர்கள் அப்பதிகத்தை அப்பர் பாடிய நமச்சிவாயப் பதிகத்தின் வைணவப் பதிப்பேயாகக்காட்டுத லால், மேற்படி வரலாறு 'நாராயண நாம'ப் பதிகத்தின் பொருளுக்கேற்பப் புனைந்து கொள்ளப் பட்டிருத்தல் கூடியதே. எனில், ஆழ்வாராகக் கருதும் அளவிற்கு இவர் வாழ்க்கையில் நிகழ்ந்த அற்புதம் என்ன என்ற கேள்விக்கு விடை அளிக்க வேண்டியது நமது கடமை ஆகின்றது. ஒப்பரிய வீரர் என்ற முறையில் கரடு முரடான உடலமைப் பும், துருக்கிய, மங்கோலிய, அராபிய, பாரசீக முரடர் களைப் போன்று கருணை என்பதைக் கனவிலும் அறிந்

திராத கடின சித்தமும் கொண்டு கொலைத் தொழில் ஒன்று மட்டுமே புரிந்து வந்தவர் நம் கள்ளர் குலச் செம்மல். இப் பேர்க் கொத்தவர் வறிஞரும் வரண்ட சரீரம் படைத்தவரு மான பாகவதர்களின் திருவடித திருநீர் (ஸ்ரீபாத தீர்த்தம்) அருந்தி, திருநாமங்களை உச்சரிக்கும் அளவிற்கு மாறி விட்டார் என்று சொல்லப்படுகிறது. அதாவது, புலி பூனை யாகிவிட்டது போலவும், கல் கதலித்தண்டு ஆனாற் போல வும் இருந்தது இவருடைய மாற்றம்! திருமணங் கொல்லை யில் கொள்ளை அடித்தது, இறைவர் இவருக்கு திருவெட் டெழுத்து ஓதி உகத்தது முதலியன எல்லாம் இவர் திருமணங்கொல்லையில் தங்கியிருந்த போது கண்ட கனாக் களே ஆகல் வேண்டும். அக்கனவிலிருந்து விழித்தபோதே 'நாராயண நாம'ப் பதிகம் பாடியிருக்கக் கூடும். ஏனெனில்,

> வெந்திறற் களிறும், வேலைவாய் அமுதும்
> விண்ணொடு மண்ணவர்க் கரசும்
> இந்திரற் கருளி, எமக்கும் ஈந்தருளும்
> எந்தையெம் அடிகளெம் பெருமான்
> —[பெரி. தி. 1-4,7]

என்பனவும், இதுபோன்ற பிற வாக்குகளும் இவரைக் குறையாத பெருஞ்செல்வம் உடையவராகக் காட்டுகின்றன. ஆகவே, அய்யங்கார் அவர்களே திருமங்கை மன்னர் கொள்ளை அடித்ததாகக் கூறப்படுவதை வெறும் கட்டுக் கதை ஆகக் கருதுகின்றார். (பக் 192)

## திருமங்கை ஆவதும் எதுவோ ?

பல்லவ மல்லனின் 61-ஆம் ஆட்சி ஆண்டில் வெளியிடப் பட்டதும், திருத்துறைப் பூண்டி வட்டம் கொற்றங்குடிக் கிராமத்திலிருந்து கண்டெடுக்கப் பட்டதும், பண்டைக் கோனாட்டு நல்கூர் பட்டத்தாள் மங்கலம் எனப் பெயர் மாற்றிப் பிரமதேயமாக அளிக்கப்பட்டதைக் குறிப்பதும் ஆகிய ஒரு பட்டயத்தில் இதன் விஞ்ஞாப்தி திருமங்கல நாடாள்வான் எனக் குறிக்கப்படுகிறான். திருமங்கலம்

'திருமங்கை' எனச் சுருக்கி உரைக்கப்படுதல் மரபே. ஆகவே, இங்கு குறிப்பிடப்பட்ட திருமங்கல நாடே 'திருமங்கை நாடு' ஆதல் கூடுவதே.

பல்லவ மல்லனை பாண்டிய ராஜசிம்மன் புறங்கண்டதாக வேள்விக்குடிச் செப்பேடுகள் குறிப்பிடுவனவற்றுள் பூவாளூரும், திருமங்கையும் இரண்டு இடங்கள் ஆகும். திருச்சி மாவட்டத்து லால்குடிக்கருகே ஒரு பூவாளூரும், திருமங்கலமும் உள்ளன. ஆனாய நாயனார் பிறந்தது பூவாளூரை அடுத்துள்ள திருமங்கலத்தேயே. இம் மங்கலம் அந்த நாளில் மழகொங்கத்தின் தலை நகராயும் சிறந்திருந்தது. எனவே, இதுவே திருமங்கையும் ஆகலாம் என்பது ராகவையங்கார் அவர்கள் கருத்து1. வேள்விக்குடிச் செப்பேடுகள் குறிப்பிடும் திருமங்கை இஃதே ஆகக்கூடும் என்றாலும், ஆலி நாட்டிற்கு இஃது அணித்தாக இன்மையால், இதனை ஆழ்வாரினுடைய திருமங்கை அன்று என்றே நாம் கொள்ள வேண்டும். இது போலவே தஞ்சைத் திருவிடைமருதூர் வட்டத்துள் திருமங்கைச் சேரி, திருமங்கலக்குடி ஆகிய ஊர்களைக்2 கொண்டுள்ள பகுதியையும் நாம் ஆழ்வாரின் திருமங்கை நாடாகக் கொள்ள முடியாது.

ஆயிரத்துக்கும் மேற்பட்ட இவர் பாடல்களுள் எங்குமே திருமங்கை திருமால் திருப்பதியாகக் கூறப்படாமை குறிப்பிடத் தக்கது. மாறாக, திரு மங்கை கரும்பேசர் பதிற்றுப்பத்தந்தாதி3 என்ற ஒரு நூலால் காவிரி நதிக் கரையில் அமைந்த மங்கை நாட்டுத் திருமங்கையில் மங்கள நாயகி சமேத கரும்பேசர் ஆலயம் உண்மை அறியப்படுகின்றது. இது ஆலி நாட்டுப் பக்கத்தில் எங்கே உள்ளதுஎன்று கண்டுபிடித்தால், திருமங்கையின் இடத்தை நாம் கணித்து விட முடியும். நாங்கூர் நாட்டுக்கு வடக்கே

1. இலக்கிய சாஸன வழக்காறுகள் பக். 121.
2. தஞ்சை மாவட்ட ஊர்ப் பெயர்கள் பக்.
3. அந்தாதிக் கொத்து - பாகம் 1.

யும், ஆலி நாட்டுக்குக் கிழக்கேயும், மண்ணியாற்று முகத்துவார மட்டிலும் பரந்திருந்த ஒரு கடற்கரைப் பகுதி கல்வெட்டுக்களில் 'அதிகைமங்கை நாடு'என்று பேசப்படுகிறது. இதன் இட அமைப்பைப் பக்கத்தில் உள்ள படத்திற் காணலாம்[படம் 5-1][4]. இது மண்ணிஆற்றின் வலதுபக்கக் கிளையாற்றின் வடகரையில் அமைந்துள்ளது. இதுவே அந்தாதி கூறும் கலாநிதி நதி ஆகலாமோ என்பது ஆராயத்தக்கது. மங்கை வாழ் மணவாள வள்ளல் என வரும் அஷ்டப் பிரபந்தப்பாயிரம் இதன் ஆசிரியர் ஊரும் மங்கையே ஆகக் கூறுதலும் இன்னொரு குறிப்பு. திருமங்கை நாடு ஆலி நாட்டின் ஒரு உட்பிரிவே என்பது நமது கருத்து. திருவாலியிலிருந்து திருவெண்காடு செல்லும் வழியில் 'மங்கைமடம்' என்று ஒரு ஊர் காணப்படுவது இங்கே குறிப்பிடத்தக்கது.

*வயிரமேகன :*

அட்டபுயகரப் பதிகத்தில், ''மன்னவன், தொண்டையர்கோன் வணங்குநீண் முடிமாலை வயிரமேகன்'' என்று ஆழ்வார் பாடுகின்றார். [பெரி. தி. 2-8, 10]. இங்கே 'வணங்கு' என்ற நிகழ்கால வினை வயிரமேகன் ஆழ்வார் காலத்தியவன் ஆதலைத் தெளியக் காட்டுகின்றது. பொய்யனூரிலும்[5], கீழ்ப்புலத்திலும்[6] வயிரமேகப் பல்லவனின் 2-ஆம் ஆட்சி ஆண்டைய கல்வெட்டுகள் இரண்டு கிடைத்துள்ளன. இவனுடைய காலத்தை கி.பி. 868-890 என்பதாக சுப்பிரமண்ய அய்யர் அவர்கள்[7] அறுதியிட்டுள்ளனர். எனவே, ஆழ்வாரை கி.பி. 9-ஆம் நூற்றாண்டினராகக் கருதினார் ஆசிரியர் மறைமலை அடிகள் [பக். 539].

4. Political Geography of Chola Mandalam
5. S. I. I. Vol. 12, No. 113
6. S. I. I. Vol 12, No. 114
7. ARE. 158 of 1912; E.I. Vol XX p. 48-9 [1928-9] about last Pallavas of Kanchi.

திருமங்கை மன்னரால்புகழ்ந்து பேசப்படும் வயிரமேகன் வலிமை மிக்க ஒரு பேரரசன். ஆனால், மறைமலை அடிகளால் சுட்டப்படும் வயிரமேகனோ பல்லவர் வலிகுன்றிய நாளில் வாழ்ந்தவன். அக்காலத்திய பேரரசன் ஆதித்த சோழனே ஆதலை அனைவரும் அறிவர். மேலும்,

> பரனே! பஞ்சவன், பூழியன், சோழன் பார்மன்னர்
> மன்னர்தாம் பணிந்தேத்தும்
> வரனே - [பெரி. தி. 7-7, 4]

என்று திருமங்கை மன்னர் கூறுகின்றபடி, கி.பி. 890-க் குரிய சேர, சோழ, பாண்டியர் திருமால் அடியார்கள் அல்லர். கி.பி. 850-900-க்கு இடைப்பட்ட மூவேந்தரும் சிறந்த சிவனடியார்களே. ஆகையால், திருமங்கை மன்ன ரால் குறிப்பிடப் பெறும் வயிரமேகன் இப்பெயரோடு முந்திய காலத்தில் வாழ்ந்த இன்னொருவனே எனத் துணிந்து கூற லாம்.

தமிழகத்தில் வயிரமேகப் பெயர் முதன் முதல் காணப் படுவது தந்திவர்மன் காலத்திய கல்வெட்டுக்களில்தான். தந்தியின் 9, 21-ஆம் ஆண்டிற்குரிய உத்திரமல்லூர்க் கல் வெட்டுக்களில் 8,9 வயிரமேக தடாகமும், நந்திவர்ம மங்கலக் கல்வெட்டுக்கள் ஒன்றில் வயிரமேக வாய்க்காலும் 10, வயிர மேக புரத்தில் ஒரு நந்தீஸ்வரமும் 11 பேசப்படுகின்றன.

8. ARE no 74 of 1898 தந்தியின் 9-ஆம் ஆண்டுக் கல் வெட்டு, உத்திரமல்லூர் S.I.I.Vol VI no 359 p. 167 வைகுண்டப் பெருமாள் கோயில்
9. ARE no 61 of 1898 (தந்தியின் 21-ஆம் ஆண்டுக் கல்வெட்டு, உத்திரமல்லூர்) S.I.I. Vol VI no 344 p. 161 (வைண்டப் பெருமாள்கோயில்)
10. ARE 458 and 466 of 1908 (வயிரமேக வாய்க்கால், நந்திவர்ம மங்கலம்)
11. ARE 253 and 258 of 1913 (வயிரமேகபுரத்தில் நந்தீஸ் வரம்)

இவற்றிலிருந்து தந்திவர்மனின் தந்தையாகிய நந்திவர்ம பல்லவ மல்லனுக்கு வயிரமேகப் பெயர் வழங்கியமை தெளிவாகின்றது. 'கடபா' 12 செப்பேடுகளில் இதே பெயர் ராஷ்டிரகூட தந்திதுர்க்கனுக்கு வழங்கப் பட்டிருப்பதாலும் இஃது உறுதிப்படுகின்றது. காஞ்சியைக் கைப்பற்றியதாக எல்லோராவில் உள்ள தசாவதாரக் குகைக் கல்வெட்டில்13 கூறிக்கொள்ளும் தந்திதுர்க்கன் இப்பெயரை நந்திவர்மனிடமிருந்து பறித்துக் கொண்டிருக்கலாம். அல்லது, தோல்வியுற்ற நந்திவர்மன் தந்திதுர்க்கனின் வயிரமேகப் பெயரை தானும் கவுரவப் பெயராகத் தரித்துக் கொண்டிருக்கலாம். இவற்றுள் முதற் கொள்கையே உண்மையாக இருக்கக் கூடும். ஏனெனில், இரண்டாவது கொள்கை நந்தியின் அடிமைத் தனத்தைச் சுட்டுவதால், அப்பேர்க்கொத்ததொரு பெயரை ஆழ்வார் பல்லவனைக் குறிக்கப் பயன்படுத்தி இருப்பாரா என்பது ஐயப்பாட்டிற் கிடமானதே. மேலும், முதலாம் மகேந்திரவர்மனுடையதாக மகாமேகன் 14 என்பதும், ராஜசிம்னுடையதாக ஸ்ரீமேகன் 15, சித்திரமேகன்16 என்பனவும் போன்ற மேகப் பெயர்கள் பல்லவர்களிடையிலேயே காணப்படுகின்றன.17

வயிரமேகன் என்பது பல்லவ மல்லனைக் குறிப்பதேயாகில், 'மன்னவன் தொண்டையர்கோன் வணங்கு நீண்முடி மாலை வயிர மேகன் கச்சி அட்டபுயகரம்'—என்றே ஆழ்வார் பாடியிருக்க வேண்டும், அப்படிக்கின்றி "வயிரமேகன் தன்வலி, தன்புகழ் சூழ்நத கச்சி" என்று இவர் சுற்றி வளைத்துக் கூறுவதில் ஏதோ ஒரு விசேடம் இருக்கவே

12. E g. Vol VI p.332 ff &Ec XVII Gh 61(கடபா செப்.)
13. A.S.W.I Vol V p, 87 and E.g.Vol VII appendix p.13
14.
15.
16.
17. Subramanian, K. R., J. Oriental Research, I p. 348 (1927)

வேண்டுமென வாதிப்பர் ராகவையங்கார் அவர்கள். பல்லவ மல்லனின் கோநகர் என்ற வகையில் கச்சியை அவன் வலி சூழ்ந்திருப்பது இயற்கையே என்றாலும், (அவன் தன்) புகழும் சூழ்ந்திருந்தது என்பதில் தான் குறிப்பாக இவ் விசேடம் புதைந்து கிடப்பதாக அவர் ஊகிக்கிறார். வாகை சூடி தந்திதுர்க்கன் காஞ்சியில் தங்கியிருந்த போது அவன் புகழ் அங்கே ஓங்கியிருந்ததனாற்றான் ஆழ்வார் அவ்வாறு பாட நேர்ந்தது என்பது அவர் ஊகம். ஆனால், தன்னாட்டு மன்னனாகிய பல்லவனை விடுத்து, ஆக்கிரமிப்பாளனாகிய ராஷ்டிரகூடனைப் புகழ ஆழ்வார் மனம் ஒருப்பட்டிராது— என்று கூறி, அய்யங்கார் கருத்தை அ. சீனிவாசப்பிள்ளையும் 18, K. G. சேஷய்யரும் 19, K. V. சுப்பிரமணிய அய்யர் 20 அவர்களும் ஏற்றுக் கொள்ளவில்லை. வீரனாகிய நந்தியையே வெற்றி கொண்ட தந்தியின் அரிய வீரத்தை சுத்த வீரர் ஆகிய ஆழ்வார் வீரர்களுக்கே உரிய பாணியில் வியந்து பாராட்டினார், (மகா அலெக்ஸாண்டர் புருஷோத்த மனைச் சிறப்பித்தாற் போல) என்று இதற்கு அய்யங்கார் சமாதானம் கூறினார். ஆயினும், "ப்ரணவா வநீபதி மகுட மாலி காலீட சரணார விந்த"—என வரும் உதயேந்திர சாஸனத் தொடரின் மொழி பெயர்ப்பாகவே "வணங்குநீண் முடிமாலை வயிர மேகன்"—என்ற தொடர் உண்மை வயிர மேகன் பல்லவ மல்லனே ஆதலைத் துணியக் காட்டு கின்றது. 'தன் புகழ்' என்ற அதிகப்படியான தொடருக்கு வேறு பொருள் இருக்கவேண்டும் என்று இதனால் தெளி வாகின்றது. இதற்கு இவ் ஆசிரியரின் விளக்கம் சிறிது போக்கிக் கூறப்படும்.

## *நந்திவாமன் என்ற பரமேஸ்வர பல்லவமல்லன்*

திருமங்கை மன்னர் பாடிய இன்னொரு கச்சித்திருப்பதி பரமேச்சுர விண்ணகரம் [பெரிய தி. 19-2-9] இது பெரிய

18.
19.
20. Historical sketches of Ancient Dekhan p.23,

காஞ்சிபுரத்தின் கிழக்கு ராஜவீதியில் இந்நாள் 'வைகுண்டப் பெருமாள் கோயில்' என்ற பெயரோடு மத்திய தொல் பொருள் துறையினர் கண்காணிப்பில் உள்ள அழகிய ஆலயம். இவ் ஆலயம் அஷ்டாங்க விமானத்தைக்கொண்ட [தமிழகத்து] ஐந்து ஆலயங்களுள்* முதலாவது ஆகும். இதன் பதிகத்தில் இதனைச் சமைத்த பல்லவனின் வெற்றிச் சிறப்புகள் மிகப்பல பேசப்படுகின்றன. இவை யெல்லாம் பல்லவ மல்லனின் உதயேந்திரச் செப்பேடுகளில் காணப் படுவனவே. மேலும், இக்கோயிலின் தென்புறத்துச்சுவற்றில் காணப்படும் சிற்பங்களும், அவற்றின் கீழே வரையப்பட் டுள்ள விளக்கக் குறிப்புகளும்[21] அக்கோயிலைக் கட்டிய பல்லவனுக்கு 'பல்லவ மல்லன்', 'பரமேஸ்வரன்'- என்ற பெயர்களும் வழங்கியனவாகக் கூறுகின்றன. 'கடல் போல் முழங்கும் குரற் கடுவாய்ப் பறை' என இப்பதிகத்தில் குறிப்பிடப்படுவது உதயேந்திர சாஸனத்தில் 'கடுமுக வாதித்ர சமுத்ர கோஷாபிதான'—எனப் பயிலும் தொடரின் தூய தமிழ் மொழி பெயர்ப்பே ஆதலும் பரமேஸ்வரன் நந்திவர்ம பல்லவ மல்லனே ஆதற்குச் சான்று கூறும். இனி, இவனை ஆழ்வார் தம் பதிகத்தில் 'பார் மன்னு பல்லவர் கோன்' — என இரண்டு இடங்களில் நிகழ் காலத்தில் கூறியுண்மை குறிப்பிடத் தக்கது. இந் நிகழ்கால குறிப்பைக் கவனிக்கத் தவறிவிட்டு அறிஞர் K.G. சங்கர் ஏதேதோ எழுதிச் செல்கிறார். அது கிடக்க, பல்லவ மல்லனோடு

---

*அஷ்டாங்க விமானம் கொண்ட ஆலயங்கள்.
1. காஞ்சியில் உள்ள வைகுண்ட பெருமாள் கோயில்,
2. உத்திரமல்லூர் [உத்திரமேரூர்] சுந்தரவரதப் பெருமாள் கோயில், 3. மதுரைக் கூடலழகர் கோயில் 4. கோட்டி யூர் சவும்ய நாராயணப் பெருமாள் கோயில், 5. சென்னை பெஸண்ட் நகரில் உள்ள அஷ்டலட்சுமி கோயில்.
6. திருவனந்தபுரத்துக்கு அருகில் உள்ள திருவாட்டாறு திருக்கோயில்.

21. S. I. I. Vol VI, 135.

போரிட்டவனாக வேள்விக்குடி செப்பேடுகளில் கூறப்படும் பாண்டியன் அரிகேசரி ராஜசிம்மனை 'ஆழ்வார் உலகுடை மன்னவன் தென்னவன்' (பெரிய 2-9, 7] எனக் குறித்துள் ளார். இன்னும், இவருடைய பெயரான 'கலிகன்றி' என்பதுவும் 'கலிபல மர்த்தந' என உதயேந்திர சாஸனத்திற் பயிலும் தொடர்களின் தூய மொழி பெயர்ப்பேயாதலும் ஆழ்வார் பல்லவமல்லன் காலத்தினரே யாதற்குச் சில துணைச் சான்றுகளாம்.

பல்லவமல்லன் அரசு எய்திய வரலாற்றைப் பற்றி வைகுண்டப் பெருமாள் கோயில் சிற்பங்களின் அடியிற் கண்ட குறிப்புகள் கூறுகின்றன. இரண்டாம் பரமேஸ்வரன் காலமானபோது (அல்லது கங்க ஸ்ரீபுருஷனால் கொலையுண்ட போது) அரசு கட்டிலில் அமரத் தகுந்தாற் போல் எந்த அரசியினிடமாகவும் பிறந்த வாரிசு ஒருவனுமே இல்லை.22 எனவே, மகாமாத்திரரும், கடிகையாரும், மூலப் பிருகிருதியும் கூடி ஆலோசித்து, முதலாம் சிம்மவிஷ்ணுவின் இளவலாகிய பீமவர்மனின் வழி வந்த இரண்யவர்மனிடம் சேர்ந்தனர். அங்கே பல்லவமல்ல பரமேஸ்வரன் என்று ஒரு அரசிளங்குமரன் இருந்தான். இவனைப் பல்லவப் பேரரசனாகிய இரண்டாம் பரமேஸ்வரனுக்கு இரண்ய வர்மனின் மகளின் இடமாகப் பிறந்த மைந்தனாக அறிஞர் ராமேசன் 23 கருதுவர். ஆனால், இக் கருத்து ஏனை அறிஞருக்கு உடன்பாடன்று; பல்லவமல்ல பரமேஸ்வரன் * இரண்யவர்மனின் கடைசி மகன் என்றே இன்னமும் நம்பப் படுகிறான்24,25: அதுபற்றி, அவ் இளவரசனை அரசனாக்

---

* இவன் இரண்யவர்மனுக்கு முதலாம் பரமேஸ்வரனின் மகள் இடமாகப் பிறந்த மகன் ஆக நமது ஆராய்ச்சியில் தெரிகின்றான்.

22. Srinivasa Iyengar, P. T., in பல்லவர் சரித்திரம்.
23. "Studies in Medieval Deccan History p 39-52
24. Mahalingam, T.V.
25. Studles in Ancient Tamil Law and Society p.27 foot note 2

குவதெனத் தீர்மானித்து பல்லவப் பேரரசின் பெருமக்கள் எல்லாம் இரண்யவர்மனிடம் வந்தடைந்தனர் எனக் கொண்டு நாம் மேற்செல்வோம். பல்லவமல்லன் 12 வயதுச் சிறுவனாக இருந்தபடியால் அவனுக்கு ஒரு 'முதுகண்' (guardian) ஆக இருக்கக் கூடியவர் யார் என குலமல்லர் களையும், தனது ஏனைய மூத்த மைந்தர்களையும் இரண்யன் வினவினான் எனவும், அவர்களில் எவரும் ஒருப் படாது போகவே பல்லவமல்லன் 'நானே போவேன்' என்று துணிவோடு முன் வந்தான் எனவும் டாக்டர் ராமேஸன் கூறுதல் ஒப்புக்கொள்ளத் தக்கதே. அவனை அழைத்துக் கொண்டு யாறு, மலை, ககனங்களைக் கடந்து காஞ்சியின் எல்லையைச் சமீபித்தபோது, தன் சதுரங்க சேனை களோடும், பல்லவாதிராஜன் ஒருவன் எதிர்ப்பட்டு மடிந்தான என்பதும், இவன் பெயர் நந்திவர்மன் என்பதுவும் அறிஞர் மகாலிங்கம் அவர்கள் உடையவும், அறிஞர் தி. நா. சுப்பிர மணியன் 26 அவர்கள் உடையவும் கருத்தாம். பிறகு மூலப் பிரகிருதி முதலாயின மேலோர் பல்லவமல்லனை எதிர்த்து மடிந்தவன் றினைவாக 'நந்திவர்மன்' என்ற பெயராலேயே மகுடாபிஷேகம் செய்தனராம். நமது கொள்கைப்படி இது நிகழ்ந்தது கி.பி. 731-இல்.

கொற்றங்குடிப் பட்டயத்தில் பல்லவமல்லன் தான் சிறு வனாக இருந்தபோதே, சேர, சோழ, பாண்டிய, களப்பிர, வல்லப (சளுக்கிய) ரை எல்லாம் புறங்கண்டதாகக் கூறிக் கொள்கிறான். இது முடி சூடிக்கொண்ட உடனேயே பல்லவமல்லன் சளுக்கிய விஜயாதித்தனை தாக்கிப் புறங் கண்டிருக்க வேண்டுதலைக் காட்டுகின்றது. இதன் விளை வாக நுளம்ப பாடியை ஆண்டு வந்த பல்லவ வமிசத்தவன் (மங்களன்?) நந்தியின் பக்கம் சேர்ந்து கொண்டான் என்று

---

26. பல்லவர் செப்பேடுகள் முப்பது.

ஒரு கல்வெட்டால் 27 தெரிகின்றது. இந்தத் தோல்வியால் மனம் உடைந்த விஜயாதித்யன் சில நாட்களுக்குள் கி. பி. 733-இல் இறந்துவிட்டான். இவன் மகன் ஆகிய இரண்டாம் விக்ரமாதித்தன் உடனே முடிசூடிக்கொண்டான். அதே சூட்டில் பல்லவமல்லனைப் பழி தீர்ப்பதற்காக காஞ்சியைத் தாக்கினான். இதனைக் கொஞ்சமும் எதிர் பாராத நந்திவர்மன் வேறு வழியின்றி காஞ்சியைக் கை விட்டு ஓடினான். நகரின் உட்புகுந்த விக்ரமாதித்தன் அவ் அழகிய நகருக்கு ஏவ்விதக் கேடும் செய்யாமல் கைலாய நாதர் ஆலயத்தைக் கண்டு களித்து, அதற்குச் சில மானியங் களும் அளித்து, ஏழை எளியவர்கட்கும், பிராமணர்களுக்கும் வாரி வழங்கினான். அவன் கயிலாய நாதர் கோயிலுக்கு அளித்த தானங்களின் விவரங்களை கன்னட எழுத்துக் களில்28 இன்னமும் இத் திருக்கோயிலிற் காணலாம்.

*நந்திபுர விண்ணகரம் :*

கி பி. 730-இல், முன்பே தன் தந்தை ஆகிய விஜயா தித்யன் காலத்தில், இரண்டாம் பரமேஸ்வரன் பல்லவப் பேரரசன் ஆக இருந்தபோது, ஒரு முறை விக்ரமாதித்தன் பல்லவ நாட்டின் மேல் படையெடுத்து வந்திருக்கிறான் 29. கி.பி. 733-இல் இரண்டாவது படையெடுப்பிற்கு (அதிலும் ஒரு சின்னஞ் சிறுவன் அரசனாக இருந்தபோது) ஏற்பட்ட அவசியம் என்ன என்பதை ஆராய்ந்த பேராசிரியர் மகா

---

27. MAR 1941 p. 221 கி.பி. 733-இல் நடைபெற்ற விக்கிரமாதித்தனின் படையெடுப்பே இங்கு குறிப்பிடப்படு வதாகக் கொண்டாலும், இதற்கு முன்பே நுளம்ப பல்லவர், பல்லவர் பக்கம் சேர்ந்திருந்ததை வழியில் விக்கிரமாதித்தன் நுளம்பபாடியில் ஓரிடத்தைக் கைப்பற்றியதாக இதே கல் வெட்டில் கூறப்பட்டிருப்பதிலிருந்து ஊகிக்க முடிகிறது.

28. E.g. Vol III. p. 360

29. J. Ind. His Vol XXX p. 290 foot note 15 (Ulchala inscription) & E. C. Vol. III. p. 360 (35th yr of Vijayaditya 730 A.D.) (696-733)

மகாலிங்கர் அவர்கள் பல்லவ மல்லனோடு போட்டியிட்ட பரமேஸ்வரவர்மனின் வாரிசுகள் சார்பாகவே இப்படையெடுப்பு நிகழ்ந்திருக்கலாம் என முடிவு கட்டினார். ராயக்கோட்டைச் செப்பேடுகள்30 எழுத்தமைதியால் இக் காலப்பகுதிக்கு உரியனவாய் காணப்படுதல் கொண்டு, இதனை வெளியிட்ட ஸ்கந்தசிஷ்யனே இப் போட்டிப் பல்லவன் ஆகக் கடவன் என ஒரு அருமையான கருத்தையும் வெளியிட்டார்31. ஆகவே, பல்லவமல்லன் காஞ்சியிலிருந்து ஓட்டம் பிடித்ததும் விக்ரமாதித்தன் ஸ்கந்தசிஷ்யனிடமே காஞ்சியை ஒப்படைத்து விட்டு வாதாபிக்கு மீண்டிருக்க வேண்டும் என்றும் முடித்தார். ஸ்கந்தசிஷ்யனின் பெயரில் விக்ரமேந்திரவர்மன் என்ற பின் இணைப்பே இவரை இப்படிக் கருதச்செய்தது. ஆயினும், ஸ்கந்தசிஷ்யனிடம் அரசை ஒப்படைத்த வரலாறு நர்வான் செப்பேடுகளில் 32 கூறப்படாததாலும், விக்ரமாதித்தனின் படையெடுப்புக்கு நுளம்ப பல்லவரை பல்லவ மல்லன் தன் பக்கம் சேர்த்துக் கொண்டதே காரணம் ஆகக் கூடுமல் மேற்காட்டப்பட்டதாலும் விக்ரமாதித்தன் வாதாபிக்கு திரும்பிய பின்னரே ஸ்கந்தசிஷ்யன் காஞ்சியை பல்லவமல்லன் திரும்பி வருவதற்குள் தொண்டை நாட்டுச் சிற்றரசர் உதவியால் கைப்பற்றிக் கொண்டு விட்டான் என்றே கொள்ளத் தோன்றுகிறது. தொண்டை நாட்டுச் சிற்றரசர் ஸ்கந்தசிஷ்யனையே ஆதரித்ததை பல விதங்களில் ஊகிக்க முடிகிறது. ஸ்கத்தசிஷ்யன் பெயரோடு காணப்படும் 'விக்ரமேந்திரவர்மன்' என்ற பின் இணைப்பிற்கு இவ் ஆசிரியரின் விளக்கம் சிறிது போக்கிக் கூறப்பெறும்.

பல்லவமல்லன் பழையாறைக் கருகிலுள்ள நந்திபுரக் கோட்டையில் தங்கியிருந்த போது, அதனைச் சித்திரமாயப்

---

30. Venkayya, V.I.A., Vol XXX VII p. 352
31. Mahalingam, T.V., Tram. Arch. Soc. S. India, 1957-8. Ho 55 56
32. E I. Vol. XXVIII p. 125 ff (நர்வான் செப்பேடுகள்)

பல்லவாதிராஜன் த்ரமிள ராஜர் சிலரோடு முற்றுகை இட்ட தாகவும், கேள்வியுற்ற உதயசந்திரன் ஓடோடியும் வந்து த்ரமிள ராஜரைத் தோற்கடித்து முற்றுகையை நீக்கி, சித்திர மாயப் பல்லவாதி ராஜனைச் சிரச்சேதம் செய்து, நாட்டை மீண்டும் தன் அரசனுக்கே அளித்ததாகவும் உதயேந்திரச் செப்பேடுகளில் 33 கூறப்பட்டுள்ளது. இதில் சித்திரமாயன் பல்லவ அரசன் ஆதலும், உதயசந்திரன் வேறு பகைவர் களோடு போரிட்டுக் கொண்டிருந்த சமயம் பார்த்து, இப் போட்டிப் பல்லவன் நந்திபுரக் கோட்டையைத் தாக்கிய மையும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. 'திராவிடம்', 'த்ர மிளம்' என்ற சொற்கள் அக் காலத்தே தொண்டை நாட்டையே குறித்ததை அறிஞர் தி நா. சுப்பிரமண்யம் 34 அவர்கள் தெளிவாக விளக்கியுள்ளார்கள். ஆயினும், த்ரமிள அரசர்களை இவர் பல்லவ அரசிளங்குமரர் ஆகக் கருதியது தான் பொருத்தமாக இல்லை. இவர்கள் பாணர், பங்கள கங்கர், பொத்தப்பிச் சோழர் போன்ற தொண்டை மண்ட லத்துச் சிற்றரசரே ஆகல் வேண்டும். இக் காலப் பகுதிக் குரிய ஸ்கந்தசிஷ்யனுக்கு பாணர்கள் துணைவராய் இருந் ததை ராயக்கோட்டை செப்பேடுகள் செவ்வனம் காட்டு கின்றன. ஆகவே, தொண்டைப் பகுதி போட்டிப் பல்லவர் கையிலேயே இருந்ததை செவ்விதின் உணர்கின்றோம். சித்திரமாயப் பல்லவாதிராஜனை ஸ்கந்தசிஷ்யனின் வேறா னவனாக தி. நா. சுப்பிரமணியம்34 அவர்கள் கருதுவது உண்மையாகில், சித்திரமாயனை ஸ்கந்தசிஷ்யனின் மகனாகக் கொள்ளலாம்.

அடுத்தபடியாக, நந்திபுரக் கோட்டையில் பல்லவ மல்லன் தங்கியிருந்ததாக உதயேந்திரம் செப்பேடுகள் குறிப் பிடுவது கவனிக்கத் தக்கது. இந் நந்திபுரத்தில் நந்திவர்ம [பல்லவமல்ல] னால் எடுக்கப்பட்ட விண்ணகரம் ஒன்றும்

33. S.I.I. Vol. II no 14. p. 362
34. பல்லவர் செப்பேடுகள் முப்பது, பக். 102
34. 'பல்லவர் செப்பேடுகள் முப்பது, பக். 102

இருந்ததை திருமங்கை ஆழ்வார் பாடுகின்றார். இந்தக் கோட்டையும், கோயிலும் எப்போது தோன்றின? இவை முதலாம் நந்திவர்மனால் அமைக்கப்பட்டிருக்கலாம் என்பது ராகவையங்கார் அவர்கள் கருத்து. [பக். 66 அடிக்குறிப்பு] பொய்கை ஆழ்வாரால் பாடப்பட்ட 'விண்ணகர்' இதுவே ஆகல் வேண்டுமென்று தம் மனத்துள் முடிவு செய்து கொண்டு, அய்யங்கார் இவ்வாறு வாதிக்கிறார். முதன் முதல் சோணாடு பல்லவர் ஆளுகைக்கு உட்பட்டது சிம்ம விஷ்ணுவின் காலத்தேயே யாகலின், அய்யங்கார் கருத்து தவறானதாகும். காஞ்சியை விட்டு இரண்டாம் விக்ரமாதித்தனால் விரட்டப்பட்ட பல்லவ மல்லன் பேராசிரியர் மகாலிங்கம் அவர்கள் கருதுமாறு போல, ராஷ்டிரகூட தந்திதுர்க்கனின் நாட்டுக்கு ஓடிவிட்டிருந்தால், பழை யாறைக்கருகில் நந்திபுரக் கோட்டையையும், கோயிலையும் கட்டுதற்கு இவனுக்கு அவகாசம் ஏது? காஞ்சி வேறொரு பல்லவன் கையில் இருந்ததெனில் பல்லவமல்லன் எவ் வழியாக பழையாறைக்கு வந்திருக்கக் கூடும்? இக் கேள்வி களுக்கெல்லாம் உள்ள ஒரே பதில் காஞ்சியை விட்டு வெளி யேறிய பல்லவ மல்லன் தன்னைப் பதவியில் அமர்த்திய சோணாட்டுப் பக்கமே ஓடிவந்து பழையாறையைத் தனது புதிய தலை நகராகக் கொண்டு ஆண்டு வந்தான் என தொடக்கத்தில் கருதியது போல் கொள்வதே. அப்பொழுதே பாண்டிய ராஜசிம்மனுக்கும், பல்லவமல்லனுக்கும் இடையே நிகழ்ந்தனவாக இருதிறத்தார் செப்பேடுகளிலும் கூறப்படும் போர்கள் எல்லாம் நிகழ்ந்திருக்க வேண்டும். இன்னும், சித்திரமாயனின் முற்றுகையின் போது உதயசந்திரன் பாண்டிய ராஜசிம்மனோடு போரிடுதற்காகவே வெளியில் சென்றிருந்தான் எனவும் நாம் எளிதில் ஊகிக்கலாம்.

உதயேந்திரச் செப்பேடுகளில் இப் பாண்டிய-பல்லவப் போர்கள் மண்ணைக்குடி, நிம்பவனம், சூதவனம், சங்கரக் கிராமம், காளிதுர்க்கம் ஆகிய இடங்களில் நடை பெற்றதாகக் கூறப்பட்டுள்ளன. இவற்றுள் மண்ணைக்குடி

நந்திரபுர விண்ணகரப்பதிகத்தில் பேசப்படும் மண்ணையே. இதே பதிகத்தில் போதரும் 'குன்றெயில்' என்பது பகவதி யாற் காக்கப்படும் காளிதுர்க்கம் என்று உதயேந்திர சாஸனத்தில் கூறப்படும் துர்க்கமே [அதாவது மலைக் கோட்டையே] ஆகக் கூடும். வில்லவன் ஒருவனை நென்மலியில் பல்லவன் வென்றோட்டியமை, உதயேந்திரச் செப்பேடுகளில் சபரர் தலைவனை நெல்வேலியில் புறங் கண்டதாகக் கூறப்படுதலோடு ஒப்பிடத் தக்கது, வில்ல வன், சபரன் என்பன ஒருபொருட் சொற்கள். இனி, மண்ணைக்குடி, புதுக்கோட்டை மாவட்டத்து, அறந்தாங்கி வட்டத்தைச் சேர்ந்த மண்ணைக்குடி எனவும் பட்டுக் கோட்டை வட்டத்த தாகிய திரு உசாத்தானமே சூத வனம் எனவும். நிம்பவனமும், சங்கரக் கிராமமும் புதுக் கோட்டைப் பகுதியில் உள்ள வேப்பங்காடும, சங்கரனார் குடிக்காடும் ஆகலா மெனவும், நெல்வேலி இதே பகுதியில் உள்ள நெம்மேலியே எனவும் அய்யங்கார் அவர்கள் கருதி னார். [பக் 139-141]. வேள்விக்குடிச் செப்பேடுகளில் பாண்டியர்க்கு வெற்றியைத் தந்த களங்களாகக் குறிப்பிடப் படும் நெடுவயல், குறுமடை, மண்ணைக்குறிச்சி, திருமங்கை, பூவாளூர், கொடும்பாளூர், குழும்பூர், பெரியலூர் ஆகிய வற்றுள் பல பல்லவமல்லனோடு அவன் நந்திபுரத்தைத் தலைநகராகக் கொண்டு சோணாட்டுப் பகுதியை மட்டும் ஆண்டு வந்த காலத்தியனவே ஆகலாம். சின்னமனூர்ப் பெரிய செப்பேடுகளில் முதலாம் ராஜசிம்மன் இழைத்ததாகக் கூறப்படும் சங்கரமங்கைப் போர் பாண்டிக் கோவையிலும் கூறப்படலால், இப்போர் அந் நூலின் காலமாகிய கி.பி. 780க்கு முற்பட்டதே ஆகல் வேண்டும்.

**இனி, அரசர்க் கரசனும் பரம பாகவதனுமான தொண்டை மன்னவன் ஒருவனுக்கு திருமால் ஏழுநாளிகை அளவும் உடன் இருந்து திருவெட்டெழுத்தின் பொருளை உணர்த்தியதை திருவரங்கப் பதிகத்தில்,**

"துளங்கு நீண்முடி அரசர்தங் குரிசில்
தொண்டை மன்னவன் திண்டிறல் ஒருவற்கு
உளங்கொள் அன்பினோ டின்ன ருள்சுரந்[து]
அங்கோர் நாழிகை ஏழுடன் இருப்ப
வளங்கெழு மந்திரம் மற்றவர்க் கருளிச்
செய்தவா[று] அடியேன் அறிந்துலகம்
அளந்தபொன் அடியே அடைந்துய்ந்தேன்
அணிபொழில் திருவரங்கத்[து] அம்மானே''-

[பெரிய தி.5-8,9] என்ற பாசுரத்தால் அறிகிறோம். இவனை இரண்டாம் மகேந்திரவர்மனாகக் கருதினார் அறிஞர் சீனிவாச அய்யங்கார் அவர்கள் [பக். 315]. திருவரங்கப் பெருங்கோயிலின் இரண்டாம் திருச்சுற்று இராஜமகேந்திரன் திருவீதி எனப்படுதலும், கி.பி. 650-ஐச் சேர்ந்த சிங்கத் தூண்கள் சில இக் கோயிலின் ஐந்தாம் சுற்றிலுள்ள திருவரங்கத் தமுதனார் கோயிலில் காணப்படுதலும்[35], முதலாம் மகேந்திரன் சமணத்திலிருந்து சைவம் புக்கவனாதலுமே இவரை இப்படி கருதச் செய்தன வாகல் வேண்டும். ஆயினும், வைணவ அரசருள் எல்லாம் பல்லவமல்லனே சிறந்த பாகவதன் ஆன படியால், அவனே நந்திபுரத்தில் ஆண்டுகொண்டிருந்த போது இங்ஙனம் திருவரங்கத்தில் திருவெட்டெழுத்து உபதேசம் பெற்றிருக்கலாம்.

*வடவரசோட்டாங் கண்ட நாங்கூர்*

தனது கேந்தூர்ப் பட்டயத்திலும் [6-ஆம் ஆண்டு][36], வக்கலேரிப் பட்டயத்திலும் [13-ஆம் ஆண்டு][37] இரண்டாம் கீர்த்திவர்மன் தான் இளவரசன் ஆக இருந்த போது காஞ்சி அரசனை காஞ்சிக் கோட்டைக் குள்ளேயே

---

35. கலைக் களஞ்சியம் தொகுதி 9, பக். 635
36. E. g. Vol IX p. 200-7 (672 Saka expired 750 AD 6th reg. yr of Kirtivarman II)
37. E. g Vol V 200 ff & Ind, Antiquaries Vol VIII p. 23 (679 Saka expired 757 A.D.)

அடைந்து கிடக்கும்படி செய்ததாகக் கூறிக் கொள்கிறான். இது இரண்டாம் விக்ரமாதித்தன் பல்லவமல்லனை காஞ்சி யிலிருந்து விரட்டி யடித்த தாக நர்வான் பட்டயம் கூறும் செய்தியிலிருந்து முற்றிலும் மாறுபட்டதாக உள்ளது. எனவே, கீர்த்திவர்மன் கூறுவது பின்னர் மேற்கொள்ளப் பட்ட இன்னொரு படையெடுப்பாக இந் நாளிற் கருதப்படு கிறது[38]. நர்வான் பட்டயம் விக்ரமாதித்தனின் 8-ஆம் ஆட்சி ஆண்டில் வெளியிடப்பட்ட தாகையால், இதற்குச் சமமான கி.பி. 741-இன் பிற்பாதியில் இரண்டாம் கீர்த்தி வர்மனின் படையெடுப்பு நடந்ததாகக் கொள்ளலாம். கர் நாடகக் கல்வெட்டு ஒன்று[39] விக்ரமாதித்தனின் சேவகன் ஒருவன் [அதாவது இளவரசன் ஆகிய இரண்டாம் கீர்த்தி வர்மன்] ஒரு கொங்காணி அரசன் [அதாவது ஸ்ரீபுருஷன்] துணையோடும் காஞ்சியைக் கைப்பற்றியதாகக் கூறுவது இதற்குத் துணை ஆகின்றது. காஞ்சிக் கோட்டைக்குள் அடைபட்டுக்கிடந்தவன் நமது கொள்கைப்படி ஸ்கந்த சிஷ்யனே. ஸ்கந்தசிஷ்யனின் பெயரோடு விக்ரமேந்திர வர்மன் என்ற பின் இணைப்பு ஒன்று காணப்படுதல் இப் படையெடுப்பின் விளைவே ஆகக்கூடும். ஸ்கந்தசிஷ்யன் விக்ரமாதித்தனைத் தன் மேலரசனாக ஒப்புக்கொண்டான் என்பது கருத்து. பேராசிரியர் மகாலிங்கம் அவர்கள் பல்லவ மல்லனைக் காஞ்சியிலிருந்து விரட்டிய விகரமாதித்தனே ஸ்கந்தசிஷ்யனிடம் காஞ்சியை ஒப்படைத்தான் எனவும், அதனாலேயே ஸ்கந்தசிஷ்யனின் பெயரில் விக்ரமேந்திர- -வர்மன் என்ற பின்னிணைப்பு ஏற்பட்டது எனவும் கருதி யதைவிட, நமது இப்புதிய கொள்கை சிறந்ததே அன்றோ?

நாங்கூர்த் திருமணிக்கூடப் பதிகத்தில் [பெரி. தி. 4-5] திருமங்கை மன்னர் அவ்வூரை,

"ஒண்டிறல் தென்னனோடவ் வடவர சோட்டங் கண்ட
திண்டறலாளர் பயில் நாங்கை"- [பெரி. தி. 4, 5,6]

38. "A History of South India 2nd edn. p. 149.
39. M.A.R., 1939 p 122.

என வருணிக்கிறார். ஈண்டு கூறப்பட்ட தென்னன் ராஜ சிம்மனே ஆதல் வேள்விக்குடிச் செப்பேட்டால் நன்கு அறியப்படுகின்றது. இந்தப் போர்கள் எல்லாம் சோணாட்டிலேயே நிகழ்ந்திருக்கலாம் போலவும் பாடல் போக்கிலிருந்து தெரிகின்றது. ஸ்கந்தசிஷ்யனின் ஆட்சிக்கு உட்பட்டிருந்த தொண்டை மண்டலப் பகுதி போர்கள் நிகழ்ந்த சோணாட்டிற்கு வடக்குப் பக்கத்ததே யாகலின், ஆழ்வாரால் குறிக்கப்படும் 'வடவரசு' ஸ்கந்தசிஷ்யனுடையதே ஆகலாமோ என்று ஐயுற இடமுண்டு. ஆயினும், 'வடவரசு' என்ற தொடர் பல்லவ நாடு உள்ளடங்கிய தமிழ்நாடு முழுவதற்கும் அப்பாற் பட்ட அரசைக் குறிக்கவே வழங்கப்படுகிறது. 'வடபுலத்து வாதாபித் தென்னகரம்' எனச் சேக்கிழார் கூறலும், காஞ்சி இங்ஙனம் எங்குமே குறிக்கப்படாமையும் காண்க. ஆகவே, ஆழ்வாராற் குறிக்கப்படும் வடவரசு சாளுக்கியப் பேரரசே ஆகல் வேண்டும். இதன் பொருள் காஞ்சியை வென்ற இரண்டாம் கீர்த்திவர்மன் நந்திவர்ம பல்லவமல்லனையும் விட்டுவைக்க மனமில்லாமல் மேல்வந்து தாக்கினான் என்பதே. ஆனால், இந்த முயற்சி பலிக்கவில்லை. 'வல்லவன், வில்லவன் என்று உலகில் பலராய் வலவேந்தர் வணங்குகழற் பல்லவன்'—(பெரி. தி. 2, 9, 1) என்று ஆழ்வார் வாக்கில் 'வணங்கு' என்ற நிகழ்கால எச்சவினையும் வல்லவன் என்ற சொல்லும் வடவரசர் வல்லபராகிய சளுக்கியரே ஆதலைத் தெரிவிக்கின்றன. இதனை ஊகிக்க முடியாத அந்த நாளில், ராகவையங்கார் அவர்கள் வடவரசு தோற்றோடியதை கி. பி. 674 இல் பெருவளநல்லூர் போரில் சளுக்கிய முதலாம் விக்கிரமாதித்தன் (655-680) முதலாம் பரமேஸ்வரனால் தோற்கடிக்கப்பட்டு ஓடியதோடு இணைத்து வரலாற்றையே மிகவும் குழப்பி விட்டார்கள்.

"தென்னனோடு வடவர சோட்டம்கண்ட திண்டிறலாளர் பயில்நாங்கை" என்பதிற்போந்த 'பயில்' என்ற நிகழ்கால எச்சவினை இவ்வீரர்கள் இப்பதிகம் இயற்றப்பட்ட நாளில்

உயிரோடிருந்ததைச் செவ்வனம் காட்டுகின்றது. வடவர சோட்டம் பெருவள நல்லூர் போரையே குறிப்பதாகில், இதனைச் சாதித்த நாங்கை வீரர்களின் வயது சுமார் 25-ஆவது இருக்க வேண்டும். இப்பதிகம் கி. பி. 750 அளவில் இயற்றப்பட்டிருந்தாலன்றி, இவர்கள் தென்னனோடு வடவரசை ஒட்டியது பெருவள நல்லூர்ப் போரைக் குறிக்க இயலாமை தெளிவு. இம்மாதிரியான நெருக்கடி இரண்டாம் கீர்த்திவர்மனின் படையெடுப்பிற்கு இல்லை. எனவே, திருமங்கை ஆழ்வாரால் குறிப்பிடப்படும் நிகழ்ச்சியை இரண்டாம் கீர்த்திவர்மனின் தோல்வியாகக் கோடலே பொருத்தமாகும்.

வடவர சோட்டம் கண்ட திண்டிறலாளரை திருமங்கை மன்னர் குறிப்பிடுவது அது அவர் சிறுவராய் இருந்த காலத்தில் நிகழ்ந்த அரிய வீரச்செயல் ஆனமை பற்றியே ஆகல் வேண்டும்-என ஒரு குறிப்புப் பொருளும் அய்யங்கார் அவர்கள் கொண்டனர். இந்தக் கொள்கையின்படி அவர் திருமங்கை மன்னர் பிறந்த காலத்தை கி. பி. 660-ஐ ஒட்டியதாகக் கொள்வர் இவ்வாறு கொள்வதால் திருஞான சம்பந்தரை திருமங்கை மன்னர் காழியில் சந்தித்ததாகக் குரும்பரமபரைகள் ஒருமுகமாய்க் கூறுவது விளக்கம் பெறுவதும் இவர் கொள்கைக்கு இன்னொரு காரணம். ஆயினும், சம்பந்தர்-ஆழ்வார் சந்திப்பைப்பற்றி ஆழ்வாரோ, சம்பந்தரோ எங்குமே குறிப்பிடவில்லை. இன்னும், சுந்தரர், நம்பியாண்டார் நம்பி, சேக்கிழார் ஆகிய பெருமககளுள் எவரும் ஒரு சிறு குறிப்புங்கூடத் தரவில்லை. ஆகவே, பிற சமயத்தினரை உட்படுத்தும் விஷயத்தில் ஓரளவிற்குக் கண்டிப்புடன் இருப்பதே நல்லது. குருபரம்பரைகள் எல்லாம் ஒத்தோதுவது அவைகள் அனைத்தினுடையவும் மூலம் ஒன்றே யாகக் கூடுவதால் தானே தவிர, செய்தி உண்மையானதால் தான் என்று அறைந்து கூறமுடியாது. காழிச்சீ ராம விண்ணகரப் பதிகத்தில் (பெரிய தி. 3-4) 'ஆலிநாடன், அரட்டமுக்கி, அடையார் சீயம், கொங்குமலர்க் குழலியாவேள், மங்கை வேந்தன், கொற்ற வேல் பரகாலன்'-எனச் சரமாரியாக

வரும் விருதுக்களே சம்பந்த அடியார்கள் ஆட்சேபித்ததா கக் கேட்கப்படும் கதையின் அடிப்படை ஆகலாம். அல்லது சம்பந்தரைப்போல் தாமும் ஓர் திருவெழுக் கூற்றிருக்கை பாடியபோது, சம்பந்தமடத்தவர்கள் ஆட்சேபிக்க, அதனை ஆழ்வார் எதிர்த்துப் போரிட்டதை குரும்பரம்பரைகள் சம்பந்தர்-ஆழ்வார் வாக்குவாதமாகத் திரித்தும் கூறியிருக் கலாம். எனவே, உறுதியற்ற இந்த செய்திக்கு ஒருமதிப்பு தருவதற்காக வென்று அய்யங்கார் நாங்கூர் வீரர் வடவ ரசை ஓட்டியதை பெருவளநல்லூர்ப் போரோடு இணைப் பது கொஞ்சமும் பொருத்தமானதாகத் தோன்றவில்லை.

திருமங்கை மன்னர் (பிறப்பில் வைணவரே ஆகத் தோன்றினாலும்) சிறந்த (திருமால்) பக்தரானது குமுத வல்லியார் மேற்கொண்ட காதலினாலேயே என்பது உலகறிந்தது. ஆழ்வார் தமக்கு மனைவியர் பலர் இருந் தனர் எனவும் கூறுகிறார். (பெரிய தி. 6, 10, 10 & 3, 4, 10). இவர் எல்லாம் குமுதவல்லியாரைக் காதலிக்கு முன்பே மணந்து கொள்ளப்பட்டவராக வேண்டுதல் தெளிவு. ஆகலின், குமுதவல்லியாரைக் காதலித்த நாளில் சுமார் 30 பிராயத்தினராகவாவது இருந்திருக்க வேண்டும். இதற்குப்பிறகு குறைந்தது பத்து ஆண்டுகளாவது ஆகி யிருக்கும், இவர் தல யாத்திரையை மேற்கொண்டு காழிச் சீராம விண்ணகரில் வந்துற்ற நாளில். எனவே, இவர் சம்பந்தரைச் சந்தித்தது உண்மையானால், அது இவருக்கு நாற்பது பிராயத்தளவில் நிகழ்ந்திருக்கக் கூடும். அதாவது இவர் பிறந்தது கி.பி 660-இல் ஆகில், சம்பந்தரைச் சந்தித்தது கி. பி. 700-இல் ஆக வேண்டும். ஆனால், இது அய்யங்கார் கொள்கைப்படி சம்பந்தர் காலமாகிய கி. பி. 670-686-ஐயே (பக். 172) தாண்டிப் போய்விடு கின்றது. இனி சம்பந்தரின் காலம் கி. பி. 677க்குள் என்பது நமது ஆராய்ச்சியில் புலன் ஆகின்றது. எனவே திருமங்கை மன்னர்- சம்பந்தர் சந்திப்பு வரலாற்றில் எள்ளளவும் உண்மை இல்லை என்று அறைந்து கூறலாம். அய்யங்காரும்

'ஆழ்வார்கள் காலநிலை'யின் முதற் பதிப்பில் இது பற்றி ஒன்றுமே கூறவில்லை என்பதும் ஈண்டு எண்ணத் தக்கது.

ஆழ்வார காலம (கி. பி 716-821)

ஆழ்வார் பிறப்பைப் பற்றி இன்னொரு விஷயத்தையும் தெளிவு படுத்தி விடுவது நல்லது. ஒரு நள ஆண்டில் கார்த்திகைப் பவுர்ணமி கூடிய வியாழனன்று இவர் பிறந்த தாக மூவாயிரப்படி குருபரம்பரை கூறுகிறது. திருவாளர் சாமிக்கண்ணுப் பிள்ளை அவர்கள் கணிதப்படி இது கி. பி. 31. 10. 776 ஆகும். இதன்படி கி. பி. 826-ஏ இவர் பாடல்கள் இயற்றத் தொடங்கிய 50 பிராயத்திற்குச் சமமான ஆண்டு ஆகின்றது. இது இவரால் நிகழ்காலத்தில் குறிக்கப் பெற்ற பல்லவ மன்னன் காலத்தையே தாண்டிப் போய் விடுகின்றது. ஆகையால், மூவாயிரப்படி குருபரம்பரையின் கூற்றில் உண்மை இல்லை. ஆறாயிரப்படி குருபரம்பரையில் (கிழமையும், திதியும் இன்றி) நட்சத்திரம், மாதம், 'நள' ஆண்டு ஆகியன மட்டும் குறிப்பிடப் பட்டிருப்பதால், நாம் கி.பி. 716 ஆகிய நள ஆண்டை இவர் பிறந்த ஆண்டாகக் கொள்ளத்தகும். இக்கணிதப்படி கீர்த்திவர்மன் தோற் றோடிய கி. பி. 741-இல் ஆழ்வாருக்கு 25 பிராயம் ஆய் விட்டிருக்கக் காண்கிறோம். இது நல்ல காளைப் பருவமே. ஆகலின். ஆழ்வாரே அங்ஙனம் வடவரையும், தென்னவரை யும் விரட்டியடித்த நாங்கூர் வீரருள் ஒருவராதலும் கூடுவதே. ஆகவே, ராகவையங்கார் ஆழ்வார் பிறப்புக்குக் கொண்ட கி. பி. 660 எட்டுணையும் பொருந்தாமை தேற்றம். மூவாயிரப்படி குருபரம்பரையிற் காணப்படும் விவரங்களிலிருந்து ஆண்டாளும், திருமங்கை மன்னரும் பிறந்தது கி. பி. 776-ஐய நள ஆண்டே என்று துணியப் பட்டுள்ளது. நமது ஆராய்ச்சிப்படி இப்பொழுது இருவருமே பிறந்த நள ஆண்டு கி. பி. 716 என்று ஏற்படுதல் குறிப்பிடத் தக்கது. திருமங்கை மன்னரின் ஆயுட்காலம் நூற்றைந்து ஆண்டுகள் எனப் படுவது உண்மையாகில், இவர் காலம் கி. பி. 716-821 காணலாம்.

ஆழ்வார்கள் காலநிலை'-இன் இரண்டாம் பதிப்பில் (1931)திருமங்கை மன்னர் பிறந்த காலத்தை கி.பி. 660 ஆகக் குறித்த அய்யங்கார், பின்னர் இதனை கி.பி. 680 ஆக தமது இலக்கியச் சாஸன வழக்காறுகள் என்ற நூலில் மாற்றியதோடு இராமல் (பக். 119) ''ஆழ்வாரின் அவதார காலத்தை முன் தள்ளத் தள்ள வயிரமேகனைப் பாடிய போது அவர் தொண்டு கிழவராய் இருந்தார் என்றும், 100-120 வயது வரை இருந்தவரென்றும் கொள்ளநேரிடும்'-என்றும், ''கி. பி. 680க்குப் பின் தள்ளினால் (முதலாம்) விக்ரமாதித்தனை வென்ற நாங்கை வீரர்கள் தம் காலத்து விளங்கியவர் என்று அவர் கூறியபடி சொல்லுதற்கு இயலா மற்போகும்''-என்றும் கூறி, பின்னர் இதனைக் கூறும் நூலின் இறுதியில் (பக். 299) திருமங்கை மன்னர் காலத்தை கி பி. 710-780 ஆகக் குறித்தனர். ஆகவே, அய்யங்கார் அவர்கள் நாங்கை வீரரால் விரட்டப்பட்ட வடவரசன் முதலாம் விக்ரமாதித்தன் அல்லனாதலையும், ஆழ்வாருக்கும் (அவர் கருத்துப்படி கி.பி. 670-686க்குரிய) சம்பந்தருக்கும் எந்தவித சம்பந்தமும் இல்லை என்பதையும் ஒப்புக்கொண்டதாகவே கொள்ளலாம்.

*காஞ்சி விஜயம் I, திருமங்கை மன்னர் (கி பி,748)*

ஆந்திர மாநிலத்து, நெல்லூர் மாவட்டத்தைச் சேர்ந்த மல்லம் என்ற ஊரில் நந்திவர்மனின் 15-ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஒன்று[40] கிடைத்திருக்கிறது ஆலூப அரசனின் விண்ணப்பத்தின் பேரில் சாளுக்கிய அரசன் ஆணத்தியாக இருந்து செய்த தானத்தை இது குறிக்கின்றது. பல்லவ மல்லன் காஞ்சியைக் கைப்பற்று முன்பே செய்த தானத்தை, காஞ்சியைப் பல்லவமல்லன் பிடித்த பின்பு பொறிக்க நேர்ந்ததால், பல்லவமல்லனின் ஆட்சி ஆண்டு கல்வெட்டில் குறிக்கப்பட்டிருக்கக்கூடும். அல்லது இந்தமல்லம்—சளுக்

40. Mahalingam T.V., Trans. Archae. Soc. S. Ind. 1959-60 pp. 17-27

கியன் உதயேந்திரச் செப்பேடுகளிற் கூறப்பட்ட திரவத்யன் ஆகலாம்*. கல்வெட்டு பொறிக்கப்பட்ட ஆண்டு கி.பி.744-45 ஆகும். இங்கே நாம் முக்யமாகக் கவனிக்கவேண்டியது கி. பி. 745-இல் பல்லவமல்லன் பல்லவப் பேரரசு முழுவதையும் தன்னடிக் கீழ்க் கொணர்ந்து விட்டான் என்பதே. இந்த வகையில் ராயக்கோட்டை செப்பேடுகளை (தனது 14-ஆம் ஆண்டில் வெளியிட்ட) ஸ்கந்தசிஷ்யனின் 14-ஆம் ஆட்சி ஆண்டு இந்த கி.பி. 745க்கு முற்பட்டதாக வேண்டுதல் காண்கிறோம். எனவே, நந்திவர்மன் அரசு கட்டில் ஏறிய அதே சமயத்தில் ஸ்கந்தசிஷ்யனும் முடி சூடிக்கொண்டிருந்தாலன்றி, இஃது இயலாமை காணப்படும். பல்லவ மல்லனை காஞ்சி வாயிலில் எதிர்த்துப் பொருது மடிந்த பல்லவாதிராஜனுக்குப் பின் இவனே இறந்தவன் வாரிசாக அரச பதவி ஏற்றான் என நாம் முன்னமே கொண்ட முடிவு இதனால் உறுதிப்படுதல் காணலாம்.

இன்னொரு சிறப்பும் உண்டு. (கி.பி. 744க்குப் பின் அரசனாய் விட்டிருக்க வேண்டும்) சித்திரமாயனின் சிரச்சேதம், பல்லவமல்லன் காஞ்சியைக் கைப்பற்றியது, பிருத்வி-வியாக்ரன் காஞ்சியின் மேல் படையெடுத்ததும், உதயசந்திரனால் தோற்கடிக்கப்பட்டதும், உதயசந்திரன் இவ் வியாக்ரனைத் துரத்திக் கொண்டு வெங்கி வரை போய்க் கண்ட வெற்றிகள் ஆகிய உதயேந்திர சாஸனக் குறிப்புகள்

---

* யாப்பருங்கல விருத்தியுரை (சூத். 53) மேற்கோள் செய்யுள் ஒன்றில் பாண அரசன் சங்கபாலனால் வென்று கொள்ளப்பட்டவனாகக் கூறப்படும் சதுமுகனை இந்த திரவத்யனின் மகனாகக் கருதலாம். ஏனெனில், சதுமுகன் என்ற பெயரின் உண்மை வடிவம் ஆக வேண்டும் ஹிரண்யவர்மன் என்பது பல்லவமல்லன் பல்லவப்பேரரசன் ஆகிவிட்டபின் தொடக்கத்தில் சிலகாலம் 'முதுகண்' (guardian) ஆக இருந்த அவன் தந்தையின் பெயரும் ஆகும். மல்லமும் பல்லவமல்லனின் பிற்காலத்தில் இருந்து பாணர்களின் இரண்டாவது முக்கிய கேந்திரமாக இருந்து வந்துள்ளது.

எல்லாமும் கி.பி. 744-5இலேயே நிகழ்ந்திருக்க வேண்டு தலே இது. இந்த கி.பி. 745க்கு முன் பல்லவமல்லன் புகழ் மாத்திரமே அறியப்பட்டிருந்த காஞ்சியில் இக் கி.பி.745-இல் இருந்து புகழோடு வலிமையும் சூழ்ந்திருந்தது. இத னாலேயே, ஆழ்வார் 'மன்னவன் தொண்டையர்கோன் வணங்கு நீண்முடி மாலை வயிரமேகன் தன்வலி, தன்புகழ் சூழ்ந்த கச்சி'-என்று பாடினார். 'வயிரமேகன் தன்வலி, தன்புகழ்' என்பது கொண்டு, காஞ்சியின் மேல் படை யெடுத்து வந்து அங்கு வலிமையோடும், வெற்றிப் புகழோடும் ராஷ்டிரகூடத் தந்திதுர்க்கன் தங்கியிருந்த போதே அப் பாடலைப் புனைந்து அதில் தந்திதுர்க்க வயிரமேகனை ஆழ் வார் பாராட்டினார் என அய்யங்கார் வாதித்தமை பொருந்தா தென்னலாம். ஆலிநாடர் வாக்கிலிருந்து நாம் இப்போது அறிந்து கொள்வது பல்லவமல்லன் காஞ்சிக் குத் திரும்பிய பிறகு, 'வயிரமேகன்' என்றொரு புது விருதும் புனைந்து கொண்டான் என்பதே.

சோழனுக்குச் சேர வேண்டிய திறைப் பொருளைக் காஞ்சிக்குப் போய் எடுத்துக் கொடுத்து ஆழ்வார் சிறைவீடு பெற்றதும், பல்லவன் ஆழ்வாரைப் போற்றியதும் ஆகிய செய்திகள் முன்பே கூறப்பட்டன. இப் பல்லவன் சிறந்த பாகவதன் ஆகிய பல்லவமல்லனே ஆகல் வேண்டும். இது நிகழ்ந்தது பல்லவமல்லன் காஞ்சிக்குத் திரும்பிய பிறகே ஆக வேண்டுதலைக் கூறத் தேவையில்லை. இதன் காலம் இவ்விதத்தில் கி.பி. 745-க்கு மேல் போகின்றது. இக் காலத்தில் ஆழ்வாருக்கு 80 பிராயத்துக்கு மேல் இருக்கும். இது காதல் செய்ய இன்னமும் ஏற்ற பருவமே. இப் பருவத் தில் இவருக்குத் திருமணம் முறைப்படி முன்பே (அதாவது, 16-இல் இருந்து 20-ஆண்டுகளுக்கு உள்ளேயே) நடந்தேறி யிருக்க வேண்டுதல் தேற்றம். இது நாம் முன்பு வகித்த வாறே உண்மை அறிந்து இன்புறத் தக்கது.

பிறப்பால் ஆலிநாட்டினர் ஆகிய கலியர் ஆரம்பத்தில் நாங்கூர்ப் படையின் தலைவரியாக மட்டுமே இருந்தார்;

இரண்டாம் கீர்த்திவர்மனை விரட்டியடித்ததில் இவர் காட்டிய தீரத்தை மெச்சி ஆலி நாட்டின் ஒரு பகுதி ஆகிய திருமங்கை நாட்டின் சிற்றரசர் ஆக குடந்தைச் சோழரால் நியமிக்கப்பட்டார். எனினும், காஞ்சியிலிருந்து திரும்பிய நாளிலிருந்து இவர் திறை செலுத்தும் அடிமைத் தளையிலிருந்து விடுவிக்கப்பட்டுவிட்டார் என்றே தோற்று கிறது. ஏனெனில், தமக்கு மேலரசனாய் இருந்த சோழனைப் பற்றி இவர் தமது பாடல்களில் எங்குமே குறிப்பிட வில்லை. இவர் பல்லவனைப் பற்றியே பலபடப்பேசுதலால், இவ் விடுதலையில் பல்லவ மல்லனின் பங்கும் இருந்திருக் கலாம்.

## பரகாலா (கி.பி. 750)

தம் பாடல்கள் பலவற்றில் ஆழ்வார் தம்மைப் 'பரகாலர்' என்றும் கூறிக்கொள்வது தமது வீரம் பற்றியே ஆகலாம் எனினும், இவரை மற்றைச் சமய காலர் (பர—அந்நிய சமயங்கள்; காலர்—எமனார்)ஆகக் குருபரம்பரைகள் கருது வது போலவே தெரிகின்றது. தமிழ்நாட்டில் பவுத்தத்தை ஜைனமும், ஜைனத்தை சைவமும் அழித்தன. எனவே, வைணவம் தான் தனிச் சமயமாய்த் தலை யெடுப்பதற்குத் தனது மூத்த உடன்பிறப்பாகிய சைவத்தோடேயே போரிட வேண்டியிருந்தது. பூதத்தாழ்வார் காலத்திருந்தே நடைபெற்று வரும் இந்த தீராத போராட்டத்தில் திருமழி சைப்பிரான், தொண்டரடிப்பொடிகள், பெரியாழ்வார் ஆகியோரின் பங்கை இதற்கு முன்பே கண்டுள்ளோம். இந்த பாரம்பர்யத்தில் திருமங்கையின் பங்கு என்ன? சம்பந்த ரோடு திருமங்கை மன்னர் வாதிட்டு வென்றது தான்—என்பதே குருபரம்பரைகளின் கருத்து. ஆனால், இது உண்மை அல்ல என்று மேலே கண்டுள்ளோம். ஆயினும், ஆழ்ந்து நோக்கும் போது, இது அடியோடு பொய்யும் அன்று என்றே தெரிகின்றது. சம்பந்த மடத்தவர்களோடு ஆழ்வார் வாதிட்டு வென்றிருக்கலாம் என்று நாம் முற் கூறியது இக் கருத்துடனேயே. அவ் வாதத்தின் பொருட்டு

ஆழ்வார் திருநெடுந் தாண்டகமும், திருவெழுக் கூற்றிருக் கையும், சிறிய திருமடலும் செய்து நாலுகவிப் பெருமாள் எனத் தம்மை நாட்டிக் கொண்டார் ஆகலாம். வாதப் போர் நடைபெற்றதை உறுதிப்படுத்துவது, அதற்கு முன்பு திரு மால் கோயில் எதுவும் பெற்றிராத சீர்காழியில் திருமங்கை மன்னர் தம் வெற்றிக் குறியாக (victory memorial) தாடாளன் கோயிலைக் கட்டினார் என மேற் கொண்டு கூறப்படுவது தான். சிங்கத்தை அதன் குகைக்குள்ளேயே புகுந்து விலங்கிட்ட இம் மாபெரும் வீர திலகத்தைக் குரு பரம்பரைகள் புதுமைப் பொருளில் 'பரகாலன்' என்றே அழைத்தது, சுருங்கக் கூறினால், 'அற்புதம்' - ஏ ஆகும்.

காஞ்சி விஜயம் - II (கி பி 753)

உத்திரமல்லூர் கோவர்த்தனப் பெருமாள் கோயில் பல்லவமல்லனால் கட்டப்பட்ட தாகக் கருதப்படுகின்றது. இக் கோயிலில் பல்லவமல்லனின் 24-ஆம் ஆண்டு கல்வெட்டு 40 ஒன்று உண்மையால், இவ் ஆலயம் இதே ஆண்டிலோ அல்லது இதற்குச் சற்று முன்பேயோ கட்டி முடிக்கப்பட்டு இருக்கவேண்டுமென்பது தெளிவு. பரமேச்சுர விண்ணகர மாகிய வைகுண்டப் பெருமாள் கோயில் தலை நகரமாகிய காஞ்சியின்கண் உள்ள தாகையால், இதுவே நந்திபுர விண்ணகருக்குப் பிறகு, நந்தியால் நிருமாணிக்கப் பட்ட ஆலயங்களுள் எல்லாம் முற்பட்ட தாகக் கூடும் இவ் வகையில் இதனை 23-ஆம் ஆண்டிற்குச் சமமான கி.பி. 753 அளவில் முடிக்கப் பட்டதாகக் கொள்ளலாம்.

வைகுண்டப்பெருமாள் கோயிலின் தென்புறச் சுவற்றில் காணப்படும் சிற்பங்களுள் 14-ஆம் கட்டத்தைச் சேர்ந்த வற்றுள் யானைப் படைகள் மிக்கதோர்ப் போர்களக்காட்சி காணப்படுகிறது. யானைப் படைகளின் மிகுதியைக் கொண்டு சித்தரிக்கப்பட் டிருப்பது கங்க அரசனுடன் நடைபெற்ற தோர்ப் போரே எனக் கருதினார் பேராசிரியர் மகாலிங்கம் அவர்கள்.41 யானைச் சாத்திரத்தில் ஸ்ரீ புருஷனுக்கு இருந்த

40 S. I. I. Vol. 9. no.

41 Kancheepuram in the Early History of South India P.

புலமையும், பழங் கங்கநாடாகிய மைசூர்ச்சீமையில் யானைக் காடுகள் மிகுதியாக உண்மையும் இவரை இப்படிக் கருதத் தூண்டின. இஃது உண்மையாகில், உதயேந்திரப் பட்டயத்திலும், அடுத்த (22-ஆம்) ஆண்டில் வெளியிடப்பட்ட காசக்குடிப் பட்டயத்திலும் காணப்படாமல், 33-ஆம் ஆட்சி யாண்டில் வெளியாள புள்ளூர்ப் பட்டயத்தில் முழு விவரங்களோடு காணும் கங்க-பல்லவப் போர் கி. பி. 753க்கும் கி.பி. 763க்கும் இடைப்பட்ட காலத்தில் நிகழ்ந்திருக்கக் காண்கிறோம். நாம் இதனைக் கி.பி. 753-இல் நிகழ்ந்த தாகக் கொள்ளலாம். ஏனெனில், மும்முறை காஞ்சிக்கு விஜயம் செய்தவராகத் தோன்றும் ஆழ்வாரின் மூன்றாம் விஜயம் சுமார் கி.பி. 756-இல் நிகழ்ந்திருக்கலா மெனத் தெரிகின்றது. இது சிறிது போக்கிக் காட்டப்படும்.

பதினான்காம் கட்டத்திய சிற்பத்தில் இன்னொரு சிறப்பும் உண்டு. போர்க் களக் காட்சியில் பெருமாளும், ஒரு ஆழ்வாரும் காணப்படுகின்றனர். இதன் பொருள் விளங்க வில்லை என இதனைக் கண்டு பிடித்த டாக்டர் மீனாட்சி 42 அவர்கள் கூறிச் சென்றனர். போரின் போது வைகுண்டப் பெருமாள் பிரதிட்டை செய்யப்பெற்று கோயிலுக்கு குடமுழுக்கு செய்யப் பெற்றதையும், இவ்விழாவில் திருமங்கை மன்னர் கலந்து கொண்டு சிறப்பித்ததையுமே இக் காட்சிகள் சித்தரிக்கின்றன என்பது இவ் ஆசிரியர் கருத்து. இதனால் இவ் அதிகாரம் டாக்டர் மீனாட்சி அவர்களுக்கே அடியீடு செய்யப்படுகின்றது. அஷ்ட புஜப் பதிகம் திருமங்கை மன்னரின் இரண்டாவது காஞ்சி விஜயத்தின் போதே பாடப்பட்ட தாகலாம்.

*பப்ப பட்டாரகர்*

வைகுண்டப் பெருமாள் கோயில் சிற்பத்தில் காணப் படும் ஆழ்வாரை திருமங்கையாகக் கருதியதற்கு ஒருகாரண

---

42 The Historical Sketches of Vaikunta Perumal Temple. p.

முண்டு. தமது நெஞ்சை நோக்கிக் கூறியது போல அமைந்துள்ள வதரிப் பதிகத்தில் திருமங்கை மன்னர் 'பப்ப அப்பர்' என்ற தொடரால் குறித்திருப்பது தம்மையே ஆதல் தெளிவாய்த் தெரிகின்றது. இத்தொடர் 'பப்ப பட்டாரகர்' என அக்காலத்தில் பயின்ற தொடரின் தமிழ் வடிவமாகும். இது அரசர்க்கு ஞானாசிரியராய் அமைந்த பெரியோரைக் குறிக்கவும் அந் நாளில் வழங்கப்பட்டது. 'தைவத மாகாநின்ற பப்ப பட்டாரகரும்' -என வரூஉம் முதற் பரமேசுவரனின் கூரம் சாஸனமும், வேதங்களில் விற்பன்னராய் இருந்த யக்ஞ பட்டருக்கு இப்பட்டம் மூன்றாம் நந்திவர்மனால் அளிக்கப் பட்டமையும்[42] இதற்குச் சான்று. ஜடில பராந்தகனும் 'மநு தர்சித மார்க்கத்தினால் குரு சரிதம் கொண்டாடி'யதாக சீவர மங்கலச் செப்பேடுகள் கூறும். எனில், திருமங்கை மன்னர் யாருக்கு குருவாய்ச் சிறந்திருந்தார் என்ற வினா எழுகின்றது. நந்தியோ அல்லது இவன் மகன் ஆகிய தந்தியோ தான் இவரைப் பப்ப பட்டாரகர் ஆக்கியிருக்க வேண்டும். கி. பி. 716-இல் பிறந்த ஆழ்வார் கி.பி. 718-இல் பிறந்த பல்லவமல்லனை விட மூத்தவர் ஆனபடியாலும், தந்திவர்மனின் அருஞ்செயல்களாகக் கருதக் கூடிய எதையும் ஆழ்வார் குறிக்கக் காணாமையாலும் இவர் நந்திவர்ம பல்லவனுக்கே கூட பப்பவப்பராக இருந்திருக்கலாம் என்றுஎண்ண இடம்உண்டு. ஆகவே, வைகுண்டப் பெருமாள் கோயில் சிற்பங்களுள் 'ஆழ்வார்'-என டாக்டர் மீனாட்சியால் கருதப் பெற்றவரை பப்ப அப்பர் ஆகிய திருமங்கை மன்னரே ஆக நாம் கொண்டது பொருத்தமே யன்றோ? இங்ஙனம் பல்லவப் பேரரசால் பப்ப பட்டாரகர் ஆக்கப்பட்ட இவரே விசிஷ்டாத்வைத குருபரம்பரையின் உலகம் ஒப்புக் கொண்ட முதல் குருநாதர் ஆதல் இங்கே குறிப்பிடத் தக்கது.

## கடன் மல்லை விஜயம்(கி. பி. 753)

காஞ்சி விஜயங்களில் ஒன்றின் போதே ஆழ்வார் கடன் மல்லைக்கும் சென்றிருக்க வேண்டும். ஆழ்வார் பாட

42. வேலூர்ப் பாளையச் செப்பேடுகள்.

ஆரம்பித்தது திருமணங் கொல்லையில் இறைவனால் ஆட் கொள்ளப் பெற்ற பிறகே யாதலால், இரண்டாவது காஞ்சி விஜயம் நிகழ்ந்த கி.பி. 758-இல் அல்லது அதற்கும் பிறகே கடன்மல்லைப் பதிகங்கள் இரண்டில்ஒன்று பாடப்பட்டிருக்க வேண்டும். மாமல்லபுரம் அக்காலத்தேயே ஒரு சிறந்த கலைக் கூடமாகப் புகழ் பெற்றிருந்தபடியால், எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவில் ஆழ்வார் அவ் வூருக்கு விஜயம் செய்திருப்பார் என நாம் நம்பலாம். எனவே, இவருடைய கடன்மல்லை விஜயத்தை கி. பி.758-இல் நிகழ்ந்ததாகக் கொள்ள இடம் உண்டு.

கடன் மல்லைப் பதிகங்கள் இரண்டனுள் பின்னது கடற்கரையிற் காணும் (உலகப் புகழ் பெற்ற கோபுரங்கள் இரண்டிற்கும் இடைப்பட்ட மண்டபத்துள்) பள்ளிகொண்ட கோலத்துப் பெருமாளைப் பற்றிய தாதலை அய்யங்கார் அவர்கள் எடுத்துக் காட்டியுள்ளனர் (பக், 213).

பிணங்கள்இடு காடதனுள் நடமாடும் பிஞ்ஞகன் தன்னோடு
இணங்குதிருச் சக்கரத்(து) எம்பெரு மானார்க்கிடம் விசும்பில்
கணங்கள் இயங்கும் மல்லைக் கடன்மல்லைத் தல சயனம்
வணங்கு மனத்தார் அவரை வணங்கென்றன் மடநெஞ்சமே., -(பெரி.தி.2-6,9)

என்ற பாசுரத்தின் முதல் இரண்டு அடிகளில் திருமால் சிவ பிரானோடு சேர்ந்திருப்பதாகக் கூறப்பட்டிருப்பது போலவே, பெரிய கோபுரத்தின் கீழ் சிவலிங்கம் ஒன்று காணப்படுகிறது. இதன் மேல் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துக்களை வாசித்ததில் இது க்ஷத்திரிய சிகாமணிப் பல்லவேச்சுரத்தைச் சேர்ந்ததாகத் தெரிகிறது. இக் கோபுரக் கோயிலே இக் கோயிலும் ஆதல் இதனுள் சிவ பிரான் உமையம்மையோடு அமர்ந்த நிலையில் காணும்

புடைப்புச் சிற்பத்தாலும் (relief figure) உறுதிப்படுகின்றது. சிறிய கோபுரக் கோயிலின் உள்ளேயும் இம்மாதிரியான புடைப்புச் சிற்பம் இருப்பதால், இதுவும் ஓர் சிவாலயமே,44 ஜல சயனம் எனப்பட்ட பள்ளிகொண்ட பெருமாள் கோயி லின் உட்கோயில்களாக ராஜராஜசோழன் காலத்திய கல் வெட்டுக்களில் 45 கூறப்படும், ''க்ஷத்திரிய சிகாமணிப் பல்லவேச்சுரம்'', ''ராஜசிம்மேச்சுரம்'' ஆகிய இரண்டு சிவா லயங்களுள் ராஜ சிம்மேச்சுரம் இச்சிறிய கோபுரக் கோயிலே ஆதல் தெளிவு. எனவே, ஆழ்வாரின் 2-ஆம் பதிகத்துள் 'தலசயனம்' என்றுள்ள தொடர்களை எல்லாம் 'சலசயனம்' என மாற்றி அமைத்தார் அய்யங்கார் அவர்கள் (பக். 226.) ஆயினும், இதே பதிகத்தில்

''ஏனத்தின் உருவாகி நிலமங்கை எழில்கொண்டான்
வானத்தின் அவர்முறையால் மகிழ்ந்தேத்தி வலங்கொள்ள
கானத்தின் கடன்மல்லைத் தலசயனத் துறைகின்ற
ஞானத்தின் ஒளியுருவை நினைவாரென் நாயகரே''-

என்ற மூன்றாம் பாடல், இங்கே கூறப்பட்டுள்ளபடி நில மங்கையை (பூமி தேவியை) வலப் பக்கத்தில் கொண்டுள்ள ஆதி வராகர் கோயிலைக் குறிப்பதாகக் கருதப்படுகிறது. எனவே, பதிகத்திற் காணும் 'தலசயனம்'-என்ற தொடரை சலசயனம் என மாற்றிக்கொள்ளத் தேவையில்லை என்பது வெளிப்படை.

ஜல சயனப் பெருமாள் அடிகளை கடல் அலைகள் அலம்பக் கண்டதாக தண்டி தமது 'அவந்தி சுந்தரி கதை' யில் குறிப்பிட்டுள்ளதால், ராஜசிம்மன் அமைத்த மேற்படி சிவாலயங்களுக்கும் இச் சலசயனம் முற்பட்ட காலத்திய தாதல் காண்கிறோம். இச் சலசயனக் கோயில் நரபதி சிம்ம பல்லவ விஷ்ணு கிரகம் என்று இதிலுள்ள கல்வெட்டில்

---

44. மாமல்லை—நாகசாமி பக். 126&127.
45. S.I.I. Vol. I P. 64,67 (ராஜ ராஜனின் கல்வெட்டு)

சொல்லப்படுகின்றது.[46] இந் நரபதி சிம்ம பல்லவனை முத லாம் நரசிம்மவர்மன் ஆக நிருபதுங்கவர்மனின் சிற்றூர்ச் செப் பேடுகள் [47] கூறுகின்றன. இது முதலாம் நரசிம்மவர்மனின் ஆட்சித் தொடக்கத்திலேயே கட்டப்பட்டிருக்க வேண்டும் என்பர் அறிஞர் சவுந்தரராஜன் அவர்கள் [48]. எனவே, இதன் காலத்தை கி பி. 635 ஆக நாம் கொள்ளத் தகும். இவ் வகையில், இச் சல சயனமே தமிழகத்தின் முதல் கற்கோயில் ஆதல் குறிப்பிடத்தக்கது. ஆயினும், கருவறையில் உள்ள படிமம் மட்டும் அங்கிருந்த பாறையை அப்படியே செதுக்கிச் செய்யப்பட்டது.

*காஞ்சி விஜயம் III (கி பி. 756)*

ஆழ்வார் மூன்றாவதாகவும் ஓர் முறை காஞ்சிக்கு விஜயம் செய்தமைக்கும் சில குறிப்புகள் உண்டு. எல்லோரா தசாவதாரக் குகையிற் காணும் கல்வெட்டு ஒன்றில் [49] தந்தி துர்க்கன் காஞ்சியை கைப்பற்றியதாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால், கி.பி. 754-இல் வெளியான இவனுடைய 'சமன் காட்' செப்பேடுகளில் [50] இஃது இடம் பெறவில்லை. எனவே கி.பி. 754-இன் பிற்பகுதியில் அல்லது அதற்கும் பிறகே தந்திதுர்க்கன் காஞ்சியைக் கைப்பற்றியிருக்கக் காண் கிறோம். ஆயினும், தந்திதுர்க்கனின் நாட்டிற்கும், காஞ்சிக் கும் இடையில் சாளுக்கியப் பேரரசு பெயர் அளவிற்காகிலும் இருந்தமை கி. பி. 757-இல் இரண்டாம் கீர்த்திவர்மன் வெளி யிட்ட வக்கலேரிப் பட்டயத்தால் தெளியப்படுதலினாலும்

---

46. மேற்கோள் 44 பக். 127.
47. Studies in Medival Deccan History. (சிற்றூர் செப் பேடுகள்)
48. Trans. Archeol, Soc., S. India 1962-65, Section V, p. 176-9.
49. A.S.W.I, Vol. VI, p. 87 (Ellora Dasavatara caves). Also, E. C. Vol VII appendix p. 13.
50. I.A., XI. p. 112 (சமன்காட் செப்பேடுகள்)

இக் கி.பி. 757-இன் பிற்பகுதியிலேயே தந்திதுர்க்கன் காஞ்சியைக் கைப்பற்றியிருக்கக்கூடும் என்பது தெளிவாகின்றது. மூன்றாம் இந்திரனின் பெகும்பரா செப்பேடுகளில்[51] காஞ்சித் தாக்குதல் கடைசியிலேயே கூறப்பட்டு உண்மையும் இதனை அரண் செய்கின்றது.

கி.பி. 757-க்குப் பிறகு 'வல்லபர்' என்ற பெயர் ராஷ்டிர கூடரையே குறிக்கலாயிற்று. ராஷ்டிரகூட மன்னர் அனைவருமே பல்லவரை விட மிகுந்த பலசாலிகள். ஆகவே, 'வல்லவன், வில்லவன்'-என்ற அடியிற் குறிக்கப்பட்ட காலம் நிகழ்காலம் ஆதலில் இருந்து இந்தப் பதிகம் கி. பி. 757க்கு முன்பே பாடப்பட்டிருக்க வேண்டுமென்று தெரிகிறது. ஆயினும், பதிகத்தில் பல்லவன் பணியை 'முன நாள்' என ஆழ்வார் இறந்த காலத்தில் குறித்தலால், அவர் குடமுழுக்கிற்குப் பிறகும், ஆனால் கி.பி. 757-க்கு முன்னும் மூன்றாவதாக ஒரு முறை காஞ்சிக்கு வந்திருந்தபோது இப் பதிகத்தைப் பாடினார் ஆகக் கூடும். இது ஏறத்தாழ கி. பி. 756-இல் ஆகலாம். 'பண்டு', 'முனநாள்' என்பன மிகப் பழைய காலத்தை மட்டுமேயன்றி, இதற்கு மூன்று ஆண்டுகளே முற்பட்ட கி. பி. 753 போலும் மிகச் சமீபத்திய இறந்த காலத்தைக் குறித்தலும் மரபே.* இஃதறியாது 'பண்டு',

51. E.G. Vol IX p. 24, I.A. Vol XIII p. 66 (பெகும்பரா செப்பேடுகள்) p. 38. (translation of verse 6)

* 'பண்டு' என்ற சொல் சில ஆண்டுகட்கு முற்பட்ட நிகழ்ச்சிகளைக் குறித்தல், "பண்டும், பண்டும் பாடுநர் உவப்ப" (புறம் 151),

"பண்டும், பண்டும் கலங்கவிழ் மாக்களை உண்டேம்" (மணிமேகலை 8-18), 'பண்டறிகிளையொடு, பதியுங் காணாள்" (மணிமேகலை 8, 15), "பண்டு காமர் ஆனவாறும்" (பெரியதி.1,3,5), "பண்டிவன் ஆயன் நங்காய்"(பெரிய தி. 3,7,2), "வல்லேயுன் கட்டுரைகள் பண்டேயுன் வாயறிதும்" (திருப்பாவை, 15), "பண்டேஎரிமுன் உன்னைப் பாவி தேவியாகக் கொண்டேன்

'முனநாள்' என்ற சொற்களைக் கொண்டு திருமங்கை மன்னரை K.G. சங்கர் பிற்காலத்துக்குத் தள்ளுவது சரியல்ல. கி.பி. 756 அளவில் மதுரையில் மன்னவனாக இருந்தவன் முதலாம் ராஜசிம்மனே யாகலின், கருவூரில் வென்று கொள்ளப்பட்ட தென்னவனாக நிகழ்காலத்தில் ஆழ்வாரால் குறிப்பிடப்படும் பாண்டியன் இவனே ஆதலும் எண்ணத் தக்கது. இக் கருவூர்ப் போரின் காலமும் இவ்வகையில் கி.பி. 755 ஆகலாம்.

*நாகை விகாரக் கொள்ளை (கி.பி. 760)*

திருவரங்கப் பெருங்கோயில் பணிக்காக வென்று நாகையில் புத்த விகாரையில் இருந்த தங்கச் சிலையை கைப்பற்றிக்

---

அஃலேன்" (கம்ப ரா. நகர் நீங்கு. 48), என்பவற்றாலும், சில பல மாதங்கள், நாட்களுக்கு முற்பட்ட நிகழ்ச்சிகளைக் குறித்தல், "பண்டறியேன் கூற்றென் பதனை" (குறள், 1083), "நாணொடு நல்லாண்மை பண்டுடையேன்"(குறள்.1133)'பண்டும் பலபல வீங்கிருள் காண்டும்" (திருவிருத்தம், 49), "பண்டு இப் புனத்து......கண்டு இக் களிற்றை அறிவன் (யா.வி.சூ.), 'பண்டையில் சிறப்பால் (குறள், 1152, பரி) என்பவற்றாலும் அறிகிறோம். இங்ஙனமே, "முன்னும் தொழந் தோன்றி" (யா.வி.சூ), "வந்தணங்கா மன்னர் தேய முன்னாள்" (இறை, கள. மேற்கோள் 156), "முன்னாள் முறைமையின் ......அல்லிடைப் பெயர்ந்தனர்" (சிலப். 13, 135-6), "முன்னொரு கால் என்மகளைக் கண்டேன் என்கண் குளிர" (சீவக. சி. 1807) என்றாற் போலும் இடங்களில் முன்னாள், முனநாள் எனுஞ்சொற்கள் சமீபத்திய இறந்த காலத்தைச் சுட்டவும் வந்துள்ளன. "பகடுவந்தார் அன்றவிய .....வேல்கொண்ட கோன்" (இறை. கள. மேற்கோள் 158), "அன்று நீ செல்லக் கிட வென்றாய்" (தமிழ் நர்வலர் சரிதை, பொய்யா மொழியார் பாட்டு) என்ற விடத்து "அன்று"-என்பது இங்ஙனமே வழங்கப்பட்டுள்ளது. (ஆழ்வார்கள் காலநிலை, 4-ஆம் பதிப்பு. பக் 155-6).

கொண்டு வந்தார் ஆழ்வார் என்று ஒரு வரலாறு வழங்கு கிறது. ஆழ்வாரின் வரலாற்றை விரிவுபடுத்தவும், சுவை ஏற்றவும் இக்கதை புனையப்பட்ட தாகலாம் என்று ஒரு கருத்தை அந்தக் காலத்தேயே ஆசிரியர் ராகவையங்கார் அவர்கள் தமது ஆழ்வார்கள் காலநிலையில் குறித்துள்ளனர். (பக் 228). கொள்ளை அடித்தலை இவர் தலையில் சுமத்திய பண்டையோர் கோயில் கட்டுவதற்கான பணத்தைத் திரட் டவும் இதனையே காட்டிவிட்டிருக்கலாம். அவர்கள் அங் ஙனம் செய்யாமையால், புத்த விகாரக் கொள்ளையை முழுக் கவும் கற்பனையாகத் தள்ளி விடுவதற்கில்லை. ஆயினும், அரும்பாடுபட்டு பலவழிகளிலும் பொருள் திரட்டினார் ஆழ் வார் என்று காட்டவேண்டி இக் கதை புனையப் பட்டிருக் கலாம் என்பது அறிஞர் பி. ஸ்ரீ அவர்களின்[53] நம்பிக்கை. கோயிற்பணி அமுது படையலைப் போல் அன்றி பல மடங்கு பெரியதாகையால், இதற்கு சிறு, சிறு கொள்ளைப் பொருள் போதிய தாகாமை தெளிவு. எனவே, முற்றிலும் தங்கத்தா லான சிலையை ஒரே தடவையாகக் கொள்ளையிட வேண்டிய தேவை இவருக்கு இருந்திருக்கக்கூடியதில் வியப் புற ஒன்றுமே இல்லை. தோற்றவர் நாட்டை இரக்கம் இல்லாமலே அழித்துக் கொள்ளையிடும் படைஞராய் இருந்து பழக்கப்பட்ட இவருக்கு இஃது இயல்பாகவே கைவந்த சரக் குங்கூட. சிலையின் முன் சுழன்ற சக்கரப்பொறியை நிறுவிய கருமான் வசித்த இலங்கைக்குப் போய் அதனை நிறுத்தும் வழியைத் தந்திரமாக அறிந்து கொண்டு ஒரு கப்பலில் மீண்டதாகவும், அப்போதும் அக் கப்பலில் இருந்த பாக்கிலும் பாதிப் பங்கைத் தந்திரமாகப் பெற்றார்கள் ஆழ் வாரின் சீடர்கள் என்றும் எல்லாம் திட்டவட்டமாகக் கூறப் படும் செய்திகளைத் தள்ளி விடுவதற்கில்லை. புத்த விகா ரையில் சக்கரப் பொறியை நிறுவியவன் ஆழ்வார் காலத்தே உயிரோடிருந்தான் என்று கூறப்படுவதிலிருந்து, இக் கொள் ளைக்கு 20-30 ஆண்டுகளுக்கு முன்னமேயே அப்பொறி

53. 'காதலால் கதிபெற்றவர்'-பி. ஸ்ரீ. பக். 41




Plan of the great Temple, Srirangam (from History of Indian and Eastern Architecture by Ferg usson)

அமைக்கப்பட்டிருக்க வேண்டுமெனத் தெரிகிறது. இதற்கேற்ப கி.பி. 720-இல் நாகையில் ஒரு விகாரம் கட்டப்பட்டதாக சீனச் செய்தி ஒன்று கூறுகிறது.[54] கி.பி. 1272-இல் மார்க்கோபோலோவும், கி.பி. 1725-இல் வாலெண்டினும் நாகையில் 'சீனாக் கோயில்' இருந்ததாகக் குறித்துள்ளனர்.

*திருவரங்கத்தில் பணி (கி. பி. 760 70)*

ஆழ்வாரது பெரும்பணிகளுள் ஒன்று திருவரங்கப் பெருங்கோயில் பணி. அறிஞர் ஹரிராவின் கோயிலொழுகு ஆங்கில மொழி பெயர்ப்பில் பதினொரு பணிகள் குறிக்கப் பட்டுள்ளன.

I. ராஜ மகேந்திரன் திருவீதியின் (II-ஆம் சுற்று) தென் மேற்கு மூலையில் அத்யயன விழாவிற்காக ஒரு நூற்றுக் கால் மண்டபம்.

II. குலசேகரன் திருவீதியின் திருமதிலும் தெற்கு, வடக்கு கோபுரங்களும்.

III. இவ்வீதியின் தென்மேற்கு மூலையில் ஒரு மண்டபமும், உலா வர ஒரு நடைபாதையும்.

IV. தென்கிழக்கில் ஒரு மடைப் பள்ளி.

V. நான்காம் திருவீதியின் மதில் (தெற்கு வடக்குக் கோபுரங்களுடன்).

VI. இந் நான்காம் திருச்சுற்றின் வடக்குக் கோபுரத்தில் கோயில் கொண்ட எடுத்தகை அழகிய சிங்க நயினாருக்குக் கோயிலும், விமானமும்.

VII. இதே திருச்சுற்றின் தென்மேற்கு மூலையில் 'கருவுகலம்' எனப்பட்ட சரக்கறை.

VIII. இதற்கு வடக்கில் ஒரு தானியக் களஞ்சியம். (திருக்கொட்டாரம்).

---

54. 'பவுத்தமும் தமிழும்' பக். 47 & 49.

IX. தெற்கு-வடக்கில் நீண்ட ஒரு உலாப் பாதை.

X. சந்திர புஷ்கரணி (குளம்)யில் இருந்து தொடங்கி 'வெளியழகியான்' (திறந்த வெளி முற்றம்) வரை ஒரு பெரும் பாதை (திருநடைமாளிகை) என்பன இவற்றுள் பத்து.

XI. கொள்ளிடக் கரையில் 'பாடியவாளன் துறை' என்றொரு படித்துறையையும், அதன் அருகே ஒரு கோயிலையும் கட்டி உள்ளே தசாவதாரச் சிலைகளையும், தம்முடைய படிமம் ஒன்றையும் பிரதிட்டை செய்ததே இவருடைய கடைசித் திருப்பணி.

இவரது தசாவதாரப் பதிகம் (பெரிய. தி. 11-4) இந்த சமயத்தில் பாடப்பெற்ற தாகலாம். மூன்றாம் திருச்சுற்றின் மதிலையும், நான்காம் திருச்சுற்றின் மதிலையும் கட்டி இவற்றுக்கு இடைப்பட்ட நான்காம் திருச்சுற்றை இவர் புதி தாகத் தோற்றுவித்தபடியால், இதற்கு 'ஆலிநாடன் திருவீதி' என்று பெயராயிற்று.

நான்காம் திருச்சுற்றின் வெளிமதிலைக் கட்டியபோது சந்திர புஷ்கரணிக் கரையில் இருந்த தொண்டரடிப்பொடி ஆழ்வாரின் பூஞ்சோலை குறுக்கிட்டதாக, அதனை விட்டு விட்டு சற்றே தள்ளி தமது மதிலை திருமங்கை ஆழ்வார் அமைத்தனர். (படம் 2 காண்க) அது கண்டு களிகூர்ந்த தொண்டரடிப்பொடிகள் தமது திருமாலை கொய்கிறஆயுதத் துக்கு 'அருள்மாரி' எனப் பெயரிட்டு ஆலிநாடரைச் சிறப் பித்தனர் என்று குருபரம்பரைகளிற் காணும் வரலாற்றைக் கோயிலொழுகுவும் கூறுகின்றது. தொண்டரடிப் பொடிகள் காலம் கி.பி. 667-772. எனவே, ஆலிநாடரின் திருப் பணிகளின் பெரும்பாகம் கி.பி. 770க்கு உட்பட்டனவே ஆகல் வேண்டும். திருமங்கை மன்னர் காலத்திய தமிழ கத்து மன்ன ரெல்லாம் வைணவர்களாகவே இருந்தும் இவர்களில் எவருடைய திருப்பணியும் திருவரங்கத்தில் காணப்படவே இல்லை. இதிலிருந்து இவர்கள் எல்லோருமே இப் பணியை ஆழ்வாருக்கே விட்டு விட்டமையை எளிதில்

ஊகிக்கலாம். எனவே, நாகை விகாரையில் இருந்த தங்கச் சிலையைக் கைப்பற்றியது உண்மை ஆகில், இது திருப்பணி களைத் தொடங்கு நாளில் இயற்றப்பட்ட தாகவே கொள்ள வேண்டும். பணிகள் கணிசமான அளவு முன்னேறிய பிறகு மற்றைய மன்னர்களும் ஆழ்வாருக்கு நிரம்பப் பொருள் உதவி செய்திருப்பர் என நாம் நிச்சயமாக நம்பலாம்.

மேலே பத்தாவதாகக் குறிப்பிடப்பட்ட பணியைப் பற்றியும் ஒரு வரலாறு உண்டு. ஆண்டு தோறும் திருமஞ் சனக்குளிவிழா ஒன்று நடப்பது வழக்கம். ஒருசமயம் ஏதோ ஒரு காரணத்தால் அதற்குப் பெருமாளை எடுத்துச்செல்லக் கூடவில்லை. அவ்யாண்டு, ''நம் கலியனை மஞ்சனைக் குளி உத்ஸவம் பண்ணிவைத்து கொண்டுவாருங்கோள்'' என்று பெருமாள் தமது பரிஜநங்களுக்கு 'அருளப்பாடு' (ஆணை) இட்டாரம். அது முதல் அவ்விழா திருமங்கை மன்னருக்கே நடைபெற்று வருகின்றது. இதற்காகவென்றே திருக்குளமாகிய 'சந்திர புஷ்கரணி'யிலிருந்தே ஆழ்வார் 'வெளியழகியான்' வாசல் வரை ஒரு பெரும் திருநடை மாளிகை அமைத்தார்.

இன்னொருகால், ஆழ்வார் திருநெடும் தாண்டகம் போலும் தமது செந்தமிழ் காதற் பனுவல்களை தேவ கானத்தில் அமைத்து மெய்ம்மறந்து பாடி, மிடறு நொந்து இருந்தனர். அது கண்ட பெருமாள் ''இக் கலியன் மிடறு நொந்தது; இன்று சாத்தியிருந்த தைலக் காப்பை அவர் மிடற்றிலே தடவுங்கோள்''-என்று பரிஜநங்களை நியமித்தா ராம். பரிகரமும் அப்படியே செய்ய, திருமங்கை மன்னரும் கிருதார்த்தராய் (நிரம்பிய மனத்தராய்) தம்மிடத்துக்கு எழுந் தருளினார் என்று கோயிலொழுகு கூறுகின்றது.

## *திருச் சித்ர கூடமும், திருவல்லிக்கேணியும் (கி.பி 785)*

**திருமங்கையின் வாக்கிலிருந்து திருச்சித்ரகூடம், மற்றும் திருவல்லிக்கேணி பற்றியும் சில செய்திகளை அறியலாம்.**

திருமழிசைப்பிரான் காலத்தே தில்லை நடேசப்பெருமானின் திருக்கோயிலில் திருமாலுக்கு இந்நாள் காணப்படும் உட் கோயில் இல்லை என்று முன்னமே கூறப்பட்டது. அப்பரும், சம்பந்தரும் கூட தம் காலத்தில் அப்படி ஏதும் இருந்த தாகக்குறிக்கவில்லை. எனவே,

"பைம்பொன்னும், முத்தும், மணியும் கொணர்ந்து
படைமன்னவன் பல்லவர்கோன் பணிந்த
செம்பொன் மணிமாடங்கள் சூழ்கின்ற தில்லைத்
திருச்சித்ர கூடம்"-(பெரிய திரு. 3-2, 3) என்று

திருமங்கை மன்னர் பாடுவது பல்லவன் ஒருவனால் இவ் உட்கோயில் புதிதாய் அமைக்கப்பட்டதைக் குறிப்பதாகவே நம்பப்படுகின்றது[55]. சித்+அம்பலமே சிற்றம்பலம் எனப் புணர்வதாலும், 'த்' வடமொழியில் 'த்ர' எனத் திரிதல் வழக்காதலாலும், சிற்றம்பலமே வைணவ வழக்கில் சித்ர கூடம் ஆய்விட்டிருக்க வேண்டும். அம்பலமும், கூடமும் ஏறத்தாழ ஒரு பொருட் சொற்கள். இனி, இத் திருச்சித்ர கூடத்தைப் பற்றிய பதிகங்கள் இரண்டு. இரண்டாவதை இக்கோயிலின் குடமுழுக்கின் போதும், முதலாவதை தீர்த்த யாத்திரையாகத் தில்லைக்குவந்தபோதும்ஆழ்வார்பாடினார் எனக் கொள்ளலாம். நமது கொள்கைப்படி தீர்த்தயாத்திரை கி.பி. 785-790க்கு இடைப்பட்ட தாகையால், இக் கோயி லைச் சமைத்தவன் நந்திவர்ம பல்லவனே ஆகக்கூடும். திருமங்கை ஆழ்வாரின் பெரிய திருமடல் 124-ஆம் கண்ணி யிலும் திருச்சித்திரகூடம் குறிப்பிடப்பட்டுள்ளது. முத்தும் கொணர்ந்து இக் கோயிலைச் சமைத்தான் என்பதால், பாண்டியனை வென்று கொண்டபின் பல்லவமல்லன் இக் கோயிலை அமைத்திருக்கலாம் என்பர் அய்யங்கார் (பக். 199-200). இக் காலம் கி.பி. 785 அளவில் ஆகக்கூடும். ஏனெனில், கி.பி. 767-இல் அரியணை ஏறியதிலிருந்து பாண்டியன் நெடுஞ்சடையன் பராந்தகன் பல்லவ மல்ல னைப் பலமுறை புறங்கண்டதை வேள்விக்குடி மற்றும் சீவரமங்கலச் செப்பேடுகளால் அறிகிறோம். சீவரமங்கலச்

55. 'கால ஆராய்ச்சி' பக். 179

செப்பேடுகள் நெடுஞ்சடையன் பராந்தகனின் 17-ஆம் ஆட்சி ஆண்டிற்குச் சமமான கி.பி. 784-இல் வெளியிடப் பட்டவை. தந்தியின் ஆட்சித் தொடக்கத்திலேயே சோணாடும், கொங்கும் பாண்டியர் பிடியிலிருந்து விடுபட்டு பல்லவர் கைக்கு மாறிவிட்டதாகத் தெரிதலால் இரண்டாம் நந்தியின் காலத்தேயே இவ்வெற்றி கிட்டியிருக்க வேண்டும். எனவேயே, சித்ர கூடப் பதிகத்திற் காணும் பாண்டிப் போருக்கு கி.பி. 785 உகந்த காலமாகக் கொள்ளப்பட்டது.

அடுத்து, பல்லவனால் திருவல்லிக்கேணி ஆலயமும் பணி செய்யப் பெற்றதை

"மன்னுதண் பொழிலும் வாவியும், மதிலும்,
மாட மாளிகையும், மண்டபமும்
தென்னன் தொண்டையர்கோன் செய்த
நன்மயிலை
திருவல்லிக்கேணி"- (பெரிய திரு. 2 4,10)

என்ற அடிகளால் அறிகிறோம். பேயார் அந்தாதியின் 16ஆம் பாசுரத்திலும், நான்முகன் திருவந்தாதியின் 35-ஆம் பாசுரத்திலும் அல்லிக்கேணி குறிப்பிடப்பட்டிருப்பதால் மேலைப்பாடலில் குறிப்பிடப்பட்டிருப்பது திருவல்லிக்கேணி ஆலயம் புதுபிக்கப்பட்டதையே ஆதல் தெளிவு. திருச் சித்ர கூடப் பதிகத்திற் போலவே இங்கும் புதுப்பித்த பல்லவனின் அருஞ்செயல் ஒன்றும் கூறப்படாமை நோக்கத் தக்கது. இவன் இவரால் ஏனை இடங்களில் குறிப்பிடப்பட்ட வனின் வேறானவன் ஆகில், ஆழ்வார் இவ் வேற்றுமை தெரியும்படியே குறிப்பிட்டிருப்பார். அவர் அங்ஙனம் செய்யக் காணாமையால், இந்த அருஞ்செயலையும் நாம் நந்திவர்ம னுடைய தாகவே கொள்ளலாம். திருவல்லிக் கேணி ஆலயத்துக் கல்வெட்டுக்களில் முந்தியது தந்தியின் 12-ஆம் ஆட்சி ஆண்டுக் கல்வெட்டே[56] ஆதல் இவ் ஆலயம்

56. S.I.I. Vol. 7 no. 36 (12th yr. of Danti, Tiruvallikeni) & Ep. Rep. 323-4 of 1903 7 s.

இவனாலேயோ அல்லது இவன் தந்தையாலேயோ புதுப்பிக்கப்பட்டதைக் குறிக்கின்றது. சாஸனப் போக்கு தந்திக்கு முன்பே இக்கோயில் எல்லாப் பணிகளும் நிரம்பியிருந்ததைக் காட்டுகின்றது என்பர் அய்யங்கார் அவர்கள்(பக் 201). ஆழ்வாரின் அல்லிக்கேணி பதிகத்தில் தொண்டையர் கோன் ஆன பல்லவன் 'தென்னவன்' எனவும் கூறப்படலால், பல்லவமல்லன் பாண்டியனை வென்று வந்தபிறகே திருவல்லிக்கேணிக் கோயிலையும் புதுப்பித்தான் என்னலாம்[57]. இவ்விளக்கம் அறிஞர் வரதராஜையர் (பக்.399) கருத்தைப் பின்பற்றியது. எனவே, இப் பணியின் காலமும் கி.பி. 785-ஏ ஆகக்கூடும்.

*தல யாத்திரை (கி.பி. 785-90)*

ஆழ்வார் தலயாத்திரையுங் கூட ஓர் அரும்பணியே. ஏனெனில், சைவம் இப்போதுள்ள நன்னிலைக்குக் காரணம் சம்பந்தரும், அப்பரும், சுந்தரரும் நாடெங்கிலும் உள்ள தலங்களுக்குச்சென்று அமிழ்தினும் இனிய பதிகங்களால் சிவபெருமானைப் பாடிப் பரவி மக்கள் மனத்தில் பக்திக்கனலையேற்றியதே எனில் அது மிகை ஆகாது. ஆழ்வார்கள் பக்கலில் இந்தக் குறையை திருமங்கை மன்னரே ஓரளவிற்கு ஆகிலும் தீர்த்து வைத்தார். எண்ணிக்கையில் அதிகமும், அழகு தமிழ்ச்சுவை சொட்டுவதும் ஆன பாடல்களைப் பாடியதோடன்றி அதிகமான பதிகளுக்கு நேரிற் சென்றும் பாடியுள்ளார். இமயத்து வதரியிலிருந்து, குமரிப் பக்கத்து குறுங்குடி வரை சுமார் 85 தலங்கள் இவரால் பாடப்பட்டுள்ளன. இவற்றுள் தல யாத்திரை செய்ததை கி.பி. 785க்கு மேல் எனக் கொள்ளலாம். ஏனெனில், வதரிப் பதிகத்திலும், நறையூர்ப் பதிகத்திலும் இவர் முதுமை எய்திவிட்டிருந்தமை நன்கு புலனாகிறது. மதுரைக்கு அருகிலுள்ள யானைமலைச் சரிவில் கி.பி. 770 அளவில் அமைக்கப்பட்ட நரசிங்கப் பெருமாள் ஆலயத்தை இவர் பாடாததால், பாண்டி நாட்டுத் தல யாத்திரை கி.பி. 770-க்கு முன்பே முடிந்து விட்டிருக்கலாம் எனக்

57. இலக்கிய சாஸன வழக்காறுகள் பக். 107.

கோபிநாதராவ் கருதினார். வாதமுறைப்படி இது சரியானதே ஆனாலும், உண்மை அன்று. இவ் வாதத்தின் துணை கொண்டு ஆழ்வார்கள் காலத்தை நிர்ணயிக்கப் புகுந்தால், குழப்பந்தான் மிஞ்சும்; எந்த வித முடிவிற்கும் வர இயலாது. இவர் பாடிய 84 தலங்களுள் திருவேங்கடத்தையும் உள்ளிட்ட 75 (மலை நாட்டையும் உள்ளடக்கிய) அக்காலத் தமிழ் நாட்டின. இவ் எழுபத்தைந்து தலங்களுள் 47 முழுப் பதிகம் பெற்றன; 28 குறிப்பு மட்டுமே உடையவை. மழிசைப்பிரானால் பாடப்பட்ட அன்பிலையும், கவித் தலத்தையும், பெரியாழ்வாரும், ஆண்டாளும் பாடிய வில்லி புத்தூரையும் இவர் பாடாதது பெரியதோர் வியப்பே புதி தாக இவர் 51 தலங்களைப் பாடியுண்மை குறிப்பிடத்தக்கது. நடுநாட்டுத் திருவயிந்திபுரமும், பாண்டி நாட்டுப் புல்லாணி, மெய்யம், மோகூர் என்னும் மூன்றும், மலைநாட்டு நாவாய், புலியூர், மூழிக்களம், வல்லவாழ் ஆகிய நான்கும் இவற்றுள் அடங்கும். இவரால் பாடப்பட்ட பன்னிரண்டு தொண்டை நாட்டுத் தலங்களையும், முப்பத்தொன்று சோணாட்டுத் தலங்களையும் அட்டவணை 5-2இல் காணலாம் சோணாட் டுத்தலங்கள் நாற்பதில் முப்பத்தெட்டைப் பாடியுள்ள இவர் மழிசைப்பிரானால் பாடப்பட்ட கவித்தலத்தையும், அன்பிலையும் மட்டும் ஏன் விட்டொழித்தார் என்பது விளங்கவில்லை. அக் காலத்தே இருந்து, இவரால் பாடப் படாமல் விடப்பட்ட தலங்களும் பல உண்டு. மதுரைக் கடுத்த ஆனைமலை நரசிங்கப்பெருமாள் ஆலயம் இவற்றுள் ஒன்றாதல் மேலே காட்டப்பட்டது. கொங்கு நாட்டுப்பேரூரில் நெடுஞ்சடையன் அமைத்த கோயில், பல்லவ மல்லனால் உத்திரமல்லூரில் கட்டப் பெற்ற சுந்தரவரதப் பெருமாள் கோயில், மற்றும் கோவர்த்தனப் பெருமாள் கோயில் கூரத் தில் அமைக்கப்பட்ட கேசவப் பெருமாள் கோயில், என்பன இன்னும் சில. இவரால் புதிதாகச் சேர்க்கப்பட்ட 31 சோ ணாட்டுத் தலங்களுள் ஐந்து வெறும் குறிப்பு மட்டுமே பெற் றவை. முழுப் பதிகம் பெற்ற ஏனை இருபத்தாறுள் பதி னொன்று நாங்கூர் நாட்டின; இவற்றுள் ஆறு இக்காலத்திய

நாங்கூர் ஊருக்குள்ளேயே உள்ளன. இங்ஙனமே, இவரால் புதிதாகப் பாடப்பட்ட தொண்டை நாட்டுப் பதிகள் பன்னிரண்டில் எட்டு காஞ்சியிலேயே இருப்பவை. இவ் எட்டில் காரகம், கார்வானம், நீரகம் என்று மூன்றும் ஊரகத்தின் உட்கோயில்களுங் கூட. இங்ஙனமே கள்வனூர் காமகோட்டத்தின் உடையவும், நிலாத்திங்கள் துண்டம் ஏகம்பத்தின் உடையவும் உட்கோயில்கள் ஆகும். கடன்மல்லையைப் பற்றிய இரண்டு பதிகங்களுள் இரண்டாவதன் மூன்றாம் பாடல் ஆதிவராகர் கோயிலையும், ஒன்பதாம் செய்யுள் ஜலசயனக்கோயிலையும் பற்றியனவாதலால்; இப்பதிகத்தை சலசயனப் பதிகம் ஆக ராகவையங்கார் அவர்கள் கருதியதைக் காட்டிலும், உள்ளபடி தலசயனப் பதிகம் ஆகவே கொண்டு, ஆழ்வார் இரண்டாம் முறையாக கடன்மல்லைக்கு எழுந்தருளிய போது இயற்றிய தாகக் கோடலே பொருத்தம். இந்த இரண்டாவது விஜயத்தை தல யாத்திரைக் காலத்தில் ஆகக் கொள்ளலாம், இங்ஙனமே, இரண்டு திருச்சித்ரகூடப் பதிகங்களுள் இரண்டாவதை குட முழுக்கின் போதும்; முதலாவதை தலயாத்திரையாக இத் திருப்பதிக்கு வந்த போதும் பாடினார் ஆழ்வார் என நாம் முன்னமே கொண்டது இங்கு எண்ணத் தக்கது.

## அட்டவணை 5.1

## திருமங்கை ஆழ்வாரால் குறிப்பு மட்டும் பெற்றவை (28)

*தொண்டை நாடு (15)* *சோணாட்டின (46)*

1. கச்சி அத்தியூர்
2. கச்சி ஊரகம்
3. கச்சிஊரகத்துள் காரகம்★
4. க. ஊ. கார்வானம்★
5. க. ஊ. நீரகம்★
6. க. காமகோட்டத்துள் கள்வனூர்★
7. க. தண்கா★
8. க. ஏகம்பத்துள் நிலாத் திங்கள் துண்டம்★
9. கச்சி பவளவண்ணம்★
10. கச்சி பாடகம்
11. கச்சி வெஃகா
12. கச்சி வேளுக்கை

13. கடிகை
14. நின்றவூர்★
15. புட்குழி★
16. ஆதனூர்★
17. கண்டியூர்★
18. கரம்பனூர்★
19. கோழி (உறையூர்)★
20. தஞ்சை
21. தலைச் சங்க நாண்மதியம்★

பாண்டிப்பதிகள் (4)

22. கூடல் (மதுரை)
23. தண்கால்
24. மெய்யம்★
25. மோகூர்★

மலை நாட்டின (3)

26. நாவாய்★
27. புலியூர்★
28. மூழிக்களம்★

## அட்டவணை 5.2

## திருமங்கையின் பதிகம் பெற்றவை (47)

தொண்டை நாடு (8)

1. வேங்கடம்
2. எவ்வுள்★
3. நீர்மலை
4. அல்லிக் கேணி
5. இடவெந்தை★
6. கடன்மல்லை
7 கச்சி அட்ட புயக்கரம்
8. கச்சி பரமேச்சுர விண்ணகரம்★

நடு நாடு (2)

9. கோவலூர்
10. அயிந்திரபுரம்★ (நடு

சோணாடு (32)

11. சித்ரகூடம்★
12. காழி. சீ. விண்ணகரம்★
13. ஆலி★

நாங்கூர்ப்பதிகள் 11 [14-24]

14. மணிமாடக் கோயில்
15. வைகுந்த விண்ணகரம்
16. அரிமேய விண்ணகரம்
17. தேவனார்த்தொகை
18. வண்புருடோத்தமம்
19. செம்பொன்செய்கோயில்
20. தெற்றியபலம்
21. மணிக்கூடம்
22. காவளம்பாடி
23. வெள்ளக்குளம்
24. பார்த்தன்பள்ளி
25. இந்தளூர்★
26. அழுந்தூர்★
27., வெள்ளியங்குடி★
28. விண்ணகர்
29. குடந்தை
30. புள்ளம்பூதங்குடி★

31. நந்திபுர விண்ணகரம்★
32. நறையூர்★
33. சேறை★
34. சிறுபுலியூர்★
35. கண்ணபுரம்
36. கண்ணமங்கை★
37. கண்ணங்குடி★
38. நாகை★
39. கூடலூர்★
40. பேர்நகர்
41. வெள்ளறை
42. அரங்கம்

பாண்டிநாடு 4

43. கோட்டியூர்
44. மாவிருஞ்சோலை
45. புல்லாணி★
46. குறுங்குடி

மலைநாடு 1

47. வல்லவாழ்★

குறிப்பு : உடுக்குறி (*) யுடன் காட்டப்பெற்ற 51-உம் திருமங்கை மன்னரால் புதிதாகப் பாடப்பட்டன.

கைம்மையும், ஓய்வும்

சிறந்த பாகவத சிரோன்மணி ஆகிய தந்திவர்மனைப் பற்றிய குறிப்பு எதுவும் இவர் திருவாக்கில் இல்லை. எனவே, இவர் கி.பி. 795 அளவில் ஓய்வு பெற்றுவிட்டனராதல் தெளிவு. இங்ஙனம் இவரை 25 ஆண்டுகளுக்கும் மேலாக ஓய்வு பெறச் செய்துவிட்டது திண்ணமாய் ஒரு மீளாத் துயரமாகவே இருக்கவேண்டும். அது என்ன? இவரை இயக்கி வந்த குமுதவல்லி என்னும் மகாசக்தியின் மரணமே என திவ்யசூரி சரிதம் கூறுவதில் உண்மை இருக்கக்கூடும். விப்ரநாராயணரின் பெருந்திணைக் காமத்தையோ, கோதை நாச்சியாரின் கைக்கிளைக் காமத்தையோ போலாது, திருமங்கை மன்னர்-குமுதவல்லித் தம்பதிகளின் காதல் அன்பின் ஐந்திணையின் பாற்பட்டதைத் தமிழுலகம் நன்கறியும். மும்தாஜை இழந்த ஷாஜஹானைப் போல் குமுதவல்லியாரை நினைத்து ஆழ்வார் கைம்மை நோன்பு நோற்றார் ஆகலாம். ஆண்டாளின் ஆற்றாமையை மனத்துன்னி, பெண்களும் மடலூர்வதை, தமது இரு திருமடல்களிலும் சிலாகித்த திருமங்கை மன்னர்

ஆகிய ஆடவர்திலகரே கைம்மை நோன்பு நோற்க நேர்ந்தது விதியின் பயனே!

ஆழ்வார் திருநாடு அலங்கரித்தது நாட்டின் தென் கோடியில் உள்ள குறுங்குடியில் என்று திவ்யசூரி மேலும் கூறுகின்றது. வடிவழகிய நம்பிதாசர் இதனையே சற்று விரிவாக பாண்டி நாட்டுக்கு யாத்திரையாக வந்த ஆழ்வார் குறுங்குடி உற்றபோது அங்கேயே தங்கியிருந்து இயற்கை எய்தினார் என்று பாடியுள்ளார். வடக்கிலிருந்து புறப்படும் ஒரு யாத்ரீகன் காணக்கூடும் வரிசையில் பெரிய திருமொழி யில் தலங்கள் முறைப்படுத்தப்பட்டிருப்பதைப் பயன்படுத்திக் கொண்டு வடிவழகிய நம்பிதாசர் தம் செய்யுளைச் செய் திருக்கிறார். திருமங்கை குறிப்பிட்டும் கூறாதனவும், நம் மாழ்வார் பாடலால் மட்டுமே சிறப்புற்றனவும் ஆகிய பதிகளுக்கெல்லாமும் திருமங்கை மன்னர் சென்றதாக இவர் சித்தரித்திருப்பதிலிருந்து இது தெளிவாகிறது. கோதை நாச்சியார் திருமாலிருஞ் சோலைப் பெருமானிடம் வேண்டிக் கொண்டதை ராமானுஜர் தலைக்காட்டிய வாறு போல, 'குறுங்குடிக் கென்னை உய்த்திடுமின்'-என திருமங்கை மன்னர் பாடியதற்கேற்ப (பெரிய. 9–5) கருட வாகன பண்டிதர் அக் குறுங்குடிக்கே ஆழ்வாரை உய்த்து அங்கேயே அவருக்கு இறுதியும் கட்டிவிட்டார்! ஆனால், திருமங்கையின் பாட்டோ, 'மதுரைப் புறத்தென்னை உய்த் திடுமின்'-என்று காமம் கைமிக்கு நாச்சியார் பாடிய மரபின் வழிச் செய்யப்பட்டதேயன்றி வேறில்லை. எனவே, ஆறா யிரப்படியும், மூவாயிரப்படியும் கூறாத குறுங்குடிச் செய்தி வெறுங் கற்பனையே.

## திருவாய்மொழி ஓத ஏற்பாடு (கி.பி. 820)

திருமங்கை மன்னர் திருவரங்கத்தில் திருவாய்மொழியை அத்யயனம் செய்ய (ஓத) ஏற்பாடு செய்தார் என்று ஒரு செய்தி கோயிலொழுகிலும், மூவாயிரப்படியிலும் கூறப் படுகிறது. திருவாய்மொழி கி.பி. 819-இல் பாடி முடிக்கப் பட்டமை கடைசி அதிகாரத்தில் காட்டப்பெறும். எனவே,

திருமங்கை மன்னர் ஏற்பாடு செய்ததை கி.பி. 820 அளவில் எனக் கொள்ளலாம். பப்ப பட்டாரகர் ஆகிய திருமங்கை மன்னர் தமக்குப் பிறகு இப் பதத்துக்கு நம்மாழ்வாரை நியமனம் செய்தது இவ் விழாவிலேயே ஆதலால்,* இது வைணவ வரலாற்றில் சிறப்பிடம் பெறுவதும் ஆகும்.

திருமங்கை ஆழ்வார் அருளிய பிரபந்தங்கள் ஆறு. இவற்றை நம்மாழ்வாரின் நான்கு பிரபந்தங்களாகிய வேதங்களுக்குத் துணையாய் அமைந்த ஆறங்கங்களாகக் கோடல் மரபு. இது நாலு, ஆறு என்ற எண்ணிக்கை பற்றியே. ஆயினும், திருக்குறுந்தாண்டகத்தையும் (திருமாலை அடிகள் இரண்டைக் கொண்டிருப்பதால்), பெரிய திருமடலையும் (கி.பி. 785-இல் எழுந்த சித்ரகூடத்தைக் குறிப்பிடுவதால்) இவர் கி.பி. 820-க்கு மேல் செய்திருக்கக் கூடியதை இது சுட்டுவதாகலாம். இவரின் ஆறு பனுவல்களும், ஆசு, மதுரம், சித்திரம், விஸ்தாரம் என நான்கு வகைப் படும். இது பற்றி இவருக்கு 'நாலு கவிப் பெருமாள்' என்ற விருதும் இருந்தது. ஆசுகவி ஆகிய பெரிய திருமொழியும், மதுரகவி ஆகிய இரண்டு திருத்தாண்டங்களும் இசைப்பா ஆகும். சித்திரத் திருவெழுக் கூற்றிருக்கையும், விஸ்தார வகைத் திருமடல்கள் இரண்டும் இயற் பாக்கள். பெரிய திருமொழியின் தசாவதாரப் பதிகம் (பெரி.தி. 11-4) திருமால் பெருமை பேசும் அரிய சிறுகாப்பியம். நெடுந்தாண்டகத்தை நெஞ்சை அள்ளும் நெடுந்தாண்டகம் என மிகச் சுருக்கமாகவே விமர்சித்து விடலாம். இரண்டு திருமடல்களும் ஏக்கம் பொறாத நிலையில் மணமகளே வரையும் புதுவகை மடல்களே. 'தமிழ்ச் சுவை கொழுமித் துலங்கும் பெரிய திருமடல்' என்பர் மறைமலை அடிகள் (பக். 535). திருச்சாழல் (பெ.தி. 11-5) மாணிக்கவாசகரால் பின்பற்றப் பட்ட பெருமை படைத்தது. நாராயண நாமப்பதிகம் வைணவத்தின் நமச்சிவாயப் பதிகமே. மங்கை மன்னர்

---

* இவை கடைசி அதிகாரத்தில் விளக்கமாகக் காட்டப் பெறும்.

கவிராஜ சிங்கமே என்பதற்கு ஐயமில்லை. மற்றைய ஆழ்வார்களை எல்லாம் ஒட்டு மொத்தமாக உதவாக்கரைகள் என உதாசீனம் செய்துவிட்ட மகா கர்வி ஆகிய மறைமலை அடிகள் (பக். 543) கூட இவர் பாடல்களை 'செந்தமிழ் வளம் துறுமி விளங்குவன' வாகப் பாராட்டிவிட்ட பிறகு,

"நெஞ்சுக் கிருள்கடி தீபம்; அடங்கா நெடும்பிறவி
நஞ்சுக்கு நல்ல அமுதம்; தமிழ நன்னூல்
துறைகள்
அஞ்சுக்கு இலக்கியம்; ஆரணசாரம்; பரசமயப்
பஞ்சுக்கு அனலின்பொறி பரகாலன் பனுவல்
களே" —

என்ற கூரத்தாழ்வாரின் தனியனுக்கு இனி என்ன வேலை?

*போர்க்காலம்*

கடைசியாக, இவர் காலநிலையை நோக்குவோம். இக்காலத்திய சேர, சோழ, பாண்டிய, பல்லவ மன்னரெல்லாமும் சிறந்த வைணவர்களாகவே இருந்ததை

"பரனே, பஞ்சவன், பூழியன், சோழன்
பார்மன்னர் மன்னர் தாம் பணிந் தேத்தும்
வரனே" —

என வரூஉம் இவர் திருவாக்கால் உணர்கிறோம். தென்நாட்டு வைணவப் பெருவேந்தர்களுள் எல்லாம் வலிமையால் கிருஷ்ணதேவராயரே முதல்வர் என்றாலும், பக்திச் சிறப்பில் பல்லவமல்லனே முதலிடம் பெறுபவன். நந்திபுர விண்ணகரம், உத்திரமல்லூர்க் கோவர்த்தனப் பெருமாள் கோவில், மற்றும் சுந்தரவரதப் பெருமாள் கோவில், தில்லைத் திருச்சித்ரகூடம், கூரம் கேசவப்பெருமாள் கோயில் என்பன எல்லாம் இவனால் புதிதாகக் கட்டப் பெற்ற ஆலயங்கள். திருவல்லிக்கேணி ஆலயம் இவனால் புதுப்பிக்கப்பட்டது. பாண்டிய முதலாம் ராஜசிம்மன் பெரியாழ்வாரால் வைணவத்திற்குத் திருப்பப்பட்டு இருந்தான். இவன் மகன் ஆகிய

ஜடில பராந்தகனோ, "பரம வைஷ்ணவன் தானாகி நின்றி லங்கு மணிநீண்முடி நிலமன்னவன் நெடுஞ்சடையன்" — எனத் தன்னைப் பெருமிதத்தோடு சீவரமங்கலச் செப்பேடு களில் கூறிக் கொண்டான். "கொங்கு நாட்டுக் காஞ்சி (நொய்யல் ஆறு) வாய்ப் (கோயம்புத்தூருக்கு அருகிலுள்ள) பேரூர் புக்கு, திருமாலுக்கு அமர்ந் துறையக் குன்றம் அன்னதோர்க் கோயில்" செய்தான். வேலங்குடியை சீவர மங்கலம் எனப் பெயர் மாற்றி, தானம் செய்து, அங்கேயும் இன்னொரு புதுக்கோயில் சமைத்தான். கி.பி. 770 அளவில் மதுரைக் கடுத்த ஆனைமலையில் இவனுடைய உத்திர மந்திரியாய் இந்த மாறங்காரியால் நரசிங்கப் பெருமாளுக்கு ஒரு ஆலயம் குடையப்பட்டு, அப்பணி அவன் தம்பி ஆகிய மாறன் எயினனால் முடிக்கப்பட்டது. நாமக்கல் அதியேந்திர விஷ்ணுக்கிரகத்தைச்சமைத்த அதியனும் இக்காலத்தவனே. திருவெள்ளறை குடைவரைக் கோயில் ஒரு முத்தரையனால் நந்தியின் 10-ஆம் ஆட்சி ஆண்டிலோ[59] அல்லது அதற்குச் சற்று முன்பாகவோ கட்டப்பட்டிருக்கலாம் எனக் கருதப் படுகிறது[60]. திருவாலிக் கோயில் திருமங்கை ஆழ்வாரா லேயே கட்டப்பட்டதாகக் கருதப்படுகிறது[61], ஆழ்வாரின் திருவரங்கப் பெருங்கோயிற்பணி வைணவ உலகம் அறிந் தது. கி.பி. 770 அளவில் சேரமானாக இருந்த குலசேகர வர்மாவும் ஒரு சிறந்த வைணவரே. கங்க ஸ்ரீபுருஷனை அவனே வெளியிட்ட கோவலவெட்டுச் செப்பேடுகள் வைண வனாகவே கூறுகின்றன. திருமங்கை மன்னரும் பப்ப பட்ட ாரகராக பல்லவ சாம்ராஜ்யத்தால் நியமனம் பெற்று ரங்க பீடத்தில் விசிஷ்டாத்வைத குருபரம்பரையின் முதல்வராக அமர்ந்து அணி செய்தார். இவற்றால்எல்லாம் திரு மங்கை ஆழ்வாரின் காலமே தென்னாட்டு வைணவத்தின்

---

59. S.I.I. Vol. 12, no. 32 (10th yr. of Nandhi II, *திருவெள்ளறை*) & ARE 539 of 1905-6.
60. Temples of South India p. 52 & 58.
61. Tamil Studies p. 309

'பொற்காலம்' ஆதல்காண்கிறோம். 'பொன்னியின் செல்வன்' 'சிவகாமியின் சபதம்' போன்ற வரலாற்றுப் புதினங்கள் படைக்கத் தமிழ்வரலாற்றில் இது ஒரு அருமையான காலம். பல்லவ வரலாற்றில் மிகவும் இக்கட்டான கால கட்டத்தில் பல்லவமல்லன் மிகவும் துணிச்சலோடு எதிர் நீச்சல் போட்டு அந்த வமிசத்தின் ஆட்சியை மேலும் ஒன்றரை நூற்றாண்டு காலம் நீடிக்கச்செய்தான், இவனுடைய 65 ஆண்டு நீண்ட கால ஆட்சியில் திடீர்த் திருப்பங்களும் சுவையான சம்பவங் களும், புரியாத புதிர்களும் மலிந்து கிடக்கின்றன. சுருங்கக் கூறினால், வல்லார்க்கு இஃதொரு சிறந்த வேட்டைக்காடு. நல்ல இடம்-இதை நழுவ விடலாமோ? இலக்கியப்போர் முரசம் அதிர்கின்றது. வரிந்து கட்டி வாரீர்! வாரீர்!—என வீரர்களை அறைகூவி அழைத்துவிட்டுப்போய், நாம் வைணவத்தின் கலி தீர்த்த நம் மங்கை மன்னர் பரகாலக் கலிகன்றியை எம்பெருமானாரோடு கூடி. வாழ்த்துவோம்.

வாழிப் பரகாலன்; வாழிக் கலிகன்றி;
வாழிக் குறையலூர் வாழ்வேந்தன்;-வாழியரோ
மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள்
மங்கையர்கோன்
தூயோன் சுடர்மான வேல்''

# 6. மன்னர் பிரான் (785-815)

## குலசேகரரின் சில சிறப்பியல்புகள்

குடதிசைச் சேரருள் பிற்காலத்திய குலசேகரப் பெருமாள் குடியினருள்[1] முதல்வர் திவ்விய பிரபந்தத்தில் பெருமாள் திருமொழி என வழங்கும் நூற்றைந்து பாடல்கள் கொண்ட பத்துப் பதிகங்களை இயற்றிய குலசேகராழ்வார். 'தென்னரங்கம் பாடவல்லசீர்ப் பெருமாள்' என்று இவரை மணக்கால் நம்பிகள் குறித்தனர். இதில் பெருமாள் என்பது சேர மாமன்னர்களைக் குறிக்க இடைக்காலத்தில் வழங்கிய சொல் ஆகும்[2]. குருபரம்பரைகள் எல்லாமும் குலசேகரரைச் சேரராகவே ஒத்து ஓதினாலும், குலசேகரர் தம்மை ஓரிடத்திலேனும் சேரமான் ஆகக் கூறிக் கொள்ளவில்லை.

குலசேகரரின் 'தோட்டருந் திறல்' என்ற கல்வெட்டுப்[3] பெருமை பெற்ற பதிகம் இவர் தம் 'பாகவத பக்தி'யைத் தெரித்து நிற்பதாம். இப் பக்திச் சிறப்பைக் குறிக்க ஒரு தனி வரலாறே வழங்குகிறது. இப்பக்தியினால் அரசியல் காரியங்கள் தடைப்படுவது கண்ட அமைச்சர்கள் ஒரு அரதன மாலையை திருடி வைத்துக் கொண்டு, அப் பழியை அரைமனைக்கு வந்த அடியார்கள் மேல் சுமத்தினர். அது போழ்து, 'பரன் அன்பர் அது செய்யார்' என்று இவர் பாம்புக் குடமொன்றில் கையிட்டுச் சூளுறுத்து, தீங்கின்றியே எடுத்துக் காட்டி நிருபித்தனராம். இவ் வரலாற்றை

1. Studies in Kerala History, p. 217
2. Studies in Kerala History, p. 202
3. S. I. I. Vol. III no. 70.

ஆரங்கெடப் பரனன்பர் கொள்ளாரென்று அவர்
கழுக்கே
வாரங்கொடு குடப்பாம்பில் கையிட்டவன் மாற்ற
லரை
வீரங்கெடுத்த செங்கோல் கொல்லி காவலன்
வில்லவர்கோன்
சேரன் குலசேகரன் முடிவேந்தர் சிகாமணியே-

எனப் பாடினர், பழங்காலத்தினர் ஆகிய மணக்கால் நம்பிகள். இங்ஙனமே, கரன் படைகள் எதிர்ப்பட்ட நாளில் இராமன் தனியொருவனாய் நின்றான் என்று இசைப்பொழிவாளர் (பிரசங்கி) சொல்லக்கேட்ட மாத்திரத்தில் துணுக்குற்று உயுத்த சன்னத்தரானார் எனப் பின்பழகிய பெருமாள் ஜீயர் கூறும் இன்னொரு வரலாறு—மேலே கூறப்பட்ட குடப்பாம்பு வரலாற்றுக்கும் முற்பட நிகழ்ந்தது—ஆழ்வாரின் மெய்ம் மறந்த பகவத் பக்தியை தெரித்து நிற்பதாம். கிருஷ்ண பகதியில் பெரியாழ்வாரைப் போல, குலசேகரர் ராம பக்தியில் லயித்திருந்தார். திருச் சித்ரகூடப் பதிகம் உண்மையில் ஒரு ஓட்டமிக்க 'சம்பூர்ண ராமாயண' சங்கிரகமே. இன்னும், பெற்றோர் நிலையில் நின்று பொழியும் பெரியாழ்வார் கண்ட அன்பு நெறியில் குலசேகரருக்கும் பங்குண்டு. இராமபிரானுக்கு ஒரு தாலாட்டைக் கணபுரப் பதிகத்தில் காண்கிறோம். கண்ணனை வளர்த்துப் பார்க்கக் கொடுத்து வைக்காத தேவகியாகவும், அருந்தவப் புதல்வன் இராமனின் பிரிவுத் துயரம் தாளாத தயரதனாகவும் மாறிப் புலம்பும் குலசேகரர் இத் துறையில் பெரியாழ்வாரையும் கூட விஞ்சிவிட்டார் என்றே சொல்ல வேண்டும். இவற்றுள் தனயன் கான்புகத் தயரதன் புலம்பலைக் கூறும் பதிகம் அவலச் சுவையின் உச்ச கட்டத்திற்கே நம்மைக்கொண்டு சென்று விடுகிறது. இது கம்ப காவியத்தில் 'விசுவ ரூபம்' எடுத்ததே யன்றி வேறில்லை. வித்துவக்கோட்டுப் பதிகம் பின்னாளில் இராமானுஜர் உபதேசித்த 'ப்ரபத்தி' மார்க்கத்திற்கு மூலமாய் அமைந்த இலக்கியம் போலவும் உள்ளது. திருவரங்கப் பதிகத்தில் ஆழ்வார் ஒரு வைணவ நந்தனார்.

ஆகக்காட்சி அளிக்கிறார். திருவேங்கடப்பதிகம் தேட்டருந் திறல் பக்தி யின்பத் தேன் பிலிற்றும் உயர்தரக் கவிதையாம். திருமால் கோயில் தோறும் உள் வாயிற்படி 'குலசேகரன் படி' என வழங்குவதற்குக் காரண மான 'படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேன்' - என்ற ஆழ்வாரின் விண்ணப்பத்தைக் கொண்டு இலங்குவது இதுவே! இவற் றால் எல்லாம் சொல்லின் செல்வராகக் கருதப்படும் ஆழ்வார் கள் நால்வருள்* இருவரும் ஒருவர் ஆகிறார். சேர, சோழ, பாண்டி, பல்லவ முடிகெழு வேந்தர் நால்வருள்ளும் இவர் மட்டுமே ஆழ்வாராகும் பேறு பெற்றமை பெரிதும் எண்ணத் தக்கது.

ஆழ்வாரின் காலம் (கி.பி 750-817)

'தேட்டருந் திறல்'-என்ற பதிகத்தின 2-ஆம் செய்யுளில் குலசேகரர்,

"ஆடிப்பாடி அரங்கவோ என்றழைக்கும் தொண்ட
ரடிப் பொடியொட
ஆடநாம் பெறில் கங்கைநீர்க் குடைந்தாடும்
வேட்கை என்னாவதே'-

என ஓதி யுண்மை கொண்டு இவரைத் தொண்டரடிப்பொடி களின் காலத்தவராக அறிஞர் கருதுவர்.[4] ஆயினும், 'தொண்டரடிப் பொடி ஆடுவதினும், கங்கை நீராட்டம் சிறந்த தன்று' - என்ற பொருளே நயமிக்க தாதலால்' 'தொண்டரடிப் பொடியாட' என்பதையே உண்மைப் பாட மாகக் கொள்வதும் உண்டு.[5] ஆனால், ஆழ்வார்களிற் பெரும்பாலோர்சற்றேறழத்தாழ சம காலத்தினர் என்பதே குருபரம்பரைகளின் கருத்தாதலை ஆசிரியர் ராகயைங்கார்[6]

---

* ஏனைய மூன்று சொல்லின் செல்வர்-தொண்டரடிப் பொடிகள், ஆண்டாள், திருமங்கை மன்னர்.

4. மாணிக்கவாசகர் வரலாறும், காலமும் பாகம் 2 பக். 541.
5. சஞ்சீவி, ந;
6. இலக்கியச் சாஸன வழக்காறுகள்.

யல்காலும் வலியுறுத்துதல் ஈண்டு கருதத் தக்கது. மேலும், 'வண்பொன்னிப் பேராறுபோல் வரும் கண்ணநீர் கொண்டு அரங்கன் கோயில்திருமுற்றம் சேறுசெய் தொண்டர்' என்ற ஆழ்வாரின் கூற்றில் இங்ஙனம் செய்து சிறப்புற்ற தொண்டரடிப் பொடிகளின் வரலாறே தொனிக்கின்றது. ஆகவே, குலசேகரர் தொண்டரடிப் பொடிகளையும் மனத்திற் கொண்டுதான், 'தொண்டரடிப் பொடியாட' என்று கூடப் பாடியிருப்பார் என நாம் நம்பலாம். இனி, தொண்டரடிப் பொடிகள் திருமங்கை மன்னர் காலத்தின ராகக் குருபரம் பரைகளில் காணப்படுவதால், குலசேகரர் திருமங்கை மன்னர் கால மாகிய கி.பி. 716-821க்கு இடைப்பட்டவரே ஆகக் கூடும்.

பல்லவ மல்லனால் அமைக்கப்பட்டதாக திருமங்கை ஆழ்வார் கூற்றிலிருந்து (பெரிய. தி. 2-3) அறியப்படும்[7] திருச்சித்ரகூடத்தை பாடியிருப்பதோ டன்றி, திருக் கண்ண புரப்பதிகத்தில் திருமங்கை ஆழ்வாரின் ஆலி நகரையுங்கூட குலசேகரர் குறிப்பிட்டுள்ளனர். இதனால் திருவாலிக்கோயில் திருமங்கை ஆழ்வாராலேயே கட்டப் பெற்றதென சீனிவாச யங்கார் கருதினர் (பக் 309). இன்னும் 'கண்டவர்தம் மனம் வழங்கும் கணபுரம்' - என்ற தொடர் பெரிய திருமொழி யுள்ளும் (8-1,9) பெருமாள் திருமொழி யுள்ளும் [பெருமா. தி. 8 2] பயிறலும் முந்திய காலத்திய பெரியோர் வாக்கு களைப் பொன்னே போல் போற்றிக் கொள்ளும் குலசேக ரரின் பாகவத பக்திக்குச் சான்று கூறும்; திருமங்கை மன் னரும் தம் காலத்திய முடியுடை வேந்த ரெல்லாம் வைணவ ராய் இருந்தனர் எனக் கூறுவர்.

பரனே! பஞ்சவன், பூழியன், சோழன்
பார்மன்னர் தாம் பணிந் தேத்தும்
வரனே! என்பது அவர் வாக்கு
[பெரிய. தி. 7-7,4]

7. கால ஆராய்ச்சி பக். 179.

ஈண்டு குறிக்கப் பெற்ற பூழியன் ஆகிய சேரன் குலசேக ராழ்வாரோ அல்லது அவருக்கு ஒரு தலைமுறையே முந்தி யவர் ஆகவேயோ தான் இருக்க முடியும். ஆயினும், குல சேகரர்

"செங்கணெடும் கருமுகிலை இராமன் தன்னை
தில்லைநகர்த் திருச் சித்ர கூடம் தன்னுள்
எங்கள்தனி முதல்வனை எம்பெருமான் தன்னை
என்றுகொலோ கண்குளிரக் காணுநாளே"
-என்ற அடிகளில்

சித்ரகூடப் பெருமானைப் பார்ப்பதற்கு தமக்கிருந்த பேரவா வினை கொட்டிக் காட்டி யுண்மை இப்பாடலும், இக் கோயிலும் இவர் ஆட்சிப் பொறுப் பேற்று வேறிடம் செல்ல இயலா திருந்த போது செய்யப்பட்டிருக்க வேண்டுதலைக் காட்டி நிற்றலால், குலசேகரரை திருமங்கை ஆழ்வாரின் பிற் காலப் பகுதியில் வாழ்ந்தவராகக் கோடலே பொருந்தும். மிகப் பல பதிகங்களைப் பாடிய திருமங்கை ஆழ்வார் குல சேகரரால் (கட்டப்பெற்று) பாடப்பட்ட வித்துவக் கோட்டை பாடா தொழிந்தமையும், குலசேகராழ்வாரை திருமங்கை மன்னர் ஒய்வு கொண்டு விட்ட பிற்காலத்தே விளங்கியவ ராகவே கொள்ளத் தூண்டுகிறது. திருச்சித்ரகூடம் கி.பி. 785 அளவில் அமைக்கப்பட்டதால், குலசேகரர் முடிசூடிக் கொண்ட காலமும் இது ஆகவே கொள்ளத் தகும்.

மூன்றாவதாக, கேரளத்துச் திருச்சூரில் உள்ள மூன்று சங்கர மடங்களில் தெற்கு மடத்தில் கிடைத்த சுவடி ஒன்றில் [கி.பி. 788-820க்குரிய] ஆதி சங்கரரின் சீடராகிய பத்மபாதாசார்யர் காலத்தில் [அதாவது கி.பி. 815 அளவில்] குலசேகரன் எனப் பெரிய அரசன் ஒருவன் மகோதையில் ஆட்சி செய்ததாகக்கூறப்பட்டுள்ளது.[8] சங்கரரே சிவானந்த லகிரியில் தமது உள்ளத்தில் உறைவதாகக் குறிப்பிடும்

---

8. Studies in Kerala History p. 217-9

ராஜசேகரனை மாதவாச்சாரியார் (வித்யாரண்யர்) செய்த 'சங்கர விஜயம்' சங்கரர் காலத்திய (மகோதைபுரத்து) மன்னனாகக் கூறுகிறது[9]. தமது 12-ஆம் வயதில் துறவு பூண்டவர் சங்கரர். துறவுக்கு ஐந்து ஆண்டுகளாகிலும் பிற்பட்டே நூல்கள் செய்திருக்க வேண்டுமாதலால், சிவானந்த லகிரி கி.பி. 800க்கும் பிறகே செய்யப்பட்டிருக்க வேண்டுதல் தெளிவு. கி.பி. 844-இல் இயற்கை எய்திய ராஜசேகர-வர்மா முடிசூடிக்கொண்டது கி.பி. 810க்கு முன்போக முடியாது. எனவே, குலசேகரரின் காலத்தை கி.பி. 785-815 ஆக தற்காலிகமாய்க் கோடல் பொருத்தமாய்த் தோற்றுகின்றது. மேற்காட்டிய சான்றின் வழி நோக்க, இவர் குலசேகர ஆழ்வார் ஆகவே இருக்க முடியும் என்பது வெளிப்படை.

கடைசியாக,தம் மகளைத்திருவரங்கர்க்கு மண முடித்து ஏராளமான பொருளைச் சீதனமாகக் கொடுத்து குலசேகரர் இறுதியில் துறவு பூண்டதாக 'கோயிலொழுகு' கூறுகின்றது. மகளை அரங்கற்கு மண முடித்த வரலாற்றை திவ்யசூரி சரிதமும், துறவு வரலாற்றை பிரபந்நாமிருதமும் உடன்படுகின்றன. சம்பிரதாய வாழ்க்கையில் குலசேகரருக் கிருந்த சலிப்பை 'மெய்யில் வாழ்க்கையை' என்ற பதிகம் படம் பிடித்துக் காட்டுகின்றது. இவ்வாறான அகப் புறச் சான்றுகளால் உறுதிப்படும் குலசேகரர் துறவோடு சேரமான் பெருமாள் நாயனார் புராணத்துள்,

**"நீரின் மலிந்த கடலகழி நெடுமால் வரையிற் கொடி மதில் சூழ்**
**சீரின் மலிந்த திருநகர மதனில் செங்கோற் பொறையன் எனும்**
**காரின் மலிந்த கொடைநிழல் மேல் கவிக்கும் கொற்றக் குடை நிழற்கீழ்**
**தாரின் மலிந்த புயத்தரசன் தரணி நீத்துத் தவம் சார்ந்தான்"—**

9. Studies in Kerala History p. 200.

எனச் சேக்கிழார் கூறுதலை ஒப்பிட்டு பெரும்புலவர் ராகவை யங்கார் அவர்கள்(பக்.250-3)குலசேகரஆழ்வாரை சேரமான் பெருமாள் நாயானாருக்கு முன்பு அரசு துறந்த சேரமானகக் கருதினார். இவரைத் தவிர இடைக்காலத்துச் சேரமான் களில் வேறெவரும் துறவு பூண்டமைக்குச் சான்றின்மையால் அய்யங்காரின் கருத்து உறுதிப்படுகின்றது. இக் கருத்துப் படி, சுந்தரரால் நிகழ்காலத்தில் வைத்துக் கூறப்பட்ட காடவர் கோன் கழற்சிங்கன் ராஜசிம்மன் (கி.பி.690-728)-ஏ ஆதலால், சுந்தரரின் தோழராகிய சேரமான் பெருமாள் நாயனாருடைய காலமும் கி.பி. 750-க்கு உள்ளாகவே இருக்கவேண்டும். இவ்வகையில் குலசேகரரின் காலம் கி.பி. 700-725 ஆகலாம் என்னலாம். குருபரம்பரைகள் குலசேகர ஆழ்வாரை பெரியாழ்வாருக்கும் முற்பட்டவராகக் கூறுதல் இக் கருத்தை அரண் செய்கின்றது. ஆனால், காடவர்கோன் கழற்சிங்கன் மூன்றாம் நந்தி வர்மனே எனவும்[10], கி.பி. 844-ல் காலம் எய்திய ராஜசேகர வர்மாவே சேரமான் பெருமாள் நாயனார் எனவும் சில கருத்துக்கள் உண்டு. எனவே, குலசேகர ஆழ்வார் மேலே பத்மபாதா சார்யர் காலத்தவராகக் காட்டப்பட்ட குலசேகரரே ஆதல் காண்கிறோம்.

குருபரம்பரைகளைப் போல மறைமலை அடிகளும் [பக். 540] குலசேகரரை திருமங்கை ஆழ்வாருக்கும் முற்பட்டவ ராகக் கருதுகிறார். இதற்கு இவர் காட்டும் காரணம் குல சேகரரின் அழுத்தமான ராம பக்தியே. குலசேகரருக்கு பிறகே ராம பக்தி தமிழ் நாட்டில் அதிகமாகப் பரவியிருக்க

10. a. The age of Nayanars K.R. Subramanian J.O.R. 287-96 (1927)
    b. Administration and Soc. life under Pallavas p. 300
    c. பல்லவர் வரலாறு-மா. ராசமாணிக்கம் பக். 198.
    d. மூன்றாம் நந்திவர்மன்-மயிலை சீனி வேங்கிடசாமி.

வேண்டுமென்பது இவர் கருத்து. ராமபிரானை திருமங்கை ஆழ்வார் ஒரு அவதாரமாக ஏற்றுக் கொண்டிருப்பதால், திருமங்கை மன்னர் குலசேகரருக்குப் பின்பே வாழ்ந்திருக்க வேண்டுமென்பது இவர் வாதம். ஆனால்,

"தாதை ஏவலின் மாதுடன் போகிக்
காதலி நீங்கக் கடுந்துயர் உழந்தோன்
வேத முதல்வற் பயந்தோன் என்பது
நீயறிந் திலையோ நெடுமொழி அன்றோ"?
-(சிலம்பு14:46-9) எனவும்,

'தொல் இலங்கை கட்டழித்த சேவகன்சீர், கேளாத செவி என்ன செவியே' (சிலம்பு 17: பாட்டு 35) எனவும் வரூஉம் சிலப்பதிகாரப் பகுதிகள் அடிகள் கூற்றின் பொருளற்ற தன்மையை உள்ளங்கை நெல்லிக் கனிபோல் காட்டுகின்றன. இன்னும், முதலாழ்வார்கள் காலத்தில் 'ராமாவதாரம்' நல்ல மதிப்புப் பெற்று விட்டமையை அவர்கள் அருளிச் செயல்களிலிருந்து நாம் நன்கறிந்துள்ளோம். நாம் காட்டியபடி இம் முதலாழ்வார்கள் கி.பி. 6-ஆம் நூற்றாண்டினரே; மறைமலை அடிகள் கருதுமாறு போல கி.பி. 7-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவரல்லர்.

## இருவர் குலசேகரர்

ஆச்சர்ய மஞ்சரி என்பதோர் உரைநடை நூலையும், தபதி-சம்வர்ணம், சுபத்ரா-தனஞ்சயம், விச்சின்னாபிஷேகம் ஆகிய மூன்று நாடகங்களையும் வடமொழியில் குலசேகர வர்மா எனப் பெயரிய சேரமன்னர் ஒருவர் இயற்றியுள்ளார். கி.பி. 10-ஆம் நூற்றாண்டினரான வடநாட்டு ராஜசேகரர்—பிரதிஹார வமிசத்து இரண்டாம் போஜரின் ஆசிரியர்—ஒருவரால் ஆச்சர்ய மஞ்சரி பெரிதும் பாராட்டப்பட்டிருப்பதிலிருந்து குலசேகரவர்மாவை இப் 10-ஆம் நூற்றாண்டிற்கும் முற்பட்டவராக அறிகிறோம். வடமொழிப் புலவர் பலரைக் குறிப்பிடும் தபதி-சம்வர்ணத்தின் 5-ஆம் அங்கத்தில் கி. பி. 690-780க்குரிய பல்லவ ராஜசிம்மனின் அவைக் களத்தை

அலங்கரித்த தண்டியைக் கூறும் குலசேகரவர்மா இதே காலப் பகுதியில் வடநாட்டில் வாழ்ந்த பவபூதியை மட்டும் குறிப்பிடவில்லை. எனவே, பவபூதியின் புகழ் இவர் காதுக்கு எட்ட முடியாத அளவிற்கு அணித்தான காலப் பகுதியில் குலசேகரவர்மா தமது தபதி-சம்வர்ணத்தைச் செய்திருக்க வேண்டுமென்று இதனால் ஏற்படுகிறது[8]. ஆகலின், இவர் 8-ஆம் நூற்றாண்டினரே ஆகக்கூடும். இதற்கு இன்னொரு சான்றும் உண்டு. ஓர் அகாலவர்ஷனையும் இவர் இதே நூலில் குறிப்பிடுகின்றார். ராஷ்டிரகூடப் பேரரசருள் கோவிந்தர்கள் எல்லாரும் 'பிரபூதவர்ஷன்' என்ற பட்டத்தையும், துருவப் பெயரினோர் எல்லாம் 'தாராவர்ஷன்' என்ற பட்டத்தையும் புனைந்திருந்தாற்போல, கிருஷ்ணர்கள் 'அகாலவர்ஷன்' எனப்பட்டனர். கி.பி. 758-72க்கு இடையே ராஷ்டிரகூடருள் முதலாம் கிருஷ்ணனின் ஆட்சியும் நடைபெற்றிருக்கின்றது. இரண்டாம் கிருஷ்ணனின் காலம் (கி.பி. 880-912) இக் குலசேகரர்க்கு ஏற்றதாக இன்மையால், இவரைக் கி.பி. 770-இல் வாழ்ந்தவராகவே நாம் கொள்ளவேண்டும். சுபத்ரா தனஞ்சயத்தின் முதல் அங்கத்தில் இவர் ஒரு வைணவராகவும் கூறப்பட்டுள்ளார்.[11] இவரே குலசேகர ஆழ்வாராகில், ஆழ்வார் பெயரால் வழங்கும் 'முகுந்தமாலை'யை ஆழ்வார் தமது இளமைக் காலத்தில் செய்தனர் எனக் கொள்ளலாம்.

ஆயினும், ஆழ்வாரும் வடமொழி வல்ல குலசேகரவர்மாவும் வெவ்வேறானவர்களாகவே தெரிகின்றது. முகுந்தமாலையில் ரவி, லோகவீரன் எனக் கேரளநாட்டுப் பிரதிகளிலும், பத்மன், சரன் எனத் தமிழ்நாட்டுப் பிரதிகளிலும் சொல்லப் பெறும் அந்தணர் இருவர் குலசேகரருக்கு உயிர்த்தோழராய் இருந்தனர் என்று கூறப்பட்டுள்ளது. இறுதி சுலோகமாகிய இதே 46- ஆம் சுலோகத்திற்கு 'பிராம்மணச்

---

11. Early History of Vaishnavism in South Indian p. 30 & [The Golden Tower, p. 224

சாதி, மிச்ர சாதி நண்பர்களைக் கொண்டிருந்த குலசேகரரே முகுந்த மாலையை இயற்றினார்'—எனப் பொருள் செய்வதும் உண்டு. பிராம்மணச் சாதி நண்பரை தொண்டரடிப் பொடி ஆகவும், மிச்ர சாதி நண்பரை திருப்பாணாழ்வார் ஆகவும் குறித்தார் (பக்.308) அறிஞர் சீனிவாச அய்யங்கார் அவர்கள். இந்தப் பொருளும், இதன் பேரில் அய்யங்கார் அவர்கள் தந்த விளக்கமும் எவராலும் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. மேலும், இச்செய்தி திவ்யசூரியிலோ, ஆறாயிரப்படி குருபரம்பரையிலோ அல்லது வேறு குருபரம்பரையிலோ கூடக் கூறப்படக் காணோம். முகுந்தமாலை பற்றிய குறிப்பு கூட அவற்றில் இல்லை. இன்னும், இது திவ்வியப் பிரபந்த உரைகளில் எடுத்தாளப்படவோ அல்லது திருக் கோயில்களில் விசேஷ காலங்களிலேனும் ஓதப்படவோ கூடக் காணோம். ஆகவே, நாதமுனி முதலிய தொல்லாசிரியன்மார் முகுந்தமாலையை ஆழ்வாரின் அருளிச் செயலாகக் கருதவில்லை என்பது தமிழ்நாட்டு வைணவர் கொள்கை[12]. மேலும், முகுந்தமாலையில் நெடுகவும் கிருஷ்ண பக்தியே பரிணமிக்கின்றது. ராமபிரானைப்பற்றி அதிகம் ஏதும் இல்லை. ஆனால், ஆழ்வாரோ பழுத்த ராமபக்தர். இவையெல்லாம் முகுந்தமாலையையும், ஏனைய வடமொழி நூல்களையும் செய்த குலசேகரவர்மாவை குலசேகர ஆழ்வாரின் வேறானவராகக் காட்டுகின்றன[13]. அறிஞர் இந்துசூடன்[14] குலசேகர வர்மாவை ஆழ்வாருக்கு முற்பட்டவராகக் கருதுகிறார்; நாம் பாட்டனார் ஆகக் கொள்ளலாம். ஆழ்வாரின் தந்தையார் பெயர் 'த்ருடவிரதர்' ஆகக் கூறப்படுவதும் இதற்குத் துணை ஆகின்றது. ஆயினும், நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் எங்குமே குறிப்பிடப்படாத துருவனைப்பற்றிய

---

12. முகுந்தமாலை (தமிழ்) பீடிகையில் ஸ்ரீஉப. வே. அண்ணங்கராசார்ய ஸ்வாமி (வழி) ஆழ்வார் கால நிலை.

13. Pisharoty K. R. in Mukundamala appendix (via) The Golden Tower.

குறிப்பு முகுந்தமாலையின் 16-ஆம் சுலோகத்தில் வருவதால், இந்நூலை ஆழ்வாருக்கு இறப்பவும் பிற்பட்டதாகக் கொள்ளவும் இடமுண்டு.

ஆழ்வாரை அவர் அரசு துறந்த வரலாறு கி.பி.815-க்குப் பிறகும் உயிரோடு இருந்தவராகக் காட்டுகின்றது. ஆகவே, 67 ஆண்டுகள் உயிர் வாழ்ந்த இவரின் பிறந்த காலத்தை கி.பி. 750-755க்கு இடைப்பட்டதாகக் கொள்வதே பொருத்தமாகும். ஆனால், மூவாயிரப்படி குருபரம்பரை இவர் பிறந்த நாளை கல்யப்தம் 28-க்குச் சமமான தோர் பராபவ ஆண்டின் மாசித் திங்கள் வளர்பிறை துவாதசி புனர் பூசங் கூடிய வெள்ளிக் கிழமை ஆகக் கூறுகிறது. கல்யப்தத்தைஒதுக்கிவிட்டு இதனை கி.பி.12-2-767 ஆகக் கணித்துள்ளனர், திவான் பகதூர் சாமிக்கண்ணுப்பிள்ளை அவர்கள்[15]. மு. கோவிந்தசாமி அவர்களால் கணிக்கப்பட்ட 29-1-706 [16] ஆழ்வாரின் பாட்டனாராகிய குலசேகர வர்மாவுக்கே பெரிதும் பொருத்தமானது. எனவே, குலசேகரரை குருபரம்பரைகள் பெரியாழ்வார், தொண்டரடிப் பொடிகள், பாணர், திருமங்கையாழ்வார் ஆகியோர்க்கும் முற்படக் கூறுவது, இரண்டு குலசேகரர்களையும் ஒன்றாக குழப்பிக் கொண்டதன் விளைவேயும் ஆகலாம். முதலாம் குலசேகரரின் ஆட்சிக்காலத்தை கி.பி. 750-770 ஆக நாம் கொள்ளத் தகும். குரு பரம்பரையிற் கண்ட குறிப்புகளின் படி இவர்களின் காலங்கள் முறையே 27-5-725, 16-12-727, 7-11-781, 31-10-776[17] ஆதலால் இக்கருத்து கொள்ளப்பட்டது.

குலசேகராழ்வார் முதலாம் குலசேகரரின் பெயரர் என்ற வகையில் அப் பெயர் தரித்துக் கொண்டது பெரிதும் பொருத்தமே. ஆனால், அவருக்குப் பின் வந்த மகோதைச் சேரர் ஒவ்வொருவரும் தம் இயற்பெயரோடு 'குலசேகரப்பெருமாள்' என்பதொரு பின்னிணைப்பைச் சேர்த்து வந்திருப்பதுதான் ஒரு புதிராக உள்ளது. 'கல் தோன்றி மண் தோன்றாக் காலத் திருந்தே' இருந்து வரும் பழங்குடிகளுள் ஒன்றாகிய சேரர் குடியில் நாம் மேற் கண்ட இரு குலசேகரருள் ஒருவர்

15,16, & 17 இந்நூல் பிற்சேர்க்கை-2

மட்டும் ஒரு குலமுதல்வர் போலக் கருதப்பட்டதன் காரணம் என்ன என்பது உன்னற் பாலது. இக் குலமுதல்வர் ஆகும் பேறு பெற்ற குலசேகரர் பிறகுடிப் பிறந்து சேரர் குடிக்குப் பின்னாளில் வாரிசு ஆகியிருக்க வேண்டுதலை இது தெளிவாகக் காட்டுகின்றதல்லவா? 'தபதி-சம்வர்ண'த்தில் அதன் ஆசிரியர் ஆகிய குலசேகரவர்மா கேரள வமிசத்தில் பிறந்த சிறந்தோருள் ஒருவராகக் கூறப்படல்[18] ஆழ்வாரே 'குலசேகரப் பெருமாள் வமிச' முதல்வராகக் கூடுதலை குறிப்பதாய்க் கொள்ளலாம்.

*கூடல் நாயகன்*

குலசேகராழ்வார் தம்மை 'கொல்லி காவலன்', 'கூடல் நாயகன்', 'கோழிக்கோன்', (பெருமாள். தி. 2-10), கொங்கர்கோன் (பெருமாள் தி. 3,9) என்றெல்லாம் கூறிக் கொள்கிறார். ஒரு அரசனைப் பற்றி ஒரு (கல்வெட்டு) கவி கூறுவதையெல்லாம் வரலாற்றுக்குரிய ஆதாரங்களாகக் கொள்ளுகின்ற நாம் குலசேகரர் தம்மைப்பற்றி தாமே கூறும் விவரங்களை மட்டும் வெறும் தற்புகழ்ச்சியாகக் கருதித் தள்ளி விடுதல் முறையன்று. 'மெய்யில் வாழ்க்கையை' வெறுத்து இறைவன் திருக்கோயில் படியாக வெல்லாம் கிடக்கப் பெரிதும் விரும்பிய இவ் அரச முனி வெறும் பகட்டுக்காக வென்று புனைந்து கூற மாட்டார் என்று நாம் நிச்சயமாக நம்பலாம். மேலும், பல்லவர் காலத்தினராய் இருந்தும் தம்மை காஞ்சிக் கிறைவனாகக் கூறிக் கொள்ளாமையும் இவர் கூற்றில் பெரிதும் உண்மை இருப்பதை வெளிப்படையாகக் காட்டுகின்றது. எனவே, கி.பி. 8-ஆம் நூற்றாண்டின் இறுதி, 9-ம் நூற்றாண்டின் தொடக்கம் ஆகிய காலப் பகுதியில் வடக்கே பல்லவர் பேரரசும், தெற்கே ஆழ்வார் நாட்டியபேரரசுமே இத் தமிழகத்தில் தலையெடுத்திருந்தன என்பது திண்ணம். ஆகலின், அக்கால மன்னருள் குறிப்பாகப் பாண்டியர் வலியற்றிருந்த காலத்தை ஆராய்வதன் மூலம் ஆழ்வார் காலத்தை மேலும் திருத்தமாகக் கணிக்க முடியும்.

---

18. Early history of Vaishnavism p. 30.

அறிஞர் மு. கோவிந்தசாமி அவர்களின் கணிதப்படி ஆழ்வார் பிறந்த நாள் கி.பி. 29-1-706 ஆதல் முன்னமே கூறப்பட்டது. இனி, மூவாயிரப்படி குருபரம்பரை இவருக்கு ஆயுட் காலமாகக் குறிப்பிடும் 67 ஆண்டுகளையும் இதனொடு இணைத்துக் கணக்கிட்டால், குலசேகராழ்வார் காலம் கி.பி. 706-773 ஆதல் காணலாம். இவர் ஆட்சிக் காலம் எதுவாயினும், அது கி.பி. 773-ஐத் தாண்டிப் போதற் கில்லை. இக் காலப் பாண்டியர்கள்[19] கோச்சடையன் ரணதீரன் (710-720), ராஜசிம்மன்-I (720-767), நெடுஞ் சடையன் பராந்தகன் (767-790) ஆகிய மூவர் மட்டுமே. இவர்கள் அனைவருமே பெருவீரர்கள் ஆதலை வேள்விக் குடிச் செப்பேடுகளில் இருந்து நாம் நன்கறிவோம். இத னாலும் பஞ்சாங்கக் குறிப்புகளை முற்றிலும் நம்புவதற் கில்லை என்பது தெளிவு.

பாண்டியர் குடிவழியில் பெயர் மட்டுமே கூறப்படுபவன் ராஜசிம்மன்-II ஒருவன் மாத்திரமே. இது அவன் ஆட்சிக் காலம் மிகக் குறுகியதாய் இருந்தமை பற்றியதாகலாம்; நீண்டதாயின், அமைதியானதோ அல்லது அடுக்கடுக்காக பல தோல்விகளைக் கண்டதாகவோதான் இருந்திருக்க முடியும். பின்னதை உண்மையாகக் கொண்டால், இவனே நாம் தேடும் பாண்டியன் ஆகக் காண்போம். இந்த இரண் டாம் இராஜசிம்மனின் காலம் கி.பி. 790-821[19]. இங்கே முக்கியமாக கவனிக்க வேண்டியது குலசேகராழ்வாருக்கு நாம் கொண்டே கி.பி. 785-815 என்ற ஆட்சிக் காலம் உறுதிப் படுதலும், இரண்டாம் ராஜசிம்மனை வென்று கொண்டே குலசேகரர் 'கூடல் நாயகன்' ஆகியிருக்கக் கூடு தலுமே.

பாண்டியர் குடியிற் பிறந்து சேரர் குடிக்கு வாரிசான மையால், ஆழ்வார் தம்மை 'கூடல் நாயகன்' எனக் கூறிக் கொண்டிருக்கலாம்-என்று ஒரு கருத்து அறிஞர் சீனிவாச

---

19. இந்நூல் பின்னிணைப்பு-7

அய்யங்கார் அவர்களால் வெளியிடப்பட்டது (பக். 310) அறிஞர் K. G. சங்கரும் இதனை உடம்பட்டனர் (பக். 344) ஆனால், ஆழ்வாரின் பாடல்களுள் எல்லாம் சோணாட்டு வாடை மட்டுந்தான் வீசுகின்றதே தவிர, இவர் பாண்டி நாட்டினர் என்பதற்கான அறிகுறி இம்மியேனும் இல்லை. இவர் இயற்கை எய்தியது பாண்டிநாட்டு மன்னார் கோயிலில் என்பதில் கூட அறிஞர்க்கு ஐயப்பாடு உண்டு. இது பின்னர்க் காட்டப்படும். ஆழ்வாரை உறையூர்ச் சோழனின் மகள் வயிற்றுப் பெயரனாக அறிஞர் கோபிநாத ராவ் கருதியதும் (பக். 22) ஈண்டு குறிப்பிடத்தக்கது.

### கோழிக்கோன்

உறையூருக்கு மிகச் சமீபத்திய திருவெள்ளறையில் கி.பி. 797, 798க்குரிய தந்தி யர்மனின் 3,4-ஆம் ஆண்டுக் கல்வெட்டுக்கள்[20],[21] காணப்படுகின்றன. பல்லவமல்லனின் ஆட்சிப் பிற்காலத்தே வெளியிடப்பட்ட கசாக்குடி, தண்டன் தோட்டம், பட்டத்தாள் மங்கலம் (அல்லது கொற்றங்குடி) பட்டயங்கள் எல்லாம் சோணாட்டினவே. இவையெல்லாம் கி.பி. 795— அளவில் சோணாடு முழுவதும் பல்லவர் ஆதிக்கத்திலேயே இருந்தமையைத் தெளிவாகக் காட்டுகின்றன. இதன் பேரில் நந்தி-II கி.பி. 785 அளவில் பாண்டியரை வென்று கொண்டதாக முன்பே முடித்துள்ளோம். ஆகையால், குலசேகரர் உறையூரை பல்லவரிடமிருந்தே கைப்பற்றி இருக்கலாமோ என்று எண்ணத் தோன்றுகிறது. எனில், தந்திவர்மன் ஒரு வலியற்ற பல்லவப் பேரரசன் ஆகல் வேண்டும். இது எவ்வளவு தூரம் உண்மையென்று காண்போம்.

தன் தந்தையாகிய துருவனால் முன்னமே அரச பதவிக்கு நியமிக்கப்பட்டிருந்த மூன்றாம் கோவிந்தன் கி.பி. 794-இல் ராஷ்டிரகூடப்பேரரசனாக முடிசூடிக்கொண்டான்.

---

20. S.I.I. Vol. 14 nos. 21, 8, 10, 11, 12 12B
21. E.C. 28, 85 (1952)

இவன் தமையன் (கங்கபாடியில் அரசப் பிரதிநிதியாக இருந்த) கம்பராசனுக்கு இது பிடிக்கவில்லை; கலகம் செய்யத் திட்டமிட்டான். கம்பனின் வலியைக் குறைக்க எண்ணிய கோவிந்தன் தன்னாட்டுச் சிறையில் வாடிய கங்க மன்னன் இரண்டாம் சிவமாறனை விடுதலை செய்து பல்லவ நந்திவர்மனோடும் கூடி அதே கி.பி. 794-இல் முடி சூட்டி வைத்தான்[22]. சின்னாட்குப் பிறகு, மாளவத்து நாகபடன், ஹர்ஷர் ஆட்சி செய்த கன்னோசி நாட்டு சக்ராயுதன், வங்காளத்துத் தர்மபாலன் ஆகியோரை வெற்றி கொள்ள கி.பி. 798-இல் [23] வட நாட்டுக்குப் போய்விட்டான். அச்சமயம் பார்த்து, கி.பி. 800 அளவில் கம்பன் கங்க சிவமாறன் உள்ளிட்ட பன்னிரு மன்னர்களை துணைக்குச் சேர்த்துக்கொண்டு கலகம் செய்தான். அது கேட்டுச் சீறி வந்த கோவிந்தன் இவர்களை எல்லாம் ஒருவர் பின் ஒருவராகத் தோற்கடித்ததாய் ராமேஸ்வர தீர்த்தப்பட்டயம்[24] கூறுகிறது. ராஷ்டிரகூடப் படைகள் சோழ, பாண்டிய நாடுகளையெல்லாம் அரந்து திரிந்ததை பன்னிருவருள் ஒருவனாகிய சிங்கள மன்னன் கேள்விப்பட்டு, காஞ்சியில் தங்கியிருந்த அவ் வல்லரசனுக்குப் பல பரிசுகள் அனுப்பி, நட்புச் செய்து கொண்டதாய் சஞ்சன் பட்டயம்[25] கூறுகிறது. தனக்குத் துரோகம் செய்த குற்றத்திற்காக மூன்றாம் கோவிந்தன் சிவமாறனை மீண்டும் சிறைப்பிடித்ததாக தனது வானி-திண்டோரி பட்டயத்தில்[26] (கி.பி. 806) கூறியுள்ளான். கம்பனை, தமையன் ஆனபடியால், மீண்டும் கங்கபாடிக்கே அரசனாக நியமித்தும், ஏனையோரிடம் திறை மட்டும் பெற்றுக் கொண்டும் அனுப்பிவிட்டான்.

---

22. Alteker H.S., in Rashtrakutas and their Times p. 63
23. தக்காண வரலாறு பக். 113.
24. E.C. Vol. II p. 126 (ராமேஸ்வர தீர்த்தம்) British museum plates of 804 A.D
25. E.C. Vol. XVIII pp. 235 (Sanjan cp)
26. I. A. Vol. XI p. 156 (Vani-Dhindori c.p of 807A.D)

ஆனால், சிலகாலம் கழித்து, தந்திவர்மன் திறை செலுத்த வில்லை. எனவே, இரண்டாம் முறையாக பல்லவனை தாக்கித் திறை பெற்றுத் திரும்பும் வழியில் கி.பி. 804-இல் துங்கப்பத்திரை ஆற்றின் கரையில் உள்ள ராமேஸ்வர தீர்த் தத்தில் தங்கியிருந்தபோதே ராமேஸ்வர தீர்த்த பட்டயத்தை வெளியிட்டான். கி.பி. 810-இல் வெளியிடப்பட்ட இவனது மன்னே[27] செப்பேடுகளில் தந்தி ஒரு மகா சாமந்தாதிபதி ஆகக் குறிப்பிடப்படுவதால், மூன்றாம் கோவிந்தனின் வாழ் நாள் முழுவதும் தந்தி திறை செலுத்தும் ஒரு சிற்றரச னாகவே இருக்க நேரிட்டமையை உணர்கிறோம். ராதான் பூர் செப்பேடுகளில் பல்லவர் தம் நற்பேற்றையெல்லாம் தனதாக்கிக் கொண்டதாக கோவிந்தனே கூறிச் சேறல் மன்னே செப்பேடுகளில் கூறப்பெற்ற சிற்றரசன் தந்தி பல்லவ தந்தியே ஆதலைச் செவ்வனம் காட்டுகின்றது.

தந்தியின் தாழ்ந்த நிலையைக் காட்ட வேறு இரண்டு சான்றுகளும் உள்ளன. நந்திவர்மன் காலத்திய பாண அரசன் ஆகிய ஜயநந்திவர்மன்றன் பெயரனின் பெயர் 'மல்லதேவ நந்திவர்மன்' என்பது. எனவே, இம் மல்ல தேவன், நந்திவர்ம பல்லவமல்லனின் இறுதிக் காலத்தேயே அரசனாகிவிட்டிருக்கக்கூடும் என்று தெரிகிறது. இவ் வகையில் இவன் ஆட்சிக் காலத்தை கி.பி. 795-820 ஆகக் கொள்ளத் தகும். ஆகவே, தந்தியின் ஆட்சிக் கால முற் பகுதியில் மல்லதேவன் ஆண்டிருக்கக் காண்கிறோம். முடியனூர்ச் செப்பேட்டை[29] இவன் தானே, அதுவும் தனது ஆட்சி(28-ஆம்)ஆண்டிலேயே, வெளியிட்டுள்ளான். பல்லவப் பேரரசனாகிய தந்தி வலியற்று இருந்தமையை இது காட்டுகின்ற தல்லவா?

---

27. Q.J M.S., Vol XIV p.81 and MAR (1924) Manne Cp. of 810 AD)
28. E.C. Vol VI p. 242 (Radhanpur cp 804 of A.D.)
29. I.A. Vol 15, p. 172-5, &E. C. Vol 10 Mb p. 151 (முடியனூர் Cp)

ஸ்ரீகண்ட சோழன் என்ற பொத்தப்பிச் சோழனும் சுதந்திரமாகச் செப்பேடுகள் வெளியிட்ட சிற்றரசருள் ஒருவன். இவன் வெளியிட்டது சென்னை மியூசியம் செப்பேடுகள்[30] ஆகும். பொத்தப்பிச் சோழர்களுள் கி.பி. 675-700க் குரிய கோக்கிள்ளியிலிருந்து இவன் 6-ஆம் தலைமுறையினன்*. இவ்வகையில் இவன் காலம் கி.பி. 800-820க்கு உட்பட்டதே ஆகல் வேண்டும். இங்ஙனம் தந்தியின் ஆட்சி முற்பகுதியில் விளங்கிய இவன் நடத்தையும் கூட தந்தி செயலற்ற நிலையில் இருந்ததைத் தெளியக் காட்டுகின்றது. ஆகவே ஆழ்வாரும் கோழியைத் தந்திடயிடமிருந்தே கைப்பற்றி இருக்கலாம் என்று எண்ணவே தோற்றுகிறது.

ஆயினும், குலப் பகைவரான பாண்டியர் பிடியிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்வதற்காக அப் பாண்டியரின் பகைவராகிய பல்லவரோடு சேரர் நெடுங்காலமாகவே நட்பு பாராட்டி வந்தனர் என்பதற்கு பல ஏதுக்கள் உள்ளன. காட்டாக, முதலாம் மகேந்திரவர்மனின் மத்தவிலாசம் மலைநாட்டிலிருந்தே கிடைத்திருப்பதையும், இது அந்நாட்டுச் சாக்கையரால் பெரிதும் விரும்பி நடிக்கப் பட்டதையும் கூறலாம்[31]. இது சேர மன்னர் பல்லவருக்குக்

* 1. கோக்கிள்ளி (675-700)
2. மகேந்திர விக்ரமன் (700-730)
3. இளஞ்சோழன் (730-760)
4. நிருபகாமன் (760-780)
5. திவாகரன் (780-800)
6. ஸ்ரீகண்டன் (800-820) இங்கு காணப்படும் கோக்கிள்ளி கி.பி. 726-27ல் ஆட்சி செய்த கீழைச் சாளுக்கிய கோக்கிள்ளியின் [30a] தாய்வழிப் பாட்டனாகக் கூடுதலால் இப்பொத்தப்பிச் சோழனுக்கு கி.பி. 675-700 கொள்ளப்படுகின்றது.

30. J.I.H., Vol. XI p. 30-49 (Madras museum cp)
30a. Eastern Chalukya's of Vengi P.

காட்டிய பேராதரவாலேயே ஆகல் வேண்டும். இன்னும், 'அவந்தி சுந்தரி கதாசாரம்' என்ற நூலில் பல்லவ நாட்டுத் தண்டி வேறெந்த நாட்டைப் பற்றியும் இல்லாமல், சேர நாட்டை மட்டும் பற்றிய மிகப் பல விவரங்களைத் தந்துள் ளார். இடைக் காலச் சேரர்களால் பெரிதும் விரும்பிப் புனைந்து கொள்ளப்பட்ட 'பெருமாள்' பட்டம் 'பெருமானடிகள்'-எனப் பல்லவர்களிடையே வழக்கில் இருந்த பட்டத் தின் சுருக்கமே[32]. ஆயிரவேலி, அயிரூர், புகழியூர் என்னு மிடங்களில் அதியன், பல்லவன், கேரளன், குடகொங்கன் ஆகியோரை நெடுஞ்சடையன் பராந்தக ஸ்ரீவரன் புறங் கண்டதாக சீவர மங்கலச் செப்பேடுகள் கூறுகின்றன. இவை அனைத்திற்கும் மேலாக, பல்லவர் காலத்தினராகிய ஆழ்வார் கோழியைப் பல்லவரிடமிருந்து கைப்பற்றியிருந் தால், நிச்சயம் அவர் தம்மை காஞ்சிக்கும் இறைவனாகவே குறிப்பிட்டிருப்பார். அவர் அங்ஙனம் செய்யக் காணாமை ஒன்று மட்டுமே கோழியை அவர் பல்லவரிடமிருந்து போரிட்டுப் பெறவில்லை என்பதை நாட்டப் போதுமானது.

குலசேகரர் கோழிக்கோன் ஆகிய விதத்தை விளக்கு வதற்காக, அவரை வலியற்ற தந்திவர்மன் காலத்தினராகக் கருதிய[33] கோபிநாத ராவ் அவர்கள்[34]

' மல்லை மாநகர்க் கிறைவன் தன்னை
வான்செ லுத்திவந் தீங்கணை மாயத்து
எல்லையில் பிள்ளை செய்வன காணாத்
தெய்வத் தேவகி புலம்பிய புலம்பல்
கொல்லி காவலன் மாலடி முடிமேல்
கோலமாம் குலசேகரன் சொன்ன''—
(பெருமாள் தி. 7-11)

31. தென்னிந்திய வரவாறு. K.A. நீலகண்ட சாஸ்திரி,
32. Studies in Kerala History p. 246
33. P.T சீனிவாச அய்யங்கார், பல்லவர் சரித்திரம், பக். 20-25
34. History of Srivaishnavas P. 256

என்று போதரும் தொடர்களுக்கு "கடன்மல்லைக்கு அரசனாகிய தந்திவர்ம பல்லவனைக் கொன்று விட்டுத் திரும்பி வந்து, கண்ணன் செய்த எல்லை இல்லா மாயங்களைக் காணக் கூடாத தெய்வத் தேவகி புலம்பிய புலம்பலைச் சொன்ன குலசேகரன்" என்று பொருள் கொண்டனர். கி.பி. 792-845க்கு உரிய தந்திவர்மன் கி.பி. 815 வரைக்குமே அரசராக இருந்த குலசேகரரால் கொல்லப்பட்டிருக்க முடியாது என்பது வெளிப்படை. கி.பி. 797-க்கு உரிய (தந்திவர்மன் காலத்திய) கல்வெட்டு திருவெள்ளறையில் காணப்படுவதால், கொல்லப்பட்டவனை பல்லவமல்லன் ஆகக் (கி.பி. 731-795)கொள்வதும் பொருந்தாது. மேலும், "மல்லர்களையும், அவர்களை ஏவிய மதுரை மாநகர்க்கிறைவனாகிய கஞ்சனையும், வான் செலுத்தி வந்து தன் பால் அடைந்த கண்ணனின் எல்லையற்ற மாய விளையாட்டுக்களைக் காணக் கொடுத்து வைக்காத தெய்வத்தாய் தேவகியின் புலம்பலாகக் குலசேகரன் சொன்ன"- என்பதே மெய்ப்பொருள் ஆகும். 'மல்லையட்டு.........கஞ்சனுக்கு நஞ்சானானை"(பெரி தி. 2-10, 7)."மல்லடர்த்துக் கஞ்சனைக் காய்ந்தான்" [பெரி. தி. 6-7,5] "மல்லொடு கஞ்சனும் துஞ்ச வென்ற" [பெரி. தி. 11-2, 3] என்றவிடங்களில் மல்லையும் கஞ்சனையும் சேர்த்தே திருமங்கையாழ்வாரும் பாடுதலைக் காட்டி இவ் உண்மையை நிறுவினர் ராகவையங்கார் அவர்கள். 'மல்லை மாநகர்' என்பதற்கு 'வளம் பொருந்திய மாநகர்' என இலக்கியப் பாணியில் திவ்வியப் பிரபந்த உரையாசிரியரான பெரிய வாச்சான் பிள்ளை பொருள் செய்வதும் பொருந்ாதெனஅய்யங்கார் கூறுவர் (பக். 275).

ஆழ்வார் சேரமானாய் இருந்தும் திருவரங்கம், திருக்கண்ணபுரம், திருச்சித்ரகூடம் ஆகிய சோணாட்டுப் பதிகளையே பாடியுள்ளார். இவரால் குறிப்பிடப்பெறும் ஒரே திருப்பதி ஆகியஆலியுங் கூட சோணாட்டதே. திருவரங்கப் பதிகம் இவர் இளம் பருவத்தே அப்பதியில் நிகழ்ந்த ஆடல் பாடல் விழாக்களில் கலந்து கொண்டிருக்கக் கூடியமையைச்

செவ்வனம் காட்டுகின்றது. 'தேட்டருந் திறல்' என்ற பதிகத்தில் இவ்விழாக்களை நடத்தி வைத்த தொண்டரடிப் பொடிகள் குறிப்பிடப்படுவதும் இதற்கு இன்னொரு அகச் சான்று ஆகும். தமது பாடல்களிலும் 'கோழிக்கோன்' என்பதையே இவர் 'கொல்லி காவலன்','கூடல் நாயகன்' என்பவற்றை விட அதிகம் கையாண்டிருக்கிறார். இவர் பிறப்பிடமாக திவ்யசூரி சரிதம் குறிப்பிடும் 'குக்கூட கூடஸம்' என்ற தொடரின்பொருள் கோழிக்கூடு என்பதாகும். தொண்டரடிப் பொடிகளின் காலத்தில் சோழருள் ஒரு கிளையினரால் ஆளப்பட்டு வந்த உறையூர்ப் பகுதி பிறகு முத்தரையர் கைக்கு மாறிவிட்டதை திருவெறும்பூருக்குப் பக்கத்தே 'முத்தரச நல்லூர்'[35] என்று ஒரு ஊர் காணப்படுதல் தெளிவாகக் காட்டுகின்றது. எந்தச் சூழ்நிலையில் உறையூர்ச் சோழர்குடி முடிவுற்றதென்று விளங்கிக் கொள்ள வழியில்லை. மேலும், ஆழ்வாரின் மகளை 'சோழகுலவல்லி'என நூல்கள் கூறுகின்றன. சேரமானின் மகள் சோழகுலவல்லி ஆனது எப்படி? இன்னும், ஆழ்வார் தம்மைச் சேரமானாக ஒரு பதிகத்தில் கூடக் குறிப்பிடாததேன்? கடைசியாக, ஆழ்வார் பிறகுடிப் பிறந்தே சேரர் குடிக்கு வாரிசானவர் ஆகக் கருத இடமுண்மையும் கண்டுள்ளோம். இவையெல்லாம் சோழர் குடிப் பிறந்த ஆழ்வார் சேரர் குடிக்கு வாரிசாகப் போய்விட்டார்-என்பதையே சுட்டுகின்றன. ஆரம்ப காலத்தில் பல்லவருக்கு அடங்கிய சிற்றரசராக இருந்த ஆழ்வார் தாம் சேரமான் ஆகிப் பேரரசு கண்ட போதும் பழைய நிலையை மனத்திற் கொண்டு தம்மைக் காஞ்சிக் கிறைவன் ஆகக் கூறிக் கொள்ளாமல், பல்லவரோடு பெருநட்பு உடையவராகவே இருந்தார் என்றல் எவ்வளவு அழகாக உள்ளது? கோழிக்கு இவர் இறைவர் ஆகியிருக்கமுடியும்?ஆழ்வாரை உறையூர்ச் சோழன் மகன் வயிற்றுப் பெயரனாக கோபிநாதராவ் அவர்கள் கருதியதை (பக். 22) விட சேரமான் குலசேகரவர்மாவின் மகள் வயிற்றுப் பெயரனாகத் தாம் கொண்ட கொள்கையே சிறப்பானதாகும்.

ஆழ்வார் சோழர்குடிப் பிறந்தவரே என்ற கொள்கைக்குச் சில தடைகளும் உண்டு. உபதேச ரத்தின மாலையை வட மொழியிற் பெயர்த்த அபிராம வரமுனி ஆழ்வாரின் பிறப் பிடத்தை 'நிசுளாம்புரி' என அதிற் குறித்துள்ளார். இவ ருக்கு மிக முற்பட்ட பின்பழகிய பெருமாள் ஜீயரின் ஆறா யிரப்படி குருபரம்பரையில் இப் பெயர் உறையூருக்கு வழங்கப் பட்டுள்ளது. ஆயினும், திருப்பாணாழ்வாரின் பிறப் பிடத்தைக் குறிபபிடும்போது அபிராமவரர் உறையூர் என்றே கூறிச் சேறலால் 'நிசுளாம்புரி' விஷயத்தில் இவர் ஜீயருக்கு மாறான கருத்துடையவராகக் காண்கிறார். அபி ராமவரரால் குறிப்பிடப் படும் 'நிசுளாம்புரி' உபதேச ரத்தின மாலையில் 'வஞ்சிக் களம்' எனப்பட்டுள்ளது. அபிராமவரர் உபதேச ரத்தின மாலையைச் செய்த வரமுனிகளின் [மண வாள மாமுனிகள்] பெயரரே யாதலால், இம் மொழிபெயர்ப்பு சரியானதே ஆகல் வேண்டும். இவ்வித மெல்லாம் வாதித்த அறிஞர் ராமானுஜம் அவர்கள் (பக் 188-95) வஞ்சிக்களம், கொங்குநாட்டுக் கருவூர் ஆகிய பண்டைய வஞ்சியே என்றும் அபிப்பிராயப்படுகிறார். எனில், வஞ்சி 'வஞ்சிக் களம்' என நீட்டி முழக்கப்பட வேண்டியதில்லை. எனவே, 'திருவஞ் சைக்களம்' என்ற சிவலாயத்தின் பெயரே அதனைத் தன்னகத்தே கொண்டுள்ள கொடுங்கோளூருக்கும் இன் னொரு பெயராக வழக்குற்ற நாளில் அதனை திரு அஞ் சைக் களம் எனப் பிரிக்கத் தெரியாமல் திரு வஞ்சைக்களம் எனப் பிரித்து, பிறகு இது ஒரு காலத்தில் சேர நாட்டின் கோநகராயும் இருந்ததை உளத்துக் கொண்டு 'வஞ்சிக் களம்' எனவும் பிற்காலத்தார் திருத்திக் கொண்டனராதல் தெளிவு; பாகவதம் பக்தர் [குலசேகராழ்வார்] பிறப்பால் கேரளத்துப் பெரியாற்றைப் புனிதமானதாகக் கூறலும் 36 உன்னத் தக்கது. ஆயினும், இவை யெல்லாம் குலசேகரர்

35. Feudatories of south India p.

36. Early History of Vashnavism in S. India p.26.

சேரமா னாதல் கொண்டு பிற்காலத்தாரால் ஊகித்து உரைக்கப்பட்டன வென்றே கொள்ளத் தகும். ஆகவே, ஆழ்வார் உறையூர்ச் சோழர் குடியினரே என்ற நமது கொள்கைக்கு இவை தடை ஆமாறில்லை.

*கொல்லி காவலன்*

மூன்றாவதாக, ஆழ்வார் தம்மை 'கொல்லி காவலன்' எனவும் மூன்றிடங்களில் கூறுகிறார். மதுரை ஆகிய கூடலோடும், உறையூர் ஆகிய கோழியோடும் கொல்லி இணைத்துக்கூறப்படுவதிலிருந்து சேரமாநகர் ஆகக் கருதப்படுகிறது. இது கொங்கு நாட்டில் உள்ளதும் சங்க கால வஞ்சி மாநகருமான கருவூரே எனவும், கொல்லி மலைக்கு அண்மையில் உண்மை பற்றி கருவூருக்கு இப்பெயரும் ஏற்பட்டது எனவும் ராகவையங்கார் அவர்கள் கருதினார் (பக். 257).

வித்துவக்கோட்டுப் பதிகத்தை ஊன்றி நோக்கும் போது, ஆழ்வார் அத் தலத்து இறைவனை ஒரு நாளேனும் பிரியத் தரியாதவர் போலவும், பின் ஏதோ ஓர் இடையீடு உண்டாகி அப் பெருமானைப் பிரிய நேரவே அதனுக்காற்றாது இரங்குகின்றார் போலவுமே உள்ளது. இங்ஙனம், நித்தமும் இவரால் வழிபடப்பட்ட இப் பெருமானின் கோயில் இவருடைய தலைநகர் ஆகிய கொல்லியிலேயே இருந்திருக்க வேண்டு மென்பது வெளிப்படை. மேலும், இவர் வழிபாட்டிற்கு ஏற்பட்ட இடையீடு பழம் பகைவரான பாண்டியர் படையெடுப்பால் ஆகக் கூடும். கொங்கு நாடு அடிக்கடி பாண்டியர் கைவசப்பட்டு இருந்தமை அறியப்படுதலின், ஆழ்வாரின் கொல்லி கொங்கு நாட்டதே ஆகக் கூடும். இந் நிலையில், கொங்கு நாட்டுக் கருவூர்ப் பெருமான் கோயிற் பகுதியிற் காணும் அக்கிரகாரம் 'வித்துவக் கோட்டு அக்கிரகாரம்' என்று வழங்குதலை சேது சமஸ்தானத்து வித்துவான் கனம் ரா. ராகவையங்கார் அவர்கள் கண்டறிந்து கூறியுள்ளனர். இனி, கருவூரே வஞ்சியுமாதலால், இதுவே ஆழ்வாரின் கொல்லியும் ஆகக் கூடும். இவ்வாறு ஆசிரியர்

மு. ராகவையங்கார் 'கருவூரே கொல்லி' என்ற தமது கொள்கைக்காக மேலும் வாதிக்கிறார். (பக்.265)

ஆனால், ஆழ்வாருக்கு வெகு முற்பட்ட கூற்றுவ நாயனார் காலத்திருந்தே சேர நாட்டின் தலை நகர் மலை நாட்டில் இருந்தமையைப் பெரிய புராணம் தெளிவாகக் காட்டுகின்றது. கூற்றுவ நாயனாரால் தீங்கு நேரலாம் என அஞ்சிய தில்லைவாழ் அந்தணர் சேரலன்றன் மலைநாடு அடைந்தார் எனச் சேக்கிழார் பெருமான் கூறுவர். சேர நாட்டுக்கொடுங்கோளூர் ஆகிய மகோதையே சேர நாட்டின் தலைநகர் என கி பி. 8ஆம் நூற்றாண்டைய குலசேகரவர்மாவின் வடமொழி நூல்கள் சிலவும், திருச்சூர் மாவட்டத்து தெற்கு மடத்தில் கிடைத்த பழஞ்சுவடி ஒன்றும், பெரிய புராணத்துட் சேரமான்பெருமாள் நாயனார் புராணமும் கூறுகின்றன. திருவரங்கம் செல்லத் துடித்த ஆழ்வாரின் பிரலாபமாகக் காணும் (பெருமாள் திருமொழியின்) முதற்பதிகமும், திருச் சித்ரகூடப் பதிகமும் தமது ஆட்சிக் காலத்தில் இப் பகுதிகளுக்கு அடிக்கடி வந்து போகக் கூடாத அளவுக்குத் தொலைவில் (அஃதாவது மலை நாட்டில்) இவர் தம் தலை நகர் இருந்ததையே குறிப்பதாய் உள்ளன. பெருமாள் திருமொழி 2-9இல்

"அத்தன், அச்சன், அரங்கனுக்கு அடியார் களாகி அவனுக்கே
பித்தர் ஆமவர் பித்தர் அல்லர்கள் மற்றையார் முற்றும் பித்தரே"

என்ற அடிகளில் பயிலும் 'அச்சன்' என்ற சொல்லில் மலையாள நாட்டு வாடை வீசவும் காண்கிறோம். கொடுங்கோளூர் திருமால் கோயில் உள்ள பகுதிக்கு குலசேகரபுரம் என்ற பெயரும் வழங்கி வருகிறது. பக்தர் (குலசேகர ஆழ்வார்) பிறப்பால் கேரளத்து பெரியாறு பாகவதத்தில் புனித மானதாகக் கருதப்படலும்[36] ஈண்டு நினையத் தக்கது. இப்போது கொச்சிக் கருகே கடலொடு கலப்பதாய் இருப்பினும், கி.பி. 14-ஆம் நூற்றாண்டுக்கு முன் பெரியாறு

கொடுங்கோளூருக்கு அருகிலேயே கடலிற் கலந்ததாய்த் தெரிவதால்[37] பாகவதத்தின் குறிப்பு கொடுங்கோளூர்-மகோதையில் குலசேகராழ்வார் பிறந்திருக்கக்கூடிய கருத்து பற்றியதே ஆகல் வேண்டும். மேலும், இக் காலப் பகுதியில் கருவூரை உள்ளடக்கிய கொங்கு நாடு ஒரு தனி அரசாக இயங்கியதை சீவரமங்கலச் செப்பேடுகளாலும் அறிந்துள்ளோம். இன்னும் சில தனிக் கல்வெட்டுக்களும்[38] கொங்கை கலியரசர்களால் ஆளப்பட்டு வந்த தனி நாடாகவே காட்டுகின்றன. கொல்லிக் கண்ணனார், கருவூர்க் கண்ணம்பாளனார் எனச் சங்க இலக்கியங்களில் பயிலும் தொடர்கள் கருவூருக்கு கொல்லி என்ற பெயர் என்றுமே வழங்கியதில்லை என்பதை அறைந்து கூறும் மலை போலும் சான்றுகள் ஆகும்.

கொல்லி கேரள நாட்டுக் கொல்லமே (Quilon) என்பது பேராசிரியர் கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள் கருத்து (பக் 35) 'இந் நகரங்கண்டு நீரேற்ற மருவான் சபீர் ஈஸோ'-என்ற (தரசப் பள்ளி[39]) சாஸனத் தொடரிற்போந்த 'கண்டு' என்ற சொல் பரஞ்சோதியின் திருவிளையாடலில் 'திரு நகரம் கண்ட படலம்' என்ற இடத்துப் போல 'புதிதாக உண்டாக்கப்பட்ட' என்றே பொருள் படுமென்றும், (முன்னாளில் குரக்கேணிக் கொல்லம் என்று அறியப்பட்ட நகரம்) புதிதாக உண்டாக்கப்பட்டு சிரியன் கிறிஸ்தவர்களின்

---

37. The Golden Tower p. 256
38. Kalabras identified in 'South Indian Studies' p. 180-5
39. T.A.S. Vol II 80-82 Theresapalli grant by Sthanu Ravi Varma in his 5th regnal year equivalent to 849 A D (vide) studies in Kerala History p. 371.

எனவே, கொல்லம் ஆண்டுத் தொடக்கத்திற்கும் (கி.பி. 825) சிரியன் கிறிஸ்தவ சபீர் ஈஸோ கொல்லத்தில் இடம் பெற்றதற்கும் (கி.பி. 849) யாதொரு தொடர்பும் இன்மை காணப்படும்.

தலைவன் ஆன சபீர் ஈசோவுக்கு கேரளாதிபதி ஒருவரால் நீரோட்டிக் கொடுக்கப்பட்டதாகையால், அதுவே ஆழ்வாரின் தலைநகர் ஆதற்கு இல்லை''-என்றும் வாதித்து பேராசிரியர் ராகவையங்கார் அவர்கள் பேராசிரியர் கிருஷ்ண சாமி அய்யங்கார் அவர்களின் 'கொல்லமே கொல்லி' என்ற கொள்கையை மறுத்து விட்டனர் (பக். 259). ஆயினும், சீனாவை கி.பி. 618-907க்கு இடையே ஆண்டு கழிந்த 'டாங்' வமிசத்தாரின் ஆவணங்களில் (records) கொல்லம் பற்றிய குறிப்பு காணப்படுவதால்[40] 'இந் நகரம் கண்டு'-என்ற சாஸனத் தொடரின் மெய்ப்பொருள் 'இந் நகரைத் தாம் தங்கியிருப்பதற்கு ஏற்ற இடமாகத் தேர்ந்தெடுத்து' என்பதும் ஆகலாம்.* மேலே சேர மாநகராகக் காட்டப்பட்ட மகோதையில் சேரர் மாளிகை இருந்த இடமாகக் கூறப்படும் 'சேரமான் பரம்பா' என்ற இடத்தில் அண்மையில் செய்த அகழ்வாராய்ச்சி இங்கு இருந்திருக்கக் கூடிய மாளிகைகள் கி.பி. 8-ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டவை அல்ல எனக் காட்டிவிட்டன[41]. கி.பி. 4-ஆம் நூற்றாண்டின் இடையில் சேரர் கருவூரைக் கைவிட்டு வேறிடம் சென்று

---

* 'மேழிவலன் உயர்த்த வெள்ளை நகரமும்' (சிலம்பு 14:9) என்ற இடத்து நகரம் என்பது கோயில் எனப் பொருள்படுமாறு போல, இச் சாஸனத்திலும் நகரம் பேரூர் என்று பொதுப் பொருளில் அன்றி வேறுபொருளிலும் சாஸனக்கவியால் வழங்கப்பட்டிருக்கலாம். வேள்விக்குடிச் செப்பேடுகளில் 'கூடல், வஞ்சி, கோழி என்னு மாடமா மதில் பதுக்கியும்' என்ற விடத்து 'மதில்' நகரம் என்ற பொருளில் சாஸனக் கவியால் வழங்கப்பட்டிருத்தல் காண்க. அறிஞர் குஞ்சன் பிள்ளை அவர்களும் 'நகர்' என்பதற்கு 'வாணிபக் குழு' (Guild of Merchants) என்று தம் நூலுட் பொருள் கூறினார். (பக். 373)

40. Studies in Kerala History, Elankulam Kunjan Pillai p. 202

41. தொல்லியல் ஆய்வுகள்—K. V. ராமன்

விட்டதை 'வஞ்சியும் வறிதே'-என வரூஉம் சிறுபாண் அடி (50) நமக்கு அறிவுறுத்துகின்றது. கி.பி. 1102க்குப் பிறகு கொல்லமே சேர மாநகர் ஆகக் கொள்ளப்பட்டிருக்கவும் காண்கிறோம்.[42]

எனவே, இக் கொல்லமே கி.பி. 4-8 ஆம் நூற்றாண்டுகளுக்குஇடையில் சேரமாநகராய் இருந்தது எனக்கொள்ளப் பெரிதும் இடமுண்டு. கூற்றுவ நாயனார் காலத்தே மலை நாட்டில் இருந்ததாகப் பெரியபுராணம் கூறும் சேரமாநகர் இக் கொல்லமே ஆகல் வேண்டும். பாண்டியன் அரிகேசரியால் தாக்கப் பட்டதும் வேள்விக்குடிச் செப்பேடுகளில் 'புரிசை மாமதில் புலியூர்' என்று புகழப் பெற்றதும் திருமங்கை மன்னராலும் (சிறிய திருமடல் கண்ணி 11), நம்மாழ்வாராலும் (திருவாய். மொ. 8-9, 1-11) பாடப்பட்டதும் ஆகிய (திரு) புலியூர் கொல்லத்திற்கு அருகில் உள்ளதே. பாண்டிக்கோவையில் அரிகேசரியின் பெயரன் ஆகிய அரிகேசரி பராங்குசன் என்ற முதலாம் ராஜசிம்மனால் சேரன் தோற்கடிக்கப்பட்டதாகக் கூறப்படும் ஊர்கள் பலவும் இக் கொல்லத்தை அடுத்து உள்ளனவே. அச்சன் கோயில் கணவாய்க்கு எதிராக இக் கொல்லம் இருப்பதால் பாண்டியர் தாக்குதலுக்கு ஆளானதே தலைநகர் மாற்றப்பட்டதற்குக் காரணம் ஆகலாம். மகோதைச் சேரருள் முதல்வராகத் தோன்றும் குலசேகர வர்மாவே (குலசேகராழ்வாரின் தாய்வழிப்பாட்டனார்) இங்ஙனம் மாற்றியவர் ஆகலாமோ என்றொரு ஐயப்பாடு இவ்ஆசிரியருக்கு உண்டு. தஞ்சையில் இருந்து ஆட்சி செய்த கண்டராதித்தர் தம்மை கோழிவேந்தன் என்றாற் போல், கொல்லியை அதன் பழைய நிலை பற்றி குலசேகராழ்வாரும் சேரமாநகர் ஆகத் தம் பாடல்களில் குறித்தனர் என்னலாம். மீண்டும் கொல்லியையே குலசேகராழ்வார் தலைநகர் ஆக்கியிருக்கக் கூடுமாகில், சேரமான் பெருமாள் நாயனார் அரசப் பிரதிநிதியாக மகோதையில் இருந்து சேரநாட்டின் வட பகுதியைக் கண்காணித்து

42. A survey of Kerala History, 127

வந்தனர் என்று பெரிய புராணப் போக்கிலிருந்து எளிதில் ஊகிக்கலாம்.

கொல்லம் ஆண்டிற்கும், கொல்லிக்கும் தொடர்பு ஏதும் இருக்கலாமோ என்றொரு ஐயம் இயற்கையாக எழுகின்றது. இவ் ஆண்டு கி.பி. 825-இல் தொடங்கியதாகக் கணக்கிடப் பட்டு வருகின்றது. கணக்குப்படி இது தொடங்கியது கி.பி. 9-ஆம் நூற்றாண்டிலேயே யாயினும், இது கையாளப்பட்ட தென்னவோ 10ஆம் நூற்றாண்டில்,அதுவும் ஒரேஒரு முறை மட்டும், தான். கி.பி. 11-ஆம் நூற்றாண்டில் ஒரு முறை கை யாளப்பட்டிருக்கிறது. சேரர் தம் தலைநகரை கொல்லத் திற்கு மாற்றிக் கொண்ட கி.பி. 1102க்குப் பிறகு (அதாவது கி.பி. 12-நூற்றாண்டிலிருந்து) தான் இது சேர நாடு எங் கணும் வெகுவாய்க் கையாளப்பட லாயிற்று; சேர நாட்டார் தொடர்பால் தென்பாண்டியிலும் இஃது வழக்குற்றது. கி.பி. 9-12-ஆம் நூற்றாண்டுகளுக்கு இடையில் இது வேணாட்டின் தலை நகராய் இருந்தமையை சபீர் இஸோவுக்குக் கொடுக் கப்பட்ட தரசப் பள்ளி சாஸனத்தாலும், திருவிசைப்பா ஆசிரியர்களில் ஒருவர் வோணாட்டடிகள் எனப்படுவதிலி ருந்தும் அறிகிறோம். எனவே, குலசேகராழ்வாருக்குப்பிறகு, கொல்லத்தில் புதிதாக ஒரு சிற்றரசு நிறுத்தப்பட, அதனை நினைவு கூர்தற் பொருட்டு வேணாட்டில் 10-ஆம் நூற் றாண்டில் தொடங்க பட்ட சகாப்தம், பின் கொல்லத்திற்குச் சேரர் பெயர்ந்த போது மேற் கூறியவாறு போல தென்னாடு எங்கணும் பரவியிருக்கக் கூடும்[43]. இஃது ஒப்பக்கொள்ளத் தக்கதாகில், கி.பி. 825-இல் வேணாட்டரசு தோன்று முன்பு ஆழ்வாரின் ஆட்சி கொல்லத்தில் முடிந்திருக்க வேண்டும். இக் காலத்தை நாம் கி.பி. 815 ஆகக் கொண்டுள்ளோம்.

## வித்துவக்கோட்டு வரலாறு

இனி, அய்யங்கார் அவர்களால் கொல்லியோடு சேர்த் துக் குழப்பப்பட்ட வித்துவக்கோடு நம் கவனத்துக் குரிய

43. Studies in Kerala History, p. 214.

தாம். 'நீகொண்டாளா யாகிலும்', 'மீளாத் துயர் தரினும்', 'வெந்துயர் வீட்டாவிடினும்'-எனப் பயிலும் இதன் பதிகத் தொடர்கள் ஆழ்வார் ஏதோ ஓர் தீராத (மன) நோயால் அவதிப்பட்ட நாளில் உதவிகோரி வித்துவக்கோட்டு இறைவனை வேண்டிக்கொண்டனர் போலவும், அது கிட்டாமற் போகவே, மனம் நொந்து நைந்து திருவருளுக்குப் பாத்திரம் ஆகாவிட்டாலும், அவன் திருவடிகளைத் தவிர தமக்கு வேறுகதி இல்லை என அவ் இறைவனுக்கே எடுத்துரைக்கிறாற் போலவும் உள்ளனவே யன்றி, நித்திய வழிபாட்டிற்கு ஏற்பட்ட இடையூற்றிற்கான குறிப்பு கிஞ்சித்தேனும் அவற்றில் இல்லை. ஆகவே, ஆழ்வாரின் விசேட நேசத்திற்குக் காரணம் இக் கோயில் அவராலேயே கட்டப்பட்டதேயும் ஆகலாம். சிறந்த அடியார் ஆகிய இவர் இரண்டொரு கோயில்களை யாகிலும் கட்டியிருக்கக் கூடும் அல்லவா?

வித்துவக்கோடு மலைநாட்டு திருமிட்டக் கோடாகவே நம்பப்படுதல் கூறப்பட்டது. ஆயினும், மலைநாட்டுப் பதிகள் பதின்மூன்றல் 12-ஐப் பாடிய நம்மாழ்வார் இதனை மட்டும் பாடவில்லை. அட்டவணை 1-இல் இவற்றுட் சில திருமிட்டக்கோட்டிற்கு அண்மையவே ஆதல் நம்மைச் சிந்திக்கத் தூண்டுகிறது. வித்துவக்கோட்டைப் பாடாமைக்கு நம்மாழ்வார் குலசேகரருக்கு முற்பட்டவர் ஆகக் கூடுதல் தகுந்த காரணம் ஆகத் தோன்றவில்லை. ஏனெனில், நம்மாழ்வாரால் பாடப்பட்ட மலை நாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றைக் கூட குலசேகரரும் பாடவில்லை. எனவே, நம்மாழ்வாருக்கு அதிகம் பழக்கம் இல்லாததும், குலசேகரருக்கு வெகுவாய்ப் பரிச்சய மானதும் ஆகிய சோணாட்டு எல்லையில் உள்ள கொங்கு நாட்டுக் கருவூரிற் காணப்படும் வித்துவக்கோட்டு அக்ரஹாரத்தைச் சேர்ந்த திருமால் கோயிலே குலசேகரரால் பாடப்பட்ட வித்துவக்கோடு ஆகல் வேண்டுமென்பர் முதுபெரும் புலவர் ஆகிய ராகவையங்கார் அவர்கள் (பக். 363). 'விண்டோய் மதிள் புடைசூழ் வித்துவக்கோடு'- என்ற ஆழ்வார் கூற்றிலிருந்து கோட்டை மதிற் பக்கம் வித்துவக்கோடு இருந்ததாக அறியப்படுவதும் இத் தலத்தை கருவூர்க்கண்ணதாகக்

கொள்ள இடம் தருகின்றது என அவர்கள் மேலும் கூறுவர் (பக். 264). கொங்கு நாட்டையும், கருவூரையும் கைவிட்டு மேலைக் கடற்கரைப்பக்கம் சென்று விட்ட பின்னாளிலேயே திருமிட்டக் கோட்டை சேரர் புதிதாய் அமைத்திருக்க வேண்டும் என்பதும் அவர் கருத்து (பக். 265).

அட்டவணை — 1[44]

| பாலக்காட்டு கணவாய் | போடி நாயக்கனூர் கணவாய் | அச்சன்கோயில் கணவாய் | கடுக்கரை அல்லது ஆரம்பொழிற் கணவாய் |
|---|---|---|---|
| 1. திருநாவாய் | 3. காட்கரை (இடப்பள்ளி) | 5. செங்குன்றூர் | 11. வண்பரிசாரம் |
| 2. திருமிட்டக்கோடு (பட்டாம்பி-1 மைல்) | 4. மூழிக்களம் (அங்கமாலி-6 மைல்) | 6. புலியூர் | 12. வாட்டாறு |
| | | 7. வண்வண்டூர் | 13. அனந்தை |
| | | 8. வல்லவாழ் | |
| | | 9. வாறன்விளை | |
| | | 10. கடித்தானம் | |

'விண்டோய் மதின்' -என உயர்ந்த மதில்களையெல்லாம் வருணித்தல் புலவர் வழக்கே. ஆகவே, வித்துவக் கோட்டு ஆலயம் கோட்டை மதிற் பக்கம் இருந்ததனாற்றான் 'விண் டோய் மதின் புடைசூழ் வித்துவக்கோடு'-எனப்பட்டது என்ற அய்யங்காரின் வாதம் பொருந்து மாறில்லை. மற்றபடி நம்மாழ்வார் வித்துவக்கோட்டை ஏன் பாடவில்லை என்பதோடு நம் விசா ரணையை நிறுத்திக் கொள்வதானால், அய்யங்காரின் முடிவை ஏற்றுக் கொள்வது சாத்தி

44. History of Sri Vaishnavism, Gopinatha Rao, p. 20.

யமே. ஆனால், திருவரங்கத்திற்கு மிக அண்மையில் உள்ள திருவெள்ளறையைப் பாடியுள்ள திருமங்கைஆழ்வார் இங்ஙனமே அணித்தானதும், பண்டைச் சேரமாநகரும் ஆகிய கருவூரில் பண்டு தொட்டு இருந்திருக்கக்கூடிய திருமால் திருக்கோயிலை ஏன் குறிப்பிடவுங்கூட இல்லை என்பதை நாம் எண்ணிப் பார்க்காமல் இருப்பதிற்கில்லை. இதில் இன்னொரு சிறப்பு என்னவென்றால் 'கூடலும், கோழியும் கோயிலாக் கொண்ட கோவலரே ஒப்பர்'-(பெரி.தி.9-2,5) என்ற விடத்து கூடலையும், கோழியையும் குறிப்பிட்ட போது, கூடவே வஞ்சியையும் குறிப்பிட ஒரு வாய்ப்பிருந்தும் அவர் அவ்வாறு செய்யாமல் விட்டதுதான். எனவே, இவர் காலத்து கருவூர் வித்துவக் கோட்டுத் திருமால் கோயில் சிதைவுற்றநிலையில் பூசனையற்றுக் கிடந்ததாதல் தெளியப்படும். ஆகவே, இக் கோயிலை குலசேகரர் திருமங்கை ஆழ்வார் ஓய்வு பெற்றிருந்த காலத்தே புதுப்பித்தார் என்று கொள்வதன் மூலம் இத் தடையைச் சரிக்கட்டலாம்.

இவ்வளவிற்குப் பிறகுங்கூட குலசேகரரால் கட்டப்பெற்று, பாடவும் பட்டது கருவூர் வித்துவக்கோடுதான் என்று அடித்துக்கூற முடியவில்லை. ஏனெனில், கருவூர்த் திருமால் கோயிலில் இதற்கான சான்று எதுவுமே இல்லை. மாறாக, திருமிட்டக் கோட்டில் குலசேகரருடையதாகக் கருதப்படும் உட்கோயிலின் வாயிலிற் காணும் 11-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டு ஒன்றில்[45] வித்துவக்கோடு என்ற தொடர் காணப்படுகிறது. குலசேகரருக்குப் பிறகு கொங்கு நாடு சேரர் கையிலிருந்து நழுவிவிட்ட பின்னாளில், அவர் வழியினரால் இத் திருமிட்டக் கோடு உருவாக்கப்பட்டது என்று கொள்ள வேண்டும். ஆனால், இதற்கும் ஆதாரம் எதுவும் இல்லை. எனவே, திருமங்கை ஆழ்வார் ஓய்வு பெற்ற பின், குலசேகரரே—அதுவும் இத் திருமிட்டக்கோடு ஆலயத்தையே-பழஞ் சேரமாநகர்க்கண் பாழ்பட்டுக் கிடந்த வித்துவக்கோட்டை மனத்திற் கொண்டு, கட்டி வைத்தார்-

---

5. Indian Express 30th January 1972.

எனக் கோடல் நேரிதாகும். நம்மாழ்வாருக்கு வட சேர நாடும் பரிச்சயமானதாக இருக்கவில்லை என்பதும், பண்டு தொட்டுப் பெயர் சிறந்திருந்த திருமூழிக்களம் போன்ற பதிகளை குருகூரில் இருந்தபடியே இவ் ஆழ்வார் பாடி வைத்தார் என்றும் இதனால் ஏற்படுகிறது. மூழிக்களப் பதிகமும் ஒரு தூதே. நாவாய், வல்லவாழ், வாறன்விளை ஆகிய பதிகளுக்கு இவர் நேரிற் சென்றவர் அல்லர் என்பது அவ்வப் பதிகங்களிலேயே தெளிவாகக் தெரிகின்றது.[46] ஆகவே, இவர் வடசேர நாட்டுப் பக்கம் சென்றவர் அல்லர் என்பது உறுதிப்படுகின்றது.

வித்துவக்கோட்டுப் பதிகம் வாயிலாக வெளிப்படும் குலசேகரர் துன்பம், அய்யங்கார் கூறுமாறு போல, பாண்டியர் படையெடுப்பால் விளைந்த தன்று. 'கூடல் நாயகன்' என்று இவர் தம்மைக் கூறிக் கொள்வதினால் இதனை நாம் ஓரளவிற்குத் துணிவாய்க் கூற முடியும். ஆயினும், வேறு தாக்குதல்கள் இத் துயரத்திற்குக் காரணமாய் இருந்திருத்தல் கூடியதே. பல்லவ தந்தியோடு பெருநட்பு கொண்டிருந்த இவர் ராஷ்டிரகூடப் பேரரசனாகிய மூன்றாம் கோவிந்தனின் பெருங் கோபத்திற்கு ஆளாகி கொங்குப் பகுதியில் தாக்கப் பட்டிருக்கலாம் என்று கொள்ளப் பெரிதும் இடமுண்டு. கோவிந்தனை எதிர்த்துக் கலகம் செய்த கம்பனுக்கு உதவிய பன்னிருவருள் பதினொருவரைக் குறிப்பிடும் நவசாரிப் பட்டயத்தில் (கி.பி. 805)[47] கேரளரும் இடம் பெற்றுண்மையி லிருந்து இதனை ஊகிக்கலாம். ஆயினும், இதனை உறுதி யாக கூறுதற்கில்லை. வேறு காரணமும் இருக்கலாம்.

## துறவும் (கி பி 815) மறைவும் (கி பி. 817)

ஆழ்வாரின் பத்துப் பதிகங்களில் ஆறு ஒவ்வொன்றும் பதினொரு பாக்களையும், மூன்று ஒவ்வொன்றும் பத்து பாக் களையும் கொண்டிலங்க, 'மெய்யில் வாழ்க்கை' என்ற

46. திருவாய் மொழி திறனாய்வு பக்.
47. பல்லவர் செப்பேடுகள் முப்பது பக்.

பதிகம் மட்டும் ஒன்பது பாக்களைக் கொண்டுள்ளது. எனவே, இதனைச் சேர்ந்த பாடல் ஒன்றோ, இரண்டோ அகப்படவில்லை என்று ஐயுற இடமுண்டு. மேலும், இப் பதிகத்தை இவர் துறவு மேற்கொண்டு திருவரங்கம் வந்துற்ற போது பாடியதாகவும் கொள்ளலாம்.

இவர் பிரமதேசம் மன்னார் கோயிலில் திருநாடு அலங் கரித்ததாக பிரபந்நாமிர்தம் கூறுகிறது. இது இப்பெயரோடு திருநெல்வேலி மாவட்டத்து அம்பாசமுத்திரம் வட்டத்தில் உள்ள ஊராக நம்பப்படுகிறது. இதற்கு அடையாளமாக இவ்வூர் ராஜேந்திர சோழ விண்ணகரத்தில் குலசேகரருக் கென ஒரு தனிக் கோயிலும் உண்டு. ஆயினும், இவர் பாண்டி நாட்டு மன்னார்கோயிலுக்குச் சென்றதேன் என்பது புலப்படவில்லை. போருக்குச் சென்றவிடத்தில் உயிர் விட்டிருக்கலாமோ என்றால், அது இவர் துறவு வர லாற்றோடு இணைந்து வரவில்லை. தல யாத்திரையாகத் திருவேங்கடம் வரை போய்த் திரும்பும் வழியில் காட்டு மன்னார்கோயிலில் இவர் உயிர் நீத்திருக்கலாம் என்று ஒரு கருத்தை கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள் வெளியிட் டனர் (பக். 25) அறிஞர் வரதராஜையர் அவர்களும் (பக். 340) இதை ஏற்றுக்கொண்டுள்ளனர். திருச்சித்ர கூடத்தில் பல்லவனால் புதிதாக நிறுமாணிக்கப்பட்ட ஆல யத்தைத் தரிசிக்கத் தாம் கொண்டிருந்த அவாவினை 'அங்கணெடு மதிள்புடை சூழ்'-என்ற பதிகத்தில்

''செங்கணெடுங் கருமுகிலை இராமன் தன்னை
தில்லைநகர்த் திருசித்ர கூடம் தன்னுள்
எங்கள் தனி முதல்வனை எம்பெருமான் தன்னை
என்றுகொலோ கண் குளிரக் காணுநாளே''

என இவர் வெளியிட்டுண்மையை எண்ணும்போது தில்லைக்கு 16 மைலில் உள்ள காட்டு மன்னார் கோயிலை ஆழ்வார் உயிர்துறந்த இடமாக கிருஷ்ணசாமிஅய்யங்கார் கருதியது பொருத்தமானதாகவே தென்படுகிறது. ஆனால், இதற்கான ஆதாரம் எதுவும் அவ்வூரில் இல்லை.

எனவே, கி.பி.1209-இல், இரண்டாம் ஜடாவர்மன் குலசேகர பாண்டியனின் (1190-1215) 19-ஆம் ஆட்சி ஆண்டில் (அவன் ஆதரவைப் பெற வேண்டி) அவன் பெயரோடு கூடியவரும், தன்னாட்டவரும் ஆகிய குலசேகரப் பெருமாளுக்கு மலை மண்டலத்து மூல்லைப் பள்ளியினனும், செண்டலங்கார மகாமுனிவரின்[48] சீடனும் ஆகிய வசு தேவன் கேசவன் என்பான்[49] தன்னாட்டு மன்னன் ஆகிய ராஜசிம்மனால் (கி.பி. 1028-43) கி.பி. 1033-இல் பேரரச னாக இருந்த முதலாம் ராஜேந்திரன் (1012-1043) பெயரால் கட்டப்பெற்ற ராஜேந்திர சோழ விண்ணகரத்தில் கட்டி யதுவே[50] பிரபந்நாமிருதச் செய்தியின் மூலமாகக் கூடும் முந்து நூல்களில் காணப்படாத இச்செய்தியில் ஏதும் உண்மை இருப்பதாகத் தெரியவில்லை. மகோதையில் பெருமாள் கோயில் உள்ள பகுதி குலசேகரபுரம் என்ற பெயர் பெற்றிருத்தலால், அக்கோயிலே ஆழ்வாரின் பள்ளிப் படை ஆகலாம் என்பது இவ் ஆசிரியர் கருத்து.

ஆழ்வார் திருவரங்கப் பெருங்கோயிலின் மூன்றாம் திருச் சுற்றின் வெளிப் புறத்தில் திருமங்கை மன்னரால் கட்டப் பெற்றதாகக் கோயிலொழுகுவில் கூறப்படும் சுவற்றை ஜீர்ணோத்தாரணம் செய்து, அதனுள் தென்மேற்கு மூலையில் (திருமங்கை மன்னரால் முன்பே கட்டப்பட்டிருந்த மண்டபத்தை உள்ளடக்கி) 'சேனை வென்றான் மண்டப'த் தைக் கட்டினார் என்றும், கோயிலொழுகு கூறுகின்றது. இதில் 'சேனை வென்றான் மண்டபம்' என்பது 'சேரனை

---

48. A.R.E. 400, 403, 404 & 406 of 1916 (சடாவர்மன் குலசேகரனின் 19-ஆம் ஆண்டு) (செண்டலங்கார மகாமுனி)

49. A R E 402 of 1916 p. 20 (1209 A.D. 19th yr. ஜடாவர்மன் குலசேகரன்) (வசுதேவன் கேசவனை செண்டலங்கார தாசரின் சீடராகக் கூறுகின்றது.)

50. Rajendra Vinnagar, p. 20.

வென்றான் மண்டபம்'என்பதன் சிதைவே ஆகும். ஆகலின், இக் குலசேகரர் ஆழ்வாராக இருக்க முடியாது என்பது தேற்றம். இவரது திருப்பணி திவ்வியசூரி சரிதம், ஆறாயிரப்படி குருபரம்பரை, பிரபந்நாம்ருதம் ஆகிய முந்து நூல்களில் குறிப்பிடப்படாமையுங்கூட இது குலசேகரப் பெயர் கொண்ட ஒரு பாண்டியன் பணி ஆதலைச் சுட்டி நிற்றல் தெளிவு. முதலாம் ஜடாவர்மன் சுந்தர பாண்டியனுக்கு (கி.பி. 1251-83)[51] 'சேரனை வென்றான்' என்ற விருது இருந்ததாகத் திருவானைக்கா கல்வெட்டு[52] ஒன்றால் அறியப்படுகின்றது. எனவே, இவன் பிரதிநிதியாக இவன் மைந்தன் ஆகிய மாறவர்மன் குலசேகரன் I (1268-1312) சோணாடு ஆண்ட நாளில் இதனைக் கட்டினான் ஆதல் தெளிவு[53] . கோயிலொழுகு காலம் பற்றிய ஞானம் இன்றி, பெயர் ஒற்றுமை ஒன்றே கொண்டு பாண்டிய குலசேகரனை ஆழ்வார் குலசேகரராக மயங்கிவிட்டது. எனினும், இதே நூலின் தொடக்கத்தில் காணப்படும்

'மாட மாளிகை சூழ்திரு வீதியும், மன்னு சேர்திரு
விக்ரமன் வீதியும்,
ஆடல் (வீ)ரன் அகளங்கன் வீதியும், ஆலிநாடன்
அமர்ந்துறை வீதியும்,
கூடல் வாழ்குல சேகரன் வீதியும், குலவிராச
மகேந்திரன் வீதியும்
தேடரி யதர்ம வர்மாவின் வீதியும் தென்னரங்கர்
திருவா வரணமே''.

---

51. The Imperial Pandyas page 50 & 99-100

52. ARE 1937-38 no. 28 and p. 95.

53. Some Aspects of Pandyan History in the light of precent discoveries. p. 30, 327 74

என்ற பாடலில்* கூடல் வாழ் குலசேகரன் வீதியும்-என்ற தொடர் இக் குலசேகரனை பாண்டியன் ஆகவே கூறிச் சேறல் குறிப்பிடத் தக்கது.

*மணிமகுடம்*

சுருங்கக் கூறுமிடத்து, ஆழ்வார் ஒரு சிறந்த பக்தர்; உயர்ந்த கவிஞர்; சீரிய மன்னர். இவர் காலப் பாண்டி, பல்லவர் எல்லாமும்கூட வைணவர்களே யாதலால், வைணவத்தின் பொற்காலம் இவர் காலத்தும், இவருக்குப் பிறகு சின்னாள் வரையிலுங்கூட நீடித்திருந்தது என்னலாம். திருமங்கை மன்னரும், ஆதிசங்கரரும், நம்மாழ்வாரும் இவர் காலத்தவரே ஆதல் குறிப்பிடத் தக்கது. இவை அனைத்தையும் விட முக்கியமான செய்தி மறைமலை அடிகள் (பக். 540) கொல்லிக் கூற்றத்திற்கும், கோழிக்கும் மட்டுமே உரிய சிற்றரசராகக் கூறியவாறுபோல வன்றி, இவர் பல்லவர் காலப் பேரரசர்களுள் ஒருவரும், செங்குட்டுவனுக்குப் பிறகு சேரநாட்டு அரியணையை அணி செய்தோருள் பேரரசப் பெரும்பதத்தை எட்டிப் பிடித்தவரும் ஆவதே. நந்திவர்ம பல்லவன் காலத்தில் அத்தந்தியின் இடத்தை இவரே நிரப்புகின்றபடியால், தமிழ்நாட்டின் வரலாற்றிலுங் கூட இவருக்கென ஒரு தனி இடம் உண்டு. சேர, சோழ, பாண்டி, பல்லவ முடிகெழு வேந்தர் நால்வருள்ளும் இவர் மட்டுமே ஆழ்வார் ஆகும் பேறு பெற்றமை பெரிதும் எண்ணத்தக்கது. இவற்றால் இவரை குருபரம்பரைகள் கூறும் கவுஸ்துபாம்சர் ஆகக் கொள்விதிலும், திருமால் சென்னிக் கணி செய்யும் மணிமகுடம் (Jewelled Crown) ஆகக் கோடலே சிறப்பு. வெயில் நிழலுக்கே ஆசைப்படுவது போல, இம் மகுடம் படியாய் கிடந்த (திருமாலின்) பவளவாய் காண விழைந்தது எவ்வளவு இயற்கை யாக உள்ளது!

---

* (அடல், ஆடல் என நீண்டது; வீரன் என இருக்க வேண்டியது மாறன் எனத் தவறாக இப்போதைய பிரதிகளில் உள்ளது)

அடுத்து, சைவ-வைணப் போராட்டத்தில் ஆழ்வாரின் நிலைமை என்ன? இவர் தாக்குதல் செய்து சிறப்புற்றாரா, அல்லது தாக்குதல் ஒன்றிற்குப் பலியாகிச் சிறப்புற்றாரா? பாம்புக் குடத்தில் கையிடும் படி நேர்ந்த ஒரு இடத்தில் மட்டுந்தான், இதற்கான மோப்பம் கிடைக்கின்றது. இந்த ஆபத்தான நிலைக்கு இவர் செல்லும்படிக்கு செய்த அமைச்சர்கள் அனேகமாக சைவ சமையத்தவரே ஆக வேண்டும். ஏனெனில், இவரைப் போலவே பக்தியில் ஈடு பட்டு அரசு காரியங்களில் சற்றே அசட்டையாக இருந்த சேரமான்பெருமாள் நாயனார் திறத்தே இதே அமைச்சர்கள் தந்திர, மந்திரங்கள் செய்ததாக வரலாறு இல்லை! ஆகவே, சைவம் வைணவர்கள் அரசராய் இருந்த போதும் தன் வாலை அசைக்கவே செய்தது—என்பதுதான் குலசேகராழ்வார் வரலாறு நமக்கு உரைக்கும் முக்ய செய்தி.

## ஆசிரியரின் தனியன்

மன்னருள் ஆழ்வார் தானொரு வன்னே;
சென்னி குலந்தர வந்த சேரமான்;
தென்றிசைக்கொரு திலதமேயனான்;
செந்தமிழ்க்குல சேகரப் பெருமாளே.

(சென்னி குலம் — சோழர்குலம்; திலதம் — திலகம்)

# 7. குரு (கை) நாதன்

## (கி பி. 815-833)

---

*சில ஆதாரங்கள்*

நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் 1296 பாடல்களின் ஆசிரியர் நம்மாழ்வார். இவை 7-ஆசிரியப் பாக்களால் ஆன திருவாசிரியம், 87-வெண்பாக்களால் ஆன பெரிய திருவந்தாதி, 100-கட்டளைக் கலித்துறைகளான் இயன்ற திருவிருத்தம், ஒன்பது வகைப் பாக்கள்* 1102 கொண்ட திருவாய்மொழி ஆகிய நான்கு பிரபந்தங்களாக உள்ளன. முதல் இரண்டிலும் வரலாற்றுக்கு உதவும்செய்தி எதுவுமே இல்லை. திருவிருத்தத்தில் ஆழ்வாரின் ஊர் குருகூர் என்பதையும், இயற்பெயர் மாறன் ஆதலையும் தவிர வேறேதும் இல்லை.

---

* திருவாய் மொழியிற் காணும் 9-வகைப் பாவினங்களின் விவரம்

1. ஆசிரியத்துறை 5 பதிகம் 55 பா. 2-7ல் அதிகப்படியாக 002பா. (பன்னிரு திருநாமப் பதிகம்)
2. 6 சீர். ஆசி. விருத். 21 பதிகம் 231 பா.
3. 7 சீர். ஆசி. விருத். 06 பதிகம் 066 பா.
4. 8 சீர். ஆசி. விருத். 05 பதிகம் 055 பா.
5. கலிநிலைத்துறை 21 பதிகம் 233 பா.
6. கலி விருத். 29 பதி. 319 பா.
7. தர. கொக்கலி 08 பதி. 088 பா.
8. வஞ்சித்துறை 03 பதி. 033 பா
9. வஞ்சி விருத் 02 பதி. 022 பா

மொத்தம் 100 பதிகம் 1102 பா.

சரமப் பிரபந்தமாக வழங்கும் திருவாய் மொழியில் இவருக்கு 'சடகோபன்' என இன்னொரு பெயர் இருந்தமையும், தந்தை காரியார் ஆதலும், நாடு பாண்டி மண்டலத்துத் திருவழுதி வளநாடு ஆதலும், அறியாப் பருவந் தொட்டே இவர் திருமால் பத்திமையில் மேம்பட்டு விளங்கியமையும் (திருவா. 2-3,8), வகுளாபரணர் (மகிழமாலை தரித்தவர்) ஆதலும் (திருவா. 4-10,10) மட்டுமே புலப்படுகின்றன. இவரால் பாடப்பட்ட 34 நிலவுலகத் தலங்களுள் அயோத்தி, துவாரகை, வடமதுரை ஆகிய மூன்று மட்டும்வட நாட்டின. இவருடைய சீடர் மதுரகவி ஆதல் மதுரகவியே செய்த 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்ற பதிகத்தால் அறியப்படு கின்றது.

இனி, குருபரம்பரைகளிற் காணப்படும் செய்திகளை நோக்குவோம். இவருடைய தாயார் பெயர் உடைய நங்கையார்; தந்தையார் ஆகிய காரியார் திருவழுதி வளநாட்டுக் குறுநில மன்னர்; வேளாண் குடியினர். பிள்ளைப் பேறு இல்லாமையால், இத் தம்பதிகள் குறுங்குடிப் பெருமானைத் தொழுது வெகுதான்ய ஆண்டு, வைகாசித் திங்களில் விசாக பவுர்ணமி கூடிய வெள்ளிக் கிழமை யன்று கடக லக்னத்தில் நம்மாழ்வாரைப் பெற்றெடுத்தனர். பிள்ளைப் பிராயம் தொட்டே மவுனியாக குருகூர்க் கோயில் புளிய மரத்தடியில் நிட்டையில் இருந்து 16-ஆம் வயதில் மதுர கவியால் சந்திக்கப் பெற்ற போது, பேசத் தொடங்கி, சுமார் 4½ ஆண்டுகளில் தமது நான்கு பிரபந்தங்களையும் பாடினார். திருவாய்மொழியை திருவரங்கத்தில் மார்கழிப் பெருவிழாவின் போது அத்யயனம் (ஓதுதல்) செய்ய திரு மங்கையாழ்வார் ஏற்பாடு செய்தார் என்பது கோயிலொழுகு வில் மட்டும் காணப்படுகிறது. இவர் ஆயுட்காலம் 35 ஆண்டுகள் என்பது மூவாயிரப்படி குருபரம்பரை கூறும் முக்ய செய்தி. இவருக்குப் பின்னும் 50 ஆண்டுகள் வாழ்ந்து, இவர் இயற்றிய பிரபந்தங்களையும் (ஏனைய ஆழ் வார்களின் பிரபந்தங்களையும்) மதுரகவிகள் உலகிடைப் பரப்பி வந்தார். நம்மாழ்வாரின் நூற்களில் காணப்படாத

'பராங்குசன்' என்ற பெயர் மிகையாக எல்லா குருபரம் பரைகளிலும் காணப்படுகிறது. இவற்றை ஆதாரமாகக் கொண்டே நம்மாழ்வாரின் கால ஆராய்ச்சி தொடங்கிற்று. இனி, நாம் இவற்றை ஒவ்வொன்றாக கால முறைப்படி ஆய்வோம்.

## கி. பி. 5-ஆம் நூற்றாண்டினரா? (1)

நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தை உலகிடைப் பரப்பிய நாதமுனிகளின் காலம் ராகவையங்கார் கருத்துப்படி கி.பி. 823-918 ஆகும். இவர் பிரபந்தத்தை நம்மாழ்வாரிடமிருந்து நேரிற் பெற்றார் என்றொரு கருத்தும் உண்டு. இவர் 340 ஆண்டுகள் யோகத்தில் இருந்ததாகவும் கூறப்படுகின்றது. முன்னூற்று நாற்பது ஆண்டு கட்கு முன்பே மறைந்து விட்ட நம்மாழ்வாரிடமிருந்து நாதமுனிகள் யோகத்தினால் பிரபந் தங்களைப் பெற்றமையையே மேலைச் செய்திகள் குறிப்பன வாகலாம். அதாவது, நாதமுனிகள் இக் கொடையைப் பெற்றது தமது வாழ்க்கையின் நடுப்பகுதிக்குச் சமமான கி.பி. 870 இல் ஆகில், நம்மாழ்வார் மறைந்த காலத்தை நாம் கி.பி. 530 ஆக உத்தேசமாய்க் கொள்ளலாம். இதன் படி நம்மாழ்வார் காலம் சுமார் கி.பி. 500-530 ஆகின்றது. இவர் பிறந்தது ஒரு வெகுதான்ய ஆண்டில் என்பது உண்மையாகில் கி.பி. 498-533 இவர் காலம் ஆகக்கூடும். இதுவே இவருக்காகக் கொள்ளக் கூடிய காலங்களில் எல்லாம் மிக முந்தியதாகும்.

கி.பி. 498-533-ஏ நம்மாழ்வார் காலம் என்ற கொள்கை சங்ககாலப் பொய்கையாரே பொய்கை ஆழ்வார் என்று ராகவையங்கார் ஆதியிற் கருதிய கொள்கையை அரண் செய்கின்றது. இதை ஒப்புக் கொண்ட கிருஷ்ணசாமி அய் யங்கார் பொய்கையார் முதலான முதலாழ்வார்களுக்கும் பின்னும் நெடுங்காலம் வாழ்ந்த திருமழிசைப்பிரானை கி.பி. 4-ஆம் நூற்றாண்டினராக்கக் கருதவேண்டிய கட்டாயத்திற்கு ஆளாய்விட் டிருந்தார். இதனால் நான்முகன் திருவந்தாதி

யிற் போந்த 'குணபரன்' என்ற பெயர் மகேந்திரவர்மனை நினைவிற் கொண்டதன்று என ஏறத்தாழ ஒரு தீவிர சைவரைப் போலவே இவர் வாதித்தமையை முன்பே கண்டுள்ளோம்.

ஆனால், இந்தக் கொள்கைக்கு மிகப் பல தடைகள் உள்ளன. முதலாழ்வார்கள் காலம் கி.பி. 6-ஆம் நூற்றாண்டே என அறுதி செய்யப்பட்டு விட்டபடியால், நம்மாழ்வார் காலம் இதற்கு பிற்பட்டதே என்பதும் உறுதிப்படுகின்றது. சிற்றரசர் குடியிற் பிறந்த நம்மாழ்வார் உடையன வாகக் கூறப்படும் மாறன், பராங்குசன் என்ற பெயர்கள் இவர் கி.பி. 600 அளவில் பாண்டியர் தம் நாட்டை மீட்டுக்கொண்டு ஆட்சி செய்யத் தொடங்கிய பிறகே வாழ்ந்தவர் ஆக வேண்டுதலைத் தெளிவாகக் காட்டுகின்றன. இவர் நூற்களில் முத்திரைக் கவி பயிறலும் இவர் பிற்காலத்தவர் ஆதற்கொரு சான்றாகும். இவை அனைத்திற்கும் மேலாக இவரால் பாடப்பட்ட மலை நாட்டு திருக்காட்கரை கி.பி. 603-லேயே கட்டப்பட்ட தாதல் "ஸ்வஸ்தி ஸ்ரீ திருக்காற்கரைப் பெருமாள் தர்வவாதிச்சஞ் (அதாவது, தர்ப்பாதித்தம்—முதல் பிரதிஷ்டை) செய்தருளிச் செல்லா நின்ற (கல்யப்தம்) மூவாயிரத்து எழுநூற்று ஐயாண்டிற்கு எதிராமாண்டு" என்ற சாஸனத் தொடரால் அறியப்படுகின்றது[1].

## *சேந்த மாறன் காலத்தவரா? (2)*

இரண்டாவது கொள்கை சின்னமனூர்ச் செப்பேடுகளில் அரிகேசரி பராங்குசன் என்று ஒரு பாண்டியன் குறிப்பிடப் படுவதை அடியாகக் கொண்டது. நம்மாழ்வாரின் பெயர்களுள் பராங்குசன் என்பதும் ஒன்று. காரியார் திருவழுதி வள நாட்டின் மன்னராக இருந்தபடியால், பேரரசர் பெயரைச் சிற்றரசர் தரிக்கும் வழக்கப்படி, இவர் இப்பெயரைத் தம்

1. இலக்கியச் சாஸன வழக்காறுகள் பக். 180 & 291 மற்றும் T.A.S. III

தவமகனுக்கு இட்டிருக்கலாம். அறிஞர் நீலகண்ட சாஸ்திரி யார்[2] கொள்கைப்படி இவ் அரிகேசரி பராங்குசன் சம்பந்தரால் ஆட்கொள்ளப்பட்ட அரிகேசரி நெடுமாறனே. இனி, இந் நெடுமாறனின் காலம் சுமார் கி.பி. 660-710. இக் காலத்திய வெகுதான்ய ஆண்டு கி.பி. 678 ஒன்றே. எனவே, நம்மாழ்வார் காலம் கி.பி. 678-713 என்னலாம்.

இவ் இரண்டாம் கொள்கையின்படி நம்மாழ்வார் முதலாழ்வார்களுக்கும் திருப்பாணாழ்வார் மற்றும் திருமழிசைப் பிரானுக்கும் தவிர மற்றவர்களுக்கெல்லாம் முற்பட்டவர் ஆகிறார். முத்திரைக்கவியின்றி பனுவல்களைச் செய்யும் முற்கால வழக்கப்படி திருவாசிரியத்தையும், பெரிய திருவந்தாதியையும் முடித்து, திரு விருத்தத்திலும், திருவாய்மொழியில் (பதிகந்தோறும்) தம்மைப் பற்றிய செய்திகளையும், பயில்வோர் எய்தலாம் பயன்களையும் கூறிச் சேறலானும் இவரை இவ் இரு தொகுதி ஆழ்வார்களுக்கும் இடைப்பட்டவராகக் கருத இடமுண்மை கிருஷ்ணசாமி அய்யங்காரின் கொள்கைக்கு ஏற்ப உள்ளது. மூவாயிரப்படி குருபரம்பரையும், உபதேசரத்தினமாலையில் மணவாள மாமுனிகள் காட்டியுள்ள திருமுடி அடைவும் கூட அய்யங்காரின் கொள்கைக்கு ஆதரவாகவே உள்ளன. நம்மாழ்வார் அவயவியாகவும், ஏனைய ஆழ்வார்கள் எல்லாம் அவயவங்களாகவும் கருதப்பட்டு வரும் மரபும் இதனால் ஒரு விளக்கம் பெறுகின்றது. கடைசியாக, கி.பி. 713-இல் திருநாடு அலங்கரித்த நம்மாழ்வாருக்குள் இவரிடமிருந்து பிரபந்தங்களைப் பெற்று உலகிடைப் பரப்பிய நாதமுனிகளுக்கும் (கி.பி. 823-917) (கிருஷ்ணசாமி அய்யங்கார், ராகவையங்கார், கோபிநாத ராவ் இவர்களின் கொள்கைப்படி) இருந்த நீண்ட கால இடையீடு நாதமுனிகள் நீண்ட காலம் (340 ஆண்டுகள் என்று நூல்கள் கூறும்) யோகத்தில் அமர்ந்திருந்தார் என்ற கதையாலும் இனிது விளங்குமென்பர் ராவ்சாகிப் கிருஷ்ண

2. Pandyan Kingdom p. 34

சாமி அய்யங்கார் அவர்கள்3. எதையாவது ஒன்றை விளக்க முடியாவிட்டால் யோகம், ஞானம், திருவருள் என்றெல்லாம் மழுப்பி விடுவது பவுராணிக மரபாதலை இவர் இதற்கு ஆதா ரமாகச் சுட்டிக் காட்டினரர்.

இக் கொள்கைக்கு ஆதரவாக இன்னொரு சான்றும் உண்டு. 'அரியலால் தேவி இல்லை' (IV-40,5)என்று கூறி, 'குடமாடி இடமாகக் கொண்டான்'-என்று அப்பர் காட்டிய சங்கர-நாராயண உருவை ஒப்புக்கொண்டு, "பிறை தங்கு சடையானை வலத்தே வைத்து"-(பெரிய திரு:3-4,9) எனத் திருமங்கை மன்னர் ஓதியதற்கு மாறாக,

"வலத்தனன், திரிபுரம் எரித்தவன் இடம்பெற, உந்தித்
தலத்தெழு திசைமுகன் படைத்த உலகம்"
(திருவா. 1-4,9)

என நம்மாழ்வார் ஓதியுள்ளார். எனவே, இவர் அப்பருக்கும் முற்பட்டவர் ஆக வேண்டுதல் தெளிவு. ஆயினும்,

"மாதொரு பாலும், மாலொரு பாலும் மகிழ்கின்ற நாதன்" (I-97,2)

எனச் சம்பந்தர் கூறிச் சேறலால், திருமாலை இடப்பாகத் திற்கொண்ட சங்கர-நாராயண உருவை உண்டாக்கியவர் அப்பரே ஆதலும் தெரிகின்றது. ஆகவே, நம்மாழ்வார், காலத்திய மாறன் சம்பந்தரால் ஆட்கொள்ளப் பெற்ற நெடு மாறனே ஆதல் கூடுவதே என்னலாம்.

ஆனால், திருவாசிரியமும், பெரிய திருவந்தாதியும் முத்திரைக் கவி இல்லாமல் இருப்பதற்கு வேறு காரணமும் இருக்கலாம். பெரிய திருவந்தாதி 87-பாடல் களும் (நூற்றுக்குக் குறைவான எண்), திருவாசிரியம் 7-பாடல்கள் மட்டுமேயும் (பத்துக்குக் குறைவான எண்) கொண்டு மூளியாய் இருப்பது இவற்றுள் முன்னதில் 13-பாடல்களும், பின்னதில் 3-பாடல்களும் மறைந்துவிட்டி ருக்கலாம் என்ற ஐயப்பாட்டிற்கு இடம் அளிக்கிறது. மேலும், 'செக்கர் மாமுகிலுடுத்து' என்று தொடங்கும் திரு வாசிரியம் மீண்டும் 'செக்கர்' என்ற சொல்லிலேயே மண்ட

வித்து முடியாமையும், 'அண்டகோளத் தாரணு*,'-என்றொரு பாடல் ஆழ்வார் அருளிச் செயலாகக் கிடைத்துள்ளமையும் இவ் ஐயப்பாட்டை உறுதி செய்கின்றன.

---

* "அண்ட கோளத் தாரணு வாகிப்
பிண்டம் பூத்த பேரெழில் ஒருமை
ஈருயிர் மருங்கின் ஆருயிர் தொகுத்து
நித்திலத் தன்ன வெண்மணற் பரப்பில்
வேரும், வித்தும் இன்றித் தானே
தன்னிலை அறியாத் தொன்மிகு பெருமா
மூவழி முப்பழம் முறைமுறை தருதலின்
ஒன்றுண்(டு) ஒண்சுவை தருவது மற்றது
கல்லின் எழுந்து கடலின் அழுந்தி
அறுகாற் குறவன் நீரற விளைக்கும்
செறிபொழிற் குப்பை தருகண் ஒன்றுவித்(து)
அறுகோட் டாமா விளைக்கும் நாடன்
அவனே தலையிலி; அவன்மகள் முலையிலி;
தானும் ஈனாள்; ஈனவும் படாஅள்;
எழுவர் மூவர் சிறுவரைப் பயந்தனள்;
அவளிவள் உவளென அறிதல்
துவளறு காட்சிப் புலவரது கடனே"

என்ற பாடல் ஆழ்வார் 'வேதம் தமிழ் செய்த பெருமாள் வந்தார்' என்ற மதுரகவிகள் ஊதியவிருதை ஆட்சேபித்த சங்கத்தார் பொருட்டு ஆழ்வார் பாடிய தனிப்பாடலாகச் சொல்லப் படுகிறது. ஆயினும், 'கண்ணன் கழலிணை' (திருவாய் : 10-5,1) என்ற பாடலே இம் மாதிரி சங்கத்தாரிடம் மதுரகவி களால் கொடுக்கப்பட்டதாக குருபரம்பரைகளில் காணப் படுகிறது. எனவே, இது திருவாசிரியத்தைச் சேர்ந்ததாக லாம் என்பது நமது கருத்து. இந்தப் பாடல் 'செக்கர்'-என முதற்பாடலோடு, மண்டலித்து முடியாமையாலும், திருவாசிரியத்தின் இப்போதைய ஈற்றுப் பாடலோடு இயைபுற்று இராமையாலும் இதனை திருவாசிரியத்தின் 9-ஆம் பாட லாகக் கொள்ளலாம். இதற்கு உ. வே. திரு நாராயண அய்யங்கார் ஒரு விரிவுரை செய்துள்ளனர்.

கிருஷ்ணசாமி அய்யங்காரின் கொள்கைக்கு வேறு இரண்டு தடைகளும் அன்றே இருந்தன. ஸ்ரீவரமங்கலச் செப்பேடுகள் வேலங்குடி ஜடில பராந்தகனால் அவன் ஆட்சியின் 17-ஆம் ஆண்டில் ஸ்ரீவரமங்கலநகர் எனப் பெயர் மாற்றி தானம் செய்யப்பட்டதைக் குறிப்பிடுகின்றன. இவ் ஆண்டு கி.பி. 784 ஆகும். இதனைப் பாடியுள்ள நம்மாழ்வார் இக் கி.பி. 784க்குப் பிற்பட்டவரே ஆக வேண்டுதல் தெளிவு. இரண்டாவதாக, இங்ஙனமே இவ் ஆழ்வார் வரகுணமங்கை என்று ஒரு தலத்தையும் "புளிங்குடிக் கிடந்து, வரகுண மங்கையிருந்து, வைகுந்தத்துள் நின்று" (திருவா. 9-2,4) என்ற அடியில் குறித்துள்ளார். வரகுணனை நீலகண்ட சாஸ்திரியாரைப் பின்பற்றி பராந்தக நெடுஞ்சடையனாகவே கொண்டாலும் கூட, நம்மாழ்வார் கி.பி. 678-713க்கு உரியவர் ஆகக்கூடாமை தேற்றம்.

வரகுணமங்கை என்பது ஒரு வரகுண பாண்டியனால் ஏற்படுத்தப்பட்ட ஊராகத்தான் இருக்க வேண்டும் என்பது இல்லை என்பது கிருஷ்ணசாமி அய்யங்கார் ராகவையங்கார் ஆகிய இருவருடையவும் வாதம். வரகுணப் பெயர்[4:5] பெண் பாலாரிற் பலராற் பூணப்பட்டிருந்ததால் அப்படி ஒரு வரகுண அரசியாலோ அல்லது 'அலர்மேல் மங்காபுரம்' என்பது போல அவ் ஊர்த் தாயாரின் பெயர் ஆகிய வரகுண வல்லி என்பதன் அடியாகவோ அப் பெயர் அவ்வூருக்கு அமைந்திருக்கலாம் என்று இவர்கள் கருதினர்.

இங்ஙனமே சீவர மங்கலச் செப்பேடுகள் இன்ன ஊரிற் கண்டெடுக்கப் பட்டவை என்று இவற்றை வெளியிட்ட அறிஞர் வெங்கையா கூறாமலே போய்விட்டதால், செப் பேடுகள் குறிப்பிடும் சீவரமங்கலம் நம்மாழ்வாரால் பாடப் பட்ட நாங்குனேரி ஆகிய சீவரமங்கலம் தான் என்று ஏன் கொள்ள வேண்டும்?—என்றும் கேட்கின்றனர் இவ்விரு பேராசிரியர்களும். சீவரமங்கலத்தை தன்னகத்தே கொண்

4. S.I.I., Vol. XIII, no. 233; S.I.I., Vol. XIII, no. 240; & S.I.I. Vol. XIII, no. 568. [வரகுணப் பெருமானார் பற்றியன].

5. ARE 337 of 1904; IPS no. 45; S.I.I. Vol. XIX no. 155 [வரகுணத்தி பற்றியன].

டிருந்த தென்களவழி நாடு வைகையின் தென்கரைப் பகுதி என்பதும், வைகையின் வடபாலுள்ள சிவகங்கை வட்டமே வடகளவழி நாடாம் என்பதும் ராகவையங்கார் அவர்கள் கருத்து. திருப்பூவணப் பட்டயத்தில் வைகை யாற்றுக்குப் பக்கத்தில் ஓடும் பறளி ஆறு களவழி நாடன் ஆறு எனப் படுவதை சுட்டிக் காட்டி, மானாமதுரைக்குத் தெற்கே சீவரமங்கலச் செப்பேடுகளில் சீவரமங்கலத்திற்கு எல்லை யாகக் கூறப்பட்ட வேலங்குடி, கடம்பங்குடி, கள்ளிகுடி, குரங்குடி என்ற பெயர்களோடு ஒத்த பெயருள்ள ஊர்கள் உண்மையைக் குறிப்பிட்டு, இவற்றிடையேதான் நெடுஞ் சடையனால் ஏற்படுத்தப்பட்ட சீவரமங்கலம் இருந்திருக்க வேண்டும் என்றும் அவர் தொடக்கத்தில் கருதினார்7; வடகளவழி நாட்டினதாக சின்மைனூர்ப் பெரிய செப்பேடு களில் கூறப்படும் திசைச் சுடர் மங்கலம் என்பதுவும் மங்கலம் என்ற பெயரோடு சிவகங்கை சீமையில் உள்ள ஊரே என்றும் அறுதி யிட்டார். ஆனால், 'திசைச்சுடர் மங்கலம் மணியாச்சி ஆகிய திசைச்சுடர் மங்கலம்'—என்று செப்பேடுகளில் மறு பெயரோடும் கூறப்பட்டிருப்பதால், அது இந் நாள் மணியாச்சி என்ற பெயரோடு நெல்லை மாவட்டத்திற் காணும் ஊரே ஆதல் தெரிகின்றது. எனவே, இம் மணியாச்சி அளவும் செப்பேடுகளிற் கூறப்பட்டபடி அப் பழங்காலத்தே வடகளவழி நாடாகவே கருதப்பட்டமை தேற்றம். தேறவே, நாங்குனேரியே சிரீவரமங்கல மாதல் காணப்படும். அண்மையில் ராகவையங்கார் அவர்களே இதனை ஒப்புக் கொண்டு, இந் நாங்குனேரிக் கருகில் சிரீவரமங்கல நகருக்குக் கூறப்பட்ட எல்லைகளை தற் காலத்திய திருக்குறுங்குடி (தெ. மேற்கு), கடம்பகுடி வளவு (வடமேற்கு), கள்ளிக்குளம் (தெற்கு). காராளவயல் (வடக்கு) ஆகிய சிற்றூர்களாகக் கருதினர். இவ்வூர்களுக்கு அண்மை யில் ஸ்ரீவரயங்கைபுரம் என்றோர் சிற்றூர் உண்மையும் தமது கொள்கை மாற்றத்திற்கு இன்னொருக் காரணமாகக் கூறினார்.8

---

7. இலக்கியச் சாஸன வழக்காறுகள் பக். 135.
8. இலக்கியச் சாஸன வழக்காறுகள் பக். 285

*முதலாம் ராஜசிம்மன் காலத்தவரா? (3)*

இனி, ஜடில பராந்தகன் தந்தை ஆகிய முதலாம் ராஜசிம்மனை சின்மைனூர் பெரிய செப்பேடுகள் கூறும் அரிகேசரி பராங்குசனாக அறிஞர் வெங்கையா கருதிய வாறே கொண்டால், நம்மாழ்வார் கி.பி. 738-773க்கு உரிய வராகக் காண்போம். இக்கொள்கைக்கும் கிருஷ்ணசாமி அய்யங்காரின் கொள்கைக் கிருந்த சிறப்புகளுள் மிகப் பல பொருந்துகின்றன. கூடுதலாக, முதலாம் ராஜசிம்மனிடம் மாறங்காரி என்றே ஒருவர் உத்தர மந்திரி ஆகவும் பணி யாற்றியுள்ளார். இவருக்கே 'மதுரகவி' என்று ஒரு பெயரை ஆனைமலைக் கல்வெட்டில் கண்டறிந்த அறிஞர் கோபி நாதராவ்[9] அவர்கள் நம்மாழ்வாருக்கு கி.பி. 738-773-ஐயே உகந்த காலமாகக் கருதினர்.(பக் 19) நம்மாழ்வாரை இம் மாறன்காரியின் மைந்த ராகவும், இம்மாறன்காரியின் மற்றொரு பெயர் ஆகிய மதுரகவி என்பதனை நம்மாழ் வாரே தாச நாமமாக தமது சீடருக்கு இட்டனர் என்றும் ராயர் அவர்கள் கருதினர். கரவந்தபுரத்து மாறங் காரி திருவழுதி வளநாட்டு மன்னராகப் பணியாற்றிய காலத்தில் குருகூரில் வாழ்ந்தமையால், ஆழ்வார் குருகூரைத் தம் ஊராகக் குறித்தன ராகலாம் என்பதும் அவர் கருத்து.

இந்தக் கருத்து தற்காலத்திய நியமனம் (appointment), இடமாற்றம் (transfer) போன்றவற்றை மனத்திற் கொண்டு இருப்பது தேற்றம். ஆனால், அந்த நாளில் பாரம்பரிய உரிமையே வழக்கில் இருந்தபடியால், களக்குடி நாட்டின் தலைநகராக கல்வெட்டுகளில் அறியப்படும் களக்குடி[10] ஆகிய கரவந்தபுரத்தவர் இக் கரவந்தபுரத்திற்கே அரசர் ஆகக் கடவரே யன்றி, திருவழுதி வளநாட்டின் அரசர்

---

9. கோபிநாதராவ் T.A., செந்தமிழ் (1906) பக்.

10. களக்குடி E. I. 23, no. 45, p. 284 இல் கூறப்பட்ட படி நாங்குனேரி வட்டத்து களக்காடு அன்று; இது தென்காசிக்கு அருகில் காடுவெட்டி சிவாலயத்திற் கண்ட களக்குடி நாட்டுக் களக்குடியே. ARE no. 328, 456 (1918).

ஆதற்கில்லை. இரண்டாவதாக, நம்மாழ்வாரின் தந்தை வேளாண் குலத்தவராக நூல்களில் கூறப்பட, கரவந்த புரத்து மாறங்காரியோ மறவராதலை இவருடைய இனவழின் பெயர் மாறன்எயினன் ஆதலில் இருந்து அறிஞர் கே. ஜி. சங்கர்[11] அவர்கள் ஊகிக்கின்றனர் (எயினன்-மறவன்). மோகூரைப் பாடிய (திருவா. 10-1) நம்மாழ்வார் இதற்கு அருகிலேயே யானை மலையில் மாறங்காரியினால் குடையப் பட்ட நரசிங்கப் பெருமான் ஆலயத்தைப் பாடாமையும் இவர் உத்திர மந்திரி ஆகிய மாறங்காரியின் மகனார் அல்லர் என்பதைக் காட்டப் போதிய அளவு வலிய சான்று என்றும் இவர் கூறினார்.[11] வடமொழிச் சாஸனத்து ஆசிரியனும் தமிழ்ச் சாஸனத்து ஆசிரியன் ஆகிய மாறன் எயினனே என்று காட்டி, இவ்வகையில் வடமொழிச் சாஸனத்தில் காணப்படும் மதுரகவி என்ற பெயருங்கூட மாறன் எயினன் உடையதாக வேண்டுமே யன்றி, ராயர் அவர்கள் கருதுமாறு போல, அது மாறங்காரியின் உடையது அன்று என்று அய்யங்கார் அவர்கள் நிறுவியுள்ளனர்[12]. மேலும், தாஸ்ய நாமம் என்பது தெய்வம் அல்லது ஆசார் யர் பெயரை சீடர்களுக்கு இடுவதுதானே தவிர, ராயர் கருதுமாறு போல பெற்றோர் பெயரை இடுவதன்று என்பது ராகவையங்கார் அவர்களின் கருத்து.[12a] கடைசியாக, ராயர் கருத்தை உண்மை யாகவே கொண்டாலும், இந்தக் கொள்கை சீவர மங்கலச் செப்பேட்டுச் செய்திக்கு ஒத்து வராமை குறிப்பிடத் தக்கது.

## இரண்டாம் ராஜசிமமன் காலத்தவரே (?)

இனி, அடுத்த வெகுதான்ய ஆகிய கி.பி. 798-இல் மாறன் பராங்குசன் என்ற பெயரோடு பாண்டியன் யாரே னும் இருந்த துண்டோ என்பதும் ஆராயத் தக்கதே. அறிஞர் வெங்கையாவின் குடிவழிப் படத்தில் இக் காலப்

11. K.G. சங்கர் J. Oriental Rasearch, I. P. 34(1927)
12. இலக்கியச் சாஸன வழக்காறுகள் பக். 150
12a இலக்கியச் சாஸன வழக்காறுகள் பக். 291

பகுதிக்கு உரியவனாக இரண்டாம் இராஜசிம்மன் என்றொருவன் காணப்படல் குறிப்பிடத் தக்கது. இவன் காலம் கி.பி. 790-821 ஆகக் கூடுதலும், குலசேகர ஆழ்வார் இவன் காலத்தினரே ஆதலும் முன்பே கண்டுள்ளோம். இவனுக்கே பராங்குசப் பெயரும் இருந்த தாகலாம். தனது பாட்டனாகிய நெல்வேலிச் செருவென்ற நின்றசீர் நெடுமாறனின் பெயராகிய அரிகேசரி என்பதனை பராங்குசன் முதலாம் ராஜசிம்மனும் தரித்திருந்தாற் போலவே, இரண்டாம் ராஜசிம்மனும் முதலாம் ராஜசிம்மனுக்கிருந்தபராங்குசப் பெயரைத் தானும் தரித்து இருந்திருக்கலாம். இந் நான்காவது கொள்கையின் சாதக பாதகங்களை இனி ஆராய்வோம்.

முத்திரைக் கவி வழியாகவும், மூவாயிரப்படி குருபரம்பரை வழியாகவும், உபதேசரத்னமாலையில் கண்ட அளவுக்கு மாறாகவும், நம்மாழ்வாரை அவயவியாகக் கொள்ளும் மரபுக்கு முரணாகவும் நான்காவது கொள்கை நம்மாழ்வாரை அனைவர்க்கும் பிற்பட்டவராகச் காட்டுதல் ஒரு பெருங் குறை. ஆனால், ராமானுஜர் காலந்தொட்டே நம்மாழ்வாரை அனைவர்க்கும் பிற்பட்டவராகக் கொள்ளும் வழக்கமும் இருந்து வருதலை இராமனுஜ நூற்றந்தாதி வாயிலாக அறிந்துள்ளோம். நம்மாழ்வாரை அவர் தலைமை பற்றி அவயவியாகவும், ஏனையோரை அவயவங்களாகவும் கொள்ளப் பட்ட தத்துவக் கற்பனையே பிற்காலத்தில் வரலாறாகவும் மாற்றிக் கொள்ளப்பட்டிருக்கலா மாசையால், இந்தத் தடையில் அதிகம் பொருண்மை இல்லை. நம்மாழ்வாருக்கும், நாதமுனிகட்கும் இடையேயுள்ள கால இடையீடு மிக நீண்டதாய் இருந்ததாலேயே நாதமுனிகள் வெகுகாலம் யோகத்தில் அமர்ந்தருளி இருந்தார் என்ற பவுராணிகம் ஏற்பட்டிருக்கக் கூடும் என்று நாம் கொண்ட முடிவுக்கு நம்மாழ்வார் காலத்தைப் பற்றிய நான்காவது கொள்கை அவ்வளவு உகந்ததாய் இல்லை. ஆயினும், மூவாயிரப்படி குருபரம்பரை நம்மாழ்வாரை மிக முற்பட்டவராகக் கொண்டதே இதற்கும் காரணமாகக் கூடுதலால், இதனையும் நாம் பொருட்படுத்தத் தேவையில்லை.

அண்மையில் பெரும்புலவர் ராகவையங்கார் அவர்களின் கடைசிக் கட்டுரை[13] தென்னிந்திய தொல்பொருள் ஆராய்ச்சிக் கழகத்தின் கூட்டத்தில் வாசிக்கப்பட்டது. இதில் நாங்குனேரியை அடுத்த விஜய நாராயணத்துப் பெருமாள் கோயில் கல்வெட்டுக்களில் அக் கோயில் 'சடகோப விண்ணகரம்' எனவும்,[14] 'வரகுண விண்ணகரம்' எனவும்[15] இரண்டு பெயர்கள் கொண்டிருப்பதை எடுத்துக் காட்டி, அது 'சடகோபன்' எனப் பெயரிய தொரு பாண்டியனால் தொடங்கப்பட்டு, 'வரகுணன்' என்ற இன்னொரு பாண்டியனால் முடிக்கப்பட்டதாகலாம் என்று ஒரு கருத்தைத் தெரிவித்தனர். மேற்கொண்டு, இந்தச் 'சடகோபன்' அறிஞர் வெங்கையாவின் பட்டியலில் (பின்னிணைப்பு-7) கண்ட இரண்டாம் ராஜசிம்மனும், வரகுணன் மேற்படி பட்டியலிற் கண்ட முதலாம் வரகுணனுமே ஆகக் கடவர் என்றும் முடித்தார். மாணிக்கவாசகர், பட்டினத்துப் பிள்ளையார், நம்பியாண்டார் நம்பி ஆகிய பெருமக்களால் பெரிதும் புகழப் பட்ட வரகுண தேவர் இரண்டாம் வரகுண பாண்டியனே ஆதலை தளவாய்புரச் செப்பேடுகள் சுட்டுவதாலும், இரண்டாம் ராஜசிம்மனும், முதலாம் வரகுணனும் 'பரம வைஷ்ணவன்' ஆகிய நெடுஞ்சடையன் பராந்தகனோடு மகனும், பெயரனும் ஆகின்றவகையில் நேர்த்தொடர்பு உடையவர்கள் ஆதலாலும் அய்யங்கார் கொண்ட முடிவுகள் நூற்றுக்கு நூறு ஒப்புக் கொள்ளத் தக்கனவே. மேலும், சிவகாசிச் செப்பேடுகளில் முதலாம் வரகுணன் 'திவ்ரகோபன்' எனப் பட்டிருக்கவும் காண்கிறோம். இஃது இவன் தந்தையினதாகக் கூடும் 'சடகோபன்' என்ற விருதைப் பார்த்துப் புனைந்துகொண்டதாகலாம். முதலாம் வரகுணனுக்குச்

13. Trans Arches Soc, South India, p. 99-105 (1960)

14. Madras Epigraphy Ann. Rep. no 24 16 of 1927 (சடகோப விண்ணகரம்)

15. MER no 15, 16 418 of 1927(வரகுண விண்ணகரம்)

சம காலத்திய தெள்ளாறு எறிந்த நந்திவர்மனுக்கு 'உக்கிர கோபன்' என்றொரு விருதுப் பெயர்[16] இருந்தமையும் ஈண்டு எண்ணத் தக்கது. நிற்க;

கி.பி. 798-ஐ நம்மாழ்வார் இயற்கை எய்திய காலமாகக் கொண்டு கணக்கிட்டால், 35 ஆண்டுகள் வாழ்ந்திருந்த இவர் பிறந்தது கி.பி. 767-இல் ஆகக் காண்கின்றோம். இது அரிகேசரி பராங்குசன் ஆகிய முதலாம் ராஜசிம்மனின் கடைசி ஆட்சி ஆண்டாதல் ஆழ்வாருக்கு பராங்குசன் என்ற பெயர் அமைந்ததற்கு ஒரு விளக்கம் தருகின்றது. இவர் திருவாய்மொழியைப் பாடி முடித்த 19-ஆம் பிராயம் கி.பி. 784க்கு அப்பாற்பட்டு இருத்தலும் இன்னொரு இனிப்பான அமிசமாகும். அரிகேசரி பராங்குசனுக்கே சடகோபன் என்ற விருதும் இருந்ததாகவும் கொள்ளலாம். ஆனால், மூன்று செப்பேடுகள் வாயிலாக நன்கறியப்பட்ட நெடுஞ்சடையனுக்கு வரகுணப் பெயரும் இருந்ததாக வலிந்து கொள்வது சிறப்பாக இன்மையால், கி.பி. 798-ஐ ஆழ்வார் பிறந்த காலமாகவே கொள்ளவேண்டும். ஆழ்வார் பிறப்பைப் பற்றிய பஞ்சாங்கக் குறிப்புகள், உண்மையில் அவர் பிறப்பைப் பற்றியன வாதலை (கடக) லக்னமும் கொடுக்கப் பட்டிருப்பதிலிருந்து ஊகிக்கலாம். மரண காலத்திற்கு லக்னம் கூறப்படும் வழக்கு எங்குமே இல்லை.

நம்மாழ்வார் திருமங்கை மன்னரின் பிற்காலப் பகுதியில் திகழ்ந்தவர் என்பதற்கு ஒரு அகச் சான்றும் உண்டு. தமிழரிடை கடலன்ன காமம் காழ்க் கொளினும் மகளிர் மடலூர்தல் இல்லை. 'எத்திணை மருங்கினும் மகடூஉ மடன்மேல், பொற்புடை நெறிமை இன்மையான'- (தொல். பொருள், அகத். சூ.38) என்பது மரபு. ஆனால், தம்மை தலைவி (நாயகி) யாகப் பாவித்துக் கொண்டு பாடும் நம்மாழ்வார் திருவாய்மொழி 5-3, 9-ஆம் பாசுரத்துள் 'மடலூர்வன்' என்று பாடுகிறார். பெண்களும் மடலூர்தலை வட

16. நந்திக் கலம்பகம் செ. 24, 89 (கழக வெளியீடு)

நூல் அனுமதிக்கின்றதாம். இதையே தாம் விரும்புவதாக திருமங்கை ஆழ்வார் கி.பி. 785-க்கு மேல் செய்திருக்கக் கூடிய பெரிய திருமடலில்

"மானோக்கின்

அன்ன நடையார் அலரேச ஆடவர்மேல்
மன்னு மடலூ ரார் என்பதோர் வாசகமும்
தென்னுரையில் கேட்டறிவ துண்டதனை யாம்
தெளியோம்
மன்னும் வடநெறியே வேண்டினோம்-

(பெரிய திருமடல் அடி 35-9)

எனக் கூறியுள்ளனர். எனவே, நம்மாழ்வார் திருமங்கை மன்னருக்குச் சம காலத்தவரோ அல்லது பிற்பட்டவரோ ஆகல் வேண்டும். திருவாய்மொழியை திருவரங்கத்தில் ஓத திருமங்கை மன்னர் ஏற்பாடு செய்திருப்பதால், திருமங்கை மன்னரின் பிற்காலப் பகுதியில் நம்மாழ்வார் நூல்கள் செய்தமை ஐயந் திரிபிற்கு இடமின்றி உறுதிப்படுகின்றது. திருமங்கை மன்னர் கி.பி. 716-இல் பிறந்து கி.பி. 750க்கு மேல் பாடல்கள் புனைந்தது உண்மையாகில், நம்மாழ்வார் பிறந்த வெகுதான்ய கி.பி. 798-ஏ ஆகல் வேண்டும்.

நம்மாழ்வார் கி.பி. 798-இல் பிறந்தவரே ஆதலை வேறொரு வகையிலும் உறுதி செய்யலாம். ஆழ்வார்களுள் நம்மாழ்வார் ஒருவருக்கு மட்டுமே அவர் பிறப்பைப்பற்றி லக்னம் உட்பட எல்லா விபரகளும் ஆறாயிரப்படி குருபரம்பரை உட்பட எல்லா நூல்களிலும் காணப்படுகின்றன. ஆகவே, இது வெறும் கற்பிதமே என்று முதலில் ராகவையங்கார் அவர்கள் தள்ளிவிட்டனர்.[17] ஆனால், சில காலம் கழித்து, குருகூர் சென்ற நாதமுனிகளால் நம்மாழ்வாரின் சீடபரம்பரையினரிடமிருந்து இவை நேர்முகமாக அறியப்பட்டன வாகலாம் என்று ஏற்றுக்கொண்டனர்.[18] இந்தக் குறிப்புக்களின் காலம் கி.பி.

17 இலக்கியச் சாஸன வழக்காறுகள் பக். 304.
18 Trans. Archeol. Soc. S. India. 1960 p. 99-105

4-5-798 என்று கோபிநாத ராவ்[19] அவர்களால் முன்பே கணிக்கப்பட்டு விட்டது. எல்லா விவரங்களும் ஒத்துவரக் கூடிய நாள் கி.பி. 500-1000-க்கு இடையில்[21] வேறு இன்மையால் இதுவே நம்மாழ்வார் பிறந்த நாள் ஆகத் தடையில்லை. தமிழ் இலக்கிய வரலாற்றிலேயே இவ்வளவு திட்டத் தெளிவான காலம் வேறெதுவுமே இல்லை என்று கூடச் சொல்லலாம். கோபிநாத ராவின் கணிப்பு அறிஞர் சாமிக் கண்ணுப்பிள்ளை அவர்கள் தயாரித்தளித்த பஞ்சாங்கத்தின் துணை கொண்டே யாகையாலும், இப்படிக் கணித்தும் நம்மாழ்வாரை அரிகேசரி பராங்குசன் காலத்தவராகவே அறிஞர் ராவ் அவர்கள் கருதியதாலும், இவ் அதிகாரத்தலைமைக் குரியவர் அவர் அல்லர் என்பது தெளிவு. அய்யங்கார் அவர்கள் கி.பி. 798-ஐ இப்போது ஒப்புக் கொண்டாலும்[18] இவனை 1927-இலேயே அடித்துக் கூறியவர் கே. ஜி. சங்கர்[20] அவர்களே.

## கி.பி. 10-ஆம் நூற்றாண்டினர் அல்லர் (5)

கி பி. 10-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியே நம்மாழ்வாரின் காலம் என்பது அறிஞர் எம். சீனிவாச அய்யங்கார் அவர்கள் கருத்து [பக். 338] இக் காலத்திய வெகுதான்ய ஆண்டு கி.பி. 915. எனவே, ஆழ்வார் காலம் கி.பி. 918-943 ஆகும். இது மாறவர்மன் மூன்றாம் ராஜசிம்மனின் காலம் [கி.பி. 907-935]. நம்மாழ்வாரை ஏனைய ஆழ்வார்க்கெல்லாம் பிற்பட்டவர் ஆகக்கொள்ளும் மரபில் நம்பிக்கை மிக்குடையவர் இவர். ஆழ்வார் அருளிச் செயல்களில் போந்த சொல்பற்றிய ஆராய்ச்சி இவரை இந் நம்பிக்கைக்கு இழுத்துச் சென்றுவிட்டது. பெரியாழ்வாரின் இளமைக் காலத்தே அவரைப் பெருமை செய்தவனாகக் குருபரம்பரைகள் கூறும் சீவல்லபதேவனை ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் (கி.பி 840 862)ஆகக்கொண்டு பெரியாழ்வாரின் காலத்தை

---

19 The History of Srivaishnavas p. 21.

20 J. Oriental Research Vol. I, P. 343- (1927)

கி.பி.840-915 ஆக அய்யங்கார் கருதியதால் ஏற்பட்ட நிலை இது. இப் பத்தாம் நூற்றாண்டுக் கொள்கைக்கேற்ப நாத முனிகள் காலத்தை கி.பி. 915-1025 எனவும் இவர் மாற்றி அமைத்தார் (பக்.336). நாதமுனிகள் வீரநாராயணபுரத்தில் பிறந்து கங்கை கொண்ட சோழபுரத்தில் காலமானதாகக் குருபரம்பரைகள் கூறுவதால், இவர் இவ்வாறு செய்தார். வீரநாராயணபுரம் முதலாம் பராந்தக சோழன் பெயரால் அமைந்த தென 'கொங்கு தேச ராஜாக்கள்' என்ற நூல் கூறுகின்றது. இந்த பரகேசரி பராந்தகனின் காலம் கி.பி. 907-953. பரகேசரி முதலாம் ராஜேந்திர சோழன் ஆட்சியில் கங்கை கொண்ட சோழபுரம் உருப்பெற்றது கி.பி. 1024-இல் அல்லது அதற்கும் பிறகே என்று தெரிகின்றது.

சீனிவாச அய்யங்காரைப் போலவே சொல் ஆராய்ச்சி செய்து மறைமலை அடிகளும நம்மாழ்வாரை ஏனைய ஆழ்வார்கள் அனைவர்க்கும் பிற்பட்டவராகக் கொள்ளும் மரபையே உடன்பட்டனர். உடன்பட்டு, திருமங்கை ஆழ்வாரால் குறிக்கப்பட்ட வைரமேகனை அபராஜிதன் (கி.பி 871-888) காலத்திய (திருஒற்றியூர் ஆதிபுரீஸ்வரர் கோயில்) கல்வெட்டால் அறியப்படும் வைரமேகனாகக் குழப்பிக் கொண்டு, நம்மாழ்வார் காலத்தை கி.பி. 10-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியாகக் குறித்தனர். சைவ நூல்களைப் பாராட்டியதற்காக சீனிவாசய்யங்காரைச் சிலாகித்த மறைமலை அடிகள் அய்யங்கார் ஆழ்வாருக்கு மேற்கொண்ட 10-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியை மட்டும் தள்ளிவிட்டு ஆழ்வாரின் காலத்தை இதே நூற்றாண்டின் பிற்பகுதியாகக் காட்ட வலிந்து முயன்றிருத்தல் கூர்ந்து நோக்கத் தக்கது!

எதையும் கோணலும், மாணலும் ஆகக் காண்பதிலும், காட்டுவதிலும் பேராற்றல் படைத்திருந்த பேராசிரியர் மறைமலை அடிகளின் கருத்தைப் பற்றி நாம் கவலைப்படத் தேவையில்லை. பேராசிரியர் எம். சீனிவாஸ அய்யங்கார் அவர்களும் கூட நம்மாழ்வார் காலத்தை கி.பி. 10-ஆம் நூற்றாண்டாகக் கொண்டதுதான் பெரியதோர் விந்தையாக

உள்ளது. ஏனெனில், அந்த நாளிலேயே கி.பி. 850க்கு ஆகிலும் முற்பட்டவர் ஆழ்வார் என்பதற்கான ஆதாரம் இருந்தது. இது காஞ்சிக்கு அணித்தான உக்கலில் உள்ள பெருமாளுக்கு 'திருவாய்மொழித் தேவர்' என்று சாஸனங் களில் பயிலும் பெயரே. பிருத்விமாணிக்க சதுர்வேதி மங் கலம் என்று கல்வெட்டுக்களில் பேசப்படும் இவ்வூர் பிருத்வி மாணிக்கத்தின் பெயரால் பல்லவ நிருபதுங்கனால் (கி.பி. 845-871) தானம் செய்யப்பட்டதாக அந் நாளிலேயே கருதப்பட்டது. அறிஞர் சீனிவாசப்பிள்ளை அவர்கள் 'திரு வாய்மொழித்தேவர்' என்ற திருநாமம் நம்மாழ்வாரின் திரு வாய்மொழின் அடியாகப் பிறந்ததே எனச் சாதிக்க முடி யாது என வாதிக்கிறார். சிறந்த வைணவன் ஆகிய நிரு பதுங்கனின் ஆட்சியில் நம்மாழ்வாரின் அருளிச் செயலைக் கவுரவிப்பதற் கன்றி வேறுவழியில் இஃது வழக்குற்றிருக்க முடியாது என்பதே நமது கருத்து* மேலும், முதலாம் ஆதித்த

* நம்மாழ்வாரின் திருவாய்மொழியிற் போந்த 'கரு மாணிக்கம்' (திருவா.10-10) என்ற தொடரின் அடிப்பிறந்த கருமாணிக்கத் தேவர் என்ற பெயர் சீவலப்பேரி ஆகிய முக்கூடல பெருமாளுக்கு சாஸனங்களில் பயில்கின்றது[21] இன்னும், திருவிண்ணகரப் பெருமான் 'ஒப்பிலி யப்பா!'- என ஆழ்வாரால் அழைக்கப்பட்ட காரணத்தால் 'ஒப்பிலியப் பர்' -என்று பெயர் சூட்டப் பெற்றார். இப் புதுப் பெயர் 'உப்பிலியப்பர்' ஆகக் காலப் போக்கில் உருமாறி இன்று இப்படியே பெருமாளுக்கு உப்பில்லாத அமுதே நாடோறும் நைவேத்தியம் செய்யப்பட்டு வருகின்றது. மூன்றாவதாக, சீவரமங்கலப் பதிகத்தில் இப் பதியை ஆழ்வார் வானமா மலை என குறிப்பிட்டதால் இதுவும் இப்பதிக்கு இன்னொரு பெயர் ஆயிற்று.

21. S. I. I. Vol XIV, 700 71&72 (சீவலப்பேரி என்ற முக் கூடல் திருநெல்வேலி வட்டம், சடையன் மாறன் 2+19 ஆம் ஆட்சி ஆண்டு.) இவ் ஊர்த் திருமாலின் பெயர் செண்டலங்காரர். இப்பதி தென் திருமாலிருஞ் சோலை என்று கல்வெட்டுக்களில் பேசப்படுகின்றது.

சோழன் (கி.பி. 871-891) ஆகத் தோன்றும் ராஜகேசரி வர்மனின் 8-ஆம் ஆட்சி ஆண்டில் (கி.பி. 873) செய்யப் பட்ட (திருக்கண்ணபுரம் சவுரிராஜப் பெருமாள் கோயில் தூண் ஒன்றிற் காணும்) கல்வெட்டு ஒன்றில் 'சடகோபன்' என்று ஒருவன் குறிப்பிடப் படுகிறான். மூன்றாவதாக, முதற் பராந்தக சோழனின் உயர் அதிகாரிகளுள் ஒருவன் பூதூர் உடையான் நம்மாழ்வார் அடிகள் எனப்பட்டுள்ளான். இவற்றால் நாதமுனிகள் காலம் எதுவாயினும், நம்மாழ்வார் கி.பி. 850க்கு முற்பட்டவர் என்பதற்கு ஐயமே இல்லை. ஆகவே கால ஆராய்ச்சியை இதோடு நிறுத்திக் கொள் வோம்.

*வைணவத்தின் வளர்ச்சி நிலை-நம் திருப்பதிகள்*

நம்மாழ்வாரால் பாடப்பட்ட 34* தலங்களுள் 31 மட்டுமே மலை நாட்டையும் உள்ளிட்ட அக்காலத் தமிழ் நாட்டின. இவற்றுள் பாண்டிய நாட்டுக் குளந்தை, வரகுணமங்கை, வைகுந்தம் என்னு மூன்றும், மலை நாட்டு வன்பரிசாரமும், தொண்டை நாட்டு வெஃகாவும் ஆகிய ஐந்தும் குறிப்பு மட்டுமே பெற்றவை. ஏனைய 26 தலங் களுள் 25-க்கு ஒவ்வொன்றிற்கும் ஒரு பதிகம் உண்டு; திரு வேங்கடத்திற்கு மட்டும் மூன்று பதிகங்கள் காணப்படு

---

*நம்மாழ்வாரால் பாடப்பட்டன 36 தலங்கள் என்பது வழக்கு. ஆயினும், இவற்றுள் நிலவுலகின்பாற்படாத பரம பதம், பாற்கடல் என்னும் இரண்டையும் விலக்கி இவை 34 ஆக மேலே கொள்ளப்பட்டது. இவற்றுள் அயோத்தி, வட மதுரை, துவாரகை என்னும் மூன்றும் வடநாட்டின.

கின்றன. இவரால் பாடப்பட்ட 31* தலங்களுள் பழையன 13-உம்,புதியன 18-உம் ஆகும்.பதினெட்டு புதியதலங்களுள் பாண்டிநாட்டின 9-உம், மலைநாட்டின 9-உம் ஆம். மலைநாட்டு 13 தலங்களுள் குலசேகரரால் மட்டுமே பாடப்பட்ட வித்துவக்கோடு ஒழிய, ஏனைப் பன்னிரண்டையும் நம்மாழ்வார் பாடியுள்ளார். ஆயினும், வடசேர நாட்டினவாகிய நாவாய்,மூழிக்களம், வல்லவாழ், வாறன்விளை ஆகிய நான்கிற்கும் இவர் நேரிற் சென்றவர் அல்லர் என்பது பதிகங்களிலேயே நன்கு புலனாகிறது. கடித்தாளமும், காட்கரையும் கூட இப்பக்கத்தினவே யாதலால் இவற்றிற்கும் கூட இவர் சென்றவர் அல்லர் என்றே கொள்ளவேண்டும், இச்செய்தி

---

* நம்மாழ்வார் பாடிய 31 தமிழ்நாட்டுத் தலங்கள் :

| | |
|---|---|
| **பாண்டி நாட்டின (12)** | **மலைநாட்டின (12)** |
| **நவதிருப்பதிகள்*** | புதியவை |
| அ. பொருநை வடகரை | 1. வண்பரிசாரம்* |
| 1. வைகுந்தம்* | 2. வாட்டாறு |
| 2. வரகுணமங்கை* (நத்தம் – 1½ மைல்) | 3. அனந்தை |
| 3. புளிங்குடி 2 மைல்) | 4. புலியூர் |
| 4 தொலைவில்லிமங்கலம் | 5. வண்வண்டூர் |
| 5. குளந்தை*(பெருங்குளம் 7 மைல்) | 6. வாறன்விளை |
| | 7. செங்குன்றூர் |
| | 8. கடித்தானம |
| ஆ பொருநை தென்கரை | 9. காட்கரை |
| 6. குருகூர் (ஆழ்வார் திருநகரி) | **பழம்பதிகள்** |
| | 10. வல்லவாழ் |
| 7. கோளூர் (திருக்களூர் 1 மைல) | 11. மூழிககளம் |
| | 12. நாவாய் |
| 8. பேரை(3 மைல்) | **சோணாட்டின 5** |
| இ. தனித் திருப்பதி | 1. அரங்கம் |
| 9. சீவரமங்கலம் (நாங்குனேரி) | 2. பேர்நகர் |
| | 3. குடந்தை |
| **பழம் பதிகள்** | 4. விண்ணகர் |
| 10. குறுங்குடி | 5. கண்ணபுரம் |
| 11. மோகூர் | **தொண்டைநாட்டின (2)** |
| 12. திருமாலிருஞ்சோலை | 1. வெஃகா* |
| | 2. வேங்கடம் |

* குறிப்பு மட்டும் பெற்றவை

இவற்றின் பதிகங்களிலிருந்து புலப்படா விட்டாலும். இன்னொரு திருப்பதி ஆகிய வண்பரிசாரம் இவருடைய திருத்தாயார் ஆகிய உடையநங்கையாரின் பிறப்பிடமாய் இருந்தும் இதனை இவர் குறிப்பிட்டு மட்டுமே சென்றமை பெரியதோர் வியப்பே, திருமங்கை மன்னருக்குப் பிறகு மிகப் பல திருப்பதிகளை வைணவத்திற்குப் பெற்றுக் கொடுத்தவர் இவரே ஆதல் குறிப்பிடத் தக்கது.

இவரால் பாடப்பட்ட பாண்டி நாட்டுப் பதிகள் 12-இல் மாலிருஞ்சோலை, மோகூர், குறுங்குடி ஆகிய மூன்றும் பழம் பதிகள். ஏனைய புதிய தலங்களைக் குறிக்க எழுந்ததே 'நவ திருப்பதிகள்' என்ற தொடர். இவை ஒன்பதும் ஆகும். இவற்றுள் பொருநை(தாமிரபரணி)யின் வடகரையில் வைகுந்தமும் அதற்கு அணித்தான வரகுணமங்கை(நத்தம்),புளியங்குடி,தொலைவில்லிமங்கலம்,குளந்தை(பெருங்குளம்)என்னும் நான்கும், தென்கரையில் குருகூரும் (ஆழ்வார் திருநகரி) அதனை அடுத்து கோளூர் (திருக்களூர்) (தென்) திருப்பேரை என்னும் இரண்டும் ஆகிய எட்டு தலங்களும் அடங்கும். நவ திருப்பதிகளை ஒன்றிற்கொன்று அணித்தான ஒன்பது திருப்பதிகளாக காட்டுவதற்காக தொலைவில்லிமங்கலத்தில் இரண்டு கோயில்கள் கொள்ளப்படுகின்றன. ஆனது பற்றி, தொலைவில்லிமங்கலத்திற்கு 'இரட்டைத் திருப்பதி' என்ற பெயர் வழக்கும் உண்டு. ஆனால், தொலைவில்லிமங்கலம் உண்மையில் ஒரு திருப்பதி மட்டுமே. ஒன்பதாவது திருப்பதி சீவரமங்கலம் ஆகும்.

புளிங்குடியைப் பற்றி வேறு கருத்தும் இவ் ஆசிரியர்க்கு உண்டு. இவ்வூர்ப் பெருமானை ஆழ்வார் காய்சின வேந்தே என அழைக்கிறார் (திருவா. 9-2,6). இப் பெயரே இன்றும் வழக்கிலிருந்தாலும், ஆழ்வார் இப்படி அழைத்ததனால்தான் இப்பெயர் வழக்குற்றதா என்பது ஆராயத்தக்கதே. தலைச் சங்கம் நிறுவிய பாண்டியன் பெயர் காய்சினவழுதி என்பதாகத் தெரிவதால், அவனால் முதன் முதல் அமைக்கப்பட்டதே இவ்வாலயம் ஆகலாம். எனில், இது

முதன் முதல் நம்மாழ்வாரால் பாடப்பட்டதனாலேயே நவ (அதாவது புதிய) திருப்பதி ஆகக் கருதப்பட்டிருக்க வேண்டும்.

வரகுணமங்கையின் காலத்தை உத்தேசமாகக் கணிக்கவும் முடியும். நம்மாழ்வார் 16-ஆம் வயதில் பாடத் தொடங்கி 4½ ஆண்டுகளில் தமது பனுவல்களைச் செய்து முடித்தனர் என்று சொல்லப் படுகின்றது. இவர் பிறந்தது கி.பி. 798-இல் ஆகில், பாடத் தொடங்கியது கி.பி. 814-லும், பாடி முடித்தது கி.பி. 819-லும் ஆகல் வேண்டும். எனவே, சரமப் பிரபந்தமாகிய திருவாய்மொழியில் நம்மாழ்வாரால் பாடப்பட்ட வரகுணமங்கையை முதலாம் வரகுண பாண்டியன் இரண்டாம் ராஜ சிம்மனின் ஆட்சியில் (கி.பி. 790-821) கி.பி. 810 அளவில் கட்டி முடிந்திருக்கக்கூடும் எனவும் கொள்ளலாம். பாண்டிய இளவரசர்கள் தம் பெயராலும் கோயில் சமைத்தல் வழக்கே ஆதலை கோயில்பட்டி வட்டத்து சோழபுரத்தில் முகாம் இட்டிருந்தபோது, பிள்ளையார் சுந்தரபாண்டியதேவரால் தானங்கள் அளிக்கப்பட்ட அவ்வூர்க் கோயில் சுந்தரபாண்டிய விண்ணகர் எனப்படுவதாலும்[22] அறிகிறோம்.

*திருவாய்மொழி வரலாறு*

திருவாய்மொழி பாடி முடிக்கப்பட்டது கி.பி. 819-இல் ஆகில், இதனை திருவரங்கத்தில் அத்யயனம்(ஓதுதல்)செய்வதற்கு திருமங்கை மன்னர் ஏற்பாடு செய்ததை கி.பி. 820-இல் ஆகக் கொள்ளலாம். இவ் வரலாறு கோயிலொழுகுவில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. மதுரகவிகள் (நம்) ஆழ்வாருக்குக் கரண பூதராய் இருந்து, திருவாய்மொழியைத் தொடங்கி தேவகானத்தினாலே அபிநயத்துடனே சேவித்து, பத்தாம் திருநாளில் (நம்) ஆழ்வார் முன்பு (அதாவது, சின்னாட்களுக்கு முன்னர்)திருவாய்மொழியைத் தலைக்கட்டினவாறே திருவடிகளைச் சேர்ந்தபடியை அனுகரித்து-பெருமாள் திருவடிகளைச் சார்ந்தார்-என கோயிலொழுகு கூறு

22. S.I.I. Vol. XIV no 205

தல் திருவாய்மொழியைப் பாடி முடித்தவுடனேயே நம்மாழ்வார் பரமபதித்து விட்டனர் ஆதலைக் காட்டுகின்றது. இதனால், திருவரங்கத்திலிருந்து வந்த அழைப்பின் பேரில் மதுரகவிகளுடன் எழுந்தருளிய நம்மாழ்வார் உண்மையில் ஒரு படிமமே (விக்கிரகமே) ஆக வேண்டும் என அறிஞர் ஹரிராவ் அவர்கள் முடிந்தனர்†. திருவாய்மொழியின் கடைசிப் பாசுரத்தில்

"அவாவறச்சூழ் அரியை அயனை அரனை அரற்றி
அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன்"

(திருவா. 1102) எனப் போதரலும் சரம (கடைசி) பிரபந்தமாகக் கருதப்படும் திருவாய்மொழியை முடித்தவுடனேயே ஆழ்வார் முக்தி அடைந்து விட்டதை ஆதரிக்கின்றது. எனில், இது நிகழ்ந்த கி.பி. 819-இல் ஆழ்வாருக்கு 22 பிராயமே ஆதலால், இவர் இந்த 22-ஆம் பிராயத்திலேயே இயற்கை எய்தினார் என்று ஏற்படுகின்றது. ஆனால், மூவாயிரப்படி குருபரம்பரையோ ஆழ்வாரின் ஆயுட் காலத்தை 35 ஆண்டுகளாகக் குறிக்கின்றது. எனவே, ஏதோ ஒரு பெரும் பிழை ஆழ்வாரின் வரலாற்றில் அல்லது ஆழ்வாரைப் பற்றிய புள்ளி விவரங்களில் இருக்க வேண்டுதல் தெளிவு.

பதினோராம் வயதில் (16-இல் அன்று!) பாடத் தொடங்கி பதினைந்தாம் வயதில் (35-இல் அன்று!) திருவாய்மொழியைப் பாடி முடித்தவுடனேயே திருநாடு அலங்கரித்தார் ஆழ்வார் என்று கொண்டால், மேற் கூறப்பட்ட தடைகளை சரிக்கட்டலாம். இதன்படி நம்மாழ்வார் மறைந்தது கி.பி. 814-இல் ஆக வேண்டும். திருமங்கை மன்னரின் மறைவு கி.பி. 821-இல் ஆகில், இவ் இரண்டு ஆண்டுகளுக்கும் இடைப்பட்ட ஏழாண்டு காலம், நம்மாழ்வாரின் புகழ் திருமங்கை ஆழ்வார் காதுகளுக்கு எட்டி அவர் மதுரகவிகளை அழைத்துச் சிறப்பு செய்வதற்குப் போதிய

† Koil Olugu English translation by Hari Rao p. 10

தாகவும் உள்ளது. ஆனால், யாத்திரையாக மதுரகவி களுடன் நம்மாழ்வார் திருவரங்கம் வந்தபோது திருமங்கை மன்னரைத் தப்பாமல் கண்டு அளவளாவியிருக்கவே செய் திருப்பார்—இதைப் பற்றி முந்து நூல்கள் குறிப்பிடாவிட் டாலும். அப்போது நம்மாழ்வாரின் பிற அருளிச் செயல்களை யும், திருவாய்மொழியைக் கணிசமான அளவிலும் திரு மங்கை மன்னர் கண்டிருக்கவே வேண்டும். ஆகையால், நம்மாழ்வார் இறந்த பிறகே, திருமங்கை மன்னர் அவரைப் பற்றிக் கேள்வியுற்றிருப்பார் என்றல் சிறப்பாக இல்லை. ஆகவே, 16-க்கும், 35-க்கும் பதிலாக முறையே இவற்றோடு ஒலிப்பொருத்தம் உடைய 11-ஐயும், 15-ஐயும் கொண்ட திருத்தத்தினால் பெரிதாக நன்மை ஏதும் விளைந்துவிட வில்லை.

மேலும், திருவிருத்தமும் திருவாய்மொழியில் 27 பதிகங் களும் அகப்பொருள் இலக்கியமாய் இருத்தல் 11 மற்றும் 15-ஆண்டுக் கொள்கைக்கு இன்னொரு தடை. பதினாறு ஆண்டு அளவே வாழ்ந்த சம்பந்தர் பாடல்களில் அகப் பொருள் துறையின அதிகம் இன்மையால்[23] பதினாறு பிராயத்தளவும் அத்தகைய உள்ளக் கிளர்ச்சிகள் ஆண் பாலாரிடை அந்நாளில் எழுந்ததில்லை என்பதும், ஆழ்வார் பதினாறு பிராயமும் கடந்து நல்ல பருவக் காளையாய் இருந்த போதே இவற்றை அருளியிருக்க வேண்டும் என் பதும் வெளிப்படை. ஆழ்வார் பிறந்தது கி.பி. 798-க்கு முன் பேயே யாகில், ஆழ்வார் இம்மாதிரியான பாசுரங்களைச்

---

23 * சம்பந்தரின் 284 பதிகங்களுள் தலைவி கூற்றால் அமைந்த 56, 60, 63, 76, 159, 256, 303, 321, 358, 362, 374 ஆகிய 13-உம், பதிகம் 242-இல் ஏழாம் பாடலும் மட்டுமே அகப்பொருள் பற்றியன. இவற்றுள் பதிகம் 256-உம், 359-உம் அக வகையின அல்ல என்ற கருத்தும் உண்டு. —திருஞான சம்பந்தர் வரலாற்று ஆராய்ச்சியும், தேவாரத் திறனாய்வும், பக்.

செய்து மறைந்ததை திருமங்கை மன்னர் மறைந்த கி.பி. 821-க்கு உள்ளாகக் கொள்ளலாம். ஆனால், மிகப்பல சான்றுகளால் உறுதிப்பட்டுக் காணும் பிறப்புக் காலத்தை மாற்றுவது அடிப்படையையே தகர்ப்பதாக இருப்பதால் ஒப்புக் கொள்ளத் தக்கதன்று.

ஆழ்வாரின் பிறப்புக் காலம், ஆயுட்காலம் ஆகியவற்றை மாற்றாமலே ஆழ்வார் நல்ல காளைப் பருவத்திலேயே அகப் பொருள் பாடல்களைக் கொண்டிலங்கும் திருவாய்மொழி யைப் பாடி முடிக்கும் தருவாயில் முக்தி எய்தினார் எனக் கொள்ளவேண்டுமானால், திருமங்கை மன்னரின் மறைவுக் காலத்தை ஆழ்வார் மறைந்த கி.பி. 833-க்கும் பிறகே ஆகக் கொள்ள வேண்டும். எனில், திருமங்கை மன்னர் பிறந்த நள ஆண்டு கி.பி. 776 ஆகற்பாற்று. ஆனால், இது தொண்ட ரடிப்பொடிகள், திருமங்கை மன்னர், குலசேகரர் வரலாறு களை எல்லாம் பெரிதும் பாதிப்பதோடல்லாமல், திருமங்கை மன்னர்தம் வாழ்க்கையின் விறுவிறுப்பான (active) பகுதியை இவரின் அருளிச் செயல்களிலிருந்தே அறியப்படும் இரண் டாம் நந்திவர்மனின் காலத்திலிருந்து பெயர்த்து இவன் மகனான தந்திவர்மனின் காலத்திற்குக் கொண்டு சென்று உய்த்துவிடும். இவ் அனைத்திற்கும் மேலாக, நம்மாழ்வார் தமது அருளிச் செயல்களை 16 வயதிற்றொடங்கி 4½ ஆண்டு களில் முடித்தார் என்ற திட்டவட்டமான செய்தியும் மதிப்பு இழந்து விடுகின்றது.

பிறகு என்னதான் வழி? நூல் இயற்றிக் கொண்டிருக்கும் போது இடையில் அதன் ஆசிரியன் இறந்து படுவது சாத் தியமே. ஆனால், ஆழ்வாரோ நூலை முடித்த வண்ணமே இயற்கை எய்தினார் என்று அத்யயன வரலாறு கூறுகின்றது. ஆயிரம் பாடல்கள் பாட வேண்டும் என்று திட்டம் செய்து கொண்டு அப்படிக்கே முடித்துவிட்டும் இருக்கும் ஆழ்வார் முடிக்கும் தருவாயில் வீடு பெற்றதாக கடைசிச் செய்யுளில் காணப்படுவது நம்பத்தக்கதாய் இல்லை. மேலும், "வீடு பெற்ற" என்ற தொடரில் காணப்படும் இறந்த காலம் இவர்

தம் மறைவுக்குப் பிறகு நூலை முடித்தார் என்று தாறு மாறாகப் பொருள் செய்கின்றது. 'அவா வற்று' என்ற தொடர்களோடு 'வீடு பெற்ற' -என்ற தொடர்களைச் சேர்த்துப் பார்த்தால் 'ஆசைகளை ஒழித்து' அதன் மூலம் அவ்வாசையினால் உண்டாகக் கூடிய துன்பங்களிலிருந்து 'வீடு (விடுதலை) பெற்ற' என்று பொருள் கொள்ள தோற்று கின்றது. இங்ஙனம் கொள்ளுமிடத்து நம்மாழ்வார் பிறப்புக் காலம் (கி.பி. 798), நூல் செய்யத் தொடங்கிய காலம் (கி.பி. 814) நூற்களை முடித்தது (கி.பி. 819) திருமங்கை மன்னரால் திருவரங்கத்தில் திருவாய்மொழி அத்யயனத் துக்கு ஏற்பாடு செய்யப்பட்டது (கி.பி. 820) ஆகிய எதிலும் எந்தவித மாற்றமும் தேவையில்லை.

இந்தக் கொள்கையை ஒப்புக் கொள்வதன் விளைவுகள் மூன்று. சடகோபர் உயிரோடிருந்த போதே மதுரகவிகள் அவருக்குச் சிலை அமைத்தார் என்று இக் கொள்கை யினால் ஏற்படுகின்றது. பின்னாளில் முதலியாண்டான் ராமானுஜருக்கு இப்படியே பெரும்பூதூரில் சிலை அமைத்து வழிபட்டதாக குருபரம்பரைகளில் கூறப்படுவது இங்கே எண்ணத் தக்கது. இரண்டாவதாக, திருவாய்மொழியை முடிக்கும் போது ஆழ்வார் இறைவனடி சேர்ந்ததாக அத்ய யனத்தின்போது நடித்துக் காட்டப்படுவது பாடலின் பொரு ளுக்கேற்ப பிற்காலத்தாரால் செய்து கொள்ளப்பட்ட மாற்றம் ஆகலாம். ஆண்டாளின் பாசுரப்பொருளுக்கேற்ப திருமாலிருஞ் சோலையில் 100 தடா வெண்ணையும், அக்கார அடிசிலும் படைத்து பெருமாளுக்கு ராமானுஜர் விழாக் கொண்டாடி யதை முன்பே கண்டுள்ளோம். இவ் இரண்டினும் முக்ய மானது மூன்றாவது விளைவு. கி.பி. 819-இல் திருவாய் மொழியை முடித்தவுடனேயே திருமங்கை மன்னர் இதன் அத்யயனத்திற்கு ஏற்பாடு செய்திருப்பதிலிருந்து, இந்நூல் இயற்றப்பட்டு வந்த காலத்தேயே (அதாவது கி.பி. 819க்கு இரண்டொரு ஆண்டுகள் முன்பே) இதனை ஆலிநாடர் அறிந்திருந்தார் என்று ஏற்படுகின்றது. நம்மாழ்வார் தலயாத்திரையாக திருவரங்கம் வந்த போது திருமங்கை

மன்னரோடு அளவளாவி இருக்கலாம் என்று நாம் முன்னம் கொண்ட கருத்து இதனால் உறுதிப்படுகின்றது.

*திராவிட வைணவ வேதம்*

வரலாற்றுக் கண் கொண்டு நோக்கும் போது, ஆழ்வார்களில் கடைசி ஆனவராயும், ஆசாரியர்களுள் முதல்வராயும் சடகோபர் திகழ்கிறார். எனவே, இவரை இவ் இரண்டு தொகுதியினர்க்கும் நாயகமாகக் கொள்வதே முறை. இருந்தும், சடகோபரை அவயவி யாகவும், ஏனைய ஆழ்வார்களை அவயவங்களாகவும் கொள்ளும் வழக்கமே வைணவர்களிடையே தொன்று தொட்டு இருந்து வருகிறது. இதற்குக் காரணம், ஆசார்ய முதல்வர் ஆகிய நாதமுனிகள்,

> "பக்தாம்ருதம் விஸ்வ ஜநாநு மோதநம்;
> ஸர்வார்த்ததம் ஸ்ரீசட கோப வாங்மயம்;
> ஸஹஸ்ர சாகோ பநிஷத் சமாகமம்
> நமாம்யஹம் த்ராவிட வேத சாகரம்"—

என சடகோபர் அருளிச் செயல்களை வருணித்ததே. இதற் கேற்ப, திருவிருத்தம் ரிக்வேத சாரம் எனவும், திருவாசிரியம் யஜுர் வேத சாரம் எனவும், திருவாய்மொழி சாமவேத சாரம் எனவும், பெரிய திருவந்தாதி அதர்வண வேத சாரம் எனவும் படுகின்றன. திருவாய்மொழிக்கு மட்டும் (மனிதகான முறைப்படி, அதாவது தமிழ் முறைப்படி) இசை அமைப்பு சடகோபர் காலத் திருந்தே இருந்து வருவதால், இசைப்பா என்ற அளவிற்கு சாமவேதத்தோடு ஒப்பிடத் தக்கதே. மற்றபடி, திருவாய்மொழி சாமவேதத்தின் மொழிபெயர்ப்போ அன்றித் தழுவலோ கூட அன்று; சாரமும் அன்று. இயற்பா வகையினவாகக் கருதப்படும் ஏனைய மூன்று பிரபந்தங்களின் நிலையுங் கூட இதுவே தான். நம்மாழ்வாரின் பிரபந்தங்கள் நான்கு என்பதைக் கொண்டு மட்டுமே இவை இயந்திரப் போக்கில் நான்கு வேதங்க

ளோடு தொடர்புறுத்தப்பட் டுள்ளன. நாதமுனிகள் ஆழ்வாரின் அருளிச் செயல்களை 'அர்த்த பஞ்சகம்' என்று சொல்லப்பெறும் ஆன்மிக வியவகாரங்கள் பற்றிய தமிழ் நூற்கள் என்ற அடிப்படையிலேயே 'திராவிட வேதம்' என அழைத் தேகினர். இதனை,

"மிக்க இறை நிலையும் 1 மெய்யாம் உயிர்நிலையும் 2
தக்க நெறியும் 3 தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும் 4 வாழ்வினையும் 5 ஓதும்
குருகையர்கோன்
யாழின் இசைவேதத் தியல்"—

என்ற பட்டர் உடைய தனியனால் அறியலாம்.

ஆன்மாவின் (அதாவது நமது கருத்துப்படி அடிமனத்தின்) தேவைகளுள் எல்லாம் முக்யமானவை வாழ்க்கையின் வருத்தத்தை வீட்டும் வழிமுறைகளே. இவைகளே மேலே தக்கநெறி எனக் குறிப்பிடப்பட்டன. கர்மயோகம், பக்தி யோகம், ராஜ யோகம், ஞான யோகம் என இதற்காக இந்நாடு கண்ட நெறிகள் நான்கு; பிரபத்தி என்பதொன்றைச் சேர்த்து ஐந்து என்றலும் உண்டு. இவற்றுள் கர்ம யோகத்தை கீதை வற்புறுத்துதலை அனைவரும் அறிவர். சமுதாய நலனுக்கும் உகந்த இதனையே யன்றி, தனிமனிதனின் விடுதலைக்கான வழிகளுள் அன்பிற்குக் கட்டுப்பட்டு அருள் புரிய வல்ல கடவுளையும் உடன்பட்டது வைணவம். இறைவனிடம் காட்டும் அன்பே 'பக்தி யோகம்' ஆம். இதில் பல வகைகளும், பல நிலைகளும் உண்டு. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கும் பிற்கூறிய நிலைகளாம். கிரியை—நிகாமம், ஆகமம்—என இரண்டு வகைப்படும். வேதங்களிற் காணப்படும் யாக முறை நிகாம வகையைச் சார்ந்தது. உருவச் சிலை ஒன்றை வைத்துக் கொண்டு அதற்கு அன்றாட வாழ்க்கையில் ஆற்றிவரும் செயல்முறைகளை எல்லாம் செய்து வழிப்படல் ஆகம முறை ஆகும்.

---

1. பிரம்மம், 2. ஆத்மா, 3. உபாயம், 4. விரோதி, 5. முக்தி.

நீராட்டல், பூச் சூட்டல், தீபம், தூபம், நைவேத்தியம் (படையல்) முதலியன வெல்லாம் இம்முறையில் அடங்கும். யாகச் சடங்குகளின் போது பாடப்படும் பாடல்கள் எல்லாம் யஜுர் வேதமும், பண்ணோடு பாடப்படுவன சாம வேதமும் ஆயினாற் போல, ஆகமச் சடங்குகளின் போது பாடத் தகுந்த வைணவத் தமிழ்ப் பாடல்கள் 'நித்தியானுசந்தானம்' என்றொரு தனி நூலாகத் தொகுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் செம்பாகம் திருவாய்மொழிப் பாடல்களே (பதின்மூன்று பதிகங்கள்).†

அன்பிலும் பல வகைகள் உண்டு. அப்பர், சம்பந்தர், பெரியாழ்வார், சுந்தரர் ஆகியோர் பின்பற்றிய நெறிகள் முறையே தொண்டன் வழி (தாச மார்க்கம்) பிள்ளை வழி (புத்ர மார்க்கம்), பெற்றோர் வழி (வாத்ஸல்ய மார்க்கம்), நட்பு வழி (சக மார்க்கம்) என்பன வாதலை முன்பே கண்டுள்ளோம். இனி, காதல் வழி* (அநுராக மார்க்கம்) என ஒன்றும் உண்டு. இக் காதல் வழியே மதுரமானது. ஆனது பற்றி, இதனை வைணவர்கள் மதுர பக்தி என உரைப்பதும் உண்டு. சங்க காலத்தே மனிதக்காதல் பெற்றிருந்த இடத்தை பின் சமயத் தமிழ் கிளர்ந்தெழுந்த பல்லவர் காலத்தில் 'இறைக்காதல்' பெற்று விட்டது. சம்பந்தர் பதிகங்களிலும் சுமார் பதினொன்று அகப் பொருள் பற்றியன வாகத் தோன்றினாலும், இதனைத் தொடங்கி வைத்தவர்

---

† இவை :- 1-1; 1-2; 2 10; 3-3; 4-10; 5-8; 6-10 7-2; 7-4; 8-10; 9-10; 10-8; 10-10.

* நாயகன்-நாயகி பாவத்தை சன்மார்க்கம் என்று சைவம் கூறும். ஆனால், சன்மார்க்கம் என்பதோ இந்நாளில் நல்வழி என்ற பொருளிலேயே வழங்கப்பட்டு வருகிறது. இது பெரும்பாலும் 'சமரஸ சன்மார்க்கம்' என்ற வடிவில் தீவிர மார்க்கத்தின் எதிர்மறையாகவும் வழங்கப்படலால் இந் நூலில் நாயக-நாயகி பாவத்தை வெளிப்படையாகக் குறிக்கும் 'அநுராக மார்க்கம்' என்ற புதுப் பெயர் மேற்கொள்ளப்படுகின்றது.

அப்பரே. இது, ஆண்டாள், திருமங்கை மன்னர், சடகோபர் ஆகிய மூவரின் காலங்களில் மங்கைப் பருவம் கண்டது. காதலே உருக்கொண்டு வந்தவர் கோதை நாச்சியார். நம்மாழ்வாரின் பாடல்களிலும் அகத்துறை பற்றியனவே மதுரமிக்கனவாகும். திருவாய்மொழியின் 100 பதிகங்களுள் 17*[1] தலைவியின் உடையவும், 7*[2] தாயின் உடையவும், 8*[3] தோழியின் உடையவும் கூற்றாய் அமைந்த அகத்துறைப் பாடல்களே. திருவிருத்தமோ முற்ற முழுக்கவும் ஓர் அகப்பொருள் இலக்கியம். இவையெல்லாம் பக்திக் காதல் வேதங்கள்! நான்கு வகைப்பட்ட உப வேதங்களுள் (தனுர் வேதம், ஆயுர் வேதம், காந்தர்வ வேதம், ஸ்தாபித வேதம்) காந்தர்வமும் ஒன்று—இரும்பைக் காந்தம் போல் மனித உள்ளத்தை ஈர்க்க வல்லது!

மேலே கூறப்பட்ட யோகங்களுள் நான்காவது ஞான யோகம். இவ் வழியில் வீடு பெற்றவர்கள் வர்த்தமான மகாவீரர், கவுதம புத்தர், திருமூலர், ஆதிசங்கரர் முதலியோர். வைணவத்தில் இதற்கு இலக்கியமாக நம்மாழ்வாரையும், திருமழிசைப் பிரானையும் கூறலாம். ஏனெனில், ஞானம் இவர்கள் வாழ்விலும், வாக்கிலுமே மிகுந்து காணப்படுகின்றது. திருக்கோளூரில் அவதரித்த மதுரகவிகள் தீர்த்த யாத்திரையாக வட நாட்டிற்குப் போய் அயோத்தியில் இருந்தவர் தென்றிசையில் தோன்றிய ஒரு சுடரொளியைக் கண்டு வியப்புற்று நாளும் அதனையே தொடர்ந்து வந்த போது, அவ் ஒளி அவரது ஊருக்கு அணித்தான குருகூரில் அடைந்ததும் மறைந்து போயிற்றாம். அங்கே ஏதோ சிறப்பு இருக்க வேண்டும் எனக் கருதி விசாரித்த அவருக்கு திருப்புளியின் கீழ் நிட்டையில் இருந்த சடகோபரைப்பற்றிக்

---

*** 1. தலைவி கூற்று: திருவா. 1-4; 2-1; 4-8; 5-3; 5-4; 5-5; 5-9; 6-2; 6-8; 7-3;7-7; 8-2; 9-5; 9-7; 9-8; 9-9.**

*** 2. தாய் கூற்று: திருவா. 2-4;4,2;4-4;5-6;6-6;6-7;7-2.**

*** 3. தோழி கூற்று: திருவா. 4-6; 6-5; 8-3.**

கூறப்பட்டது. அருகிற் சென்று சமாதியில் இருந்த ஆழ்வாரைச் சோதிக்கும் எண்ணத்தோடு "செத்ததின் வயிற்றில் (உடம்பில்) சிறியது (மிகவும் நுணுக்கமான உயிர்) பிறந்தால் (புகுந்தால்), எத்தைத் தின்று [எதனைத் துய்த்து] எங்கே கிடக்கும் [தங்கும்]?"-என்று கேட்டார் அவர். 'அத்தைத் தின்று அங்கே கிடக்கும்' என்று மறுமொழி பிறந்தது. சிறைப் பட்ட உயிர் தன் வினை தீருங்காறும் இன்ப துன்பங்களைத் துய்த்து அவ் வுடம்பிற் குள்ளேயே தங்கியிருக்கும் என்பது பொருள். அது கேட்டுப் புளகமுற்ற மதுரகவிகள், அப்போழ்தே சடகோபரைத் தம் மன, மொழி, மெய்களால் வணங்கி, ஞானகுருவாகக் கொண்டு வழியிட்டார் என்பர். மாணிக்கவாசகருக்கு திருப்பெருந்துறையில் ஒரு சிவஞானி குரவனாக வந்து அருள்புரிந்தாற் போல, மதுரகவிகளுக்கு நம்மாழ்வார் புளியின் கீழ் இருந்து குருவானார். இளமையி லிருந்தே தொடங்கிய ஆழ்வாரின் ஞான-யோக வாழ்க்கை மதுரகவிகளின் சந்திப்பின் போது முழுமையுற்றுப் பொலிந்தது. கி.பி. 814-இல் இச் சந்திப்பு ஏற்பட்ட நாள் வைணவ வரலாற்றில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப் பட வேண்டிய நன்னாள். ஏனெனில், அன்றுதான் நாத முனிகள், ஆளவந்தார், ராமானுஜர், வேதாந்த தேசிகர், மணவாள மாமுனிகள் ஆகிய பெரியோர்களால் அலங்கரிக்கப் பட்ட விசிஷ்டாத்வைத குருபரம்பரை பிறந்தது.

இனி, நம்மாழ்வார் அருளிச் செயல்களில் வைணவ சித்தாந்த ஞானம் பொலியும் பகுதிகளை நோக்குவோம். வைணவத்தின் மூன்று மந்திரங்களில் முதலாவதாகிய [ஓம் நமோ நாராயணா-என்ற] பெரிய திருமந்திரத்தின் பொருள் திருவிருத்தத்திலும், மூன்றாவதாகிய சரமச் சுலோகத்தின் பொருள் திருவாசிரியம், பெரிய திருவந்தாதி ஆகியவற் றுள்ளும் ஓதப்பட்டுள்ளதாகப் பெரியோர் கூறுவர். இடைப் பட்டதும் மந்திர ரத்தினம் என்று கூறப்படுவதும், "ஸ்ரீமந் நாராயண சரணவ் சரணம் பிரபத்யே, ஸ்ரீமதே நாரா யணாய நமஹ" -என்ற உரு உடையதும் ஆன த்வய

[இரண்டடி கொண்ட] மந்திரத்துப் பின் அடியின் பொருளை திருவாய்மொழியின் முதல் மூன்று பதிகங்களும், முன் அடியின் பொருளை திருவாய்மொழியின் அடுத்த மூன்று பதிகங்களும் உட்கொண்டு இருப்பதாகக் கூறப்படுகிறது. தர்ப்பணம் கொடுக்க திருமாலை அழைப்பதற்கு பவுதாயன தர்ம சூத்திரத்து மந்திரத்திற்காணும் கேசவன் முதல் தாமோதரன் ஈறாகக் கூறப்படும் 12 திருநாமங்களுள் ஒவ்வொன்றிற்கும் ஒரு பாட்டாக 12 பாடல்களும், முத்திரைக் கவி ஒன்றும் சேர்த்து மொத்தம் 13 பாடல்களைக் கொண்ட பதிகம் ஒன்று திருவாய்மொழி 2-ஆம் பத்தில் 7-வதாக அமைந்துள்ளது. இதனை முத்திரைக் கவியில் 'பன்னிரு திருநாமப் பாட்டு' என ஆழ்வாரே குறித்துள்ளனர்.* இத்திருமொழியிற் காணும் 2 அதிகப்படியான பாடல்களே 1100 பாடல்களே இருக்க வேண்டிய திருவாய்மொழியில் 1102 பாடல்கள் இருப்பதன் காரணமும் ஆதல் குறிப்பிடத் தக்கது.

இன்னும், அர்த்த பஞ்சகமும் இதில் சொல்லப்பட்டு இருப்பதாக பட்டர் தனியன் கூறுவதும் மேலே கண்டுள்ளோம் உயர்வற (1-1), திண்ணன் வீடு (2-2) அணைவது(2-8), ஒன்றும் தேவும்(4-10) என்னும் இந் நான்கு பதிகங்களும் இறை நிலையையும், பயிலும் சுடரொளி (3-7) ஏறாளும் இறையோனும் (4-8), கண்கள் சிவந்து (8-8), கருமாணிக்கம் (8-9) என்னும் நான்கும் உயிரின் நிலையையும், நோற்ற நோன்பு (5-7), ஆராவமுதே (5-8), மானேய் நோக்கு (5-9), பிறந்த வாறும் (5-10) என்னும் நான்கும் இறைவனை அடைதற்கரிய வழிகளையும், எம்மா வீடு (2-9) ஒழிவில் காலம் (3-3), நெடுமாற் கடிமை (8-10) வேய்மரு தோளிணை (10-3) என்பன நான்கும் பேற்றின் தன்மையையும், வீடுமின் முற்றவும் (1-2), சொன்னால் விரோதம் [3-9], ஒரு நாயகமாய் [4-1],

* பன்னிரு நாமப் பாட்டை பெரியாழ்வார் முன்பே 13 பாடல்களில், அதுவும் அந்தாதித் தொடையிலேயே, [பெரியா. தி. 2-3] பாடியுள்ளார்.

கொண்ட பெண்டிர் [9-1] என்பன நடைகளின் நிலையினையும் கூறுவதாக ஆசார்யர்கள் கண்டு கூறி யுள்ளனர்.* இவற்றின் விவர மெல்லாம் திருவாய்மொழிக்கு மணிப் பிரவாள நடையில் அமைந்த ஐந்து விரிவுரைகளில் காணலாம். இவை எல்லாவற்றினும் பெரியது நம்பிள்ளை சொல்லியதைக் கேட்டு வடக்கு திருவீதிப் பிள்ளையால் எழுத்திலிடப்பட்ட 'ஈடு' முப்பத்தாறாயிரப்படி; மற்றவை உடையவர் [ராமானுஜர்] நியமனத்தால் திருக்குருகைப் பிரான் பிள்ளானால் செய்யப்பட்ட 6000-ப் படியும், நஞ் சீயர் செய்த 9000-ப் படியும், நம்பிள்ளை நியமனத்தால் பெரியவாச்சான்பிள்ளையின் மாணாக்கர் ஆகிய வாதிகேசரி அழகிய மணவாள ஜீயரால் செய்யப்பட்ட 12000-ப்படியும் ஆம். வளமிக்க இவ் உரைகள் எல்லாம் சைவத்திற்குப் பெரியபுராணம் வாய்த்ததை ஈடு செய்து விட்டதாகவே நாம் கொள்ளலாம். முப்பத்து ஆறாயிரப்படி உரைக்கு 'ஈடு'- என்ற பெயர் எவ்வளவு பொருத்தமானது! அழகிய மணவாள ஜீயருக்குப் பிறகு அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் என்ற இன்னொருவர் [ஈடு 36000-ப் படி செய்த வடக்கு திருவீதிப்பிள்ளையின் இரண்டாம் மைந்தர்] மாற னார் மனத்தை மேலும் நன்றாக விளக்கி 'ஆசார்ய ஹ்ரு தயம்' என்ற பெயரோடு செய்த நூலும், இதற்கு மணவாள மாமுனிகள் செய்த உரையும் உண்டு. பதிகத்திற்கு ஒரு பாட்டாக திருவாய்மொழியின் நூறு பதிகங்களின் உடைய வும் உட்பொருளைச் சுருங்கக் கூறும் பாடல்கள் நூறைக் கொண்ட அந்தாதியாய் மணவாள மாமுனியால் செய்யப் பெற்ற 'திருவாய்மொழி நூற்றந்தாதி' - என்று ஒரு நூலும் திருவாய்மொழிக்கு உண்டு.

ஆழ்வார் அருளிச் செயல்கள் 'மறை' எனப்படத் தக்க வைதாமா என்றொரு சர்ச்சையை அன்றே கிளப்பிவிட்டி

---

* அர்த்த பஞ்சகத்தைக் கொண்டனவாக மேலே குறிப்பிடப் பட்ட இருபது பதிகங்களுள் 1-1; 1-2; 3-3; 4-10; 5-8; 8-10 என்னும் ஆறுமட்டும் திருத்தினசரியில் [நித்தியாது சந்தானம்] காணும் பதின்மூன்று பதிகங்களிலும் உள்ளன.

ருந்தனர். [சடகோபரின் மறைவுக்குப் பிறகு] மதுரகவிக தமது குருநாதருக்கு ஆண்டுதோறும் விழாக் கொண்டாடி வந்தார். அந்த விழவிடை ஆழ்வார் பெருமை கூறும் விருதுக்களை முழுங்குவது வழக்கம். ஒரு சமயம் தமிழ்ச் சங்கத்தார் எனத் தம்மைக் கூறிக் கொண்ட சிலர் குறிப்பாக 'வேதம் தமிழ் செய்த பெருமாள் வந்தார்'- என்ற விருதை கடுமையாக எதிர்த்தனர். இந்த சர்ச்சையை சங்கப்பலகை யின் உதவி கொண்டு தீர்ப்பது என்று முடிவு செய்யப் பட்டது. ஒப்பந்தப்படி 'கண்ணன் கழலிணை'- என்ற [திருவா. 10-5,1] பாசுரத்தை மதுரகவிகள் ஒரு ஏட்டில் எழுதி அச் சங்கத்தாரிடம் அளித்தனர். அதனையும், தமது நூல்கள் சிலவற்றையும் சங்கப்பலகையின் மீது அவர்கள் வைக்கவும், அது அவ் வேற்று நூல்களைத் தள்ளிவிட்டு ஆழ்வார் பாசுரத்தை மட்டுமே ஏந்தி நின்றதாம். அதுகண்ட சங்கத்தார்

"சேமம் குருகையோ, செய்யதிருப் பாற்கடலோ?
நாமம் பராங்குசமோ, நாரணமோ? - தாமம்
துளவோ, வகுளமோ? தோளிரண்டோ நான்கும்
உளவோ? - பெருமான்! உனக்கு"

என அதிசயித்து

ஈயாடுவதோ கருடற் கெதிரே? இரவிக்கெதிர் மின்
மினி ஆடுவதோ?
நாயாடுவதோ உறுப்புலிமுன்? நரிகேசரிமுன் நடை
ஆடுவதோ?
பேயாடுவதோ அழகூர்வசிமுன்? பெருமான்
வகுளாபரணன் அருள்கூர்ந்[து]
ஓவாதுரை ஆயிர மாமறையின் ஒருசொற்
பெறுமோ? உலகிற் கவியே!

—என்று ஆழ்வார் அருளிச் செயல்களுக்கு ஒரு சிறப்புப் பாயிரமும் அளித்தனர். 'சங்கக் குவடிறக் குத்திய மறப்

பெயர்க் கொலையானை'-என்ற சடகோபர் அந்தாதிச் செய்யுளும் [எண் 48] இதனை அரண் செய்கின்றது.

ஆழ்வார் காலத்தில் எந்தவித தமிழ்ச் சங்கமும் தாமிர பரணிக்கரையில் இருந்ததில்லை. செய்யப்பட்ட தடை 'வேதம் தமிழ் செய்த பெருமாள்'- என்ற [வேதத்தை உட்கொண்ட] விருதிற்கே ஆதலை நோக்கும் போது, கூறப்பட்ட சங்கம் ஒரு சைவ சமாஜம் ஆகவே இருக்கவேண்டும் போலத் தோற்றுகின்றது! தமது நூலை உயர்த்திக் கூறிக் கொள்வதற்காகவே வைணவர்கள் இப்படி ஒருகதையைப் படைத்துக் கூறியிருக்கலாம் என்றும் வாதிக்கலாம். ஆனால், இத் தென்பாண்டிச் சீமையில் முதலில் அடியெடுத்து வைத்த ஐரோப்பியர்களை வசப்படுத்திக்கொண்டு சைவர்கள் தமது சமயத்துக்கு ஆக்கம் தேடிக் கொண்டதாக சீனிவாச அய்யங்கார் குறைபட்டுக்கொண்டதை [பக்.281] யும், கம்பராமாயணத்தைக் கண்ணெடுத்துப் பார்ப்பதுங் கூட கயிலாய நாதனுக்குச் செய்த துரோகமே யாகக் கருதி சிவநேயச் செம்மல், செந்தமிழ்ச் சேதுப்பிள்ளை அவர்களைத் தடுத்ததையும் எண்ணிப் பார்க்கும் போது, தென்பாண்டி மக்களின் சைவ சமயப் பற்று தெற்றெனத் தெரிகின்றது. எனவே, ஆழ்வாருக்கு அவர்கள் எதிர்ப்பு தெரிவித்திருக்கக் கூடியது சாத்தியமே. இப்போது இங்கே காணும் சைவ சித்தாந்த சமாஜம் பழம் பாரம்பர்யத்தின் [Heritage] எச்சமே என்பது இதனால் தெளிவாகின்றது. ஏனெனில், 'சைவமே தமிழ்' 'தமிழே சைவம்'-என்பதே இவர்கள் மூல மந்திரம். இப்படி இவர்கள் ஓயாது செய்து வருகின்ற கோயபெல் (Goebel) ரகத்துப் பிரச்சாரத்தினால் நாகரிக வளர்ச்சியில் மேய்ச்சல் நிலையை சமுதாயம் எட்டிப்பிடித்த நாளிலிருந்து மாயோன் சமயத்தையே பின்பற்றி வரும் யாதவத் தமிழ் மக்களும் கூட சைவமே தமிழர் சமயம் என்று நம்பும் அளவுக்கு மனமாற்றம் (Brain wash) செய்யப்பட்டு விட்டிருக்கின்றனர்!

## ஆழ்வாரின் சமரச சர்வோதயம்

சரமப் பிரபந்தமாகிய திருவாய்மொழியில் நெடுக திருமாலின் அவதாரங்களுக்கு மட்டுமே யன்றி, அயனுக்கும் (பிரமனுக்கும்), அரனுக்கும் (சிவபிரானுக்கும்)கூட வணக்கம் சொல்கிறார் நம்மாழ்வார். இன்னும் இப் பிரபந்தத்தின் இறுதிப்பதிகத்தில் 'முனியே! நான்முகனே! முக்கண்ணப்பா!' என இவரை ஒரு சேர வைத்தும் வணக்கம் கூறுகிறார். இதன் கடைசிப் பாசுரத்தில் 'அரியை, அயனை, அரனை அரற்றி அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன்'-என்று கூறுமிடத்து இந் நெறி உச்ச கட்டத்தையே கூட எட்டிப் பிடித்து விட்டிருக்கின்றது. இவை இவரைப் பல தெய்வக் கொள்கையினராக மறைமலை அடிகளுக்குக்காட்டியுள்ளன. இதனால், ''கடவுளை நேரே காணும் பேறு பெற்றில ராயினும், முழு முதற் கடவுள் இலக்கணம் இது தான் என்று ஆராய்ந்து உணரும் அறிவு மதுகையும், அதனால் அம் முழு முதற் பொருள் ஒன்றினையே வழுத்தும் மன ஒருமைப்பாடு மாயினும் உடையரோ வெனின், அவை தாமும் அவர் (நம்மாழ்வார்) உடையர் அல்லர்'' - என அடிகள் சும்மா வெளுத்துக்கட்டி விட்டுள்ளார். இவர் கூறுவதைப் பார்த்தால், முழு முதற் பொருளை ஆராய்ந்து உணர்ந்த அறிவு மதுகையும், அப் பொருளை நேரே கண்ட ஆள்வினை உடைமையும், அதனையே வழுத்திய மன ஒருமைப்பாடும் இவர் உடைத்தாயிருந்தார் போலத் தெரிகின்றது! நாய் வாலை நிமிர்த்த யாரால் ஆகும்? நாம் அலட்டிக் கொள்ளாமல் ஆராய்ச்சி முறைப்படியே இதனையும் நோக்குவோம்.

அடிகள் கருத்துப்படி ஆழ்வார் ஒரு 'மறந்தும் புறந்தொழா' வீர வைணவராய் இருந்திருக்க வேண்டும். இப் பேர்க் கொத்த தீவிர வாதிகளை எதிர்பார்த்து, இந்தப் படிக்கு திருமழிசைப்பிரான் முன்பே வைணவத்தைத்திருத்தி வைத்துவிட்டுத்தான் போயிருந்தார், தமது ஆசிரியன்மார் ஆகிய பொய்கையார், பேயார்களின் 'சங்கர நாராயண சமரஸ'த்தைக் கிழித் தெறிந்து விட்டு. பின்வந்த ஆழ்வார்

கள் எல்லோருமே இதனை வேதவாக்காகக் கொண்டு கடைப்பிடித்தே வந்தனர். நம்மாழ்வாரும் திருவாசிரியத்திலும், பெரிய திருவந்தாதி மற்றும் திருவிருத்தம் ஆகியவற்றுள்ளும் இக் கொள்கையினராகத் தான் தென்படுகிறார். ஏன்-திருவாய்மொழியிலேயேயுங் கூட,

"... ... அருளால் அளிப்பரார்
மாபா வம்விட அரற்குப் பிச்சைபெய்
கோபா லக்கோள் அரியே(று) அன்றியே"—
(திருவா. 2-2,2)

"மால்தனில் மிக்கதோர்த் தேவும் உளதே"—
(திருவா. 2-2,3)

"தேவன்எம் பெருமானுக் கல்லால்
பூவும் பூசனையும் தகுமே"— (திருவா. 2-2,4)
வெள்ளேறன், நான்முகன், இந்திரன், வானவர்
புள்ளூர்தி கழல்பணிந் தேத்துவரே-(திருவா. 2-2,10)

எனப் போதரும் வாசகங்கள் இவரின் வீரவைணவத்திற்குச் சான்று கூறும்.

"நும்மின் கவிகொண்டு நும்மிட்டா தெய்வம் ஏத்தினால்
செம்மின் சுடர்முடியென் திருமாலுக்குச் சேருமே"-

என்ற அடிகளில் தம் இஷ்ட தெய்வங்களை மற்றைய சமயத்தினர் பாடிப் பரவுவ தெல்லா முங்கூட முடிவில் தமது திருமாலுக்கே சென்றுசேரும் என்று இவர் கூறுவதில் திருமாலே முழுமுதற் கடவுள் என்ற இவர் கருத்து தெளிவாகத் தெரிகின்றது. இன்னும், அர்ச்சுனன் கண்ணன் முடிமேல் இட்டு பூசித்த பூக்கள் சிவபெருமான் திருவடியிற் காணப்பட்டன எனப் பொருள்படும்

"செங்கண் நெடியான்மேல் தேர்விசையன் ஏற்றியபூ
பைங்கண்வெள் ஏற்றான்பால் கண்டற்றால்— எங்கும்
முடிமன்னர் சூடியபூ மொய்ம் மலர்த்தார் மாறன்
அடிமிசையே காணப்படும்"—

என்ற முத்தொள்ளாயிரப் பாடல் பாரதக் கதையையே சைவசமயப் பற்றால் மாற்றிக் கூறியதைக் கண்டு வியப்புற்று, அதை தீர்த்தன் (கண்ணன்)இன் முழுந்தாளில் பார்த்தன் (அர்ச்சுனன்) இட்ட பூவை கைலாயம் சென்ற போது சிவன் முடிமேல் கண்டதாக அக்கதையில் உள்ளவாறே முறைப்படுத்தி

தீர்த்தன் உலகளந்த சேவடிமேல் பூந்தாமம்
சேர்த்தியதுவே சிவன்முடிமேல் தான்கண்டு
பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழாயான் பெருமை
பேர்த்தும் ஒருவரால் பேசக் கிடந்ததே
(திருவா. 2-8,6)

(பேர்த்தும்—பிறிதொரு விதமாகவும்; ஒருவரால்—முத்தொள்ளாயிர ஆசிரியரால்) என்று பாடுவதிலும் இப் போக்கையே காண்கிறோம்.

"புக்கு அடிமையினால் தன்னைக் கண்ட
மார்க்கண் டேயன் — அவனை
நக்க பிரானும் அன்(று) உய்யக் கொண்டது
நாராயணன் அருளே"—(திருவா 4-10,8)

என்று பாடும் இருவர் பார்வையில் 'சிவனுக்கும் பிரமன் தனக்கும் நாயகன் நாராயணனே' —(திருவா. 4-10,4)

என்பது சொல்லாமலே விளங்குகின்றதல்லவா?

திருவாய்மொழியில் சில இடங்களில் தான் 'எந்தப் பெயரானால் என்ன? தெய்வம் தெய்வம் தான்'- என்று ஒரு புதுமைக் கவி பாடுகிறார் ஆழ்வார். எனவே, இது பொய்கை மற்றும் பேயார்களின் சமரசத்தையும் மிஞ்சிப் போய் விட்ட ஒரு மகரா சமரச சன்மார்க்கத்தின் உதயத்தையே காட்டுகின்றது. இச் சமரசச் சர்வோதயத்தின் வழிச் சென்று (சடகோபர் அந்தாதி பாடிய) கலைக்கடல் கம்பர் சிவ நிந்தனை சிறிதும் இல்லாமலே இராமாயணப் பார காவியம் செய்துண்மையை உலகனைத்தும் அறியும்.

இக் காவியத் துள்ளேயே 'அரன் அதிகன் உலகளந்த அரிய திகன்' -என்று உரைக்கும் அறிவிலோர்க்குப் பரகதி சென்று அடைவரிது' - (கிட். நாட. படலம் ஏச. 24) என்றும் பாடியுள்ளார், கவிச் சக்ரவர்த்தி. ஆனால், கம்பரே ஒரு தாழ்ந்த வகுப்பினர் தான் நமது திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த சமாஜத்து அன்பர்கட்கு. கம்ப ராமாயணத்தில் இலக்கியச் சுவை ஒன்றுமே கருதி ஈடுபட்ட அறிஞர் சிவநேசச் சேதுப் பிள்ளை அவர்களையே கண்டித்தவர்கள் ஆயிற்றே! ஆனால், திருவருட்பா அருளிய வடலூர் வள்ளலாரும் சமரஸ சன்மார்க்கத்தினரே. இதற்கு என்ன செய்வார்களோ பாவம்!* காந்தியடிகளோ எல்லோரையுமே விஞ்சிப் போய் முஸ்லிம்களையும் அணைத்துக் கொள்ளும் நல்லெண்ணத்தோடு

"ரகுபதி ராகவ ராஜாராம்!
பதீத பாவன சீதாராம்!
ஈஸ்வர அல்லா தேரே நாம்"—

என்று பாடி சர்வோதயத்தை உயிர்ப்பித்தார். மறைமலை அடிகளின் மேதா விலாசப் பார்வையில் இவர்கள் எல்லோரும் முட்டாள்களே!

சம்பந்தர் சிவபெருமான் அருளால் செய்து காட்டிய சாதனைகளை நன்குணர்ந்து, அப் பெருமான் வழிபாட்டைக் கைவிட்டால் இம்மையில் பெருந்துன்பமும், மறுமையில் நிரயமும் (நரகமும்) வாய்க்கும் என அஞ்சியே அப் பெருமானை இறுதியில் வைத்துத் திருவாய்மொழியை முடித்துக் கொண்டார் ஆழ்வார் என்றும் எழுதியுள்ளார் அடிகள் (பக் 42). 'அரியை, அரனை, அயனை' என்று அருளிச் செய்திருந்தால் சிவ பெருமானை நடு நாயகமாக வைத்துப் போற்றி ஆழ்வார் உய்ந்து போனார்

---

* யாழ்ப்பாணத்து ஆறுமுக நாவலர் வடலூர் அடிகளின் மீது வழக்கு தொடுத்ததால் இக் காலத்திலும் இவர்கள் சும்மா ஓய்ந்திருக்க வில்லை என்பது தேற்றம்.

எனவும், மாறாக 'அரனை, அயனை, அரியை'-எனவோ அல்லது 'அரனை, அரியை, அயனை'-எனவோ பாடியிருந் தால் சிறப்புடைப் பொருளை முந்துறக் கிளத்தல் என்ற உத்தியின்படி அரனுக்கு முதன்மை கொடுத்ததாலேயே மெய்யுணர்வு என ஒன்றை ஆழ்வார் பெற்றிருந்தால், பெற்றிருக்க முடியும் என்றும் இவர் வாதித்திருப்பார்! சிவ பிரானைப் பாடாவிட்டால் தமக்கு நிரயம் நிச்சயம் என நினைத்திருந்தால் திருமழிசைப்பிரானைப் போல மதம் மாறி சிவபெருமானை வெளிப்படையாகவே புகழ்ந்தும், திருமாலை அவ்விதமே வாயார இகழ்ந்தும் ஒரு புதுத் தேவாரமே பாடியிருக்கலாமே! இவரை யார் தடுத்திருக்க முடியும்? அடிகள் ஏன் இவற்றை எண்ணிப் பார்க்கவில்லை? 'ஆசை வெட்கம் அறியாது' என்பார்கள். அது போல மத வெறி பிடித்து ஆட்டும் போதும் அறிவு அடியோடு மறைந்து விடுகிறது! செந்தமிழ்ப் போர்வையில் அடிகள் செய்துள்ள சின்னத் தனத்தை சைவமே கூட அனுமதிக்கக் கூடாது என்பதே நமது விருப்பம். நம்மைப் பொறுத்த வரையில் தேவார ஆசிரியர்களுக்கு சிவபிரானைப் போல், நம்மாழ் வாருக்கு திருமாலே முழு முதற் கடவுள், ஆயினும், தாம் கண்ட விதத்தாலன்றி முழுமுதற் பொருளை வேறு கோணங் களில் கண்டவர்கள் இட்டு அழைத்த பெயர்களிலும் அவருக்கு ஆட்சேபம் இல்லை. அதாவது, சைவர்களின் சிவப்பெயரும் முழுமுதற் பொருளுக்கே ஆவதால், இதுவும் (இப் பெயரும்) ஆழ்வாருக்கு உடன்பாடே என்பது கருத்து. அயன் மாட்டும் இவ்விதமே கொள்க. ஏனெனில்,

"அவரவர் தமதம(து) அறிவறி வகைகை
அவரவர் இறையவர் எனவடி அடைவர்கள்;
அவரவர் இறையவர் குறைவிலர்; இறையவர்
அவரவர் விதிவழி அடைய நின்றனரே"

(திருவா. 1-7,5)

என்ற திருவாக்கில் கடவுளின் (கற்பனையே ஆகின்ற) பல தரப்பட்ட பெயர், உருவம், குணங்களுள் ஒரு வகையை

(set) மட்டும் ஒருவன் மேற்கொள்வது அவன் விரும்பியே அன்றி பெரும்பாலும் ஓரிடத்தில் பிறந்து விட்டதாலேயே ஆதலால், அவை விதிப் பயனே என்று எடுத்துக் காட்டியுள்ளார். இந்த அடிப்படையில் இவருடைய புதிய தாரகம்

"ஓம் நமச்சிவாய
நமோ நாராயணாய
பரப் பிரம்மணே நமஹ"

என்பதுவே. இது முன்காட்டிய காந்தியடிகளின் பாடலில்

"ஈஸ்வர அல்லா, தேரே நாம்"

என்பது போன்றதே. இந்த மந்திரங்களில் இரண்டு மூன்று தெய்வங்கள் அல்ல சொல்லப்படுவது; ஒரே தெய்வத்துக்கு அனேகம் பெயர்கள் மட்டுமே!

## ஆழ்வாரும், சங்கரரும்

போகட்டும். நம்மாழ்வாருக்கு மட்டும் திடீரென்று சமரச சன்மார்க்கத்தில் நாட்டம் சென்றதேன்? அவர் பரந்த மனப் பான்மையே காரணம் ஆகல் வேண்டும். ஆயினும், இதைத் தூண்டிவிட்டிருக்கக் கூடிய துணைக் காரணம் ஏதும் உண்டோ? துணைக்காரணம் என்றதுமே, ஆழ்வாரின் காலம் கி.பி. 798-833 என்று நாட்டப் பட்டுவிட்ட நிலையில், ஆதிசங்கரர் பற்றிய நினைப்பே எழுகின்றது. இப் பரத கண்டத்தின் தத்துவ வானிலே உதயம் ஆனவர்களுள் தட்சிணாமூர்த்தியும் (கிராமத்தார் இவரைத் தெக்கணா முட்டி என்பர்) கீதாசார்யன் ஆகிய ஸ்ரீ கிருஷ்ண பரந்தாமனும், ஆசியஜோதி ஆகிய கவுதம சித்தார்த்த புத்த பிரானும் ஆகிய ஒப்பரிய சுடர் மணிகளோடு ஆதிசங்கரரும் ஒத்த புகழ் உடையவர். இச் சங்கர பகவான் கி.பி. 788-820 இல் வாழ்ந்தவராகத் தெரிகின்றார். இவர் அத்வைத வேதாந்தத்தை நிலைபெற நிறுத்திய பெரியார். நாம, ரூப பேதங்கள் வெறும் மயக்கங்கள் ஆவதும், மூலப் பொருள் ஒன்றின் பிம்பங்களே பிரகிருதி ஆவதும் இவர் கொள்கை.

அதாவது, நாம் காணும் காட்சிகள் எல்லாம் வெறும் பேய்த் தேரை அல்லது பொய்த்தோற்றமே என்பதாம். இந்த மாயா வாத அடிப்படையில் தம் காலத்திய ஆறு சமயங்களையும் அப்படிக்கே நிலைபெற ஆவன செய்த படியால், இவரை 'ஷண்மத ஸ்தாபனாசார்யர்' - என்றும் கூறுவதுண்டு. இப் பழம்பெரும் நாட்டில் சண்ட மாருதமாக வீசி (சிருங்கேரி, பூரி, ஹரித்துவாரம், துவாரகை ஆகிய) நான்கு மூலை களிலும் மடங்களை நிறுவி தமது தத்துவத்தை நிலைநிறுத் திய இச் சிரஞ்சீவியின் சிவானந்த லகரியும், பஜ கோவிந் தமும் இவரது பரந்த, திறந்த மனப் பாங்கிற்கு இறவாப் பெருஞ்சான்றுகளாக நிலைத்து விட்டன! இப்போது புரி கிறது நமக்கு, நம்மாழ்வார் ஏன் புதிய பாதையில் திடீ ரென்று நடை போட ஆரம்பித்து விட்டார் என்று. விசிஷ் டாத்வைத தத்துவத்தில் இருந்து கொண்டே சங்கர பக வான் காட்டிய பாதையின் பக்கமும் பார்க்கிறார், ஆழ்வார். இதனால் ஏற்பட்டது தான் மறைமலை அடிகள் 'சஞ்சலம்' என்று நையாண்டி செய்யும் சமரஸ சித்தாந்தம்!

ஆழ்வாரும், திருமூலரும

ஆழ்வாரின் சமரச சன்மார்க்கத்திற்கு சங்கரரின் போதனைகள் உடனடிக் காரணம் ஆகலாம் எனினும், வேறு காரணமும் இருக்கலாம் போலத் தெரிகின்றது. இவ் இருவருக்கும் முற்பட்ட திருமூலர்

"ஆதிப் பிரானும், அணிமணி வண்ணனும்,
ஆதிக் கமலத்(து) அலர்மிசை யோனும்
சோதிக்கில் ஒன்றின் தொடர்ச்சியே என்னார்
பேதித் துலகிற் பிணங்குகின் றாரே" (திருமந் 114)

என்று ஓதியுள்ளார். மறைமலை அடிகளின் கண்ணில் இது எப்படிப் படாமல் போயிற்று என்று நம்மால் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியவில்லை. அது எப்படியோ போகட்டும். நுணுகி ஆராய்ந்து பார்க்கும் போது, ஆழ்வார் திருமந்திரப் பயிற்சி உள்ளவராகவே தோற்றுகிறார். சொல் லிலும், பொருளிலும் மூலர் பெருமான் அருளிச் செயலோடு

ஒற்றுமைப்பட்டுக்காணும் பல இடங்களை 'திருவாய்மொழித் திறன்' அறிந்த அறிஞர் கு. தாமோதரன் அவர்கள்[24] எடுத்துக் காட்டியுள்ளனர். ஆகவே, தமிழகம் தந்த சமரச

24. திருவாய்மொழித் திறன். பக். 262-5.

1. ஆணல்லன்; பெண்ணல்லன்; அல்லா அலியும்
அல்லன் (திருவா. 2-5,10)
பெண்ணல்ல; ஆணல்ல; பேடல்ல (திருமந். 1872)

2. உளனலன்; இல்லை அல்லன் (திருவா. 2-5,10)
இல்லனும் அல்லன்; உளனலன் எம்இறை (திருமந்.3015)

3. முடியாததென் எனக்கேல் இனி? முழுதுலகம் உண்
டான் உவந்து வந்து
அடியேனுள் புகுந்தான்; அகல்வானும் அல்லன்
(திருவா. 2-6,7)

ஆரா லும்மெனை அமட்டவொண் ணாதினி
சீரார் பிரான் வந்தென் சிந்தையுட் புகுந்தான்.
(திருமந். 2960)

4. அடியார் அடியார்தம் அடியார் தமக்கு
அடியார் அடியார்தம் அடியார் அடியோங்களே
(திருவா. 3-7,10)

அடியார் அடியார் அடியார்க்(கு) அடிமைக்கு
அடியனாய் நல்கிட்(டு) அடிமையும் பூண்டேன்
(திருமந். 2624)

5. மெய்யன்ஆகும் விரும்பித் தொழுவார்க் கெல்லாம்
பொய்யன்ஆகும் புறமே தொழுவார்க் கெல்லாம்
(திருவா. 9-10,7)

மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்மிகப்
பொய்கலந் தாருட் புகுதாப் புனிதன்- (திருமந். 2601)

6. திருமாலிருஞ் சோலை என்றேன் என்ன
திருமால் வந்தென் நெஞ்சு நிறையப் புக்கான்
(திருவா. 10-8,1)

சிவபெரு மான்என் றியானழைத்(து) ஏத்த
தவபெரு மானென்(று) தான் வந்து நின்றான்
(திருமந். 2971)

சன்மார்க்கமணிகள் ஆகிய பொய்கையார், பேயார், திருமூலர், (ஆதி) சங்கரர், சடகோபர் என்னும் ஐவருள் ஐந்தாமவர் ஆன சடகோபர் இம்மார்க்கத்தின் கடைசி விசிஷ்டாத்வைதப் பிரதிநிதியே ஆதல் காண்கிறோம்.

## ஆழ்வாரின கடவுள் கொள்கை

இனி, கடவுள் பற்றி வேறு சில கருத்துக்களைக் காண் போம். ஆபத்தில் சிக்குண்ட போதும், தீராத நோயினால் அவதிப்படும் போதும், பேராசை பிடித்து ஆட்டும் போதும், தனக்கென்று ஒரு தலைவனுக்காகத் தன்னுயிர் தவிக்கும் போதும் மனிதன் கடவுள் என்ற ஒரு மாபெரும் பொருளையே நாடுகிறான் என்பதை நாம் முதலில் அறிந்து கொள்ள வேண்டும். ஆகவே, 'கடவுள்' என்பது மனித இதயத்தினுடைய அடிப்படைத் தேவை ஆகும். தனக்கு வேண்டியதை இதயம் படைத்துக் கொண்டும் விட்டது! சொல்லப்போனால் கடவுளும், காசுமே மனிதனின் படைப்புக்களில் மிகப் பெரியனவுங்கூட!! ஆயினும், இப்படி ஒரு பொருள் உண்டா என்று அறிய வேண்டுவது இன்னொரு முக்கிய உறுப்பாகிய மூளையின் வேலை. 'கடவுள் உண்டு'—என்பதே வள்ளுவர் போலும் பண்டை ஆசிரியன்மார் பலரின் துணிபு.

> ''கற்றதனால் ஆயபயன் என்கொல் வாலறிவன்
> நற்றாள் தொழாஅர் எனின்''-

என்பது குறள். ஆயினும், இந்தக் கடவுளுக்கு எந்த அறிவியல் துறையிலும் எள்ளளவும் இடம் இல்லை. இங்ஙனம் எந்த விதமான திட்டவட்ட முடிவும் சாத்தியமாக இல்லாததால் 'கடவுள்' என்பது முற்ற முழுக்க நம்பிக்கையைப் பொறுத்த விஷயமாகவேஇருந்து வருகிறது. இந்தத் தீராத போராட்டம் பற்றி,

> ''இன்றென மறுக்கவென் நெஞ்சிசை குதில்லை
> உண்டெனற் குலகில்நற் சான்றோன் றில்லை
> பண்டுதொட் டிதுவரை பண்டிதர் நாவிடைக்
> கொண்டதோர் கூற்றாய் நின்றனை நீயே''—

7. தீர இரும்புண்ட நீரது போல்
ஆரப் பருகவெனக்(கு) ஆராவமு தானாள்
(திருவா. 10-10,5)
இரும்பிடைநீரென என்னையுள் வாங்கி(திருமந்.2592)

என்று இவ்வாசிரியர் தமக்குள் கூறிக்கொள்வ துண்டு. இதனையே ஆழ்வாரின்

"உளன்எனில் உளன்; அவன் உருவம் இவ்
உருவுகள்;
உளனலன் எனில் அவன் அருவம் இவ்உருவுகள்;
உளன்என இலன்என இவைகுணம் உடைமையின்
உளன் இரு தகைமையோ(டு) ஒழிவிலன் பரந்தே"

என்ற பாசுரத்திலும் (திருவா. 1-1, 9)

"பத்துடை அடியவர்க் கெளியவன்; பிறர்களுக்கரிய
வித்தகன்"— (திருவா. 1-4,5)

என்ற அடியிலும் காண்கிறோம். இதற்கு மேல் வெள்ளை யாகக் கடவுளைப்பற்றி வேறுயார்தான் என்ன சொல்லிவிட முடியும்?—மக்களை ஏமாற்றுவதைத்தவிர.'கடவுளை நேரே காணும்பேறு பெற்றிலராயினும்'-என்று அதிகப் பிரசங்கம் செய்யும் அடிகள் கடவுளைக் கத்தரிக்காய் என்று எண்ணு கிறாரோ என்னவோ நேரே காண்பதற்கு? எனில், அருவக் கடவுளைப் பற்றி நூல் நெடுகவும் பேசியது முன்னுக்குத் பின் முரணாகாதோ? இப்படிப் பலவிதத்திலும் திரித்துரைத் ததன் மூலம் இவற்றின் மறுப்பிற்கு வழி கோலிய வகையில் ஆழ்வாரின் பெருமைகளை எளியவர்களும் அறிந்து கொள்ள அடிகளே காரண பூதராய் இருப்பதால், இவரை வைணவ உலகம் மறப்பதற் கில்லை. இராமாயணத்தில் இலங்கேஸ் வரனுக்கு உள்ள பாகத்தை எப்படி மறுக்க முடியும்? ஆனது பற்றி, இவ் அதிகாரம் அடிகளுக்கே அடியீடு செய்யப் படுகின்றது.

மேற் காட்டியபடி 'ஓர்உருவம் ஒரு நாமம் ஒன்றும் இல்லாத'- நிலையைப் 'பர நிலை' - என்று வைணவம் கூறும். நிர்க்குணப் பிரம்மம் என்று அத்வைதம் கூறும் பரம்பொருளும் இதுவே ஆகலாம். பொதுவாக, இது எல்லாச் சமயங்களுக்கும் உடன்பாடே ஆயினும், ஹிந்து சமயத்தில் இறை பற்றிய நிலைகள் வேறும் உண்டு. இவற்றுள்

'வியூகம்'- என்று வைணவம் கூறுவது ஒரு முக்ய வகை. ஓரளவு தெளிவுடைய இது படைப்பு(சிருஷ்டி), காப்பு(திதி), அழித்தல் (சம்காரம்) ஞானம் போலும் தொழில் பற்றிய நிலை. சைவ-வைணவங்களை இணைத்து குப்தர் காலத்தில் உருவாக்கப்பட்ட இந்து சமயத்தில் பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மும்மூர்த்திகள் இரண்டு சமயங்களுக்கும் பொதுவான வியூக மூர்த்திகள் ஆயினர். இவர்களின் தொழில்கள் முறையே படைத்தலும், காத்தலும், அழித்தலும் ஆம். இம் 'மும் மூர்த்திக் கொள்கை' தேவார முழுவதும் காணப்படுவதை மறைமலை அடிகளே எடுத்துக் காட்டியுள்ளனர். வியூக விஷ்ணுவினின்றும் பிரித்தறிய பரம் பொருளை வைணவர்கள் மஹாவிஷ்ணு எனவும், வியூக சிவனிலிருந்து பிரித்தறிய பரம் பொருளைச் சைவர்கள் பரமசிவன் என்றும் பின்னாளில் அழைத்துக்கொண்டனர். மஹாவிஷ்ணுவை நாராயணன் என்ற பழம் பெயராலும் அழைப்பது உண்டு. பத்ம மற்றும் வராக புராணங்கள் நாராயணனை முழுமுதற் பொருளாகவும், விஷ்ணுவை காத்தற் கடவுள் ஆகவுமே குறிப்பிட்டுள்ளன.

"முதலாம் திரு உருவம் மூன்றென்பர்; ஒன்றே
முதலாகும் மூன்றிற்கும் என்பர்"— (பெரிய திரு. 72)

என்றவிடத்து ஆழ்வாரும் இதனை உறுதிப்படுத்துகின்றார்.

அழித்தல் தெய்வம் ஆகிய வியூக சிவனை உருத்திரன் என்றலும் வழக்கு. தேவாரத்தில் பரம்பொருளான பரமசிவன் வெறுமனே சிவன் எனவும், வியூக சிவன் உருத்திரன் என்ற ரிக்வேதப் பெயராலுமே குறிப்பிடப்பட்டுள்ளனர்.

"மூவரும், முப்பத்து மூவரும் மற்றொழிந்த
தேவரும் காணாச் சிவபெருமான்"

முத்தியாய் மூவரின் முதல்வனாய் நின்றவன்"—
(திருமழபாடி பதிகம்)

என ஞான சம்பந்தப் பிள்ளையாரும்,

"முந்தையர் முந்தியுள்ளார் மூவர்க்கு முதல்
வரானார்"—(திருவிடை மருதூர் பதிகம்)
"மூவுருவின் முதலுருவாய் இருநான்(கு) ஆன
மூர்த்தியே என்று முப்பத்து மூவர்
தேவரும் மிக்கோரும் சிறந்து வாழ்த்தும்
செம்பவளத் திருமேனிச் சிவனே" (பொது)

எனத் திருநாவுக்கரசர் பெருமானும் கூறியுண்மை காண்க. இதனை உடம்பட்ட மறைமலை அடிகள் பிறகு அழித்தல் செய்யும் தெய்வமே பேரழிவின்பின் எஞ்சி நிற்பதால் அது முழுமுதற் பொருளும் ஆகும் என்றும் வாதிக்கிறார். (பக். 429). அதாவது, சிவனே உருத்திரன் என்பது கருத்து. சிவனும் உருத்திரனும் வேறு என்று கூறி (பக்-431) பிறகு சிவனே உருத்திரன் என்று கூறுகிறார்! இருந்தும், நாராயணனை மும்மூர்த்திகளுள் ஒருவன் ஆகவும் ஆனால் முதல்வனாகவும் வைத்து

"தானும், சிவனும், பிரமனும் ஆகிப்பணைத்த தனி முதல்" (திருவா. 8-8,4) என நம்மாழ்வார் கூறும் போது மட்டும் நம்மாழ்வார் மூளையில் குழப்பம் இருப்பதாக வாதிக்கிறார் (பக்-424). ஆனால், பரம்பொருளுக்கு அழித்தல் தொழிலை உரிமையாக்கி ஏனை இரு தொழில்களுக்கும் சிறு தெய்வங்களைச் சைவமும், இதற்கு மாறாக காத்தல் தொழிலை பரம்பொருளுக்கு உரிமைப்படுத்தி, மற்றையத் தொழில்களுக்கு சிறு தெய்வங்களை வைணவமும் கொண்டன என்பதே உண்மை. நம்மாழ்வார் வைணவத்தை மேற்கொண்டார்; அவ்வளவே.

உருத்திரன், சிவன் என்பன வேற்றுமையின்றி வழங்கப் பட்டபடியால், இந்தச் சொல்லால் குறிப்பிடப்படுவது பரம் பொருளா அல்லது வியூக மூர்த்தியா என்பதை இடத்தைக் கொண்டுதான் காண இயலும். 'அரற்குப் பிச்சைபெய் கோபால கோளரி'-என்றவிடத்தில் அரன் வியூக மூர்த்தியும்

'பெரிய அப்பனை, பிரமன் அப்பனை, உருத்திரன் அப்பனை'
(திருவா. 8-1, 11)

என்ற தொடரில் உருத்திரன் சிவ பரம் பொருளும் ஆவர்.

அடிகளின் தாக்குதலுக்கு இலக்கான இன்னொரு பொருளும்உண்டு. எவ்வளவு தான் உயர்ந்தவர்கள் ஆனா லும் - மனிதர்களே ஆகின்ற இராமன், கண்ணன்- என்போரை எல்லாம்திருமாலின் வடிவங்களாக நம்மாழ்வார் வணங்கியதை இவர்கடுமையாகக் கண்டிக்கிறார் (பக் 434).

உண்மைதான். இந்தக் குறை மற்றைய ஆழ்வார்களி டமும் காணப்படுவதே. அதாவது, இக் குற்றச் சாட்டிற்கும் உரியது வைணவ சமயம் முழுவதுமே என்பது பொருள். தெய்வம் ஆகத் தக்க சிறப்புடை மனிதர்களை மனிதனாய்ப் பிறந்த தெய்வமே ஆக மாற்றிக் கொண்டு தெய்வத்தின் இந்த நிலையை விபவம் என்று அது அழைக்கின்றது; இத னையே அவதாரம் - என்பது உலக வழக்கம். ஆனால், இதற்குக் காரணம் என்ன? சமுதாய நலத்தையே கருத்திற் கொண்டு (அழித்தலினும்)காத்தல் தொழிலுக்கே முதன்மை கொடுக்கும் வைணவம் மனித சமுதாயத்தை இடர்க் கடலில் இருந்து மீட்டு உய்யக் கொண்ட மாவீரர் களையும்'தெய்வபலம்'உடையோராகக் கருதியதே. 'துஷ்ட நிக்ரகம் சிஷ்ட பரிபாலனம்'-என்ற வைணவத்தின் இந்த அடிப்படைத் தத்துவம் வேறோர் இடத்தில் விரிவாக ஆராயப்படும். ஆழ்வார்கள் வைணவர்கள் என்ற முறையில் இப்படிச் செய்தார்கள் என்று மட்டும் அறிந்துகோடல் ஈண்டைக்கு போதிய தாகும்.

மேம்போக்காகப் பார்க்கும் போது விபவம் சைவ, வைணவங்களுக்கு இடையே உள்ள மிகப் பெரிய வேற்று மையாகத் தோன்றுவது உண்மையே. ஆனால், ஆழ்ந்து நோக்கும் போது, சிவபிரானைப் பற்றிய புராணக் கதை களிற் காணும் சில நிகழ்ச்சிகளுக்காகிலும் ஒரு மனிதனே கருத்தாவாக இருந்திருக்க வேண்டும் என்பது நிச்சயம். இப்படிப்பட்டமனிதர்கள் சிலராவது இருந்திருக்க வேண்டும் என்று கூடச் சொல்லலாம். காட்டாக, தட்சிணாமூர்த்தி யாகிய சிவபெருமானும், பார்வதி தேவியை மணந்து குமரனைப் பயந்த சிவபெருமானும் இரு வேறு பெயர்களே

என்னலாம். ஏனெனில், ஜைனர்களின் ரிஷப தேவரும் ஆகத் தோன்றும் தட்சிணாமூர்த்தி பார்வதிநாதன் ஆதற்கில்லை. பெற்றோர் பெயர்கள் அறியப்பட்டிருந்த பரசுராமன், ஸ்ரீராமன், பலராமன் ஆகியோர் வெவ் வேறானவர்களாகக் கருதப்பட்டது போல, இவ்விரு சிவபிரான்களையும் இன்னும் இப்பெயர் கொண்ட பிறரை யும், இவர்கள் பெற்றோர் பெயர் மறக்கப்பட்டுவிட்ட படி யால், பிரித்தறிய மாட்டாமல் ஒன்றாக இணைத்து என்றும் உள சிவபெருமானைச் சைவம் கற்பித்துக் கடவுளாக வணங்கத் தொடங்கி விட்டது. இப்படிக்கே முருகனும் ஒரு மனிதனே. வைணவ மொழியிற் கூற வேண்டுமானால், இவர்கள் எல்லாம் விபவங்களே. இல்லாவிட்டால் இவர்கள் யார்? இவர்களைப் பற்றிய வரலாறுகளை எவ்வகையில் விளக்க முடியும்? ஆகவே, ஆராய்ந்து பாராமல் மறைமலை அடிகள் வைணவர்களின் விபவங்களைத் தாக்கியது நேர் மை ஆகாது. விபவம் எப்படி கடவுள் நிலை ஆக முடியும் என்று கிறித்தவர்களும், முகம்மதியர்களும் கேட்டால், அது வேறு விஷயம். இவர்களின் கேள்விக்கான பதிலுக்கு இது இடமல்ல; இந்தப் பதில் பிறிதோரிடத்தில் விரிவாக ஆராய்ந்து காட்டப் பெறும். இந்த அளவில் நம்மாழ்வாரின் கடவுட் கொள்கை பற்றிய ஆராய்ச்சியை நிறுத்திவிட்டு இதர செய்திகளை நோக்குவோம்.

*ஆழ்வாரும், ஞானசம்பந்தரும்*

இனி, சம்பந்தரோடு ஒப்பிட்டு ஆழ்வாரைப்பற்றி அடி கள் கூறுவதைக் காண்போம். நாயன்மார்களுள் சம்பந்தரு டைய வரலாறு மட்டுமே ஆழ்வாருடையதை அதிகம் ஒத் துள்ளது. சம்பந்தர் வரலாற்றைப் பார்த்துப் பொறுக்கக் கூடாத வைணவர்கள் இதைவிடச் சற்று அதிகமான பெருமையைத் தமது சமயத்துக்குத் தேடிக் கொள்ள வேண்டி படைத்துக் கொண்டதே நம்மாழ்வார் வரலாறு. ஏனெனில், மூன்றாண்டு அளவில் திருமுலைப் பால் உண்ட பிறகே ஞானம் வரப்பெற்று பாடத் தொடங் கினார் சம்பந்தர். இங்ஙனம் இவர் ஓதாது உணர்ந்தவர்

என்பதற்கு ஏற்ப முந்துநூல் வாடையும் இவர் பாடல்களில் வீசக் காணோம். இனி, நம்மாழ்வாரோ மூக்குறிஞ்சி முலை யுணாதே, பிறந்த நாள் தொட்டு மவுனியாய் இருந்து பிறகு தமது 16-ஆம் பருவத்தில் திடீரெனப் பாடத் தொடங்கினார் என்று சொல்லப்படுகின்றது. பிறந்த நாள் தொட்டு ஞானியாய் இருந்தார் ஆழ்வார் என்பதில் போட்டி மனப்பான்மையே உள்ளூரத் தென்படுகின்றது. ஆனால், அவர் பாடல்களை உற்று நோக்கும் போது, அவற்றில் முந்திய காலத் தமிழ்நூல் வாடை வெகுவாய் வீசக்காண்கிறோம்*

---

* 1. பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப்
பற்று' பற்று விடற்கு - (குறள் 325)

அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர்
செற்றது மன்னுயிர் அற்றிறை பற்றே-(திருவா. 1-2,5)

2. சுவைஒளி, ஊறோசை நாற்றமென்(று) ஐந்தின்
வகைதெரிவான் கட்டே உலகு - (குறள் 3:7)

ஈன்னு சுவையொளி ஊறொலி நாற்றமுற்றும் நீயே -
(திருவா : 7-8,9)

3. கண்டு கேட்[டு] உண்டுயிர்த்[து] உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள- [ஐம்புலனும்
கண்டுகேட்[டு] உற்றுமோந்[து] உண்டுழலும் ஐங்கருவி
கண்டவின்பம் [திருவா : 4-9, 10] [ஐங்கருவி

4. ஊரவர் கவ்வை எருவாக அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய் - (குறள் 1147)

ஊரவர் கவ்வை எருவிட்டு அன்னைசொல் நீர்ப்
படுத்து - (திருவா : 5-3,4)

5. தெய்வம் தொழாஅந் கொழுநன்தொழு தெழுவாள்
(குறள் 55)

உன்னித்து மற்றொரு தெய்வம் தொழான் அவனை
யல்லால் - (திருவா. 4-6,11)

இவர் ஓதாது உணர்ந்தவர் அல்லர் என்பதற்கு வேறு சான்றும் வேண்டுமோ? இப்படி வெகு அழகாகவும் மறை மலை அடிகள் விமர்சித்துள்ளனர் (பக். 411-5). இது சரி தானா?- பார்ப்போம்.

பிறந்த நாள் தொட்டே தாய்ப்பால் உண்ணாமல், ஏதோ நடைப்பிணம் போலவே இருந்து, கற்பிக்கப்பட்ட வற்றை எந்தவித உணர்ச்சியும் இல்லாமல் கேட்டு வைத் தும் வளர்ந்தவர் திடீரெனப் பாடத் தொடங்கி நூல்கள் செய்தார் என்பது தான் ஆழ்வார் சரித்திரத்தின் சாரம்.

"அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து
அறியா மாமாயத்து அடியேனை வைத்தாயால்"-

---

6. கரைபொரு திரங்கும் கனையிரு முந்நீர்
திரையிடு மணலினும் பலரே உரைசெல
மலர்தலை உலகம் ஆண்டுகழிந் தோரே
(மதுரைக் காஞ்சி 235-7)

தம்பெயர் தம்மொடு கொண்டனர் மாய்ந்தோர்
நெடுவரை இழிதரு நீத்தம்சால் அருவிக்
கடுவரற் கலுழிக் கட்கின் சேயாற்று
வடுவாழ் எக்கர் மணலினும் பலரே" -
(மலைபடுகடாஅம் 553-6)

நினைப்பான் புகிற்கடல் எக்கரின் நுண் மணலினும் பலர்
எனைத்தோர் உகங்களும் இவ்வுல காண்டு கழிந்தவர்
மனைப்பால் மருங்கற மாய்தலல்லால் மற்றுக் கண்டிலம் [திருவா : 4-1,4]

7. பிறவாப் பிறப்பிலை பிறப்பித்தோர் இலையே -
[பரிபாடல் 3-72]

பிறப்பில் பல்பிறவிப் பெருமான் - [திருவா. : 2-9,5]

என்னும் திருவாய் மொழி (2-3,3) இவர் இளமையிலேயே ஆட்கொள்ளப் பெற்றதைக் குறிக்கும் அகச் சான்றே. இது

---

8. யானை எருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்
சேனைத் தலைவராய்ச் சென்றோரும் - ஏனை
வினையுலப்ப வேறாகி வீழ்வர்தாம் கொண்ட
மனையாளை மாற்றார் கொள - [நாலடியார் - 8]

உய்ம்மின் திறைகொணர்ந்[து] என்றுல காண்டவர்
இம்மையே
தம்மின் சுவைமட வாரைப் பிறர்கொள்ளத் தாம்விட்டு
வெம்மின் ஒளிவெயிற் கானகம்போய்க் குமை
தின்பர்கள் - [திருவா. 4-1,8]

9. "வாழ்விலெம் வீதியுள் மாறன் வருங்கால்
தொழுதேனைத் தோள்நலமும் கொண்டான் -
இமிழ்திரை
கார்க்கடல் கொற்கையார் காவலனும் தானேயால்
யார்க்கிடுகோ பூசல் இனி' - [முத்தொள். 55]

கார்க்கோடல் பூக்காள் கார்க்கடல் வண்ணம்
என்மேல் உம்மைப்
போர்க்கோலம் செய்து போரவிடுத்தவன்
எங்குற்றான்?
ஆர்க்கோ இனி நாம் பூசல் இடுவது? அணிதுழாய்த்
தார்க்கோடும் நெஞ்சந் தன்னைப் படைக்க
வல்லேன் அந்தோ!

[நாச்சியார் திருமொழி - 11-1]

அல்லிமலர்த் தண்டுழாயும் தாரான்
ஆர்க்கிடுகோ, இனிப் பூசல்? சொல்லீர்!
[திருவா. 8-2,6]

அப்படி ஒன்றும் நம்பத் தகாததும் அல்ல. அனேகம் குழந்தைகள் மண்டூகம் போலவே இருந்து மலர்ச்சிப் பருவம் வந்துற்ற நாளில் சுடரொளி பரப்பி மிளிரக் காண்கிறோம். பள்ளிகளில் சாதாரணமாக இருந்தவர்கள் கல்லூரிகளில் முதல்தர மாணவர்களாயும், ஆரம்பத்தில் அதிசமர்த்தராய் இருந்தவர்கள் பின்னாளில் அசமந்தர்கள் ஆய்விட்டதையும் நம்மில் அனேகர் கண்டதுண்டு. நம்மாழ்வாரின் அருளிச் செயல்களில் ஞானமும், பக்தியும் 'நான் முந்தி, நீ முந்தி' என ஒன்றோடொன்று போட்டியிட்டுப் பயிறல் முன்பே கூறப்பட்டது. இங்ஙனம் ஞானம் தாண்டவம் புரிவது ஆரம்பத்திலிருந்தே மேற்காட்டியவாறு இவர் மூளை சிந்தனையில் ஈடுபட்டிருந்தமையை நன்கு புலப்படுத்துகின்றது. ஏனைய ஆழ்வார்களின் அருளிச் செயல்களில் இவ்வாறு இல்லை. தேவாரப் பாடல்களிலுங் கூட அவரவர்கள் வயதிற்கும், கல்வி அறிவிற்கும், வளர்ந்த சூழ்நிலைக்கும் ஏற்ற ஏதோ ஒரு வகைப் பக்திதான் காணப்படுகின்றது. இந்த அன்பில் தான் மூன்று தரங்கள் சைவப் பெரியார்களால் காணப்படுகின்றன. இலைமறைவிற் காய் போல் இரண்டொரு ஞான மொழிகள் சிதறி மட்டுமே தென்படுகின்றன. உண்மை இப்படி இருக்கவேயும், சம்பந்தரை விஞ்சுதற்காக வேண்டி, நம்மாழ்வாரை ஞானியாக வைணவர்கள் போட்டி மனப்பான்மையோடு படைத்துக் கூறினர் எனப் பறைப்பது புல்லறி வாண்மையே.

இனி, சம்பந்தர் ஓதாது உணர்ந்ததாகக் கூறப்படும் வரலாற்றையும் ஒரு சிறிது நோக்குவோம். இதற்கு அடிகள் காட்டும் அகச்சான்று பிள்ளையார் திருப்பாடல்களில் முந்நூல்வாடை காணப்படாமையே. இலக்கணமும், நிகண்டுகளும், புராணக் கதைகளும், ஒன்றிரண்டு சமயக் கோட்பாடுகளுமே கற்று ஒருவர் நூல் செய்திருந்தால், இது முழுவதும் சாத்தியமே. சம்பந்தருக்கு இலக்கியக் கல்வி அறவே இல்லை என்பது கருத்து. ஓதாது உணரவல்லவர் எனில் அவர் ஆங்கிலத்திலேயே கூட தேவாரம் பாடியிருக்கலாமே!

ஏன் ICBM, அணுகுண்டு, அமெரிக்கா, ருஷ்யா ஆகிய வற்றையும் கூட இறைவனின் அளப்பரிய ஆற்றலால் நிகழ விருக்கும் அற்புதங்களாகக் குறிப்பிட்டிருக்கலாம். கேவலம் புராணக்குப்பைகளை ஏன் கிளற வேண்டும்? அது கிடக்க, வைணவர்களில் கோதைநாச்சியார், சம்பந்தர் உடையதைப் போன்ற கல்வி பயின்றவரே. ஏனெனில், இவர் பாடல்களிலும் முந்திய தமிழ் நூல்களின் வாடை அதிகம் இல்லை. ஆனால், மனிதனாய்ப் பிறந்த கண்ணனை நேசித்ததால், அவர் பெற்றது மெய்யறிவு இல்லையாம். எனில், அடிகளை விடவும் அதிக மெய்யறிவு படைத்த பிள்ளையாரால் தோடு உடைய செவியும், தூய வெண்பிறை சூடிய சென்னியும், சுடலைப் பொடி பூசிய மேனியும், விடை ஊர்தியும் படைத்த மனித உருவம் மட்டும் பரம் பொருளாம். இம் மனிதச் சிவபிரானின் பெற்றோர் பெயர் மறக்கப்பட்டு விட்டது—சிவபிரானைப் பரம்பொருளாகக் கொள்ள அடிகளுக்கு வழி வகுத்துக் கொடுத்து விட்டது. உங்கள் தாத்தாவின் தகப்பனார் பெயர் எத்தனையோ பேருக்குத் தெரியாது தான். எனவே, அவர்களெல்லாம் அடிகளாரின் கொள்கைப்படி பரம்பொருள்களே!

'மாணிக்க வாசகர் வரலாறும், காலமும்' என்ற நூலுள் ஆழ்வார் பற்றிய கருத்துக்கள் வேறும் உண்டு. தேவார ஆசிரியர்களின் வாழ்க்கைகள் அற்புதக் களஞ்சியங்கள் ஆகும். இவ் வரலாறுகள் பலவற்றிற்கான அகச் சான்றுகள் தேவாரப் பாடல்களிலேயே மலிந்து கிடக்கின்றன. ஆகவே, இவர்களை திருவருட் செல்வர் என்று கூசாமற் கூறலாம். இதற்கு நேர்மாறாக, ஆழ்வார்கள் வரலாற்றில் இத்தகைய அதிசயங்கள் ஏதும் இல்லை. குருபரம்பரைகளிற் கூறப்படும் ஓரிரு நிகழ்ச்சிகளுக்குங் கூட ஆழ்வார்கள் பாடல்களில் அகச் சான்றில்லை. ஆகவே, ஆழ்வார்கள் ஏதோ ஓரளவிற்குப் பாடத் தெரிந்த பக்தர்கள்தானே தவிர, நாயனமார்களை விட எவ்விதத்திலும் சிறந்தவர்கள்என்று சொல்வதற்குஇல்லை. நம்மாழ்வாரோ மற்றவர்களைவிடவும் மட்ட

மாகவே உள்ளார். ஏனெனில், அப்பரும், சம்பந்தரும், சுந்தரும் தலந்தோறும் சென்று வழிபட்டு, அப்போதைய உணர்ச்சிப் பெருக்கில் தமக்குத் தோன்றியவற்றை தோன்றியவாறே பாடியிருக்க (பக். 420) நம்மாழ்வார் இருந்த இடம் விட்டுப் பெயராமல் ஆயிரம் பாடல்கள் பாட வேண்டும் என்று முற்கூட்டியே திட்டம் செய்து கொண்டு செயற்கை முறையில் பாடுகின்றார் (பக். 420). இதில் இன்னொரு விசேடம் என்னவென்றால், மிகப்பல ஆயிரக்கணக்கான தேவாரப் பாடல்கள் ஏதொரு தொடர்பும் இன்றி (இயற்கையாகப்) பாடப்பட்டதனால், பெரும்பாகம் அழிந்து போய் விட்டதைக் கண்டே நம்மாழ்வார் தமது நூல்களை காலப் போக்கில் அழிந்துவிடாமல் காத்தற் பொருட்டு அந்தாதித் தொடையில் அமைத்திருப்பதுதான் (பக். 421).

அடிகளாரின் மேலைக் கருத்துக்களில் 'அற்புதங்கள், அவற்றிற்கான அகச்சான்றுகள்'-என்பதை முதலில் நோக்குவோம். தற்கால வரலாற்றுத்துறை அறிவியலில் கையாளப் படும் அதே ஆராய்ச்சி முறையைப் பின்பற்றுவதே. இந்நெறியில் அகச்சான்று என்பதெல்லாம் 'நடக்கக் கூடியன, நடந்தனவா?'-என்பதற்கு மட்டுந்தான் நாடப்படுகின்றனவே தவிர, 'அற்புதங்கள் நடந்தனவா?'-என்பதற்காக அல்ல. சாதி, சமயப் பித்துக்களின் அடிப்படையில் ஆராய்ச்சி செய்யும் அடிகளுக்கு எந்த வரலாற்று ஆசிரியனும் செவி சாய்க்க வேண்டியதில்லை. எனினும், இங்கு நாம் காண விழைவது தமிழ் இலக்கிய வரலாறு. ஆகையால், தமிழ்ப் புலவர்கள் கொண்டாடும் அடிகள் கருத்தின் உள்ளீடற்ற தன்மையை எடுத்து உரைக்க வேண்டியது நம் கடமை ஆகின்றது. அற்புதத்திற்கு ஒரு காட்டாக திருமுலைப்பால் உண்ட வரலாற்றை எடுத்துக் கொள்வோம். தெய்வத்திற்கு உருவம் உண்டென்று கொண்டாலே, பெண்பால் தெய்வம் தனது பாலை, அழுங்குழவிக்குக் கொடுத்திருக்க முடியும். ஆனால், இது எந்த அளவிற்கு அறிவிற்குப் பொருத்த மானது? நம்மவர்களை அன்றி வேறு யார் இந்த நிலவுலகில்

இதனை இன்று ஏற்றுக் கொள்வார்கள்? பசியினால் கதறிய சம்பந்தப் பிள்ளையைப் பார்த்து பரிதாபப்பட்ட யாரோ பால் கொடுத்தார்கள். அதனை உண்டுவிட்ட குழந்தை அப்பா அடிப்பார் என்று பயந்தோ அல்லது அந்தப் பருவத்திற்கே உரிய குறும்புத் தனத்தாலோ விரட்டிய தகப்பனாருக்கு எதிரே காணப்பட்ட உமையம் மையின் உருவச் சிலையைக் காண்பித்து விட்டது. அதை நம்பிக் கொண்ட அப்பாவி சிவபாத இருதயர் குழந்தைக்கு உடனே கல்வி புகட்ட ஆரம்பித்தார். அந்தப் பிராம்மணக் குழந்தை கற்பிக்கப்பட்டதை எல்லாம் 'லபக், லபக்' என்று பிடித்துக் கொண்டது; ஐந்தாறு வயதுக்குள்ளேயே கவி பாடவும் கற்றுக் கொண்டு விட்டது! இவை சற்று அசா தாரணமானவை என்பது உண்மையே. என்றாலும், நிச்ச யமாக அசாத்தியமானவை அல்ல.[25] (பக்தி மயக்கத்தில்) அடியார்களும், (கேட்பதற்கு விறுவிறுப்பாக இருக்கவேண்டி) புராணிகர்களும் இவற்றை இறைவன் மேல் இட்டு உரைத் ததையே அகச் சான்று-புறச் சான்றுகளின் ஒற்றுமையாக நாம் பறை சாற்றி வருகின்றோம்.

அடுத்தபடியாக, சடகோபர் நூல் செய்த விதத்தை நோக்குமிடத்து அடிகள் கூறுவதை ஒப்புக்கொள்வது சாத்தியமே. அந்தாதித் தொடையைத் தேர்ந்தெடுத்து ஆயிரம் (பல வகைப்) பாக்கள் கொண்ட நூல் (திருவாய் மொழி), 100 கட்டளைக் கலித்துறைகள் கொண்ட நூல் (திருவிருத்தம்), 87 வெண்பாக்கள் கொண்ட நூல் (பெரிய திருவந்தாதி), 7 ஆசிரியப் பாக்கள் கொண்ட நூல் (திருவா சிரியம்) எனச் சடகோபர் திட்டமிட்டுப் பாடியிருப்பது உண்மையே. அதனால் எப்படி அவர் தரக் குறைவானவர் ஆகிவிட முடியும் என்பது தான் விளங்கவில்லை. தேவார ஆசிரியன்மார் பதிகம் பாடுதற்கு முதல் நாள் இரவில் அது

25. An article on child prodigy entitled "Little Ones with Great Brains" Vamsikrishna, C., in Vidyalaya patrika, Kendriya vidyalaya, C.L.R.I. campus, Madras-20 (1985) p. 23.

பற்றிச் சிந்திக்கவே இல்லை என்று எப்படி அடித்துக் கூற முடியும்? அப்படிச் சிந்திக்காமலே பாடியிருந்தாலும் தான் என்ன? 'வல்லரக்குத் தொல்கரையான்' என்பது போல் 'எல்லார்க்கும் ஒவ்வொன்று எளிது'. கரையானுக்கும், கூடு கட்டும் குருவிக்கும் ஞானம் வந்துவிட்டது என்றா பொருள்? அது போலவே இயற்கையாகப் பாடிவிட்டவர்களும் ஊர் சுற்றி வந்தவர்களும் ஏற்றமானவர்கள் என்பது எந்த வகை நியாயத்தைச் சேர்ந்தது? இந் நாள் சாலையோரங்களில் பாடித் திரியும் கிறித்தவ அன்பர்களைப் போலும் பிரச்சார நோக்கம் கொண்ட அடியார்கள் என்று ஏன் சொல்லக் கூடாது? இவர்களால் சும்மா இருக்கக் கூடவில்லை சுற்றி வந்தார்கள்; அவ்வளவு தான். சுற்றி வந்தால் ஏற்றம்; அதே காரியத்தை இருந்த இடத்திலேயே இருந்து சாதித்தால் தாழ்வு! என்ன அழகான அடிகளின் (சைவ) சித்தாந்தம்! ஆனால், ஞானப் பழம் அம்மையப்பரால் உலகைச் சுற்றி வந்த குமரனுக்குக் கொடுக்கப்படாமல் தம்மைச் சுற்றிவந்த வினாயகப் பெருமானுக்குத் தானே கொடுக்கப்பட்டது! 'சுற்றி வந்து மொண மொணத்து சொல்லு மந்திரம் ஏதடா? நட்ட கல்லு பேசுமோ? -நாதன் உள் இருக்கையில்' -என்பதன் பொருள் என்ன? தெய்வத்தை கல்லுக்குள் காண்பவன் பக்தன்; உள்ளுக்குள் காண்பவன் ஞானி-என்பது தானே நாம் ஒப்புக் கொண்டுள்ள தத்துவம்? மேலும், நாவாய், வல்லவாழ், வாறன் விளை ஆகிய மூன்று மலை நாட்டுத் திருப்பதிகட்கு சென்றவரல்லர் ஆழ்வார் என்பது அவற்றின் பதிகங்களிலேயே தெளிவாகத் தெரிதலாலும், மற்றையவற்றுள் பெரும்பாலானவற்றிற்கு மதுரகவியுடன் கூடிச் சென்றவரே ஆகத் தோற்றுகிறார். தமது அருளிச் செயல்களை முடிக்க இவருக்கு 4½ ஆண்டுகள் பிடித்தன என்பதிலிருந்து இதனை எளிதில் ஊகிக்கலாம். திருவேங்கடப் பதிகங்கள் மூன்று (திருவா 3-3, 6-6, 6-10) ஆதல் கொண்டு இவர் மூன்று முறை இங்கே சென்று வந்திருக்கலாம் என்று கொள்ள இடமுண்டு.

ஆழ்வாரும், அப்பர் பெருமானும்

திருஞான சம்பந்தப் பிள்ளையாரின் பாடல்களைக் காட்டிலும், அப்பர் அருளிச் செயல்களில் இவருக்கு அதிகம் பயிற்சி இருந்திருக்கக் கூடியதை பேராசிரியர் மறைமலை அடிகளும், பேராசிரியர் தாமோதரன்[26] அவர்களும் எடுத்துக்

---

26. திருவாய்மொழித் திறன் பக். 266-269

1. மெய்யானைத் தன்பக்கல் விரும்புவார்க்கு, விரும்பாத
பொய்யானை பாவியர்கட்கு என்றும்(பதிகம் 440)[ அரும்
மெய்யனாகும், விரும்பத் தொழுவார்க் கெல்லாம்;
பொய்யனாகும், புறமே தொழுவார்க் கெல்லாம்;
(திருவா. 10,7)

2. கண்ணி நற்கழல் காண்பிடம் ஏதெனில்
புண்ணி யன்புக லூருமென் நெஞ்சுமே (பதி 224)
திருக்கடித் தானமும் என்னுடைச் சிந்தையும்
ஒருக்கடுத்து உள்ளே உறையும் பிரான் கண்டீர்(8-6,2)

3. காட்சிப் பிறர்க்கெலாம் அரியர்; தொண்டர்க் கெளியர்
ஐயாறரே (பதி. 206)

பத்துடை அடியவர்க் கெளியவன் பிறர்களுக் கரிய
வித்தகன் (1-3,1)

4. அப்போதைக் கப்போ(து) ஆராவமுதே (பதிகம் )
அப்பொழுதைக் கப்போதென் ஆரா அமுதமே (2-5,4)

5. நிறைவிலேன்; நேசமிலேன்; நினைவிலேன்; (ப. 117)
நீசனேன்; நிறைவொன்றும் இலேன்; என்கண்
பாசம் வைத்த பரஞ்சுடர் சோதிக்கே. (3-3,4)

6. ஆவாவென்(று) அருள்புரியும் ஐயாறன் (ப. 384)
ஆவாவென்(று) எனக்கு அருளி (திருவா 1-4,1)

காட்டியுள்ளனர். ஆழ்வாரின் திருவிருத்தம் நான்காம் திருமுறையிற் காணும் திருவிருத்தத்தைப் பின்பற்றியதே. இவை உண்மையாகலாம் எனினும்

> உன்னடிக்கே போதுகின்றேன் பூம்புகலூர்
> மேவிய புண்ணியனே—(VI-99, 10)

என்ற அப்பர்-தேவார இறுதிச் செய்யுளின் ஈற்றடி நம்மாழ்வாரைப் பிணித்து, பணியும் கொண்டதை

> "அவாவறச் சூழ் அரியை அயனை அரனை அரற்றி
> அவாவற்று வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன்"

என்ற திருவாய்மொழி ஈற்றுச் செய்யுளின் அடிகள் நமக்கு எடுத்துரைக்கின்றன. அப்பர் பெருமானைப் பின்பற்றி ஆழ்வார் தம் சரமப் பிரபந்தத்தை முடித்துக் கொண்டதை பிற்காலத்தார் திருவாய்மொழி அத்யயன விழாவில் ஒரு புதிய

---

7. தொண்ட ராகித் தொழுது பணிமினோ
பண்டை வல்வினை பற்றற வேண்டுவீர் [ப. 199]

பாடு சாராவினை பற்றற வேண்டுவீர்
பாடி யாடிப் பணிமின் அவன் தாள்களே (9-10,11)

8. நங்கைமீர் இதற்கென் செய்கேன் நாளுமே
[பதிகம் 294]

நானி தற்கென் செய்வேன் நங்கைமீர் [திருவா. 4-2,8]

9. கங்கை வார்சடைக் கரந்தார்க்[கு] அன்ப ராகில்
அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே. [பதி. 78]

ஆளும் பரமனைக் கண்ணனை ஆழிப்பிரான் தன்னை
தோளுமோர் நான்குடைத் தூமணிவண்ணன் எம்மான் தன்னை
தாளும், தடக்கையும் கூப்பிப் பணியுமவர் கண்டீர்
நாளும் பிறப்பிடை தோறெம்மை ஆளுடை நாதரே
[திருவா. 3-7,2]

புராணம் ஆகவே மாற்றி விட்டதை மேலே கண்டோம். இப்படியெல்லாம் இருந்தும், ஒரு விஷயத்தில் மட்டும் ஆழ்வார் அப்பர் பெருமான் போக்கிலிருந்து வேறுபடுகின்றார். 'அரியலால் தேவியில்லை'-என்று அப்பர் செய்த புரட்சியை திருமாலே முழுமுதற்கடவுள் என்று தம் நிலையினின்று வழுவாமலே திருமங்கை மன்னர் ஏற்றுக் கொண்டிருந்தும், நம்மாழ்வார் அதற்கு ஒருப்பட்டிலர். 'பெண்களும் மடலூரத் தகும்'-என்ற வடநெறியையே சிலாகித்த திருமங்கை மன்னர் கருத்தின்படியே 'மடலூர்வேன்' எனத் தலைவி கூற்றாகப் பதிகம் (திருவா 5-8,9) செய்தும்,

> "முன்றிற் பெண்ணைமேல் முளரிக் கூட்டகத்து
> அன்றி லின்குரல் அடரும் என்னையே"-
>
> என்பதுவும் (பெரிய. தி 11-1,6)

"முத்தினை மணியை மணிமாணிக்க வித்தினை"

-என்பதுவும் (பெரிய. தி 11-1, 8) ஆகிய பெரிய திருமொழித் தொடர்களை முறையே,

> "விளரிக்குரல் அன்றில் மென்பெடை மேகின்ற
> முன்றில் பெண்ணை
> முளரிக் குரம்பை இதுவிதுவாக"-எனவும்
> (திருவிருத் 8.)
>
> "மைய வண்ணா மணியே முத்தமே என்றன்
> மாணிக்கமே"- (திருவிருத்தம் 84)

எனவும் வழங்கிக் கொண்ட நம்மாழ்வார் சங்கர-நாராயண உருவில் திருமங்கை மன்னர் உடன்பட்ட அப்பரின் கொள்கையை நிராகரித்துவிட்டு மேற்படி உருவில் இடப் பாகத்தையேசிவபிரானுக்கு அளித்ததாய் முன்னம் நாம் எடுத்துக் காட்டியதை ஈண்டு நினைவு கூர்தல் நலம்.

## ஆழ்வாரும், மாணிக்கவாசகரும்

மாணிக்கவாசகர் வரலாற்றையும், காலத்தையும் ஆராயப் புகுந்த மறைமலை அடிகள் சம்பந்தமில்லாத விஷயங்களை எல்லாம் இழுத்துக் குழப்புவதேன் என்றும் நாம்

எண்ணிப்பார்க்கவேண்டும். தமிழ் வரலாறு உடைய சீனி வாசப் பிள்ளை அவர்கள் குயில் பத்தையும், திருவெம்பா வையும் ஆண்டாளின் இப்பெயர் கொண்ட அருளிச் செயல் களிலிருந்தும், திருவுந்தியாரை பெரியாழ்வாரின் உந்திப் பதிக (பெரியா. தி. 3,9)த்திலிருந்தும், தும்பிப் பாட்டையும், திருச் சாழலையும் முறையே திருமங்கை மன்னரின் பெரிய திருமொழி 8-ஆம் பத்து 4-ஆம் திருமொழி, 11-ஆம் பத்து 5-ஆம் திருமொழிகளில் இருந்தும், திருப்பள்ளியெழுச்சியை தொண்டரடிப் பொடிகளின் திருப்பள்ளியெழுச்சியிலிருந்தும், அந்தாதித் தொடையில் நூல் செய்யும் கருத்தைச் சட கோபரிடமிருந்தும்* கடன் பெற்றே மாணிக்க வாசகர் திரு வாசகம் செய்தார் எனக் கூறிச் சென்றார். தமிழ் இலக்கிய வரலாற்றுத் தந்தையருள் ஒருவரான இவர் கருத்து நிலை பெற்று விடக்கூடாதே என்ற கவலையில்தான் அடிகள் தாமோர் நூல் செய்து [புராணங்களிற் கூறப்படும் விசுவா மித்திரரைப் போல] எல்லாவற்றையும் கீழ் மேலாகத் திருப்ப முயன்றிருக்கிறார். மாணிக்கவாசகரைப் பார்த்தே மற்றவர் கள் பாடினர் என்பது பூமியை மற்றைய கோள்களும் (planets), உடுக்களும் (stars) அண்டபகிரண்டங்களும் (constellations & galaxies) சுற்றி வருகின்றன என்ற மூட நம்பிக்கையோடொத்ததே. 'கெட்டிக்காரன் புளுகு எட்டு நாள்'-என்பது போல அடிகளாரின் கருத்துக்கள் அனைத் தையுமே தவிடு பொடி ஆக்கி, வாதவூர் அடிகளின் காலம் ஆழ்வார்கள் அனைவர்க்கும் பிற்பட்ட இரண்டாம் வரகுண பாண்டியன் காலம் (கி.பி. 862-905) ஆதலை தளவாய்ப் புரச் செப்பேடுகள் ஐயந் திரிபிற்கு இடனின்றி மெய்ப்பித்து விட்டன! விடவே, திருவாசகத்தின் தொடக்கத்தில் காணப் படும் நான்கு அகவல்களும் நம்மாழ்வாரின் திருவாசிரியத்தில் காணப்படும் 7 அகவல்களை முன்மாதிரியாகக் கொண்டு இயற்றப்பட்டனவே என்னலாம். திருச்சிற்றம்பலக் கோவை

* திருவாசகத்தில் திருச் சதகமும், நீத்தல் விண்ணப்பமும் உள்ளிட்ட 210 பாடல்கள் அந்தாதித் தொடையில் உள்ளன.

யாரும் ஆழ்வாரின் 100 கட்டளை கலித்துறைகளான் இயன்ற திருவிருத்தத்தின் விரிவாக்கமே.

மறைமலை அடிகளைப் போல மதவெறி கொள்ளாமல் நடுநிலையோடு திருவாசகத்தை ஒரு முறை நோக்கினும், அது முற்ற முழுக்க நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தின் சார மான பகுதிகளின் மறுபடைப்பே ஆதல் காண்கிறோம். திவ்வியப் பிரபந்தத்தை போலவே கட்டுக் கோப்பிலும் திரு வாசகம் பப்பத்தாக அனேக இடங்களில் பகுக்கப் பெற்றி ருப்பதும் இதற்கு இன்னொரு வலிய சான்று. சிறந்த சிவ நேயச் செல்வராகிய வாதவூரடிகள் இங்ஙனமே சிறந்த பெரி யோர்கள் ஆகிய தேவார மூவரைப் பின்பற்றாமல், வைணவ வழியைப் பின்பற்றியதேன் என்பது ஆரம்பத்தில் ஒரு பெரும் புதிராகவே இருந்தது. பிறகு தான் இவ்வாசிரியருக்கு ஆராய்ச்சியினால் தெரிய வந்தது அடிகள் காலத்தில் தேவார முழுவதும் யாருக்கும் தெரிந்திருக்கவில்லை என்று. வைணவ குருபரம்பரையின் ஆதிசங்கரர் ஆகிய நம்மாழ் வாரின் அரும்பெருஞ் சீடராகிய மதுரகவிகள் பிரபந்தங் களைத் திரட்டி குருகூரில் வைத்துக் காத்தார் ஆதலும், மதுரையில் முதல் அமைச்சராக இருந்த மாணிக்கவாசக ருக்கு இதனைக் கண்ணுறும் வாய்ப்பு இருந்தமையும் எளிதில் ஊகிக்கலாம். அல்லது, அடிகள் சிதம்பரத்தில் வதிந்த காலை அருகே காட்டுமன்னார்கோயிலில் வாழ்ந்த நாதமுனிகளால் திவ்வியப் பிரபந்தம் குருகூரிலிருந்து கொண்டு வரப்பட்டு உலகிடைப் பரப்பப்பட்டு வந்ததாலும், அதனை வாதவூரடிகள் காணும் வாய்ப்பைப் பெற்றிருக் கலாம். மேலும், ராஜகேசரி முதலாம் ஆதித்த சோழரின் 3-ஆம் ஆண்டிலேயே நம்மாழ்வாருக்கு இருந்த நன் மதிப்பைக் கண்ட மாணிக்கவாசகப் பெருமான் அக்காரணம் பற்றி அவரைப் போல ஞானமும், பக்தியும் கலந்த பனு வலைச் செய்திருக்கிறார், அப்பர் பெருமானின் அடிச் சுவட்டில் சென்று தொண்டரடிப்பொடிகள் தம் திரு மாலையைச் செய்தாற்போல. இதில் வெட்கப்படுவதற்கு

ஒன்றுமே இல்லை. ஆனால், மறைமலை அடிகளுக்கு மட்டும் இது மானக் கேடான விஷயம்.

ஆழ்வாரும், தமிழும்

கடைசியாக எஞ்சி நிற்பது தமிழ் வரலாற்றிலும், வைணவ வரலாற்றிலும் ஆழ்வாரின் நிலை. தமிழ் வரலாற்றைப் பொறுத்த மட்டில், ஆழ்வாரின் அருளிச் செயல்களுள் முதற்கண் நம் கவனத்தை ஈர்ப்பது அவை அனைத்தும் அந்தாதித் தொடையில் அமைந்திருப்பதே. ஆகவே, இவரை அந்தாதிக் கவி என்னலாம், அப்பர் பெருமானைத் தாண்டக வேந்தர் என்பது போல. 'கோவை, உலா, அந்தாதிக்கு ஒட்டக் கூத்தன்'-என்ற பாடல் பிற்காலத்திய இலக்கியங்களை மட்டும் கருத்திற்கொண்டது ஆகல் வேண்டும். ஆயினும், ஒட்டக் கூத்தர் பாடிய அந்தாதி ஒன்றும் இதுவரை கிடைத்திலது.

ஆழ்வார் கையாண்ட பாவகை அடுத்து நம் ஆராய்ச்சிக்கு உரியது, சங்க காலத்தே பெருவழக்காய் இருந்த ஆசிரிய வகையில் திருவாசிரியத்தையும், பதினெண் கீழ்க் கணக்குகள் தோன்றிய காலத்திய வெண்பா வகையில் பெரியதிருவந்தாதியையும், பின்வந்த கட்டளைக் கலித்துறை வகையில் திருவிருத்தத்தையும், பல வகைப்பட்ட பாவினங்களில் ஒன்பதைத் தேர்ந்து திருவாய்மொழியையும் இவர் இயற்றியுள்ளார். கட்டளைக் கலித்துறை வகைச் செய்யுட்கள் அப்பர் காலத்திற் போல [அப்பரின் திருவிருத்தம்] 9-ஆம் நூற்றாண்டின் முதற்பகுதி வரையிலும் விருத்தம் என்றே பெயர் பெற்றிருந்தமையை இவருடைய திருவிருத்தம் நமக்கு அறிவிக்கின்றது. விருத்தம் என்ற பெயர் விருத்தாந்தம் என்ற வடசொற் பொருளில் வழங்கப்பட்டிருப்பதாக அறிஞர் வெள்ளைவாரணனார் அவர்கள் கருதுவர். தம் விண்ணப்பத்தை பெருமாளுக்கு அறிவுறுத்துவதாக திருவிருத்த முதற் செய்யுளில் ஆழ்வாரும் அறிவித்துள்ளார். திருவாய்மொழியிற் காணும் ஒன்பது வகைப் பாவினங்களின் விவரத்தை அட்டவணையிற் காணலாம் [இந்நூல் பக். 265.]

திருக்குறள், பத்துப்பாட்டு, முத்தொள்ளாயிரம், நாலடியார், தேவாரம், திருமந்திரம், திருமங்கையாழ்வார் அருளிச் செயல்கள் ஆகியவற்றில் ஆழ்வாருக்கு இருந்த பயிற்சி முன்னமே காட்டப்பட்டது [இந்நூல் பக். 307-8; 314-6; 322-4] இதனால் இவரை நாம் ஒரு நல்ல தமிழ்ப் புலவராக எதிர்பார்க்கவே வேண்டும். திருவாசிரியத்தில் இவர் இப்படிக்கே உள்ளார். பெரியதிருவந்தாதி மற்றும் திருவிருத்தம் ஆகிய இரண்டிலும் இவர் போக்கு பரவாயில்லை. திருவாய்மொழியில் என்பிழை கோப்பது போல [திருவா 1-4,7], நீயலையே சிறுபூவாய் (திருவா 1-4, 8) நினைப்பான் புகில் [திருவா. 4-1,4], திருவுடை மன்னனைக் காணில் 4-4,8 உண்ணுஞ்சோறு பருகுநீர் [திருவா. 6-7, 1] இன்றெனக் குதவா தகன்ற இளமான் [6-7,6] நினைக்கிலேன் தெய்வங்காள் [6-7,10] என்றாற் போலும் பாடல்களில் இவர் நடை போற்றற்குரியதே. ஆயினும், பெரும்பான்மைப் பாடல்களில் தளர்ச்சி காணப்படுகிறது. ஆழ்வார்களுள் இலக்கியத் திறமை படைத்த செல்வர்களாக ஆண்டாள், தொண்டரடிப்பொடிகள், திருமங்கை மன்னர், குலசேகரர் ஆகிய நால்வரை மட்டுமே பேராசிரியர் சஞ்சீவி தேர்ந்து கொண்டது இங்கே எண்ணத்தக்கது.

இலக்கியத் திறன் ஆய்வில் கவிதா சக்திக்கு அடுத்தபடியாகக் கொள்ளப்படும் அலகுகள்-கொச்சைச் சொற்கள், திசைச் சொற்கள், கொச்சை வடிவங்கள், தரம் போதாத சொல்லாக்கம், இன்றியமையாத பிறமொழிச் சொற்களை தமிழ்ப் படுத்துவதில் குறைபாடு, வரைதுறையற்ற பிறமொழிச் சொல்லாட்சி ஆகியன ஆகும். அவத்தங்கள் (10-3,8), அற்பசாரம் (3-2,6), அன்னவசம் (3-7,10) ஆழாத்தல் (2-1,8) குதிரி (5-3,9) கூதை (9-1,9) சதிர் (2-10,1) சுண்டாயம் (6-2,1), சுமடு (7-1,10) சன்ம சன்மாந்திரம் (3-7,6) சண்டான சண்டாளர்கள் (3-7,9], சாது சனங்கள் [3-5,4] இந்திர ஞாலம் [9-5,5] சாம நிறத்தன் [9-5,6] என்பன இவர் கையாண்ட கொச்சைச் சொற்களுக்கு சில எடுத்துக் காட்டுகள், மலை [யாளம்] நாட்டில் சொல்லுதல் என்ற

பொருளில் வழங்கப்படும் 'பறைதல்' என்ற சொல்லையும், அணுகும் என்ற பொருளினதாகிய 'குறுக்கும்' என்ற சொல்லையும் முறையே 4-10, 4-லும், 9-8,1-லும் ஆக இவர் வழங்கியுள்ளார். யாக்கை, யாதும், யாய், யாளி என்பனவற்றை ஆக்கை [1-2,9], ஆதும் [9-1,10], ஆய் (2-1,1), ஆளி எனவும், ஞாயிறு, ஞான்று என்பனவற்றை நாயிறு (8-2,5), நான்று [6-2,7] எனவும், இயல்பு, சார்பு, மார்பு, ஆர்வம், எளிமை, செல்வம் என்பனவற்றை இயல்வு [2-2,8], சார்வு [8-4,1], மார்வம் [2-6,6], ஆர்வு, எளிவு [1-3,1], செல்வு [6-3,2] எனவும், உவகையை உகவை [7-8,7] எனவும், கூச்சம் என்பதை கூசம் [10-2,4] எனவும் கொச்சையாக வழங்கியுள்ளார், எவையும், எவரும், யவன்—என்பனவும் கொச்சை வடிவங்களே. மனிதர் என்ற சொல் இருக்கவேயும் மனுஷ்யர் என்ற வடசொல்லை விரும்பி மனிசர் [1-5,8] எனத் தற்சமப்படுத்தி யுள்ளார். நோய் என்ற தனித் தமிழ்ச் சொல்லை விடுத்து வியாதி என்ற வடசொல்லை விரும்பி அதையும் விசாதி [5-2,6] என்றது அருவருப்பாக உள்ளது. நின்றனகள் [5-6,4], நல்லனகள் [6-7,9], நீர்கள் [7-3,9], வாயனகள் [7-3,9], குழாங்கள்காள் [9-5,10], திருவருள்கள் [10-7,4] என்ற இரட்டைப் பன்மை வழக்கில் இலக்கணமும் இல்லை; இனிமையும் இல்லை. அங்ஙனமே இங்ஙனமே, எங்ஙனம் என்பனவற்றை முறையே அங்ஙனே, இங்ஙனே, எங்ஙனே (7 - 9, 11) எனக் கூறியதும் கொச்சை யென்றே கொள்ளத்தகும். செருக்கு என்ற வள்ளுவர் கையாண்ட சொல்லை விடுத்து அகங்காரம் என்ற வடசொல்லைத் தேர்ந்து அதை ஆங்காரம் (6-2,2) என நீட்டியுள்ளார். கபாலம் (4-10,4), சிரம் (4-8,3), நயனம் (10-4,1) கண்டம் (2-9,7), கரம் (7-8,9), சரணம் (8-3,2) பாதம் (6-3,3), இந்திரியம் (=உறுப்பு) (8-8,6) ஆகிய உறுப்புப் பெயர்களுக்கு எந்த மொழியிலும் சொற்கள் இருக்கவே செய்யும். ஆகாசம் (2-5,6), வாயு (3-4,1) மோக்கம் (1-5,9), சுவர்க்கம் (2-8,10) யோகநித்திரை (2-6,5), அனுராகம் (8-8,8) என்பனவற்றிற்கு இணையான தமிழ்ச்

சொற்கள் முறையே விண், வளி, வீடு, துறக்கம், அறி துயில், காதல் என்பன ஆதலை அனைவரும் அறிவர். தூய்மையைக் குறிப்பிட நேர்ந்த போதுங்கூட 'பவித்திரம்' (2-3,7) என்று கூறி தமிழின் தூய்மையைக் கெடுத்து விட்டார் நம் ஆழ்வார். விஷ்ணு என்பதனை 'விட்டு' (2-7,4) எனவும், வைஷ்ணவர் என்பதை 'வயிட்ணவர்' (5-5,11) எனவும், ருக்மணியை 'உருப்பிணி' [7-10,6] என்வும் இவர் தமிழ்ப்படுத்தியிருப்பது சிறப்பாக இல்லை. இம் மட்டோ? சமயத் தொடர்பு இல்லாத வடசொற்களே திருவாய்மொழி யில் 150க்கு மேல்உண்டு.

சொல்லாக்க விஷயத்தில் பரமபதத்தை 'உயர்வில்' [1-3,11]எனவும், அமரர் உலகை 'அமர் உலகு'[2,1-1]என வும், நிலையான கடவுளை 'அமர் பெருமான்' எனவும் இவர் வழங்கியுள்ளது ஓரளவு சிறப்பானதே. அங்ஙனம், இங்ஙனம், எங்ஙனம் என்ற சொற்களிலிருந்து நன்னூலார் 'ஙனம்'— என்றொரு புதுச் சொல்லைப் படைத்தாற் போல 'காண கிலேன்' என்றாற் போலும் சொற்களில் பயிலும் எதிர்மறை இடைநிலையான 'கில்'—என்பதை இவர் 'இயலாது' எனப் பொருள் படும் தனிவினையாக்கி 'கிலேன்' — எனவும் இதற்கு எதிர்மறையாக 'கிற்பன்' என்பதையும் வழங்கி யுள்ளார் [3-2,6]. காமுகர் என்பதனை 'காமர்' எனவும் ஈரமுள்ளவர்களை 'ஈரி' [6 - 7, 9] எனவும், முறைமை என்ற பொருளில் 'ஊழ்மை' [4,6-9] என்பதையும், இல்லாத பெருமைகளைச் சொல்லி கதையளப்பதை 'நாழ்மை'[4-6,9] எனவும், எழுமை என்ன வேண்டியதை 'ஏழ்மை' எனவும், வரும் பிறப்பை 'வருமை' [3-7,5] எனவும் இவர் வழங்கி யிருத்தல் சிறப்பாக இல்லை. 'நம என்று'— என்ற சொற் களை 'நமன்று' [3-3,7] எனவும், 'நகத்தாற் பிளந்தாய்'- என்பதை 'நகந்தாய்' [9-4,7] எனவும், 'நிச்சயித்திருந் தேன்' என்பதை 'நிச்சித்திருந்தேன்' (10-4,4) எனவும் உட்பிணைப்பாகக் கூறியுள்ளார். இப்படியாக ஆழ்வார் தமிழில் காணப்படும் குறைபாடுகளைப் பற்றி ஒரு தனி

நூலே எழுதலாம். ஆயினும், வைணவரும், அதிலும் பிராமணரும் ஆன பேராசிரியர் சீனிவாச அய்யங்கார் அவர்களே ஆழ்வாரின் காலத்தை கி. பி. 10-ஆம் நூற்றாண்டிற்குத் தள்ளி வைத்து விட்டது சொல்லாராய்ச்சியாலேயே என்பது ஒன்றே போதுமானது, நாம் கொண்ட கருத்தை நாட்டுதற்கு.

கொச்சைச் சொற்களையும், அருவருப்பான வட சொற்றொடர்களையும் வரைதுறையின்றி தேவையற்ற இடங்களிலும் கொண்டிருப்பதால் ஆழ்வார் தமிழ் கற்பிழந்த பெண்ணைப் போல் ஆய்விட்டது. தூய்மை இழந்து மணிப்பிரவாளம் ஆய்விட்ட இக் கலப்பு மொழியை இக்காலத்திய சென்னைத் தமிழோடு ஒப்பிடலாம். இவ்வகையில் பிற்கால குருமார்களைப் போல, ஆழ்வார் ஓரளவிற்காகிலும் தமிழுக்குக் கேடு சூழ்ந்தார் என்றே சொல்லவேண்டும். பெரியாழ்வாரும் ஓரளவிற்குக் கோதை நாச்சியாரும்*கூட இப்படிச் செய்தவர்களே. இதில் வியப்பு என்னவென்றால், மூவருமே 'தமிழ் நாடு' என்று பெரிதெடுத்துப் பேசப்படும் பாண்டி நாட்டினராய் இருப்பதுதான். பிராம்மணரும், அதிகம் கல்விப் பயிற்சி இல்லாதவருமான பெரியாழ்வாரின் திறத்தில் இக்குற்றம் பொறுத்துக் கொள்ளப்படத்தான் வேண்டும். வேளாண்குடிப் பிறந்து, திருவழுதி வளநாட்டுச் சிற்றரசரும் ஆன காரியாரின் தவ மகனாகத் தோன்றிய சடகோபர் திறத்தில் இது மிகவும் அருவருப்பான அம்சமே. இலக்கியக் கல்வி பயிலாதவரும் பிராம்மணரும் ஆகிய சம்பந்தரை விடவும் வேளாண்குடிப்பிறந்து, இலக்கியமும் பயின்ற இவரின் தாழ்நிலை பரிதாபகாரமானது! நல்ல தமிழுக்காக நாளும் பாடுபட்ட மறைமலை அடிகள் பொதுவாக எல்லா ஆழ்வார்களையும், குறிப்பாக நம்மாழ்வாரையும் தாக்குவதற்கு இது ஒரு காரணமாக இருக்கலாமோ என்று ஒரு

*ஆண்டாள், திருப்பாணாழ்வார் முதலியோரின் கலப்பு மொழி அவர்களின் கவிதா சக்தியில் மறைபட்டுக் கிடக்கின்றது.

ஐயப்பாடும் நமக்கு உண்டு. ஆயினும், நாமறிந்த மட்டில் நம்மாழ்வார் பாராட்டப் படுவது தத்துவக் கண்ணோட்டத்திலேயே.

*நம்மாழ்வார் (கள்)*

மறைமலை அடிகள் இம்மட்டோடு விடுவதாய் இல்லை; இன்னொரு குற்றமும் காண்கிறார். ஆழ்வார்கள் அற்புதங்கள் ஏதும் செய்தமைக்கு அகப் புறச்சான்றுகள் இல்லாதது மட்டுமல்ல; அவர்தம் திருவாக்குகளிலும் நம்போலும் சாமான்யர்களின் இதயத் துடிப்பையே காண்கிறோம் —என்பதே இவர் காணும் இக்குறை. காட்டாக,

"ஊரிலேன்; காணி இல்லை; உறவுமற் றொருவர் இல்லை;
பாரிலே நின்பாத மல்லால் பற்றிலேன், பரம மூர்த்தி!
காரொளி வண்ணனே! கண்ணனே! கதறுகின்றேன்;
ஆருளர் களைகண்? - அம்மா! அரங்கமா நகருளானே!"

என்ற தொண்டரடிப் பொடிகளின் திருமாலையில் (செ. 29) ஒரு ஏழையின் தீனக்குரலே கேட்கின்றது.

"பெண்மையைத் தலைமை உடைத்தாக்கும்
வண்ணம்கேசவ நம்பியைக் கால்பிடிப்பாள்
என்னுமிப் பேறெனக் கருள் கண்டாய்".

என்று கோதை நாச்சியார் (நா. தி. 2,8) காமக் கடவுளை வேண்டிக் கொள்கின்ற நிலையில் ஒரு சாதாரணப் பெண்ணின் ஏக்கமும், எளிமையுமே தொனிக்கின்றன. இவருடைய திருத்தந்தையார் ஆகிய பெரியாழ்வாரும் தமக்கு இறுதிநாள் நெருங்கிவிட்டதை நினைந்து,

"துப்புடை யாரை அடைவதெல்லாம் சோர்
விடத்துத் துணையாவரென்றே
ஒப்பிலேன் ஆகிலும் நின்னடைந்தேன். ஆனைக்கு
நீ அருள்செய்தமையால்;
எய்ப்பென்னை வந்து நலியும்போது அங்கேதும்
நானுன்னை நினைக்க மாட்டேன்;
அப்போதைக்கு இப்போதே சொல்லிவைத்தேன்
அரங்கத் தரவணைப் பள்ளியானே!"

(பெரி. தி. 4-10,1) என எல்லோரையும் போலவே கலங்கு கிறார். அரசர்க்கரசராய் வீற்றிருந்த குலசேகரப் பெருமாளின் திருவாயும்,

"அருசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள்
தன்
அருள் நினைந்தே அழுங்குழவி அதுவே போன்றி
ருந்தேனே" (பெரு. தி. 5,1)

"கொண்டானை யல்லால் அறியாக் குலமகள்
போல்நீ
கொண்டாளா யாகிலும்உன் குரைகழலே
கூறுவனே" (பெரு. தி. 5,2)

"தானோக்கா தெத்துயரம் செய்திடினும் தார்
வேந்தன்
கோனோக்கி வாழும் குடிபோன் றிருந்தேனே"
(பெரு. தி. 5,3)

என்றிப்படிப் பலப்பலவாறாகப் பன்னி அழுகின்றது. மாயோனை வாள்வலியால் மந்திரங் கொண்ட மங்கை மன்னரோ,

"உருவார் பிறவிக்கண் இன்னம் புகப்பெய்து
'திரிவாய்' என்று சிந்தித்தி-என்றதற் கஞ்சி
இருபா(டு) எரிகொள் ளியினுள் எறும்பேபோல்
உருகா நிற்குமென் உள்ளம், ஊழி முதல்வா!"

என்றே நெஞ்சு நெக்குருகி (பெரிய. தி. 11-8,4) நின்று அழுகின்றார். ஆழ்வார்களில் சிறந்தவராகக் கூறப்பெறும் நம்மாழ்வாரும் கூடத்தான்,

"புகழ்வோம்; பழிப்போம்; புகழோம்; பழியோம்;
இகழ்வோம்; மதிப்போம்; மதியோம்-இகழோம்; மற்(று)
எங்கள்மால்! செங்கண்மால்! சீறல் நீ, தீவினை
யோம்;
எங்கள்மால், கண்டாய்! இவை"-
(பெரிய. திரு.அ.2) எனவும்,

"நெறிகாட்டி நீக்குதியோ? நின்பால் கருமா
முறிமேனி காட்டுதியோ? மேனாள்-அறியோமை
என்செய்வான் எண்ணினாய்? கண்ணனே!
ஈதுரையாய்
என்செய்தால் என்படோம், யாம்?"-(பெரிய.திரு.அ.6)

என்றும் இடர்ப்படுகின்றார். எனவே, ஆழ்வார்களிற் பலரும் சாமான்யரே எனவும் சாடுவர் மறைமலை அடிகள். இக் காரணம் பற்றி ஆழ்வார்கள் அனைவரையுமே 'நம்மாழ்வார்'கள் என்று சொல்லலாம் போலத் தோற்றுகின்றது. தெய்வங்களையும், அரசர்களையும் சுற்றியே காப்பியங்கள் அமையும் வழக்கத்திற்கு மாறாக, சிலப்பதிகாரம் ஒரு குடி மக்கள் காப்பியமாக அமைந்ததினாலும் சிறப்புற்றாற்போல, அழுத்தமான பக்திப் போதையிலும் அற்புதங்கள் பற்றி ஏதும் புளுகி வைக்காத காரணத்திற்காக ஆழ்வார்களை 'பொய் உரையாத புண்ணியர்' என இரட்டிப்பாய்ப் போற்றுதல் நம் கடமையே அன்றோ?

ஆழ்வார்கள் அனைவரும் நம் போன்றோரே யானாலும், சடகோபருக்கு மட்டும் 'நம்மாழ்வார்' என்ற பெயர் சிறப்பாக வழங்குகின்றது. நஞ்சீயர், நம்பிள்ளை என்ற பெயர்களிலும் இம்முறை காணப்படுதல் எண்ணத்தக்கது. நம்பிள்ளைக்கு இப்பெயரை நஞ்சீயரும், நஞ்சீயருக்கு இதனை இவருடைய ஆசார்யர் ஆகிய பட்டரும் உகந்து நோக்கி வழங்கி அருளியதாகக் குருபரம்பரைகள் கூறுகின்றன. ஆயினும், நம்மாழ்வார் திறத்தில் இப்படி எதையும் இவைகள் கூறக்காணோம். இருந்தும், இக்கண்ணோட்டத்தில் ஆராய்ச்சி செய்தபோது, கோயிலொழுகுவில் கூறப்படும் திருவாய்மொழி அத்யயன

வரலாற்றில் ஒரு குறிப்பு தென்பட்டது. மார்கழிப் பெருவிழா வின் போது வேதங்களோடு ஒத்து திருவாய்மொழியையும் ஓதிச் சேவை செய்வதற்காக திருவரங்கம் வந்த குருகூர் கோஷ்டியை எதிரேறிச் சென்று வரவேற்று பெரிய பெருமாள் திருமுன்பிற்கு திருமங்கை மன்னர் அழைத்தேகினார் எனவும், அதுகாலை பெருமாளும் சடகோபரை (அதாவது அவருடைய படிமத்தை) குளிரநோக்கி 'நம்மாழ்வார்'- என்று திருநாமம் சார்த்தி அனைத்து மரியாதைகளையும் அருளினார் என்றும் போதரும் வாசகங்களில் இதனைக் காண்கிறோம். பெருமாளின் மேல் ஏற்றி உரைக்கப்பட்டா லும், இச் சிறப்புப்பெயர் அளிப்பு அர்ச்சகர் வாய் மூலமே வெளிப்பட்டிருக்க வேண்டும். இவ் விழாவிற்குக் காரணமாய் இருந்த திருமங்கை மன்னரே இதற்கும் ஏற்பாடு செய்திருக்க வேண்டும் என்பது வெளிப்படை. இந்த சிறப்புப் பெயர் பின்னாளில் இயற்பெயரை மறக்கடிக்கும் அளவிற்குப் பெரு வழக்குற்று நிலை பெற்று விட்டது—தமது வாரிசுக்கு வைண வத்தின் பப்பவப்பர் (திருமங்கை மன்னர்) தெரிந்தெடுத்து வழங்கியதல்லவா?

'நம்'-என்ற அடை பெருந்தகுதி பெற்றவர்களுக்கே வழங்கப்பட்டதென்பர் மணவாள மாமுனிகள்,"நம்பெருமாள், நம்மாழ்வார், நஞ்சீயர், நம்பிள்ளை என்பது அவரவர்தம் ஏற்றத்தால்"-(உபதேசரத்தின மாலை-50) என்பது அவர் வாக்கு. எனில், ஏற்றமிக்க ராமானுஜருக்கு இஃது இல்லாமற் போனது ஏன்? — என்ற வினா எழுகின்றது. 'எம் பெருமானார்'-என வழங்கும் இவர் பெயரில் 'எம்'-என்பது 'நம்'-என்பதன் திரிபாகவே தெரிதலால், மணவாள மாமுனி கள் கருத்தை ஒப்புக் கொள்வது சாத்தியமே. இஃது எவ்வா றாயினும், குருபரம்பரைகள் ஒருமுகமாய் ஆழ்வார்களுள் நம்மாழ்வார்க்கே ஏற்றம் கூறுகின்றன. நம்மாழ்வாரை அவயவியாகவும், ஏனைய ஆழ்வார்களை அவயவங்கள் ஆகவும் கொண்ட கற்பனையில் இக்கருத்தே பொதிந்து கிடக்கின்றது. இவரையே மதுரகவிகள் தம் வழிபடு கடவு ளாகக் கொண்டிருந்ததை,

"கண்ணி நுண்சிறுத் தாம்பினால் கட்டுணப்
பண்ணியப் பெருமாயன் என்அப்பனில்
நண்ணித் தென்குருகூர் நம்பி என்றக்கால்
அண்ணித்(து) அமுதூறும் என்னா வினுக்கே"—

என்று தொடங்கி இவர் பாடிய பதிகம் தெற்றெனக் காட்டுகின்றது. இதே கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் சங்கத்தார் எனத் தம்மைக் கூறிக்கொண்ட புலவர் முன்னமே குறிப்பிட்டபடி பாராட்டிச் செய்தளித்த "சேமம் குருகையோ? செய்யதிருப் பாற்கடலோ?" என்ற செய்யுளும், 'ஈயாடுவதோ கருடற் கெதிரே'-என்ற செய்யுளும் திருவாய்மொழிக்கு இவர்கள் அளித்த வேறு பாயிரங்கள் ஆகும். இம் மட்டோ?

"பாவகத் தால்தன் அவதாரம் பதினொான் றென்று
பூவகத் தாரறியாத வண்ணம் தன்னையே
புகழ்ந்து
நாவகத் தாற்கவி ஆயிரம் பாடி நடித்த ளித்த
கோவகத் தாற்கன்றி என்பு றத்தார் செய்குற்
றேவல்களே"—

(சடகோபர் அந்-78) எனவும்,

"அந்தணர்க் கோ?நல் அருந்தவர்க்கோ? அன்றி
யோகியராய்
வந்தவர்க் கோ?மத வாதியர்க்கோ? மகரக்
குழைசேர்
சுந்தரத் தோளனுக் கோ?அவன் தொண்டர்
கட்கோ?
சந்தனச் சோலைக் குருகைப்பிரான் வந்து
சந்தித்ததே".

(சடகோபர் அந். 55) எனவும்,

"வேதத்தின் முன்செல்க; மெய்யுணர்ந்தோர் விரிஞ்
சன் முதலோர்
கோதற்ற ஞானக் கொழுந்தின் முன்செல்க; குணங்
கடந்த
போதக் கடலெங் குருகூர்ப் புனிதன் கவியின்னொரு
பாதத் தின்முன் செல்லுமோ, தொல்லை மூலப் பரஞ்
சுடரே"-(சடகோபர் அந். 1)

